உ

கடவுள்துணை.

# திருமந்திர நூறுபாட்டுக்குரை.

இஃது

மதுரைத் தமிழ்ச்சங்கத்தில்
சைவநூற் பரிசோதகராயிருந்த
திருவாவடுதுறை ஆதீன வித்வான்
சேற்றூர்
ரா. சுப்பிரமணியக்கவிராயரால்
எழுதப்பட்டது.








"செந்தமிழ்"ப் பிரசுரம்—௩௫.

மதுரை:
தமிழ்ச்சங்க முத்திராசாலைப்
பதிப்பு.
1913.

தேன்சுவைக்கொண்டோங்குமகிழ்ச்செல்வாநின்செந்தமிழின்
வான்சுவைக்குவான்சுவைகொள்வான்கனியே—நான்பகர்தற்
கொப்பாகக்கண்டதுமற்றுள்ளிற்சுவைதெவிட்டா
தப்பான்மைத்தானதுமொப்பாம். (183)

இது அநியமவுவமை.

(இ - ள்.) வண்டுகள் தேனையுண்ணும் பரிமள வகுளமாலிகையை யுடைய செல்வனே! நினது திருவாய்மொழியிலுண்டான சொல்லும் பொருளும் கேட்டசெவிக்கும் ஓதினநாவிற்கும் உற்றவுணர்விற்கும் இனிமைதரும் பெரிய வினிமைக்குப் பரமபதத்துள்ளார் மனோ வாக்குக் காயங்களால் இனிமைகொள்ளும் பரமபதநாதனாகிய அக்காரக்கனியே நான் சொல்லுதற் கொப்பாகக் கண்டது. அஃதன்றி வேறுவமை குறிப்பேனாகின் முப்பொறிகளுஞ் சுவை தெவிட்டாத திருவாய்மொழியேபோலப் பண்ணும் பாடலுமாய் நடைபெறுஞ் சுருதியும் அதற்கொப்பா மென்றவாறு. அப்பான்மைத்தானதும் என்றது சுருதியை. துறை - பனுவல்வாழ்த்து.

கசு. புகழுவமை யென்பது உவமையைப் புகழ்ந்துவமிப்பது:—

விண்ணோருயிர்தளிர்ப்பான்வேலைவாயன்றுதித்த
தண்ணாரமிர்தந்தனைநிகர்க்கும்—பண்ணாற்
றிருந்துமறையைத்தமிழ்செய்தேவேசன்வெற்பின்
முருந்துநகையார்மொழி. (184)

இது புகழுவமை. பண்ணாற்றிருந்து மறை—கீதநடைத்தாய்க் குற்றமற்ற மறை; அது சாமவேதம். மறையைத் தமிழ்செய் தேவேசனெனவே வேதந்தமிழ்செய்த பெருமாள் என்னு நாவீறுடைய பிரான் என்பதாயிற்று. பகுதி - இயற்கை. துறை - புணர்ச்சியிறுதிக்கட் டலைமகன் காதற்சிறப்புரைத்தல்.

கஎ. நிந்தையுவமை யென்பது உவமையை இகழ்ந்துவமிப்பது:—

உறைகழித்துக்கைம்மிசைக்கொண்டொண்மறவரோச்சின்
மிறைபுரிவேலொப்பெனினுமேலா—நறையூர்வாழ்

தேர்துளபமால்வரைமேற்றூனேதெறுஞ்செயலா
லேந்திழையாள்வன்கண்ணிணை. (185)

இது நிந்தையுவமை. ஒன்மறவர்—கொலை மேற்கொண்டொ ழுகு மொள்ளிமையுடையமறவர். ஒச்சில்—செலவிடுக்கில். மிறை புரிவேல்—கொலையை விரும்பும்வேல்; எடுத்தெறிதலை விரும்புவார் தொழிலை வேலின்மே லேற்றியது காரண காரிய மயக்கம். மறவ ரோச்சுகிற் கொல்வதல்லது வன்கண்போற் றூனேதெறுஞ்செய லின் றென்பதனுல் நிந்தையுவமையாயிற்று. பகுதி—பாங்கற்கூட்டம். துறை—உற்றதுரைத்தல்.

கஅ. மோகவுவமை யென்பது ஒருபொருளின்மே லெழுந்த வேட்கைபா லதற்கு உவமையாகக் குறிக்கப்பட்ட வதன்மேலும் வேட்கைநிகழ்ந்ததாகக் கூறுதல்:—

அம்பவளமொன்றிருப்பவன்புறுமாதொண்டையெனச்
செம்பதுமத்தேனேநின்செவ்வாயை—விம்பமுநே
ராதற்கதைவிரும்புமாழியான்கோழியூர்க்
காதற்சிறப்புடையேன்கண். (186)

இது மோகவுவமை.

(இ-ள்) ஆழியான் கோழியூர்ச் செய்யபதுமத்தினிடத்து விளைந்த தேன்போலுமொழியையுடையாய்! நினது சிவந்த வாயை யதற்கொத்த அழகிய பவளமுளதாயிருப்பவும் ஆதொண்டையை யொப்பெனநோக்கி யன்புறூநிற்கு மஃதன்றி யவ் வாதொண்டை செய்ய வாயினிறத்தோடும் வடிவிற்கு மொப்பதால் அவ்வாயினையுங் காதலிக்கப்பட்ட சிறப்புடையேனோடுங் கூடிய கண்கள் அவ் வா தொண்டையையும் விரும்பாநின்ற வென்றவாறு. ஆதற் கென்பது மூன்றுவது நான்காவதாயிற்று. அதையும் என்னு மும்மை விகாரத் தாற்றெக்கது. விம்பம்—வடிவம். பகுதி—இடந்தலை. துறை—காதற்சிறப்புரைத்தல்.

கக. அவயவவுவமை யென்பது அவயவத்தையுவமித் தவய விபை வாளாதே கூறுவது:—

மாதரிலவிதழ்போன்மாண்பிற்றேமாதவனுல்
வானோருருந்துமருந்து. (187)

இதனுள் மாதரென்ற தவயவி. இலவித ழென்ற தவயவம். பகுதி—இதுவுமது. துறை - நலம்புனைந்துரைத்தல். புணர்ச்சி மகிழ்தலுமாம்.

வல்லிக்கொடிமருங்குன்மாதினுக்குமேருமுலை
யல்லிக்கமலமனையதடி—கல்லதர்தீ
சொல்லும்பொழுதரங்கர்தொன்னகர்சேய்த்தாயிழாய்
செல்லும்படிக்கெளிதோசெப்பு (188)

இதுவும் அவயவவுவமை.

(இ - ள்) வல்லிக்கொடிபோலு மருங்குல்; வடமேருப்போலு முலை; அல்லியோடுங் கூடிய தாமரைபோலுந் தாள்கள்; பாலோடுங் கூடிய வதரும் அழல்போலச்சுடும். சொல்லுங்காலத்தில் அரங்கர் நகரமென்றால் நெடுந்தூர மாகையா லாராய்ந்தணிந்த பூணினையுடையாய்! நினது மாதினுக் கென்னோடும் வரும்படி யெளியதொன்றல்ல வென்றவாறு. பகுதி—உடன்போக்கு. துறை—அருமையுரைத்தல்.

உ௦. அவயவியுவமை யென்பது அவயவியை யுவமித்து அவயவத்தை வாளாதே கூறுவது:—

பொன்னங்கொடியனையபொற்றொடிதன்றாட்சுவடு
மென்னன்புறத்தோன்றுமிங்கிவைக—ளன்னங்
கடிக்கமலஞ்சேரரங்கர்கானிகராங்காளை
யடிச்சுவடுமாங்கவையேயாம். (189)

இது அவயவியுவமை. அரங்கர் கானிகராங்காளை - அரங்கர் புதல்வனுங் காமன்போல்வானுங் காளையென்பதாம். பகுதி—இதுவுமது. துறை—சுவடுகண்டறிதல்.

உக. முற்றுவமை யென்பது அவயவ அவயவிகளை யொரு செய்யுளகத் தொக்க வுவமிப்பது:—

பொன்னெடுங்குன்றெனச்செறிந்துபுடைபரந்தபுளகமுலை
மின்னெனலாநுணுகிடையவேய்புரையுந்தடமென்றோட்
குளிர்மதிபோன்மிளிர்வதனக்கோமளப்பூங்கொம்பன்னா
டளிர்புரைமெல்லடிச்சுவடுந்தளர்ந்தனவெய்யோன்மன்னே
குடதிசைவான்கதிர்சுருக்கிக்கொடித்தேரினொடுமறைந்தா
னடல்புனைவேடுவர்குழுகியற்றம்பார்த்தாறலைப்பார்
பொன்புனைபூண்மணிமார்பிற்புரவலவின்றிருவீரு
நன்குலத்தெம்மில்வைகிநறுந்தேன்செந்தினையருந்தி
மரைபதளிற்றுயில்வைகிவைகறைவாய்த்துயிலெழுந்து
விரைகமழ்தார்மகிழ்மாறன்மெய்த்தமிழ்ச்சொற்குருகூரின்
முதிர்திரைப்பாலாழியின்வான்முகடுரிஞ்சுமுதையகிரி
கதிர்வருமுன்சேர்தல்கடன். (190)

இது முற்றுவமை.

(இ -ள்) பொன்மேருவாகிய மலைகளென்னும்படி சிக்கென்று மருங்ககன்ற புளகமுலையினையு மின்னெனத் தகுவதா நுண்ணிய விடையினையு மூங்கில்போலும் பெரிய மெல்லிய தோளினையு மதி போல விளங்கு முகத்தினையு முடைத்தாய பூங்கொம்பன்னாள் தளிர் போன்ற மெல்லிய வடியிரண்டுந் தளர்ந்தன, ஆதித்தனுங் குடதிசைவாய் வானிற் கிரணங்களை யொடுக்கிக் கொடியையுடைய தேரினோடு மறைந்தான், வெற்றியையுடைய வேடுவர்கள் அற்றம் பார்த்து வழிபறிப்பர், இனிப் பொன்னினாற்செய்த பூணினையணியு மார்பினையுடைய மன்னவனே! இற்றைப்போது நீங்களிருவீரு முத்தமகுலமாகிய எங்களில்லின்கண் வதிந்து நல்லதேனினோடுங் கூடிய தினைமாவினையுந் துய்த்து மான்றோலிற் றுயிலமர்ந்து வைகறையிற் றுயிலெழுந்து மணங்கமழாநின்ற வகுளமார்பன் மெய்த்தமிழ் பாராட்டப்பட்ட கீர்த்தியையுடைய குருகாபுரியிடத்துப் பெருத்த திரையையுடைய திருப்பாற்கடலின்கண் வானின துச்சியைத் தைவரும் கொடுமுடியையுடைய வுதயகிரியிற் கதிரோ னுதிக்குமுன்ன மெய்துவதே முறைமை யென்றவாறு. மன்னும் ஒவும் அசை. பகுதி—இதுவுமது. துறை—நெறிவிலக்கு. பா—வெண்கலிப்பா.

உஉ. ஏகவுவமை யென்பது உவமையும் உவமேயமுந் திணை பான் முதல் சினை பெயர் வினை யென்பன மயங்கா தொன்று யிருக்கை;—

*முற்றவுணர்த்துமுதுகாப்பியம்புணர்ப்பா*
*னுற்றவர்தங்கண்போன்றுறங்காவா—மிற்பிரிந்தா*
*னல்லியலார்வந்தனைசெய்நாவீறன்மால்வரைமேன்*
*மெல்லியலாரின்பவிழி.* (191)

என்பது ஏகவுவமை. இதுவும் பூரணவுவமைப்பாற்படும்.

(இ - ள்) நெஞ்சமே நன்புலவ ரஞ்சலிசெய்யு நாவீறுடைய பிரான் வண்குருகூரினிடத்து மெல்லியசாயலை யுடையாரின்பவிழி யானது இனிநாமிவரை யில்லின்கண்வைத்துப் பிரிவோமாகில் அறமுதலிய நாற்பொருளு மலை கட லுடுமுதலிய பதினெட்டு வரு ணனையு மொழிந்தனவுங் குறைவின்றி யுணர்த்தப் படுவனவாகும் பெருங்காப்பியம் பாடுதற் குட்கொண்ட புலவர்கண்போலத் துயி லொழிக்கதோடும் துன்பவிழியா மென்றவாறு. இது கற்பினு ளில் வாழ்க்கையென்னும் பகுதிக்கண் பிரிந்து சேய்நாட் சென்று வந்து கூடிய தலைமக னவளுறுப்புக்களை வேட்கை மிகுதியாற் புதுவது புதுவதாகப் பாராட்டத் தலைமக ளிஃதொன்றுடைத்தெள வஞ்சிய வழிப் புணர்ச்சியந்தியத்துந் துயிலாததைத், துயின்றுதுயிலொழிந் தோன் தன்கட் பிரிதற்குறிப்புளதாகக் குறித்த வேறுபாடெனக் குறிப்பானறிந்த தலைமகன் முன்னிலைப் புறமொழியாகத் தன்னெஞ் சிற் கவள்குறிப்பறிவுறுத்துவான்போல வினி நின்னிற் பிரியேனெனப் பிரியாத தன்குறிப்பினைத் தலைமகட்கறிவுறுத்தல். கலியுள்ளும் “மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட், பாயல்கொண் டென் றோட் கனவுவா ராய்கோற், றொடிநிரை முன்கையாள் கையாறு கொள் ளாள், கடிமனை காத்தோம்ப வல்லுநள் கொல்லோ” எனத்தலைமகன் புணர்ச்சியந்தியத்துக் கனவினரற்றியதனைத் தலைவி துயிலொழிந் திருந் தவன் குறிப்புணர்ந்தனளென்பது முணர்க. அன்றியும் கற் பினுட் குறிப்பறிவுறுத்த லென்னு மதிகாரத்தின்கண் வள்ளுவரும் “கரப்பினுங் கையிகந்த தொல்லாநின் னுண்க, ணுரைக்க லுறுவ தொன் றுண்டு” என்னுங் குறட்பாவினுட் டலைவன் றன்பிரியாமைக்

குறிப்பினைத் தலைவிக்கறிவுறுத்தவாறுங் காண்க. இதனுள், தலைவி இஃதோன் றுடைத்தென நாடின் மடனழிந்ததன்றோ வெனின்? தலைவன்கட் டலைவி விரும்புதலா லதுவுங் கடனாயிற்று. என்னை? "தன்வயிற்காத்தலுமவன்வயின்வேட்டலு, மன்னவிடங்களல்வழி யெல்லா, மடனெடுநிற்றல்கடனெனமொழிப" என்னும் பொருளியற் சூத்திரத்தானுணர்க. முதகாப்பியம் புணர்ப்பா னுற்றவர்தங் கண் போன் றறங்காவா மென்றதனுல் தோழிகூற்றன்று; தலைவன் கூற் றெனவுணர்க; என்னை? "இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரிய ரென், றவ்விடத் தவரவர்க் குரைப்பதை முன்னம்" என்னுஞ் செய் யுளியற் சூத்திரத்தான், பெருங்காப்பியவொழுக்கம் அறிவது பெண் டன்மைக் குரிமையன்மையி னுணர்க. இங்ஙனங் கூறிய விலக்க ணங்க ளிறந்தவற்றிற்கு மினிமேல் வருவனவற்றிற்கு மிலக்கண மென வுணர்க.

உங. மாலையுவமை யென்பது ஒரு பொருட்குப் பலவுவமை வந்தா லவை பொன்றேடொன் றிடைவிடாது தொடர்ச்சியுடையன வாகப் புணர்த்துக் கடைக்கட் பொருளை வெளிப்படையாகக் கூட்டி முடிப்பது:—

பாற்கடலுண்மால்போலவன்மார்பிற்பைங்தொடிபோற்
கோற்றொடியுட்கொண்டகுணமேபோ—னூற்கடலாய்ந்
தாமாறுணர்ந்தாரறம்பயின்றநாவகலாப்
பாமாறன்சொன்னதமிழ்ப்பா. (192)

இது மாலையுவமை. அறம்—வேதம். உட்கொண்டகுணம்—கருணை. துறை—பனுவல்வாழ்த்து.

தென்னரங்கனுந்திச்செழுமலர்போலம்மலருண்
மன்னுமயன்போலயன்மனத்து—ளன்மறைபோ
னிங்காதொருபொழிற்கண்ணேவியம்போனின்றதொன்று
பாங்காகக்கண்டனன்வெற்பா. (193)

இதுவுமது.

(இ - ள்) வெற்பனே! திருவரங்கேச னுந்தித்தாமரைபோல வும் அத்தாமரையுள்வைகும் பிரமனைப்போலவும் பிரமன்மனத்துட்

குடிகொண்ட நல்ல சுருதிபோலவும் ஒருபொழுதும் நீக்கமின்றி நீகூறிய பொழிற்கண் ணோவியம்போனின்றதொரு பெண்ணுருவத்தைக் காவினதொருபக்கமாகக் கண்டன னென்றவாறு. ஓவியம் போ னின்றதென்றான் உயிர் நின்னிடத்தும் உடலங்குமாக நின்றதென்பது தோன்ற. ஒருபக்கத்தே நின்றதென்றான் ஆயத்தை நீங்கி நிற்பது தோன்ற. பகுதி—பாங்கற்கூட்டம். துறை—பாங்கன்கண்டமைகூறல்.

உச. அந்தாதியுவமை யென்பது ஒரு செய்யுளகத்துப் பல பொருட்குப் பலவுவமை வந்தால் முதலேயுவமஞ்செய்த வுவமேயப் பொருட்பெயரினை யாகுபெயராதல் அன்மொழித்தொகைப்புறத்து வந்தபெயராத லாக்கித் துணித்துநிறீஇ யவ்வுவமேயப் பெயரினை யந்தாதித் துவமானப் பெயராக்கி யுவமவுருபு கொடுத்துப் பின்ன ரதன் மேல்வரு முவமேயப்பொருளோடு புணர்த்து நிகழ்த்துவது:—

குருமணிகுயின்றபொற்குடமெனத்தகைசால்
பருமணிவடந்தோய்ந்தெழுதருபணைமுலை
முலையெனப்பொடித்ததாமரைமுகைமுகைநெகிழ்
பொழுகுதன்னறவெனவுறுநர்நன்மார்பத்
திழுகுமான்மதமளாயெழுபுனற்சங்கணித்
துறைவளங்கெழீஇயதொன்மைசான்மரபி
னீங்கிதுபுவனம்யாவையுந்தழைத்தற்
கோங்கியவிராமாநுசமுனியிருக்கை
யாங்கதுதருமமோர்படிவமுற்றனைய
பாங்குறுசக்கரபாணிபேர்புனைபதி
மழைகிழித்தெழுந்தபொன்மாளிகைச்சூளிகைத்
தழைதகிற்கொடித்திரடாமவெண்மதியகட்
டுறுமறுத்துடைத்துவானேரிஇநடங்கூங்குதி
முருகார்மொய்ம்மகிழ்மாறன்
குருகாபுரியெனக்கூறுநன்னகரே. (194)

இது அந்தாதியுவமை. இதனுள், பணைமுலை யென்பது பணைத்த முலையினையுடையாயென வினைத்தொகைப்புறத்துவந்த வன்

மொழித்தொகைப் பெயராய் அன்மைவிளியேற்றுத் துணித்து நிறீஇயவாறும் முல்லையென வருபெயரினை யுவமானப் பெயராக்கி, யுவமவுருபுகொடுத்து, பின்ன ரதன்மேல்வருந் தாமரை முகை யென்னு முவமேயப் பொருளோடும் புணர்த்ததுங் காண்க. முகை நெகிழ்பு—முகைநெகிழ்ந்து. ஒழுகுதன்னறவென—ஒழுகுதன் னறவுபோல. வுறுநர் - தன்னிடத்திலே பரிசிப்பார். இழுகு மான் மதம்—பூசுங்கத்தூரி. அளாயெழுபுனற் சங்கணித்துறை—கலந்தோ டும் புனலையுடைய திருச்சங்கணித்துறை. ஈங்கிது வென்றது தமக்கு முன்னுளவிடத்தை. ஆங்கது வென்றது தமக்குச்சேய்த்தான விடத் தை. ஊங்குது வென்றது இரண்டிற்கும் நடுவான விடத்தை. தாம வெண்மதி—ஒளியையுடையமதி. ஒழிந்த வகலமுரையிற் கொள்க. அஃதேல் "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" எனத் தொல் காப்பியனா ரிதனைக்கூறி மறுக்கவும் இங்ஙனங் கூறுமது மாறுகொளக் கூற லென்னுங் குற்றமாம் பிறவெனின்? ஆகாது; என்னை? அஃ தொருபொருளோ டொருபொருளை யுவமித் ததற்குவமவுருபு கொ டுத்துப் பிறிதொருபொருளை யுவமித்தல். அதற்குச் செய்யுள்:— "மதியத்தன்ன வாண்முகம்போலும், போதவிழ்தாமரைப் புதுப்பூம் பொய்கை" என்பது. மதியத்தன்ன வாண்முகத்தை யொக்கும் தாம ரை யென்றமையின் அவை பொன்றினோடொன்று பொருந்தாதென் பது கருதிமறுத்தார், இஃதன்னதன்று. என்னை? பருமணிவடந் தோய்ந்தெழுதரு பணைமுலையினை யுடையாயெனத் துணித்துக்கூறின மையா னென்றுணர்க. "ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக் கையிற், சேர்ந்துடன் செறிந்த குறங்கினள் குறங்கென, மால்வரை யொழுகிய வாழை வாழைப், பூவென" என்பதுபோலக் கூறினாரென்க. பகுதி—உடன்போக்கு. துறை—பதிபரிசுரைத்தல். பா—நேரிசை யாசிரியப்பா.

உ௫. பொதுநீங்குவமை யென்பது உவமையைக் குறிப்பினா னுதல் வெளிப்படையானுதல் கூறிமறுத்துப் பொருடன்னையே பொருட்குவமையாக்கி யுரைப்பது:—

முற்குணத்தான்மாதர் முலைப்பாலருந்தாத
நற்குணத்தால்வேதமொருநான்கினையுஞ்—சிற்குணத்தா

லோதா துணர்ந்துணர்த்துமுத்தமமா றற்கிணைபார்
மீதார்மனனேவிளம்பு. (195)

இது குறிப்பால் வந்த பொதுநீங்குவமை. இதனுள், மன்னே விளம்பென்பது மரபுவழுவமைதி; என்னை? நாவாகிய பொறியி னது கிரியையை அந்தக்கரணத்தின்மேலேற்றி யதனைக் கூறுக வென் றதனால். நாவாகிய பொறிக்குச் சொற்கிளத்தலுஞ் சுவையறிதலு மாகிய இருதிறத்தனவா மவையிரண்டு மந்தக்கரணங்கள் கூடாதே யதற்குங் கூடாதாதலா னதனை யங்ஙனங் கூறப்பட்டது. திணை— பாடாண். துறை—"அமரர்கண் முடியு மறுவகை யானு" மென்பத னுன் முனிவர்வாழ்த்து.

வாரியைமொண்டுண்டோன்வசிட்டன்முதலாய
சீரியரின்ஞானஞ்செறிந்ததாற்—காரிதருஞ்
சேயேயுடையநங்கைசெம்முலைப்பாலுண்ணுதாய்
நீயேநினக்குநிகர். (196)

இது வெளிப்படையாய்வந்த பொதுநீங்குவமை. துறை— இதுவுமது. ஆகப் பலபொருளுவமைமுதற் பொதுநீங்குவமை யீறாக வுவமைவிரி யிருபத்தைந்தும் அடைவே காண்க. (கசு)

102. சிறப்பினும்வரூஉந்திறமுமொன்றுளதே.

(எ - ன்.) இஃ துவமவிரியு ளோதாததாகவொழிந்த தொன் றுணர்—ற்று.

(இ - ள்.) ஒருபொருளைப் பிறிதொருபொருளாகச் சிறப்பித் துச் சொல்லுமிடத் துளவாய் வரூஉங் கூறுபாடு மொன்றுளதென்ற வாறு. சிறப்பென்பது ஒருபொருளையெடுத் ததற்குச் சிறந்த பல வடைகளையு முவமித் தவற்றானே யுவமையாக்கி யுரைப்பது.

நுண்டுகிற்கொடிகளுடங்குபுவளங்கெழு
வெண்பொன்மாளிகைசுலாம்வீதிதெண்டிரையெழும்
பாற்கடற்பரப்பதாய்வரிபலபயின்மதிண்
மேற்படநிவந்துவிளங்குகோபுர

மைவாய்ச்சேடன்மண்டலித்தனனாகிப்
பைவாய்த்தலைநிமிர்பான்மையவாகக்
கருங்கடன்மொண்டெழுங்கருவிக்கார்மழை
பொருங்கதனனந்தலையுறப்படிந்தொடு
மோங்குபொற்கம்பத்துச்சிமேலதனொளி
பாங்குறவுச்சியிற்பதிதருபானு
யோகநித்திரைகொளுமுரவோனுந்தியி
னேகதாட்டாமரைப்பொகுட்டிறைவனைநிகர்
சினகரக்குருகாபுரியினுட்செவ்வியி
னனவரதமுஞ்சராசரங்களாக
வுதிக்குமன்னுயிர்களையுவந்தே
துதிப்பர்நித்திபரெனத்துறவுளோரே. (197)

இது சிறப்புவமை. திணை - இதுவமது. துறை - சினகர வாழ்த்து. (கஎ)

103. அடையொடுபொருட்கடைபுணர்க்குமஃதிரட்டை.

(எ - ன்.) இதுவும் விரியுளோதாத வொழிபுணர்—ற்று.

(இ - ள்.) அடையடுத்த முக்கியப்பொருட் கொப்புமைகூறும் ஒப்புடைப்பொருளிடத்து முக்கியப்பொருளி னடைபுலப்படப் புணர்ப்பது மிரட்டை யுவமையா மென்றவாறு. புணர்ப்பது மென்னு மும்மையால் ஒற்றைக்கிளவியும் இரட்டைக்கிளவிவழித்தாகி வருவன கொள்க; என்னை? "இரட்டைக்கிளவியிரட்டைவழித்தே" என்றாராகலின். உவமை யென்பது அதிகாரத்தாற் பெற்றது.

நறைமல்கியகொழுங்காவிபைப்போனள்ளிரவினுநி
லுறைமல்கியகண்டுயிலாமையன்பர்க்குரைக்கிலநான்
மறைமல்கியசெந்தமிழ்மாறன்வண்குருகூர்ப்பொருநைத்
துறைமல்குசேவற்சிறையிறைநீங்கிற்றுயரன்னமே. (198)

இஃதிரட்டையுவமை; நறைமல்கியகாவிபோ லுறைமல்கியகண்ணென்பதா லறிக. மல்குதல் - பெருகுதல். உறை—துளி. இறைநீங்கில் - சிறிது நீங்கில். துயரன்னம் - துன்புறுமன்னம். பகுதி - ஒருவழித்தணத்தல். துறை - ஓதிமப்பெடையோடியுரைத்தல்.

ஊனூறியவிருகோட்டொருமாவையுறுபுனல்வன்
மீனூறுசெய்வதைத்தீர்த்தபிரான்வடவேங்கடத்திற்
றேனூறிலவிதழைக்கண்டபோழ்திலென்சிந்தையும்பர்
வானூர்மதிமுகத்தாளிதழாகமதித்திடுமே. (199)

இது ஒற்றைக்கிளவி யிரட்டைவழித்தாய்வந்த வுவமை; இத னுள், தேனூறிலவின்மலரைக்கண்டபோழ் தெனக் கூறியவழிப் பானமூறு மித ழென்னுதே யிதழென ஒற்றைக்கிளவியாய்க் கூறின மையா னென்றுணர்க. பின்னர்வந்தவிதழ் - அதரம். உம்பர் வானூர் மதிமுகத்தா ளென்பதன்கண்ணு மிவ்வுவமை வந்தவாறு காண்க. அது "கருங்கால் வேங்கை வீயுகு துறுக - லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை" என்னுங் குறுந்தொகைப் பாட்டினுங் காண்க. முன்னர்வந்ததற்கும் "பொன்காண் கட்டளை கடுப்பச் சண்பின் - புன் காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" என்பதனுட் காண்க. பகுதி - இடந்தலை. துறை - புனங்கண்டு மகிழ்தல். (கஅ)

104. உவமையுமுருபுந்தொடர்வழிப்பிறிதுமொன்
றுவமேயப்பொருட்கடைபுணர்ப்பதுமுள.

(எ - ன்) இதுவு மெய்தாத தெய்துவித்தது.

(இ - ள்) ஒப்புடைப் பொருளொடு புணர்ந்த வுவமவுருபிற்குப் பின்னுகப் பிறிதுமோ ரொப்புடைப்பொருண் முக்கியப் பொருட் கடையாக முன்னோராற் புணர்க்கப்பட்டு வருவது முளவென்றவாறு. இஃ திலக்கியங்கண்டதற் கிலக்கணம் கூறியதெனவுணர்க.

அம்பனையவேற்கண்ணணங்காலறிவழிந்த
திம்பருனக்கெய்தியதாலெவ்வுளா—னும்பரெலாம்
போற்றவருண்மாலைப்போற்றூர்போலாயினையான்
மாற்றமிதற்கென்னுரைக்கேன்மற்று. (200)

அம்பனைய வேற்கண்ணென்றவழி யுவமப்பொருளின துருபின் பின்னர் வேற்கண்ணென வந்தவாறு காண்க. இதற்கு முன்னோர் கூறிய விலக்கியமாகக் கண்டன யாவையோ வெனின்? "துப்புறழ் தொண்டைச் செவ்வாய்" எனத் திருத்தக்கமாமுனிகள் கூறிய

சிந்தாமணியினும் " ஆம்பனூறுந் தேம்பொதி நறுவிரைத்—தாமரைச் செவ்வாய் " என்புழி "தேம்பொதிநறுவிரை யாம்பனூறுந் தாமரைச் செவ்வாய் " என இளங்கோவடிகள் பாடிய அந்திமாலைச்சிறப்புச் செய்காதையினுங் கண்டவை யென்றுணர்க. இம்பருனக்கும் என்னு மும்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது. பகுதி—பாங் கற்கூட்டம். துறை—பாங்கன்கழறல். (கக)

105. மாபினும்வருவதோர்மாபுடைத்தென்ப.

(எ - ன்) இதுவு மெய்தாதசெய்துவித்தது. இலக்கியங்கண் டதற் கிலக்கணங்கூறனு மாம்.

(இ - ள்.) ஒருதொடர்பினு ளொருபொருட்காதல் பலபொ ருட்காதல் உவமை கூறுமிடத் துவமப்பொரு ளொருகுழுவினு ளொருமரபாகப் பலவுவமம் வருவது மரபுவமையா மிலக்கணத்தை யுடைத்தென்று கூறுவர் சான்றோ ரென்றவாறு.

செந்தாமரைவதனஞ்சேதாம்பல்வாய்நயன
நந்தாதசெங்குவளைநாடுங்காற்—கொந்தார்
வகுளம்புனைவார்வரைமயிற்குக்கஞ்ச
முகுளம்புணர்மாமுலை. (201)

இது மரபுவமை ; என்னை? கோடு கொடி நீர் நிலம் என்னும் நால்வகைப் பூக்களுள் நீர்ப்பூவாகிய குழுவுள் செம்மையென்னு மோரி லக்கணத்தனவாந் தாமரை யாம்பல் குவளை யென்னும் மூன்றினையும் முகம் வாய் நயனம் முலை யென நான்கிற்கு மரபுபொருந்துவனவாக வுவமம் புணர்த்தவினெனக் கொள்க. இதற் கிலக்கியம் கண்டதாவது "கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை, யிடையாயார் தெங்கினனை யர் - தலையாயா, ரெண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்ட தே, தொன்மை யுடையார் தொடர்பு" என்பதனுள் ஓரினத்தனவா கிய புறக்காழ்ப் புன்மரமேகூறி யொழிந்தமரங்க ளொப்பன வுளவா யினுங் கூறாராயினாராதலன் மரபுவமை யாமெனவுணர்க. துறை - இயல்பிடங்கூறல். (உ0)

106. ஒத்ததுவென்றதென்றொருபொருட்குவமை
வைத்தனவாயொருதொடர்பினும்வருமே.

(எ - ன்.) இதுவு மெய்தாத தெய்துவித்தது.

(இ - ள்.) ஒருபொருட் குவமைகூறுமிடத்து ஒருபொருளை யொத்தது ஒருபொருளை வென்றது என் றிருபொருளைக் குறித்தன வா யொருசெய்யுளகத்து வருவனவு முவமவிலக்கணத்திற்குக் கூடியும் நீங்கியும் வருமென்றவாறு:—

கூற்றுவன்வேல்போன் றுருகன்வேலைவென் றுகொலை
யாற்றலுறும்வன்கண்ணமர்விளைப்பத்—தோற்றமுறுங்
கொல்லிப்பாவைக்கிணையாய்நின்றதெவன்கோகனக
வல்லிப்பாவைக்கிணையாவாய். (202)

இது ஒத்தது வென்றதென்றல். ஆற்றல்—பெருமை. தோற்றம்—பொலிவு. கொல்லிப்பாவை—காமுகரைக்கொல்லும் பாவை. கோகனகவல்லிப்பாவை—திருமகள். பகுதி—இயற்கை. துறை—இரந்துபின்னிற்றல்.

தெண்ணறவைவென் றுதிரைத்தெள்ளமிர்தையொத்தமொழிப்
பெண்ணரசேமாதவன்றென்பேரைவாய்த்—தண்ணறும்பூக்
கொய்யாமலாயமுடன்கூடாமலூசலிற்றூள்
வையாமனின்றதென்னேமற்று. (203)

இது வென்ற தொத்த தென்றல். பகுதி—இதுவுமது. துறை - முன்னிலையாக்கல். (உக)

107. எதுநுதலியமுதுமொழியினும்வரும்.

(எ - ன்.) விரியுவமையினு ளின்னு மோ ரொழிபுணர்—ற்று.

(இ - ள்.) அவ்வுவமை பேதுட்பொருளைக் குறித்து முடித்தற்குப் பிறிதொரு பழமொழியினும் வருமென்றவாறு:—

பாம்புகடித்ததற்குத்தேளுக்குப்பார்ப்பதுபோ
லாம்புகழ்மால்கச்சியணிவரைவா—யாம்பகட்டா
லோடத்துணிந்தளித்தானுய்த்தநோய்க்கின் றுவெறி
யாடத்துணிந்தானறிவு. (204)

இது ஏதுநுதலியமுதுமொழியுவமை; என்னை? "நுண்மை யுஞ் சுருக்கமு மொளியுடை மையு, மென்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக், குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ, மேது நுதலிய முதுமொழி யென்ப" என்றாராகலின். இதனுட் குறித்தபொருண் முன்ன ரொரு முதுமொழியினைவைத்துப் பின்னர்த் தான்குறித்த பொருளை வெளிப்படையாக வைத்தமையா னெனவுணர்க. பகட் டாலோடத் துணிந்தளித்தானென்பது யானையைக்கண் டியாங்கள் பயந்தோடாநிற்ப அவ்வியானையையும் பொருதற்குத்துணிந் திவளு யிரைத் தந்தானென்க. உய்த்தநோய்க்கு—தந்தநோய்க்கு. வெறி யாடத்துணிந்தான் என்பது இகழ்ச்சிக்குறிப்பு. அறிவென்ற தீண் டறியாமை. "உழுத வுழுத்தஞ்செய் யூர்க்கன்று மேயக், கழுதை செவியறிந் தற்றால் - வழுதியைக், கண்டன கண்ணீ ருகுப்பப் பெரும் பணைத்தோள், கொண்டன மன்னே பசப்பு" என்பதுமிது. துறை— வெறி விலக்கு. (உஉ)

108. பிசியினும் புலப்படும் பெற்றியதாகும்.

(எ - ன்.) இதன் முன்னர் விரியுவமையி னெழிபுகூறி யித னுட் டொகையுவமையின தொழிபுணர்—ற்று. பிசியென்பது நற் பொருள்; என்னெனின்? "பிசியென்ப பொய்யுஞ் சோறும் பேசுநற் பொருளும்" என்பதனலறிக.

(இ - ள். பிசியென்ற இலக்கணத்தோடும் புலப்படு மியல்பினை யுமுடைத் தவ்வுவமை யென்றவாறு. அஃதாவது உவமேயப் பொருட்குள்ள சினை வினை சார்பு முதலியன வுவமப்பொருட்கண் ணில்லையாயினும் அவற்றை யதனொடு சார்த்தி யுவமப்பொருளொன் றினையுங்கூற வுவமேயப்பொருளு மேதுவு முவமவுருபும் விரிந்து புலப்படுதலாம்.

*வருங்குன்றினைக்கடிந்தெம்மன்னுயிரைத்தந்தா*
*னிருங்கங்கணைக்குன்றிருப்பப்—பெருந்தகைசால்*
*செந்தமிழ்மாறன்சிலம்பிற்சேப்நிடித்தருந்த*
*வந்தனையானேதடுப்பேன்மற்று.* (205)

இது ஒப்பொடு புணர்ந்த வுவமத்தானுஞ் சார்பினானும் வந்த பிசியுவமை; என்னை? "ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானுந், தோன்று

வது கிளந்த துணிவி னானு, மென்றிரு வகைத்தே பிசிவகை நிலையே" என்றாராகலின். இதனுள், வருங்குன்றினை யென்றது யானையை எனவும், இருங்கங்கணக்குன்றென்றது சார்போடுந் தோளினை யெனவும் வினையானும் வடிவானும் சார்பானும் உவமவுருபு முதலியனவு முவமேயப் பொருளும் புலப்படுவதாயிற்று. ஒழிந்த அகல முரையிற் கொள்க. பகுதி—இதுவுமது. துறை—களிற்றிடையுதவிக் கறத்தொடு நிற்றல். (உங)

109. முக்கியப்பொருட்குமுக்கியப்பொருளுவமை
புணர்ப்பதுமுதன்மைப்புலனெறிவழக்கே.

(எ - ன்.) இதுவு மொருவகையாமொழி புணர்—ற்று.

(இ - ள்.) உவமேயப்பொருட் குவமேயப்பொருள்களை யுவமமும் பொருளுமாக்கிச் செய்யுளகத் துரைப்பனவும் புலவராற்று வழக்கமா மென்றவாறு. இது இலக்கியங்கண்டதற் கிலக்கணங் கூறல்.

சீதரனே முத்தனெனுந்தேற்றமுறச்சிந்தையினுட்
பேதமைபோலற்றபிறர்நசையும்—பாதகமாம்
பொன்றுவழுக்காறெனப்போயதுபுலமைக்
கொன்றுப்புறங்கூறலும். (206)

என்பது, நெஞ்சமே நாம் சிமந்நாராயணனே யகிலாண்டகோடி பிரமாண்டங்களையுஞ் சத்தாவரணங்களையும் பிரகிருதியையும் கடந்து மேலாய விரசைக்கரையா முத்தியைத் தருவதற்குரிய னென்ப தாரியனாலுணர்ந்து அறிவுபிறந்தபின்னர் நம்மிடத்து முன்பு நின்ற வறியாமைபோல வகன்ற தொழிந்த வரனயனென்னு மிருவரைப் பற்றின பசையும்; அதுவுமன்றிப் பாதகத்திற் கேதுவா மழுக்கார கன்றதுபோலகன்றது அறிவிற்குப்பொருந்தாப் புறங்கூறலும் ஆதலாலினி நா மீடேறினே மென்றவாறாயிற்று. திணை-பொதுவியல். துறை-முதுகாஞ்சி. எதிர்மறைகளை யுவமமும் பொருளுமாக்கிய திரண்டானும் பெறுதற்கு. இலக்கியம் "இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங், கழிபே ரிரையான்க ணோய்" என்பதனாலறிக. (உச)

110. உருவகநிரனிறையதிசயஞ்சிலேடை
தற்குணந்தற்குறிப்பற்புதம்விரோத
மொப்புமைக்கூட்டமேதுவிலக்குடன்
மெய்ப்படவிரவுமேதகவுடைத்தே.

(எ - ன்.) அவ்வுவமையலங்காரம் பிறவலங்காரங்களோடுங் கூடிவருமாறு கூறுகின்றது.

(இ - ள்.) உருவகமுதலாக விலக்கிறுக மேற்கூறப்படும் பதினோரலங்காரங்களுடன் விரவிவரு மவ்வுவமையலங்காரமென்றவாறு. மெய்ப்படவிரவும்—பொருள்பெற விரவு மென்பதாம். மேதகவுடைத்து—பெருமையுடைத்து. (உரு)

111. இவைதத்தமவிலக்கணங்களிற்றிறம்பா
துவமைச்சொற்புணர்ந்திறினஃதுவமை.

(எ - ன்.) இஃ தவ்வுவமையலங்காரம் பிறவலங்காரங்களோடுங் கூடி வருவதற் கோ ரறிகுறியுணர்—ற்று.

(இ - ள்) இவை பதினோரலங்காரமுந் தனக்குத் தனக்கு விதித்த விலக்கணங்களிற் குன்றா துவமவுருபுடனே கூடி யுவமையாந் தன்மைபெற முடியுமாயி னவற்றை யவ்வவபெயரானே யுவமை யென்று பெயர்கொடுத்து வழங்கப்பெறு மென்றவாறு.

பூந்தண்வகுளாபரனன்புயசைலம்
வாய்ந்தவருவிவரைமானும்—பாய்ந்ததிரை
தங்கொலிநீர்வையந்தனைச்சூழிருபுரத்தும்
பொங்கொளிசேர்முத்தவடம்பூண்டு. (207)

இது உருவகவுவமை. இதனை முதனூல்செய்த தண்டியாசிரியர் உருவகத்தின்கண் ணுவமையுருவக மென்றார். அதற்குக் காட்டிய, "மதுமகிழ்ந்த மாதர் வதன மதிய, முதய மதியமே யொக்கும்" என்ற செய்யுளகத் துருவகவாய்பாடாகவந் துவமவுருபோடிறுதலி னது பொருந்தாதாதலா னிவ ரதனை யுவமையி லுருவகவுவமை யென்று பெயர்கொடுத்ததே பொருத்தமென்றறிக. பூந்தண் வகுளா

## மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1913ஹு மார்ச்சுமீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ | அ. | ப. | செலவு | தொகை ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1913-ஹு பிப்ரவரி, மார்ச்சு மீங்களுக்குரிய புதுக்கோட்டை சமஸ்தானம் மாதச்சந்தா வரவு ரூ 100—0—0 | | | | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913-ஹு பிப்ரவரி மீத்திற்குச் சம்பளம் செல்லாக்கியது ரூ. 302—0—3 | | | |
| சேத்தூர் ஜமீந்தாரவர்களிடமிருந்து டொனேஷன், மாதச்சந்தாவுக்காக ஷெ ஜமீன் மானேஜரவர்கள் மூலம் நேரில் வரவு ரூ 500—0—0 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு 1913ஹு பிப்ரவரி, மீத்துக்குச் சம்பளம் செல்லாக்கியது ரூ. 68—0—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | 600 | 0 | 0 | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 370 | 0 | 3 |
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 32 | 11 | 0 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு 1913-ஹு பிப்ரவரிமீத்திற்கு ஆகாராதி போஷணைக்குச் செல்லாக்கியது ரூ ... | 65 | 1 | 4 |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு 276- 1-3 | | | | ஷெ கலாசாலை உபயோகத்துக்கு கிரயத்துக்குவாங்கிய புஸ்தகங்கள் ரூ | 4 | 0 | 6 |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ... 60- 4-5 | | | | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 336 | 5 | 8 | பைண்டிங் ஆபீசு கண்டின்ஜன்சிச் செலவு ... ரூ | 21 | 7 | 3 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பைண்டிங் ஆபீசு வரவு ... | 66—9—0 | 307 | 5 | 9 | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு | 90 12—9 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... | 5—12—0 | | | | ஷை ஆபீசு சம்பந்தமான ரயில்வே சார்ஜ் செலவு ரூ | 1—4—0 | | | |
| | | | | | ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு | 18—5—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | | 72 | 5 | 0 | ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 14—5—0 | | | |
| | | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 154 | 10 | 9 |
| புத்தக விற்பனை வரவு ரூ ... | | 113 | 6 | 9 | போஸ்டேஜ் வகையிற் செலவு | 21—0—0 | | | |
| | | | | | தந்தி வகையிற் செலவு | 2—3—0 | | | |
| | | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 26 | 3 | 0 |
| பிரிண்டிங் பேப்பர், கலர் பேப்பர் காகிதம் விற்றவகையில் வரவு .. | 50—5—6 | | | | ரிப்பேர் வகையிற் செலவு ரூ | | 2 | 14 | 0 |
| கோர்ட்டு சம்மன் படி வரவு ரூ. | 1—4—0 | | | | சங்கம் ஆபீசு வைத்திருக்கிற கட்டடத்துக்கு 1913-வரு ஜனவரி, பிப்ரவரி மீ த்துக்குரிய வாடகையிலிருந்து முனிசிபல்வரி செலுத்தியதுபோக பாக்கி செல்லாக்கிய வகையிற் செலவு ரூ | 32—0—0 | | | |
| சங்கம் காலிநிலம் மாக்கடை வாடகை நாளது பரிதாபி-வரு மாசி மீ த்துக்கு வரவு ... | 55—0—0 | | | | ஷை சங்கம் அச்சாபீசு, எடிட்டராபீசுகளுக்கு 1912, 13-க்குத் தொழில்வரி ரூ | 13—8—0 | | | |
| பழைய Cork விற்றவகையில் கிரயம் வரவு ரூ | 3—8—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 45 | 8 | 0 |
| | | | | | ஆபீசு உபயோகத்துக்கு பிரஸ்புக் ஸ்டேஷனரி கண்டின்ஜன்சிச் செலவு ரூ | 6—0—3 | | | |
| சென்னைசென்டரிலிருந்து பரீக்ஷை செலவு மீதம் வாபஸ் வரவு ரூ | 0—1—0 | | | | வண்டிவாடகையிற் செலவு ரூ | 1—9—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | | 110 | 2 | 6 | சங்கம் கேஸ்விஷயமாக சாக்ஷிப்படி கட்டினதும் சாக்ஷியை அழைத்து வரவும் செலவு ரூ | 56—0—0 | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ரெஜிஸ்டர், ரசீதுலேபில், போஸ்டல் டியூ வகையிற் செலவு ரூ 0—7—6 | | | |
| | | | | ஆங்கிலத் தமிழ்ப்பரீக்ஷை விஷயமாய் மணியார்டர் செலவு ரூ 2-14—0 | | | |
| | | | | அகப்பொருள் விளக்கம் காபிரைட் ரெஜிஸ்டர் செலவு ரூ 2—1—0 | | | |
| | | | | எடிட்டோரியல் ஆபீசு ஏடுகள் கட்டுவதற்குக் கயிறு வகையரு செலவு 0—4—0 | | | |
| | | | | கலாசாலை மாணவர்கள் உபயோகத்ச்கு பேபர் வாங்கியது ரூ 0—12—0 | | | |
| | | | | கலாசாலை வகுப்புகளுக்கு சன்ஷேட் தட்டி, ஸ்கிரீன் வகையரூச்செலவு 6—5—1 | | | |
| | | | | சங்கசம்மந்தமான வேலைகளுக்கு பிரின்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ 60—4—5 | | | |
| ஆக மொத்தம் வரவு ரூ | 1264 | 14 | 11 | ஷை சம்மந்தமாக பைண்டிங் வேலைகளுக்கு ஷை ஆபீசுக்குச் செல் ரூ 5-12—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | 142 | 5 | 9 |
| சென்ற பிப்ரவரிமீ" த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 397 | 12 | 2 | ஆகமொத்தம்செலவு | 832 | 2 | 10 |
| | | | | போகபாக்கியிருப்பு* | 830 | 8 | 3 |
| ஆக மொத்தம் ... | 1662 | 11 | 1 | *By pass Book 630—0—0 } By cash 200—8—3 } | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 1662 | 11 | 1 | ஆக மொத்தம் ... | 1662 | 11 | 1 |

M. R. Srinivasa Iyer,
*Offg. Manager.*
23—4—13.

*Audited and found Correct*
S. Gopalaswami Aiyengar,
28—4—13. *Auditor.*

## மதுரைத் தமிழ்ச்சங்கத்து

# 1913-ஞ எப்பிரல்மீ 1உ முதல 30உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு. | தொகை ரூபா. | அ. | ப. | செலவு. | தொகை. ரூபா. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| செந்தமிழ்ச் சந்தா வகையில் வரவு ரூ | 45 | 2 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913-ஞ மார்ச்சு மாதத்திற்கு சம்பளம் செல்லாக்கியது ரூ 325-15—8 | | | |
| பிரிண்டிங்ஆபீசு அச்சுக்கூலிவரவு 349—13—0 | | | | | | | |
| சங்கம் ஆபீசு சம்மந்தமான அச்சுக்கூலி வரவு ... 55—13—0 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு ஷை மாசத்துக்கு செல்லாக்கியது ரூ 68—0—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 405 | 10 | 0 | ஆக மேற்காட்டிய விவரப்படி செல்லாக்கியது. | 393 | 15 | 8 |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 54—3—6 | | | | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு மார்ச்சுமீ த்திற்கு ஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது ... ரூ | 66 | 6 | 5 |
| சங்கம்ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 3—12—0 | | | | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 57 | 15 | 6 | பைண்டிங் ஆபீஸ் கண்டின்ஜன்சிச் செலவு ரூ | 13 | 0 | 4 |
| புத்தக விற்பனை வரவு ரூ | 88 | 15 | 0 | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ 88—10—0 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| பிரிண்டிங்பேபர் கலர்ராப்பர்காகிதம் விற்றவகையில் வரவு ... | 88—9—6 | | | |
| கோர்ட்டு சமன்படி வரவு ... | 0— 8—0 | | | |
| சங்கம் காலி நிலம் மரக்கடை வாடகை பரீதாபி-௵ பங்குனி மீ"த்துக்கு வரவு ... | 55—0—0 | | | |
| லைபிரேரி பழைய நியூஸ் பேப்பர்கள் விற்றவகையில் வரவு ரூ | 4—14—0 | | | |
| பிரசிடெண்ட்டு அவர்கள் உபயோகத்துக்குச் செய்யப்பட்ட Facsimileக்கு சங்கத்தினின்றும் கொடுத்த தொகை பிரசிடெண்டவர்களிடமிருந்து வாபஸ் வரவு ரூ | 3—8--0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ... | | 152 | 7 | 6 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஷை ஆபீஸ் சம்பந்தமான ரெயில்வே சார்ஜ் செலவு ... ரூ | 0—4—0 | | | |
| ஷை ஆபீஸ் ஆயில் சம்பந்தமாய் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு; ரூ | 16—0—0 | | | |
| ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 8—2—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 113 | 0 | 0 |
| போஸ்டேஜ் வகையிற் செலவ ரூ | 16—4--0 | | | |
| தந்தி வகையிற் செலவு ரூ | 26--6—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 42 | 10 | 6 |
| ரிப்பேர் வகையிற் செலவு; ... | | 2 | 12 | 0 |
| சங்கம் காலி நிலத்துக்கு 1322-ம் பசலி கிஸ்திக்கு ரசீதுப்படி செல்லாக்கியது ரூ | | 3 | 12 | 0 |
| வண்டி வாடகைவகையிற் செலவு ... | 2—0--6 | | | |
| சங்கம் கேஸ் சம்பந்தமாய் சாக்ஷிப்படி வகையறா செல்லாக்கியது ரூ | 9—7—0 | | | |
| ரசீது ஸ்டாம்பு வகையிற் செலவு ரூ | 4—8--0 | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | கேஸ் சம்பந்தமாய் சென்னை போய் வந்த வகையிற் செலவு ரூ | 10-2—0 | | | |
| | | | | ஆபீஸ் உபயோகத்திற்கு கார்டுவகையரு ஸ்டேஷனரிச் செலவு ரூ | 9—2—6 | | | |
| | | | | கலாசாலை பரீக்ஷைக்காக பேப்பர் வாங்கிய வகையிற் செலவு ரூ | 0—6—0 | | | |
| | | | | சங்கம் சம்பந்தமான வேலைகளுக்குப் பிரிண்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ | 55-13-0 | | | |
| ஆக மொத்தம் வரவு .. | 750 | 2 | 0 | ஷை சம்பந்தமான பைண்டிங் வேலைகளுக்குச் செல் ரூ | 3-12—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டியவிவரப்படி செலவு ரூ | | 95 | 3 | 0 |
| சென்ற மார்ச்சுமீ த்ந் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 830 | 8 | 3 | ஆகமொத்தம் செலவு ரூ | | 730 | 11 | 11 |
| ஆக மொத்தம் ... | 1580 | 10 | 3 | | | | | |
| | | | | By pass Book Rs. 800-0-0 / By cash Rs. 49-14-4 } போக பாக்கி யிருப்பு *... | | 849 | 14 | 4 |
| ஆக மொத்தம் ... | 1580 | 10 | 3 | ஆக மொத்தம் ... | | 1580 | 10 | 3 |

M. R. Srinivasa Iyer,
*Offg: Manager.*
5 –5—13.

*Audited and found Correct,*
V. SUNDARAMIER,
6—5—13. *Auditor.*

# பி. சுப்பராய், ஆயுர்வேத ஔஷதசாலை

## ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் கோவில் சந்நிதி, தஞ்சாவூர்.

*என் ஆயுர்வேத ஔஷதசாலையை பழங்கிப்பேட்டையிலிருந்து*

ஸ்திரமாக தஞ்சாவூருக்கு மாற்றியாய்விட்டது.

அரகஜா;—இது மற்றொரு விதமான திவ்யமான சுகந்த கலவை. இதைத் தனியாகவாவது, சந்தனத்துடனாவது, உபயோகிக்கலாம். தேகத்தில் பூசிக்கொள்ளலாம். உடுப்புகளுக்குப் போடலாம். அது உன்னதமான வாசனை. இதன் திவ்யமான பரிமளத்தை சுகித் தறிந்தவர்களால் மிகவும் புகழப்படுகிறது ஒரு தடவை பூசினபிறகு பிரதிதினம் ஸ்நாநம் செய்தாலும் 3 நாள் பரியந்தம் இதன் இன்பமான பரிமளம் தேகத்தில் தங்கி நிற்கும். விலை டப்பா 1-க்கு அணா 8. ஒன்று முதல் 12 டப்பாக்கள் வரையில் அனுப்ப வி. பி. முதலிய செலவுகள் அணா 5 பிரத்தியேகம்.

அம்பர்.—இந்த சுகந்தத்தில் கொஞ்சமெடுத்து உடுப்புகளுக்கு போடலாம் தேகத்திற்கும் பூசலாம். முகத்தில் தடவிவந்தால் பருக்கள், கருப்பு புள்ளிகள், மேகப்படர், மாசு அறிப்பு முதலியதுகள் நீங்கி முகத்திற்கு வசீகரத்தை தரும். வெற்றிலையில் தடவி தாம்பூலத்துடன் உபயோகித்தால் மிக்க மனோ உற்சாகத்தைத் தரும். கொஞ்சமெடுத்து வெந்நீரில் கலந்து ஸ்நானம் செய்தால் வென்னீரெல்லாம் சுகந்த பன்னீர் வாசனையுள்ளதாகும். மனக்களிப்பையுண்டாக்கி தேஹசிரமத்தை யாற்றும். விலை டப்பா ஒன்றுக்கு அணா 8. ஒன்று முதல் 12 டப்பாக்கள் வரையில் அனுப்ப வி. பி. முதலிய செலவுகள் அணா 5 பிரத்தியேகம்.

இந்தியன் பேட்டல் டஸ்டு.—அதிமனோரம்மியமான சுகந்த சலவை பொட்டலம். உடுப்பு பெட்டிகளில் வைத்திருந்தால் உடைகளுக்கு மிகவும் உன்னதமான சுவாசனை ஏற்றுவதுமன்றியில், வண்டு முதலிய பூச்சிகள் துணிகளில் அணுகாமல் கார்க்கும். இதன் இன்பமான சுகந்தம் நெடுநாள் நிற்கும். பொட்டலம். 1-க்கு விலை அணா 4. ஒன்றுமுதல் 12 பொட்டலங்கள் வரையில் அனுப்ப வி. பி. செலவுகள் அணா 5 பிரத்தியேகம்.

### உடுப்புகளுக்கு விலாசம் போடும்
### அழியாத மை அல்லது இங்கி.

பருத்தி, கம்பளி, பட்டுமுதலிய, வஸ்திரங்களில் எவ்வளவு தடவை வஸ்திரங்களை துவைத்தாலும் அல்லது வெளுத்தாலும் விலாசம் எக்காலத்திலும் அழியாது. இந்த மையினால் விலாசம்போட்டால் உடுப்புகளை திருட்டுப் போகாமலும், மாற்றப்படாமலும், கார்க்கலாம்.

விலை—சீசா 1-க்கு அணா 8.

வி. பி. செலவுகள் 1-முதல் 6-சீசாக்கள் வரையில் அணா 5 பிரத்தியேகம்

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ஹ சித்திரைமீ [பகுதி-சூ.

## பரிசோதனத்தொடர்.

(திருக்குறள்-கூகரு, கூ௱௪௪.)

பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

இக் குறளுரை, இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கையறிவினையுடையார் பொருள்கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லியநலத்தைத் தீண்டார்.

மதிநன்மை - முற்பிறப்புக்களிற் செய்த நல்வினைகளான் மனந் தெளிவுடைத்தாதல். அதனானன்றிக் கல்வியறிவு மாட்சிமைப் படாமையின் மதிநலத்தின் மாண்டவறிவினவ ரென்றும், அவ் வறிவுடையார்க்கு அவராசையது பொய்ம்மையும், மெய்ந்நலத்தது பொதுமையும் விளங்கித்தோன்றலின் தோயாரென்றும் கூறினார். என அச்சிட்ட புத்தகங்களிலும், சில ஏடுகளிலும் எழுதப்பட்டிருக்கிறது.

சில ஏடுகளில் விசேடவுரையின் இறுதிவாக்கியம் "அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொதுமையும், மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித்தோன்றலின் தோயாரென்றும் கூறினார். என்றெழுதப்பட்டிருக்கிறது.

"பொதுநலத்தார்" என்றதற்குப் (பொருள்கொடுப்பார்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையினையுடையார் என உரையெழுதப் பட்டமையால் அவரது ஆசையின்கட் பொதுமையும், புன்னலம்

*

என்றமைபால் அவரது நலத்தின்கட் புன்மையு முண்மையாற் பின்னர்க் காட்டிய ஏடுகளிற் கண்டபடி "அவ் வறிவுடையார்க்கு அவராசையது போதுமையும் மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின் தோயாரென்றும் கூறினர்" என்றபாடமே சுத்தபாடமாகக் காணப்படுகிறது.

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

(இதனுரை) பிறவறங்களும் வேண்டுமாயினும் தவம் ஓருயிரையும் கொல்லாத வறத்தின்கண்ணதாம். அதுபோலப் பிறகுணங்களும் வேண்டுமாயினும் சால்பு பிறர்குற்றம் சொல்லாத குணத்தின் கண்ணதாம்.

நலமென்னும் ஆகுபெயர்ப்பொரு ளிரண்டனையும் தலைமை தோன்ற இவ்விரண்டற்கு மதிகாரமாக்கிக் கூறினர். தவத்திற்குக் கொல்லாவறம் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர்குற்றஞ் சொல்லாக் குணஞ் சிறந்ததென்பதாம். எனப் பரிமேலழகருரைப்பதிப்புப் புத்தகங்களிலும் ஏடுகளிலும் எழுதப்பட்டிருக்கிறது.

இதனுள் "நலமென்னும் ஆகுபெயர்ப்பொரு ளிரண்டனையும் தலைமைதோன்ற இவ்விரண்டற்கும் அதிகாரமாக்கிக் கூறினர்" என்ற வாக்கியப்பொருள் தெளிவுபெற விளங்கவில்லை.

ஏனெனில், அவ்வாக்கியத்தில் நலமென்பவை என்ன ஆகுபெயர்? அவற்றின் இயற்பொருள் யாவை? ஆகுபெயர்ப்பொருள் யாவை? இவ்விரண்டற்கு மென்றது எவற்றை? அதிகாரமென்ற சொற்குப் பொருள்யாது? அது இங்கு எப்பொருளில் வழங்கப்பெற் றிருக்கிறது? அது பொருத்தமுள்ளதா? எனப் பல ஆசங்கைகள் நிகழ்கின்றன.

இவற்றுள் அவ்வாகுபெயரைப்பற்றி, ஒரு பதிப்பில், நலமென்னும் குணப்பெயர் அறத்துக்கும் பண்புக்கு மாதலால் பண்பாகு பெயர் என்றும், அறமும், பண்பும் இங்குப் பொருளாகக் கருதப் பட்டனவென்றும் கீழ்க்குறிப்பில் விளக்கி யெழுதப்பட்டிருக்கிறது.

அறமும், குணமும் பொருளாகக் கருதப்பட்டதற்குப் போது மான காரணம் காணப்படவில்லை.

அன்றியும், ஒருபண்பின் பெயர் அப்பண்பினெ டொற்றுமை யுடைய பண்பிவை யுணர்த்துமிடத்துப் பண்பாகுபெயராகும். அவ் வாறன்றி யொரு பண்பின்பெயர் அப்பண்பினே டொற்றுமையில் லாத பிறிதொருபொருளை யுணர்த்துமிடத்துப் பண்பாகுபெயரெனக் கொள்ளுதல் பொருந்தாது. அவ்விரண்டற்கு முளதாகிய இயைபினை யுணர்ந்து அவ்வியைபிற்கேற்ப இன்ன ஆகுபெயரென வழங்குதல் முறையாகும்.

ஆதலால் இங்கு நலமென்னுஞ் சொல்லுக்கு இயற்பொருளிது ; ஆகுபெயர்ப்பொருளிது ; என்பதையும், அவ்விரண்டு பொருட்கு முள்ள இயைபு இன்னதென்பதையும் கண்டு இன்ன ஆகுபெயரெனத் துணியவேண்டும்.

அவற்றுள், நலம் என்னுஞ் சொல்லுக்கு நன்மையின்கண் ஆற்ற லுண்மைபால் நன்மையே இங்கு அச்சொல்லின் இயற்பொருளெனக் கொள்ளத்தகும்.

உரையில் நலத்தது என்னு மிரண்டிற்கு முறையே "அறத்தின் கண்ணது" "குணத்தின் கண்ணது" எனப்பொருளெழுதப்பட்டமை யால் நலமென்னும் சொற்களுக்கு அடைவே அறமும், குணமுமே ஆகுபெயர்ப்பொருள்களாகின்றன. இவற்றுள் குணமென்றது குற்றத் தின் மறுதலையாகிய நற்குணமாம் ; சால்பிற்குரிய ததுவேயாதலால்.

நலமென்பதன் இயற்பொருளாகிய நன்மைக்கும், ஆகுபெயர்ப் பொருளாகிய அறம், குணங்களுக்கும் உள்ளதாகிய இயைபென்ன வென நோக்கின், ஒருவனுக்கு அறத்தாலும் குணத்தாலும் நன்மை யாகிய காரியம் பிறத்தலாற் காரிய காரண சம்பந்தமென்பது பெறப் படும். பெறவே, ஒருவன் நலமடைதற் கேதுவாகிய அறமும், குணமும் அவற்றின் காரியமாகிய நன்மையின் பெயரால் நலமென வழங்கப்பட்டமையாற் காரியவாகு பெயரெனக் கொள்ளத்தகும்.

விசேடவுரையுள் இவ்விரண்டற்கு'மென்றது இக்குறளுள் எடுத்துக்காட்டுவமையும், பொருளுமாகச் சொல்லப்பட்ட நோன்மை, சால்பு என்னு மிரண்டற்கு மென்றபடி.

அவற்றுள், முறையானே கொல்லாவறத்தினை நோன்மைக்கும், பிறர்தீமை சொல்லாக்குணத்தினைச் சால்பிற்கும் அதிகாரமாக்கிக் கூறினு ரென்பது போதரும்.

இதனுள் அதிகாரம் என்ற சொல்லா லுணர்த்தவேண்டும் பொருள் யாதெனவாராயின், "ஒருயிரையுங் கொல்லாத வறத்தின் கண்ணது நோன்பு" "பிறர்தீமை சொல்லாத குணத்தின் கண்ணது சால்பு" என்ற உரைவாக்கியங்களால் கண்ணென்னுஞ் சொல்லா லுணர்த்தப்படும் நிலைக்களமாகிய இடவிசேடப்பொருளே இங்கு அதிகாரமென்னுஞ் சொல்லாலுணர்த்தக் கருதிய பொருளெனக் காணப்படுகிறது.

அது, இங்கு நிலைக்களம், ஆதாரம், அதிகரணம், இருப்பிடம் என்னும் பரியாயப்பெயர்களால் வழங்கப்படு மிடவிசேடமாகிய நிலைக்களமாம். அதிகாரமென்பது இப்பொருளில் பரியாயப்பெயராகக் காணப்படவில்லை.

இனி, தொல்காப்பியப் பொருளதிகாரத்துள் அதிகாரமுறை என்னும் உத்திவகைக்கு உரையெழுதிய உரைகாரரால், "அதிகாரமென்றசொற்குப் பொருண்மையென்னவெனின் முறைமையெனவும், இடமெனவும், கிழமையெனவுங் கொள்ளப்படும்" எனப் பொருளெழுதப்பட்டன.

அங்கு இடமென்றது ஒரு நூலின் ஏகதேசமாகிய படலமுதலிய வுறுப்பைக்குறித்து வழங்கப்பட்டிருக்கிறது. அது வடமொழியில் ப்ரகரணம் என்னும் பரியாயப்பெயரால் வழங்கப்படும் இடவிசேடமாகும்.

ஆதாரம், அதிகரணம், நிலைக்களம், இருப்பிடம் என்னும் பெயர்களால் வழங்கப்படும் இடவிசேடமே இக் குறளுரையாற் கருதப்படுமிடம்.

இவ்வாறு இடவிசேடத்தை யுணர்த்தும் சொற்களைப் பொதுப் பட இடப்பொருளுணர்த்திற்றென்று நூல்களிற் கூறுதல் இலக்கண வழக்கு. இதனை "அந்நிலாங் கசைநிலை யிடப்பொரு ளவ்வே" எனப் பொதுப்பட இடப்பொருள வெனக் கூறினும், அவை சுட்டிடப் பொருளாகிய இடவிசேடத்தையே யுணர்த்து மென்பது கருத்தா மாறு காண்க.

ஆதலால் பிரகரணமென்பதன் பரியாயப்பெயராகிய அதிகாரம் என்னுஞ்சொல்லா லுணர்த்தப்படும் இடப்பொருண்மை வேறென்ப தும், ஆதாரம் என்பதன் பரியாயப்பெயராகிய அதிகரணம் என்னுஞ் சொல்லா லுணர்த்தப்படும் இடப்பொருண்மைவேறென்பதும் பெறப் படும்.

இவ் விருவகை யிடப்பொருளுள் இக் குறளுரையிற் கொள்ளத் தகு மிடப்பொருண்மை யாதெனில், அறத்தின் கண்ணது குணத் தின் கண்ணது என்று கூறப்பட்டிருத்தலால் கண்ணென்னுஞ் சொல்லா லுணர்த்தப்படும் இருப்பிடமாகிய இடப்பொருளாம். இதுவே, ஆதாரம், அதிகரணம், நிலைக்களம், இருப்பிடம் என்னும் சொற்களா லுணர்த்தப்படும். இது பிரகரணம் என்பதன் பரியாய மாகிய அதிகாரம் என்னுஞ் சொல்லா லுணர்த்தப் படுவதன்று.

இவ் விரண்டினுள், அதிகாரம் என்னும் சொல்லா லுணர்த்தப் படும் படல முதலிய இடப்பொருண்மை இக் குறளுரைக்குப் பொருத்த மில்லதாகவும், அதிகரணமென்னும் சொல்லா லுணர்த்தப் படு மிருப்பிடமாகிய இடப்பொருண்மை பொருத்தமுள்ளதாகவும் காணப்படுகின்றன.

ஆதலால் "நலமென்னும் ஆகுபெயர்ப்பொரு ளிரண்டனையும் தலைமைதோன்ற இவ் விரண்டற்கும் அதிகரணமாக்கிக் கூறினர்" என்றிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.

———

ஸ்ரீ:

# *ராஜ பக்தி.

## சபை வணக்கம்.

### விருத்தம்.

(திருமாற்கும் சபைக்கும் சிலேடை.)

மதியகம் வருத லானு மாகயங் கோட லானும்
விதிதனின் மேவ லானு மின்னுநூற் பணியி னானும்
சதிருறு திதியி னானும் சங்கரன் கமர்த லானும்
துதிபெறு மாலா மிந்தச் சுழலவை பணிகு வேனே.

---

## ராஜபக்தி.

இஃது ஈண்டு இங்ஙனம் பாகுபாடுபெறும்:

1. அன்பு.
2. ராஜபக்தி.
3. அரசனது பெருமை.
4. அரசுமுறையின் நன்மை.
5. ராஜபக்தியைக் கொண்டொழுகுமாறு.
6. இக்காலத்துச் சில குறிப்புக்கள்.
7. ராஜபக்தியை வற்புறுத்தல்.
8. முடிபுரை.

---

* இவ் வியாஸம் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் பன்னிரண்டாவது வருஷக் கூட்டத்தில் மகா-ள-ள-ஸ்ரீ ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை பி.ஏ., பி.எல்., அவர்கள் அக்கிராசனத்தின் கீழ் மகா-ள-ள-ஸ்ரீ கா. கோபாலாசாரியர் அவர்களாற் படிக்கப் பெற்றது. ப—ர்.

## 1. அன்பு.

உலகத்தில் மக்களாய்ப்பிறந்தார் பிறர்மாட் டன்புகொண் டொழுகுதல் அன்னார்க்கு இன்றியமையாது வேண்டப்படுவ தொரு சிறப்புக்குணமாம்.

"அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு"

எனத் தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனார் அருளிய அருமைத் திருக்குறளில், 'பெறுதற்கரிய மக்களுயிர்க்கு உடம்போடுண்டாகிய தொடர்ச்சியினை அன்போடு பொருந்துதற்கு வந்த நெறியின்பய னென்று சொல்லுவர் அறிந்தோர்' என்று உரைத்தருளினர் சிரமேற் புலவர்கொள் பரிமேலழகியார். அதன் கருத்தாவது:—மக்கள் உடம்பு பெற்றிருத்தல் அவர் ஏனைய உயிர்கள்பால் அன்புடையராய் ஒழுகு தற்கே யென்பதாம். ஆகவே, மக்கட் பிறப்பின் பயன் அன்புடைமை யென்றதாயிற்று. இவ்வாறு, ஒருவன் அன்புடையனா யிருத்தல் வேண்டுமென்று உணர்த்திய தெய்வப்புலவர்,

"அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு"

என்னுங் குறளினுள் அன்பில்லாத உடம்பு உயிருடையதாயினும் உயிரில்லாவுடம்பேயாம் என்னுங்கருத்தினையும் வெளியிட்டருளினர்.

## 2. ராஜபக்தி.

இவ்வாறு சிறப்பிக்கப்பெற்ற அன்பானது தாய் தந்தை குரு தெய்வம் மனைவி மக்கள் உற்றார் நட்டார் முதலானாரிடத்தேயன்றி, வீடு மனை நிலம் தோட்டம் மாடு கன்று பொன் மணி நென் முதலிய பொருள்களிடத்தும் மனிதனுக்கு உளதாதலை நாம் பல்காலும் பார்த் தறிகின்றோம். இவ்வாறே, நமக்கு வேண்டப்படுவனவாய நன்மை களை நாடிச்செய்து நம்மை அன்போடு ஆண்டுவரும் அரசர்மாட்டும் மக்கள் அன்பு செய்கின்றனர். இந்த அன்பு, மாதா பிதா குரு தெய்வம் அரசன் ஆகிய இப் பெரியார்கட் செய்யப்பெறுமாயின் "பக்தி" என்பதோர் உயரிய பெயர் பெறும். மாத்ருபக்தி, பித்ரு

பக்தி, குருபக்தி, தெய்வபக்தி என்பதுபோலவே "ராஜபக்தி" எனவும் சொல்லுகிறோம். இவர் மாதாவினிடம் பக்தியுடையவர், பிதாவின்கண் பக்திகொண்டவர், குருவின்மாட்டுப் பக்திசெய்பவர், தெய்வத்தின்பால் பக்தியுள்ளவர் என்பதுபோல, மனைவியினிடம் பக்தியுடையவர், மக்களின்கண் பக்திகொண்டவர், மாட்டின்மாட்டுப் பக்திசெய்பவர் என்று சொல்வதொருவழக்காறில்லை. ஆகவே, "பக்தி" என்னும் சொல்லின் வழக்கே மிக்க மேம்பாட்டினைக் குறியா நின்றது என்று அறிகின்றோம்.

### 3. அரசனது பெருமை.

அங்ஙனமாயின், தாய் தந்தை குரு அரசன் ஆகிய இவர் எவ்வகையின் மேம்பாடுடையர் எனின், இவரது மேம்பாட்டிற்குப் பல காரணங்களுளவாயினும், விசேஷமாக இவர் தெய்வத்தன்மையுடையர் என்பதேயன்றித் தெய்வாம்சமுடையர் எனவும் நூல்கள் சொல்வது தான்.

"அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்"

"குருர்விஷ்ணுர் குருர்ப்ரஹ்மா குருர்த்தேவோ மஹேசவர:
குருரேவ பரம்ப்ரஹ்ம தஸ்மைஸ்ரீ குரவேநம:"

"நாவிஷ்ணு: ப்ருதிவிபதி:"

எனவுங் கூறுப. இதுபற்றி யன்றே

"குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை"

எனக் குமரகுருபரருங் கூறினர். இச்செய்யுளில், கொழுநன் குலமகட்கும், பெற்றோர்—பிள்ளைகட்கும், குரு—பிரமசரிய நிலையுடையார்க்கும் தெய்வமாதல்போலன்றி, அரசன் எல்லார்க்குந் தெய்வமாவான் என்றதனாலே அவனிடம் தெய்வத்தன்மை தெய்வாம்சக்களின் மிகுதி உணரப்பெறும். ஞானங்களிந்து நலங்கொண்ட நம்மாழ்வார் என்னும் சடகோபமுனிவரும் ஸாமவேத ஸாரமான தமது திருவாய்மொழி யென்னும் திவ்யப்ரபந்தத்தில்,

"திருவுடை மன்னரைக்காணிற் திருமாலைக் கண்டேனே யென்னும்"

என அரசரைத் திருமாலின் உருவாக உரைத்தருளினர். இதனையே கொண்டு, திருக்குறளுக்குச் சிறக்கவுரைசெய்த, தரைமேலுரை பெறு பரிமேலழகியார் "இறைமாட்சி" என்னும் அதிகாரத்தில், உலக பாலருருவாய் நின்று உலகங்காத்தலின் 'இறை' யென்றார். "திரு வுடை மன்னரைக் காணிற் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார் என அரசர் திருமாலின் அம்சமென்பதைப் பிரமாணங்காட்டி உரைத்தனர். 'இறை' என்னுஞ்சொல் கடவுள் அரசன் ஆகிய இருவர்க்கும் பொதுப்பெயராதலும் அறிக. "இறை சிவன்கடன்வேந்தன்கை யிறையிறுப் பிறை சிறந்தோன்" என்பது நிகண்டு. 'இந்திரன், வாயு, இயமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரன் ஆகிய இன்னோரம்சங்களினாலே அரசன் ஆக்கப் பெற்றான்; மற்றும், இவர்களம்சமாதலின் அரசன் மக்களனைவரினும் மிக்காந்தியுள்ளவனும், அனைவரையும் ஆளத்தக்க வீரியமுடைய வனும் இருக்கின்றான்' என மனுநூல் கூறுநின்றது. இன்னும்,

"அரச னுவாத்தியான் தாய்தந்தை தம்முன்
நிகரில் குரவ ரிவரிவரைத்
தேவரைப் போலக் கொண்டொழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி"

என "ஆசாரக்கோவை" எனும் சங்கநூலில், ஒருவன் தெய்வமெனக் கொண்டு பக்தியோடு வழிபட்டொழுகுதற்குரிய சிறப்புடைய ஐங் குரவர் இன்னார் எனக்கூற வந்தவிடத்து அரசனை முதற்கண் எடுத் தோதினர் முள்ளியார் என்னும் முதறிவாளர்.

வாலியென்ற வானரமன்னன் மரணமெய்திய தருணத்துத் தன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு நற்புத்தி கூறுமிடத்து, கல்வியிற்பெரிய ராய கம்பநாடர் இங்ஙனம் ராஜபக்தியை அவ்வாலியின் வாய்மொழி யாக எடுத்துரைக்கின்றார்.

"அரசியற் பாரம் பூரித் தயர்ந்தனை யிகழா தையன்
மரைமலர்ப் பாத நீங்கா வாழுதி மன்ன ரென்பார்
எரியெனற் குரியா ரென்றே யெண்ணுதி யெண்ணம் யாவும்
புரிதிசிற் றடிமை குற்றம் பொறுப்பரென் றெண்ணவேண்டா"

அஃதாவது - நீ அரசச் செல்வமடைந்ததனால் நினக்கு அரசளித்த ஸ்ரீராமனை மறந்து அலக்ஷியஞ் செய்யேல்; அவன்றிருவடிக் கீழ்ச்செய்யத்தகும் பணிகளைச் செய்து வாழ்வாயாக; அவனுக்குச் சீற்றமுண்டாமாறு ஒழுகேல்; ஏனெனின், அரசர் ஒருவர் செய்த குற்றத்தைப் பொறுப்பரென்று நினையேல்; அரசர் நெருப்பினை யொப்பர் ; என்பதே.

"அளையுறை பாம்பு மரசு நெருப்பும்
முழையுறை சீயமு மென்றிவை நான்கும்
இளைய வெளிய பயின்றனவென் றெண்ணி
இகழி னிழுக்கந் தரும்"

என "ஆசாரக்கோவை" என்னும் நீதிநூல் கூறுமாறு பாம்பும் அரசும் நெருப்பும் சிங்கமும் இளையது எளியது பயின்றது என்று அலக்ஷியஞ் செய்வோமாயின் அவை தீங்கிழைக்கும். "அரசரும் பாம்பும் நெருப்பும் சரி" என ஒருவழக்குரையும் உளது. இன்னும், தசரதனது அரசுமுறையினைக் கூறுமிடத்து,

"தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம் பயப்பில்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன்"

என, தன்குடிகள்பால் அன்புகொண்டு அவர்களைப் பாதுகாத்தலில் அரசன் தாயினை ஒப்பானென்பதையும், பல நலன்களையும் அளித்தலில் தவத்தினை நிகர்ப்பானென்பதையும், நற்கதியுய்த்தலில் சற்புத்திரனைப்போல்வானென்பதையும், நோய் நேர்ந்தவழி அதனைத்தீர்த்தலில் நன்மருந்தினை மானுவானென்பதையும், நூற்பொருள்களை ஆராய்ச்சிசெய்யப்புகுங்கால் ஐயந்திரிபற்ற மெய்யறிவினையன்னானென்பதையும் கவிசக்ரவர்த்தியார் வெளியிட்டருளினர்.

இங்ஙனம் பன்னூல்களானும் பல்வகையானும் சிறப்பிக்கப்பெற்ற பெருமையினையுடைய அரசனை ஒரு சாமானிய மனிதனென என்னுதல் தகாது. கல்லெல்லாம் மாணிக்கக்கல்லாமோ? பூவெல்லாந் தாமரையின் பூவாமோ? பாலெல்லாம் நற்பசுவின் பாலாமோ?

கடலுப்புக் கர்ப்பூரமாமோ? கள்ளிச்செடிகற்பகதருவாமோ? கால் வாய் கடலாமோ? ஊர்க்குருவி உவணப்புள்ளாமோ? கைகால்முதலிய உறுப்புக்கள் காணுங்கண்ணுமோ? அதுவேபோல மானுடரெல்லாம் மன்னவராவரோ? மன்னர்பெருமை மற்றையோர்க்கேது? ஆகவே, அம்மன்னவர் மாட்டுத் தெய்வத்தன்மை பாராட்டி அவராணைக்கு அமைந்து ஒழுகல்வேண்டும். யாவரையும் ரஞ்சிப்பிக்கின்றவனாதலின் 'ராஜா' எனவும், எல்லாரினும் மேன்மையுடையனாதலின் 'மன்னன்' எனவும், அனைவர்க்கும் பொதுநிற்பவனாதலின் 'இறைவன்' எனவும் அரசனுக்குப் பெயர் கூறுவர். மற்றும், இவை போல்வனவாகிய பெயர்கள் மன்னவனைக்குறித்து வழங்குகின்றன.

## 4. அரசுமுறையின் நன்மைகள்.

முற்காலத்தில் நந்தேயத்தை ஆண்ட அரசர் தமது கோலின் கீழ்ப்பட்ட குடிகட்குச் செய்துவந்தமையேபோல, இக்காலத்திலும் நம்மனைவரையும் அன்போடு ஆட்சிபுரியாநின்ற ஆங்கில அரசரும் நமக்குவேண்டும் நலன்களைச் செய்துவருகின்றனர். அவையாவன: கல்வி, கைத்தொழில், வர்த்தகம், இருப்புப்பாதை, தபால்ஸ்தாபனம், தந்திநிர்மாணம், அச்சுக்கூடம், சமாசார பத்திரிகை, பொதுநலத்திற்குரிய சபை, நீதிவிசாரணைத்தலம், வைத்தியசாலை, சட்டதிட்டங்கள் முதலியவாகப் பலவாம். எந்த நாடாயினும் அந்நாடு செழித்தோங்குதற்குத் தலைமைபெற்ற கருவி கல்வியேயாம். அக்கல்வியை அவ்வக்காலத்திற் கேற்கும்வண்ணம் நம் சிறுவர்க்குப் பயிற்றிவந்தனர். இவர்களும் ஆங்கிலர்முதற் பலரும் வியக்கும்விதம் அக்கல்வியிற் பயின்று தேறிப் பல பெரும்பதவியிலேறிப் பெருமை பெற்று விளங்குவாராயினர். நம்மவர் கூரிய அறிவும் சீரியகருத்தும் உடையராய், கண்ணுற்கண்டதைக் கையாற்செய்யும் ஆற்றலுடையராதல்பற்றி எதனையும் எளிதினறிந்து இயற்றி இன்பம் பெறுவாராயினர். நம் ஆங்கில அரசாக்ஷியார், பின்னல் என்னதீங்கு நேருமோவெனச் சிறிதும் நினையாமே தமது கல்வியாகிய பெருஞ்செல்வத்தை மிக்க உதாரகுணத்தோடு நமக்கு அபரிமிதமாக வழங்கினர். பல்வேறு சாதி மதம் பாஷை நடை நொடி பாவனையுடையதாய்ப் பரவியுள்ள இப்பரதகண்டத்தில் ஆங்கிலர் முதலிய அந்நியர்க்கும் நமக்கும்,

ஒருவர்பாஷை ஒருவர் அறியாமையினுல், முன்னிருந்த ஒருவகை வெறுப்புநீங்கி, இப்பொழுது ஒருவருடைய குணாதிசயங்களை மற்றொருவர் அறிந்து கலந்து ஒருவர்க்கொருவர் உபகாரசிலராய் ஒழுகுதலன்றியும், தங்களுள் அறிவும் அபிமானமும் ஐக்கியமும் உடையராய் வாழும்வண்ணம் யாவரும் பொதுவான பாஷையாகக்கொண்டு பேசி அளவளாவுதற்கு ஏற்புடைக் கருவியாக ஆங்கில கலாசாலைகளை அமைத்து நம் அரசுமுறையார் நம்மவர்க்கு அறிவூட்டிவருகின்றனர். அதனுல், நஞ்சிறுவர் அன்னியநாடுகளின் நடை நொடி பாவனைகளில் ஏற்பனவற்றைத் தழுவி, அவ்வத் தேயங்களின் அரசுமுறை வர்த்தகம் நாகரிகம் முதலியவற்றில் நல்லனவற்றைத்தெரிந்து கைக்கொண்டு, நல்லொழுக்கமும் காரியநிர்வாகஸாமர்த்தியமும் உடையரென நன்குமதிக்கப்பெற்று, உயரிய நிலையில் உத்யோக பதவி பெய்தி நமக்கு நன்மையும் மேன்மையும் செய்தற்குரியராயினர்.

நெடிது தூரிய நிலங்கட்கு முன்பு போவதெனின் எத்தனை நாட்களும் மாதங்களும் செல்லும்? போகும் நெறியிடையே கள்வர் முதலியோரால் எத்தனை இன்னல்கள் உளவாம்? அவை யொன்றுமின்றி, விரைவிலும் இரவிலும் எளிதாகப் போக்குவரவுசெய்யுமாறு இருப்புப்பாதைகளையும், பன்னூறு காதங்களுக்கப்பாற்பட்டுள்ளதேயங்களுக்குச் சிறிதுநேரத்தில் செய்தியெட்டும்வண்ணம் மின்சாரத் தந்தியையும் ஏற்படுத்தி, மற்றும் தபால் ஸ்தாபனமும், சாலைகளும், எம் மதத்தினர்க்கும் சம்மதமாம்படி ஒரேவிதமான நீதிவிசாரணை நிலயங்களும், இன்னும் இவைபோல்வனவாய விஷயங்களும் இவ்வாங்கில அரசுமுறையில் கிடைத்துள்ள நன்மைகளெனப்பாராட்டும் வண்ணம் செய்திருக்கின்றனர். சுருங்கக்கூறுமிடத்து, இங்ஙனம் மேற்குறித்த விஷயங்களே இந்தியாவைச் செல்வத்திலுயர்த்தின; பலநாடுகளும் ஒன்றற்கொன்று உதவியாம்விதம் அணிமையாக்கின; எங்கிலாந்திற்கும் இந்தியாவிற்கும் நட்பைப் பெருக்கின; பலவகை மக்களும் ஆங்கிலரோடு கலந்துறவாடி நலம்பெறச்செய்தன.

உலகினது விசித்திர அமைப்பினைக்கண்டு இறைவனது பரமசக்தியையும் பரமஞானத்தையும் புகழ்வதுபோல, அரசுமுறையில் மக்களுக்குளவாம் நன்மைகளை நாடி அரசனது நற்குணத்தைப்

பல்லுயிர்களும் பாராட்டிப்புகழும். குழவிகள் தாயின்பால் நோக்கி வாழ்வதேபோலக் குடிகள் அரசனது கோல்நோக்கி வாழும். எனவே, உயிர்களைக் காத்தற் கடமைபூண்ட அரசன் தன்கோலின்கீழ் வாழுங் குடிகட்குச் செங்கோலனாகிச் செம்மையுளதாக அரசுசெலுத்தக் கடவனேயன்றி, தனது செல்வச்செருக்கினால் கோல்கோடி அவர்கட்குத் தீமையாவனவற்றைச் செய்து தனது இன்பத்தில் மகிழ்ந்திருத்தல் தகாது. இதுபற்றியன்றே,

"......................கோல்கோடிமாராயம்
செய்யாமை முன்னினிது செங்கோல னாகுதல்
எய்துந் திறத்தா லினிதென்ப"

எனப்பூதஞ்சேந்தனார் என்னும் சங்கப்புலவர் கூறினார். மழைமுதலிய வளங்கள் செங்கோலரசர் இல்லாத தேயத்தில் இல்லையாம்.

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை மழையும்
தவமிலா ரில்வழி யில்லை—தவமும்
அரசிலா ரில்வழி யில்லை—அரசும்
இல்வாழ்வா ரில்வழி யில்"

எனக் காகனார் என்னும் மற்றொரு புலவர் கூறுகின்றார். மக்கள் மன்னவன் பால் அன்புடையராய் ஒழுகுதல் பெரும்பாலும் அவன் செங்கோலனாய்த் தங்களுக்கு நன்மை புரிதலினாலேதான். ஆயினமை பற்றி அவன் தன்னை உயிர்கள் தாயெனக்கொண்டு அன்புபாராட்டித் தனது ஆணையின்வழிச் செல்லுமாறு அவற்றை அருளொடு பாதுகாத்தல் வேண்டும். எனினும்,

"இவறலு மாண்பிறந்த மானமு மாணா
உவகையு மேத மிறைக்கு" எனவும்,

"ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை"

எனவும் உலகுய்யத் தோன்றிய செந்நாப்போதார் திருவாய்மொழிந் தருளியவண்ணம், தனது கோலின்கீழ் வாழ்வார் குற்றஞ் செய்வராயின் அக் குற்றத்தைநாடி, அது செய்தார் தனது உயிரினுஞ் சிறந்தாராயினும் அன்னோர்கண்ணே கண்ணோடாமே நடுவுநிலைமையைப்

பொருந்தி, அக் குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோ ரோடு ஆராய்ந்து அவ் வளவினதாகச் செய்தல் அரசனுக்கு முறை யென்றமையின், தீமைசெய்தாரைச் சிக்ஷித்தலும் வேண்டும். இதனை,

"ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
தருமந்தன் வழிசெல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தோாழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோதான்"

எனப் பெரியபுராணமுடையார் கூறும் மனுநீதிச்சோழனது நீதியும்,

"எனக்குத் தகவன்று லென்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் தானாய்த்—தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் தென்னவனுங்காணூர்
எனச்செய்யார் மாணா வினை"

எனப் பழமொழியாசிரியர் கூறும் பொற்கைப்பாண்டியன் செய்தியும் வலியுறுத்தா நின்றன. துஷ்டநிக்ரகமும் சிஷ்டபரிபாலனமுஞ் செய்தல் காவலர்க்குரிய கடமையேயாம்.

"நாயகன் நல்லன் நம்மை நனிபயந் தெடுத்து நல்குந்
தாயென இனிது பேணத் தாங்குதி தாங்கு வாரை"

என ஸ்ரீராமன் சுக்கிரீவனுக்கு உரைத்தருளியதாகச் சிஷ்டபரி பாலன தர்மத்தையும்.

"ஆயது தன்மை யேனும் அறவரம் பிகவா வண்ணம்
தீயன வந்த போது சுடுதியாற் றீமை யோரை"

எனத் துஷ்டநிக்ரக மர்மத்தையும் கல்வியிற் பெரியார் ஒரே கவியி னுள் மாதுரியமும் சாதுரியமுந் தோன்றக் கூறியது மிகப் பாராட்டற் பாலது.

இவ்வாறே, நம் ஆங்கில அரசரும் தம்மாலேனும், தமக்குக்கீழ் நிலையினுள்ள உத்தியோகஸ்தராலேனும், பகைவராலேனும், கள்வரா லேனும், மற்றெவராலேனும் நமக்கு யாது தீதும் வாராதவாறு நம் மைப் பாதுகாத்துவருவதுமன்றி, வற்கடம் நோய் முதலியவற்றால் துன்பம் வருவதாகத் தோன்றியவிடத்து அவ்வபாயங்களைத் தடுக்கத்

தக்க உபாயங்களை நாடிச்செய்து பெற்றதாய்போலப் போஷிக்கின்றனர். அவர் பல்லாண்டுகளாக நம்மை ஆண்டு நம்மோடு பழகியிருப்பினும், ஊண், உடை, நடை உருசி முதலியவற்றில் நம்மினும் வேறுபாடுடையராதலின் சிற்சில அமயங்களில் நமக்கு இன்னவை நன்மையாகுபவை எனவும், மற்றின்னவை தீமையாகுபவை எனவும் அறிதல் அவர்க்கு இயலாதாதல்பற்றி, நமக்கு வேண்டுவன இவை வேண்டாதன இவை யென்பதைக் காலம் இடனறிந்து அவர்க்கு நாம் எடுத்துரைத்து நமக்கு ஆவனமுடித்துக்கொள்ளல் வேண்டும். அங்ஙனம் நாம் கேட்பனவற்றை அவர் அங்கீகரித்து ஆவனசெய்வர். இங்ஙனம் குடிகட்கு நல்லன நாடிச்செய்யும் அறநிலைவழுவா அரசரிருக்கும் நாட்டில் காலமழை பிழையாது பொழியப் பல்வளனும் மல்கியிருக்கும்.

"இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு"

என்பது பொய்யாமொழியன்றோ? பாண்டவர் நாடுதுறந்து காடு புகுந்து பன்னிரண்டாண்டு கடந்து விராடதேயத்து உறைந்துழி, பாண்டவர் மாண்டவராக வேண்டிய துரியன் முதலோர், அந் நாடு நிலவளன் சலவளன் முதலிய பலவளங்களும் மலியப்பெற்றுப் பொலிவுற் றிருந்தமை கேள்வியுற்று அக் குறிப்பினாலே, ஆண் டவருளராதல் வேண்டுமென்று ஊகித்தறிந்தனர் என்று உரைக்கப்பட்டுளது. நல்ல அரசர் இல்லாதநாடு பொல்லாதகாடு போல்வதாம். ஸ்ரீராமன் அயோத்திதுறந்து அடவியடைந்துழி அச் சாகேதநகரம் நலனழிந்து பொலிவொழிந்து இருளடைந்த உலகம்போன்றிருந்தது என்று சொல்லப்பட்டுளதன்றோ?

## 5. ராஜபக்தியைக் கொண்டொழுகுமாறு.

மன்னுயிரைத் தம்முயிர்போல மதித்துத் தளராத பேரன்போடு தாங்கித் தரணி முழுதாண்ட தருமகுண ஸம்பன்னரான அரிச்சந்திரன், நளன், ஸ்ரீராமன், தருமபுத்திரன் முதலிய மன்னவர், வானம் மும்மாரி வழங்க, வையம் வளஞ்செழிக்க, தானந்தழைக்க, தவம்வளர, அவந்தளர, புல்வாயும், புலிப்போத்தும், பருந்தும், பைங்கிளியும்

ஒருவழியோடி யொத்துவாழ, மணியின்கண் ஒளியும் மலரின்கண் மணமும் உடலின்கண் உயிரும்போல நின்று, கரி பரி தேர் காலா ளென்னும் நாற்படையாலும் வில் வாள் வேற்படையாலுமேயன்றி, தமது நிலையாலும் அருளாலும் பெயராலும் பகையை அடக்கிப் பார்காத்து வந்த காலத்து,

"கோதை நித்திலஞ் சூழ்குளிர் வெண்குடை
ஓத நீருல கொப்ப நிழற்றலால்
தாதை யேயவன் தாணிழற் றங்கிய
காத லாற்களிக் கின்றதிவ் வையமே"

என்றவாறு, மக்கள் அவரது குளிர்வெண்குடை நிழலில் தங்கி அவரைத்தமக்கு நற்றாயும் நற்றந்தையுமெனப் போற்றி வழிபட்டு வாழ்ந்தனர் என்று அறிகின்றோம். மற்றும், அவர் விதிவயத்தராய் நாடிழந்து காடடைந்து கேடுழந்தபோழ்து குடிமக்க ளனைவரும் அவரைப் பிரியப் பிரியமின்றி அன்னாரைப் பின்றொடர்ந்து சென்ற னர் என்றும் அறிகின்றோமே.

"ஏழைய ரனைவரு மிவர்தட முலைதோய்
கேழ்கிளர் மதலைகள் கிளைகளு மினையார்
வாழிய வெனவவர் மனனுற கடவுட்
டாழ்குவர் கவுசலை தயரத னெனவே"

"அஃதைய நினையெம தரசென வுடையேம்
இஃதொரு பொருளல வெமதுயி ருடனேழ்
மதிதல முழுதையு முறகவிம் மலரோன்
உருபக லனவென வுரைநனி புரிவார்"

என ஸ்ரீ ராமபிரானது நல்வாழ்வை மக்களனைவரும் விரும்பிக் கூறின மையையும்,

"இன்னலையோடு பூவை யழுத இளர்மாடத்
தன்னுறையும் பூசை யழுத வுருவறியாப்
பிள்ளை யழுத பெரியோரை யென்சொல்ல
வள்ளல் வனம்புகுவா னென்றரைத்த மாற்றத்தால்"

"ஆதி யரச னருங்கே கயன்மகண்மேற்
காதன் முதிரக் கருத்தழிந்தா னுமென்பார்
சீதை மணவாளன் றன்னேடுந் தீக்கானம்
போது மதுவன்றேற் புகுது மெரியென்பார்"

என அவன் பிரிவுற்ற காலைப் பரிவுற்றுரைத்தமையையும் பாரகாப் பியத்திற் படித்தறியாதார் உளரோ? இவ்வண்ணம், நந்தேயத்தில் ராஜபக்தி யென்னும் இச் சிறந்த குணம் எத்துணையோ ஆயிர ஆயிர வாண்டுகளாக நம்மவர்க்குப் பேரணிகலனுய் விளங்கியது என்பதற்கு இஃதேயன்றி இன்னும் எத்தனையோ ஆதாரங்கள் நம் பண்டைப் பெருநூல்களில் உள்ளன. பெருமாண்பு பொருந்திய நம் ஜ்யார்ஜ் சக்கரவர்த்தியவர்கள் செம்பொன் மணிமுடிசூடிச் செங்கோல் கைக் கொண்ட சிறப்பினை டில்லிமாநகரில் நம்மவர் ஒருசேரத்திரண்டு மஹாஸபைகூடி மிக்க கோலாகலத்துடன் கொண்டாடிய அமயத்து அப்பெருந்தகைமன்னர்பெருமான் தமது அன்பேவடிவான அருமைத் திருமனைவியாரொடு அழகிய அரிமணியாதனத்து வீற்றிருந்து நம் மனைவர்க்கும் நற்காட்சி யளித்து,

"கனமுயரு நஞ்சாதி குலமத வொழுக்கங்
களுக்கொரிடை யூறின்றிநங்
கல்வியறி விற்குரிய பதமீது மோரங்
கருத்திற் கொளாமலென்று
மனமுவந் துரைசெய்து முறைசெய்த மூதாட்டி
வண்கோ னடாவுதருமன்"

என மனமகிழ்ந்து புகழ்ந்துரைக்கும் வண்ணம் நன்மொழிகூறிய பின்னர் தமது ஜெனனதேசத்தில் தம்பதிநோக்கி அத் தம்பதிகள் புறப்படுமளவில், நம் இந்துமகாஜனங்கள் அவர்சென்ற சிறப்புடைத் திருவீதியின் புழுதியைத் தம் சிரம் நெற்றி உரம் முதலிய உத்தம உறுப்புக்களில் தரித்தும், தாம் பூண்டிருந்த சட்டைப்பையினுள் எடுத்துக்கொண்டும், அதனை அத்தனை அருமை பெருமைபாராட்டி, நிலமிசை வீழ்ந்து முத்தமிட்டும் இன்னணம் பல்வகையாலும் தமது ராஜபக்தியை வெளியிட்டனரெனக் கேள்வியுற்றேம். அது கண்டு, அன்புருக்கொண்டனைய நம் சக்கரவர்த்தினியன்னையார் உள்ள முடைந்து கண்ணீருகுத்தனராம். மகுடாபிஷேக மகோத்ஸவக்

கொண்டாட்டநாளில் தோன்றிய குழவிகட்குச் சிலர் ஜ்யார்ஜ் என நாமகரணமுஞ்செய்தனராம். இவ் வொருவிஷயத்தைச் செவியுறும் பொழுது, ராஜபக்திச் செல்வச்சிறப்புடைமக்கள் நங்நாட்டிற்போல மற்றெந்நாட்டிலு மிராரென்றெண்ணுதற்கு ஐயமுண்டோ? அன்றியும், நம்மவர் இயற்கையாகவே ராஜபக்தியை மிக்குடையரென்பதை வேறொரு செய்தியும் நன்கு விளக்கும்; வீறுபெரிதுடைய நம் வேந்தர் தலைவர் தமது அன்பிற்பிரியா இன்பவடிவாகும் பத்தினியாரொடு மணிமுடிசூடி வையகங்காவல் கையகங்கொண்ட வைபவத்தை டில்லிப் பெருநகரிற் கொண்டாடிய அற்றை ஞான்றே, பல்வேறு மதம் கோட்பாடு முதலியவற்றை யுடையரான ஆண்பாலார் பெண்பாலார் பெரியார் சிறியார் அனைவரும் ஒரேகாலத்தில் பெரிய நகரங்களிலும் சிறியகிராமங்களிலும் அம்மகோத்ஸவத்தைத் தத்தமக்குரிய திருமணம் முதலிய சுபவினையேபோலத் தத்தம் வீடுகளில் பாராட்டிக் கொண்டாடியதே யன்றி, தேவாலயங்களில் சிறப்புவகையில் பூசை, விழவு, ஜெபம் முதலியசெய்து, ஆதுலர்க்கு அன்னம் ஆடை முதலிய அளித்து, அரசர்க்கு ஆயுராரோக்கியாதி அனைத்து நலனுஞ் செழித்துவளரும்வண்ணம் ஒருமையோடு பெருமைபெறச் செய்த செய்தியொன்றுமே நம்மவரது ராஜபக்தியின் மேம்பாட்டினை விளக்குதற்குச் சிறந்த சான்றாகும்.

## 6. இக்காலத்துச் சில குறிப்புக்கள்.

இங்ஙனம், வழிவழியே பல்லாயிரமாண்டுகளாக ராஜபக்திச் செல்வம் ஓங்கிவிளங்கும் இத்தேயத்தில், சென்ற இரண்டோராண்டுகளாக நம்மவருட் சிலரை ராஜபக்தியற்றவரென்று பிறர் வசைகூறுமாறு நேர்ந்தமை எதனாலேயோ? இப் பழிசுமத்தப்படுவோர் பெரும்பான்மை சிறுவராவர். இவர் இப் பழிக்குள்ளாவது நல்லறிவும் நல்லொழுக்கமுமுள்ள பெரியாரைப் பேணியடுத்து அன்னார் கூறும் நயவுரைக்குச் செவிகொடுத்து அந்நல்லவற்றைக் கொள்ளாமையினாலோ? நம்முன்னை முதறிவாளர் வரைந்துவைத்த நன்னூல்களை முறையிற் கல்லாமையினாலோ? அந்நூற் பொருள்களை யெடுத்து நெறிநின்று உணர்த்துவாரில்லாமையினாலோ? உணர்த்தவல்லாரைப் பெற்று வைத்தும் அன்னார் அந்நூற்களைக்கொண்டு நம் சிறுவர்க்கு ராஜபக்தி

முதலிய மேதக்க நீதிகளைப் போதித்தற்குப் போதிய சாதனங்கள் தளர்ந்து முறிந்தமையினாலேயோ? ஆயுங்கால் ஈண்டிறுதியிற் குறித்த ஒன்றே முக்கிய ஏதுவென ஊகித்தற்கு இடமுளது. இற்றைநாள் நமது யூனிவேர்ஸிடி யென்னும் ஸகலகலாசங்கத்தினர் நந் தேயபாஷைப் பயிற்சித்திறத்துச் செய்துள்ள புதிய ஏற்பாட்டினை நம் இளைஞர் நன்கறியாமை இதற்கு ஏதுவாமெனவொருவாறு கூறலாம். இப் புதுவதொருவிதியினைச் செய்துவிட்ட புருடர் இவ்வாறு செய்வேமாயின் நம் இளைஞர் செந்தமிழ் முதலிய தேயமொழிகளில் ஊக்கமிகக்கொண்டு செவ்வனே கற்றுத் தேர்ச்சி பெறுவரெனும் நற் கருத்துடன் செய்தனரென்று நுனித்தறிந்து அவையிற்றைப் போற்றிக் கல்லாது கைவிட்டமை கல்வியின் அருமை பெருமைகளை அறியவல்லார் எல்லார்க்கும் கவலையைப் பயந்தது மன்றிக் கனக்குறைவையுஞ்செய்தது. [இவ் விஷயம் ஈண்டு எடுத்து விரித்துரைக்கத் தக்கதொன்றன்று. விரித்துரைப்பின் அஃது எடுத்த விஷயத்தை விடுத்து மற்றொன்று விரித்தல் என்னுங் குற்றத்தினுட்படும். இதனைச் சமயம் வாய்ப்புழி விளங்க விரித்துரைப்பேன்.] சற்றேறத்தாழ ஈராண்டுகளாக, நம் மாணவக்குழாத்தினருட் பலரோ சிலரோ தமது நிலைமையையும் கடமையையும் நன்குணர்ந்து ராஜபக்தியில் ஊற்றங்கொள்ளவில்லையென எனதுகருத்திற் புலப்படுவது மன்றி, இவ்வாறே நம் அரசாட்சித்தலைவரால் நன்குமதிப்படைந்துள்ள புலவரொருவர் சிற்சில அமயங்களில் வெளிப்படையாகக் கூறக்கேட்டதுமுண்டு.

## 7. ராஜபக்தியை வற்புறுத்தல்.

ஆயினமைபற்றி, கல்வியிற் பயின்று மேனிலைபெற்று இம்மை மறுமைப்பயனை யெய்திவாழ முயன்றுவரும் செல்வச்சிறுவர்காள்! யான் நும்பால் மிக்க அன்பாற் சொல்லப்புகும் சில செய்திகளைச் செவிக்கொள்வீராக; அரசரைத் தெய்வாம்சமென்று உணர்ந்து அவராணைக்கு அமைந்து வாழுக.

"சக்கரநெறிநில்"

என்னும் அரும்பொருள் நீதியை நீவிர் அறிந்திலீரோ? ஆரைப் பகைக்கினும் அரசரைப்பகையற்க. அவர் சீறினுலுய்யுமிடம் யாது?

"வேந்தன் சீறி னுந்துணை யில்லை."

கடல்கொதித்து வெந்நீரானுல் அதனை ஆற்றத் தண்ணீரேது? மழைக்குக் குடைபிடிக்கலாம்; இடிக்குக் குடைபிடிக்கலாமோ? ஒருவேளை அவரது அரசுமுறையிற் சில செயல்கள் நமக்குச் சால் புடையன வல்லவெனத் தோன்றினும் அவை இறுதியில் நன்மை பயப்பனவேயாகலாம். ஆகவே, அவர்மீது குறைகூறுது அமைந்து நிற்றல்வேண்டும்.

"சானேர்கா தெத்துயரஞ் செய்திடினுந் தார்வேந்தன்
கோனேர்கி வாழுங் குடிபோன் றிருந்தேனே"

என ஞானங்கனிந்து பற்று முற்று மற்று நின்ற பெரியாரும் பணித் தருளினர். தந்தை தன் மைந்தனுக்கு இதமே செய்ய எண்ணுதல் போல, அரசர் தம் பிரஜைகளுக்கு நலனேபுரிய நாடுவர். ஆதலின், அவரைத் தந்தைபோலவே கொண்டு ஒழுகுவீராக. மைந்தன் தந்தை யிடத்துத் தனக்குவேண்டும் பொருளை விநயமாகக்கேட்டுப் பெற்றுக் கோடல்போல நீவிர் அரசரிடம் நுமக்குவேண்டுவனவற்றை மென் மையும் நன்மையுந்தோன்ற விளம்புமாறு விளம்பிப் பெற்றுக் கொள்வீராக. இவ்வாறன்றி, அரசர்க்கு மாறுநின்று நெஞ்சில் வஞ்சனைசூழ்ந்து ஆகாதன செய்து அல்லலுறற்க. இராஜவிரோதிகள் இம்மையில் இன்பமிழந்து நிந்தையடைந்து மறுமையில் துன்பம் நுகர்ந்து வருந்துவர் என அறநூல்கள் முறையிடுகின்றன. நல்லது பிள்ளைகாள்! நுந்தமக்கு ராஜபக்தியைச்சுட்டிக் கூறத்தகுவன மற்றும் பலவுளவேனும் அவையெல்லாம் ஈண்டு எடுத்து விடுத்து விரித்துரைக்கப்போதிய இடமுங் காலமும் இல்லையாகலின் இங்ஙனே காட்டிய சில கூறுபாடுகளைக் கைக்கொண்டு ராஜபக்திச் செல்வராய் நெடிது வாழ்வீராக. இனி, நுமக்குக் கல்விபயிற்றும் ஆசிரியர்க்கு இதனைச்சுட்டிச் சில சொல்வான் அவர்முகந் திரும்புகின்றேன்:

கலாசாலைகளிலும் பிறவிடங்களிலும் கல்வி கற்பித்துவரும் போதகாசிரியர்காள்! நீவிர் அரசர் முன்னர் நாம் நடந்து கோடற் குரிய முறைகளை இளைஞர்க்கு அடுத்தடுத்து எடுத்தியம்பி வற் புறுத்தல்வேண்டும். நீவிர் கற்பிக்கும் ஏனைய பாடங்களோடு ராஜ

பக்தி யென்னும் விஷயத்தையும் ஒரு பாடமாக எடுத்துரைப்பீராக. மற்றும் பல நீதிநூல்களையும் கற்பிப்பீராக. சிறுவர்க்குத் தெய்வ பக்தியோடு சாதி மதாசாரம் தவருதவாறு அவை தம்மை எடுத் துரைத்திடுக. ஆனால், நந்தேயம் பேதப்பட்ட சாதி மதக்கோட்பா டுடையதொன்ருதலினுலே அவற்றைப் போதிக்குங்கால் பொது வகையாற் போதித்தலே சால்புடைத்தாம். சிறுவர்க்கு இளமையின் கண்ணே ராஜபக்தியை இனிதுணர்த்தாமையினுலே அவர்கள் பருவம் முதிர்ந்தபோது தான்ருேன்றிகளாய் ராஜவிரோதிகளாகவுங் கூடும். சிற்சில அமயங்களில் கலாசாலைச் சிருர்கள் அரசுமுறைக்கு அடுத்த விஷயங்களில் தலையிட்டுப் பேசித்திரிவதைக் காண்கின்ருேம். "இளங் கன்று பயமறியாது" என்றவாறு அன்னுர் சில சந்தர்ப்பங்களில் தமது நிலையை மறந்து அணைகடந்து அச்சமின்றியும் பேசுவர். அவ் வாறு நெறிதவறி முறைவழுவி உரையாடிய சிலர் அரசதண்டத்துக் குள்ளாயினதையும் கண்டுங் கேட்டுமுளேம். ஆகலின், அறிவும் அநு பவமும் மிக்குடையீரான நீவிர் அரசாது பெருமையையும் நமது கடமையையும் இளைஞர்க்கு இனிதுரைத்து, அவர்களை உலகிற்கு உபகாரிகளாக்குவீராக. "தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டும்", "முதற்கோணல் முற்றுங்கோணல்" என்றபடி இளமையிற்பயிலுஞ் செயல்கள்தாம் நீண்டுநிற்கும். இளைஞரைப் பயிற்றுதலோடு நீவிரும் ராஜபக்திசீலராய் ஒழுகல்வேண்டும். அவ் வொழுக்கம் நும்பால் இல்லாதபோது அவர்க்கு அஃது எவ்வாறு உளதாம்? நீவிர் உரை யளவில் ராஜபக்தியை அவர்க்குப் போதித்தல் அமையாது. ஒழுக்கத் தானும் அதனை அவர்க்கு உணர்த்தல் வேண்டும். அச்சுக் கோணு மாயின் அதனுற் செய்யப்பெறும் உருக்களும் கோணுமல்லவோ? பிள்ளைகளை ஒழுக்கமுறையில் உருப்படுத்துமவர் நீவிரல்லீரோ?

"ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்"

"கற்றுப் பிறர்க்குரைத்துத் தாமில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவர்
சொல்லாமே சூழ்ந்து சொலல்"

என ஆன்றோர் உரைத்தவை நீவிர் அறியாதனவல்லவே. ஆகவே, இங்ஙனம் சுருங்கக்குறித்த இவ் விராஜபக்தியை நீவிரும் மேற்கொண்டு பிறர்க்கு முணர்த்தி உலகை வாழ்விப்பீராக.

மற்றும், பத்திராசிரியர் பல்பேரவைகளிற் பரக்க உபந்யசிப்போர் தொடக்கத்தினராய வேறு நிலையினுள்ளாரும் மேற்கூறியவாறு, நமக்கு மனுமுதலிய நூல்களால் விதிக்கப்பெற்றதும் நம் முன்னோரால் அனுசரிக்கப்பெற்றதுமான ராஜபக்தியை எங்கும் பரவிவரச் செய்வதோடு நமக்கு நலஞ்செய்வன இன்ன இன்னவென அரசர்க்குத் தக்க சமயங்களில் எடுத்துரைத்து உலகினுக்கு நலன்புரிய நாடுவாராக.

8. முடிவுரை.

"கண்ணெனப் படுவ மூன்று காவலன் கல்வி காமர்
விண்ணினைச் சுழல வோடும் வெய்யவ னென்னும் பேர
எண்ணினுள் தலைக்கண் வைத்த கண்ணஃ தில்லை யாயின்
மண்ணினுக் கிருளை நீக்கும் வகைபிறி தில்லை மன்னோ"

என்றபடி உலகிற்குக் கண் மூன்றெனக் கூறுப. அவை அரசனும் கல்வியும் ஆதித்தனு மென இவை. இக் கண்கள் மூன்றனுள்ளும் முதற்கண் மொழிந்தகண் ஒழிந்தகண்கள்போலன்றி உயிர்கட்கு உறலாகும் உறுகண் தீர்க்கவல்லது; அஃதில்லையாயின் உலகிற்கு இன்னலென்னும் இருளொழித்தற்கு வேறென்னுளது?

"புரந்திடு மாலே யென்னப் போந்திடு மன்னவன்பால்
சிரந்தர மன்புளானே நிலந்தனிற் புகழின் பெய்தும்
கரந்திடும் விரோதி யானோன் காய்தரு துன்ப மெய்திப்
பரந்திடு நரகத்துற்றுப் பாடற வருந்து வானால்"

எனப்படலால், அரசன்பாற் கடவுட்டன்மையைக் கருதி அவன்மாட்டு அன்புகொண் டொழுகுவோன் மன்னனது மதிப்பெய்தி வாழ்வுறுவான். அவனை இகழ்ந்து பகைத்தொழுகுவோன் இருமைப் பயனு மிழந்து வருந்துவன்.

"நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே
மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்
அதனால், யானுயி ரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே"

எனப் புறநானூற்றினுள் மோசிகீரனுர் என்பாரொரு மூதறிவினர் கூறு மாறு, இந் நிலவுலகிற்கு நெல்லு முயிரன்று, நீருமுயிரன்று ; பின்னே இம் மலர்தலை ஞாலம் மன்னனுகிய உயிரையுடையது ; அவ் வுயிரின் பண்பினையறிந்து போற்றி யொழுகினன்றே நலம் பெறலாவது. ஆகலின், ஆருயிர்போலச் சிறந்த அரசர்பால் மக்கள் அன்புகொண்டு ரரஜபக்தி மார்க்கத்தில் ஒழுகி இறைவனது திருவருள்பெற்று இம்மை மறுமையி னின்பமுற்று நெடிது வாழ்வாராக.

சுபமஸ்து.

திருவல்லிக்கேணி, 10—5—1913. } கா-ஸ்ரீ. கோபாலாசாரியன்.

---

உ

# வானசாஸ்திரம்.

(கங௨-ம் பக்கத் தொடர்ச்சி.)

அஸ்தமாறும் கைத்தலம்போல உத்திரத்திற்குக் கிழக்கிலுள்ள சிறு ஒளிப்படலங்கள். ஐரோப்பியர் கோமாபெரேநிஸஸ் என்பர்.

சித்திரை 3-ம் சிறுபுலிக்கண்போலத் தோன்றும்.

சோதி துலக்கத்தொருமணி யெனப்பெறும். சுவாதி உச்சமாகும் போது பெய்த மழைத்துளியில் சர்ப்பத்தின் விஷத்தைக் கலந்து ஒருவருக்குக் கொடுத்தா லது அமிர்தத்தினு மினியதாமென்பதொரு கதை. ஐரோப்பிய ரிதனை ஆர்க்டோரஸ் என்பர். இது பூடிஸ் என்னுங் கூட்டத்திற் பிரகாசிப்பது. ஆனிமாதத்தில் சுவாதி முன் னேரத்திலுச்சமாம். இதற்கதிக தெற்கே சற்று மேல்புறமாய் அநுஷந்தோன்றும். வடக்கில் சப்தரிஷிமண்டலந் தோன்றும்.

அநுஷமானது முடப்பனையின் றலைபோலத் தெற்கே ஆனியின் பிற்பாகத்தில் நடுவிற் சிவந்த வர்ணமுடைய ஒன்று பக்கத்திற் சிறிய

விரண்டு உடுக்களுடன் தெற்கு வடக்காகத்தோற்றுவதாம். இதற்குத் தெற்கில் மூன்று நக்ஷத்திரங்களுள்ளன. இதனை ஐரோப்பியர்கள் விருச்சிகவிராசியின் முக்கிய தாரை யென்பர். இதற்கு அன்டாரஸ் என்று பெயர். தயானு வென்பவன் தன் சாமர்த்தியத்தாலெல்லாவற்றையும் படைக்க, சூரியன் தானெல்லாம் செய்வதாக இறுமாப்புற்றபடியால் அதன் கர்வத்தைப் பங்கப்படுத்த இந்த விருச்சிகத்தைப் படைத்ததாக ஒரு கதையுண்டு. நம்முள்ளும், விசுவாமித்திரர் திரிசங்குமகாராஜனைச் சொர்க்கத்திற் கனுப்பிய போது தேவதைகள் அவனை ஏற்றுக்கொள்ளாது திருப்பியதாகவும், அக்காலத்து அவ்விருடிபகவான் மகாராஜாவை அங்கேயே நிறுத்தி நக்ஷத்திரங்களில் அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் ஆக நான்கினையும் ஆங்கு ஸ்தாபித்ததாக ஒரு கதை சொல்லப்படுகிறது. எவ்வாறாயினும், வருடத்தி லொருகாலத்திற் சந்திரன் அவ்வழியே செல்லுகிறானென்பதுண்மை.

கேட்டை நான்கு நக்ஷத்திரங்கள் அநுஷத்திற்குக் கீழ்த் தலையிலொன்றும் அதற்குக்கீழ் மத்தியிலிரண்டும் அடியிலொன்றுமாகத் தோன்றும்.

மூலம் நான்கும் காளத்தைப்போன்று கேட்டைக்குக் கிழக்கில் தலையிலிரண்டும் கீழே யிரண்டுமாகத் தோன்றும்.

பூராடம், உத்திராட மிரண்டும் அதற்குக் கீழ்புறமாக நீட்டுப்போக்கில் ஒரே அளவினதாகத் தோன்றும்.

திருவோணம் மூன்றும் வானத்தின் மத்தியில் நடுவணதொன்று அதிக சோதியினையுடையதாயும் பக்கத்தே யிரண்டு சற்றுக்குறைந்தாயும் தோன்றும். இதற்கு ஐரோப்பியர்கள் முறையே அகுலியென்றும், அடேர் என்றும் பெயர் கூறுவர்.

அவிட்டம் திருவோணத்திற்குப் பின்னர்த்தோற்றுவது. ஐரோப்பியர் டால்பினென்பர்.

சதயம் அதிக மங்கலாய்த் தோன்றும்.

பூரட்டாதி, உத்திரட்டாதி யிரண்டும் சேர்த்து நோக்கின் புரட்டாசிமாதத்தி லந்திப்போதி லுச்சியில் நான்கு நக்ஷத்திரங்கள் சதுரமாயும், அதனையொட்டி மூன்று வில்வளைவாகவும் கீழ்புறம் வடபுறத்திற் றோன்றுவதாம். ஐரோப்பியர்கள் முன்னை யிரண்டிற்கும் பெகாஸி என்றும் பின்னவைகட்கு ஆந்தரமேடாவென்றும் பெயர் கூறுவர்.

ரேவதி, உத்திரட்டாதிக்கும் அசுவினிக்கு மத்தியிலுள்ளது. இதில் பூமிக்கும் வானத்திற்கு முக்கியமாயுள்ள ஸெடாபீசியமென்பது மறைந்துவிட்டது. அதனால் வானசாஸ்திரிகள் ஒன்றையும் நிச்சயஞ்செய்யமுடியாது தடுமாறினர்.

வடக்கில் ஸப்தரிஷி மண்டல மொன்று தோன்றுவதைக் காணலாம். சித்திரை, வைகாசி, ஆனி மாதங்களில் வடபுறமாக வளைவாய் ஏழு நக்ஷத்திரங்களையு மதன்முன்னுற் சில தாராகணங்களையுங் காணலாகும். இவற்றை ஐரோப்பியர் உர்ஸாமேஜர் என்று சொல்வர். இக்கூட்டத்தைப்பற்றி இந்தியராகிய நாம் தெரிந்துகொள்ள வேண்டியதவசியமேயாம். வானத்தைக்காட்டி யருந்ததியிருக்குந் தன்மையாய் நீயுமிருவென மணமகனுக்கும் மணமகட்கும் காண்பிப்பதை ஸ்தூலாருந்ததி நியாயமென்று சொல்லுவதும் கற்பிலருந்ததியென்பதும் இக்கூட்டத்திற்றோன்றும் பெருந்தாரைகளுள் ஆறுவதன்கீ ழொரு சிறுதாரையா யுற்றுப்பார்ப்பாருக்குத் தோற்றுவதையேயாம். இதை அருந்ததி யென்பர். ஒருவனிறக்க ஆறு திங்களின் முன் இவ்வுடுத் தோற்றமாட்டதெனவுங் கூறுவர்.

சப்தரிஷி மண்டலத்திற்கு நேர் தெற்கில் வானத்தின் தென்புறமாகச் சிலுவைபோன்ற ஒன்று காணப்படும். இதற்கு ஐரோப்பியர் ஸதர்ன்கிராஸ் எனப்பெயர் கூறுவர். இதன் நான்கு நக்ஷத்திரங்களும் பளீரென ஆகாயத்தில் சித்திரை, வைகாசி மாதங்களில் இரவின் முற்பாகத்திற் றோற்றும்.

அசுவதிநக்ஷத்திரத்திற்கும் பூரட்டாதி, உத்திரட்டாதிக்கும் நடுவாக வடக்கே ஆங்கிலத்தில் W போன்றதாயினும் அதுமாதிரி

யின்றிச் சற்று விரிவுடையதாக ஒன்று புலப்படும். இதற்குக் காஸி போப்பியா என்று பெயர். இது புரட்டாசி பிற்பாகம் ஐப்பசி முற்பாகத்தில் சுமார் 8-மணிக்குமேல் நேர் வடக்கிற் காணப்படும். இத னிருப்பைக்கொண்டு இதனைச் சுலபமாக வறியலாம். இவைகளே முக்கிய தாராகணங்களாம்.

தெற்கே கேட்டையின் மத்தியிலிருந்து உச்சியில் திருவோணத்தின் வழியாக வடகிழக்காய்ப் பெரிய வெண்படல மொன்றோடும். இதற்கு க்ஷீரவலயமென்று பெயர் ஆங்கிலேயர் மில்கிவே. (Milky Way) என்று கூறுவர். இது அநேக சிறு நக்ஷத்திரக் கூட்டமென்றும், அவை ஒரே படையாக விருப்பதால் அப்படி நமக்குத் தோற்றுகிறதென்றுங் கூறுவர். இருட்டுக்காலங்களில் செவ்வையாகப் புலப்படும்.

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர், சோமசுந்தரதேசிகன்.



---

குறிப்பு:—பரணி, பூரம், விசாகம் என்னும் இந்த நக்ஷத்திரங்களைப்பற்றிய விவரணமொன்றும் இதிலெழுதப்படாதகாரணம் விளங்கவில்லை. ப—ர்,

# தமிழகராதிசபை.

## யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கம்.

யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கத்தாருடைய கூட்டமொன்று நாளது௵ ஏப்பிரல்மீ௨௨வெள்ளிக்கிழமைப்பின்பகல் ௪-மணி யளவில் வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாசவித்தியாசாலையிற் கூட்டப் பட்டது. சங்கத்து அங்கத்தவர்களும், தமிழ்ப்பாஷையில் அபிமான முடையவர்கள் வேறு பலரும் அப்போது வந்து கூடினர்.

அப்போது சங்கத்தின் அக்கிராசனாதிபதி ஸ்ரீ: த. கைலாசபிள்ளை யவர்கள், மதுரையிலிருந்து தமிழகராதி சபையின் அக்கிராசனாதி பதி றெவ். சாண்டலர் துரை இச்சங்கத்துக்கு எழுதிய கடிதத்தை வாசித்துக்காட்டிச் சபை கூட்டிய உத்தேசத்தைச் சுருக்கி விளக்கிக் காட்டினார்கள்.

அப்போது பின்வரும் நிர்ணயங்கள் அங்கீகாரமாயின. அவை யாமாறு :

சைவப்பிரசாரகர் ஸ்ரீமத்-சு. ஏரம்பையரவர்களாற் பிரேரிக்கப் பட்டு பிறக்கிராசி ஸ்ரீ: வ. குமாரசுவாமி யவர்களால் அநுவதிக்கப் பட்ட முதலாம் நிர்ணயம்.—

I. தமிழ்ப்பாஷையை அபிமானித்து அதற்கு ஒரு விரிவான அகராதி செய்யும்பொருட்டுச் சென்னைக் கவர்ன்மெண்டார் தொட ங்கி அதற்காக லக்ஷரூபா செலவழிக்க உத்தேசித்த நன்றியை இச் சங்கத்தார் என்றும் மறக்கலாகாது.

இந்துசாதன இங்கிலீஷ்ப் பத்திராதிபர் ஸ்ரீ: அ. சபாபதியவர் களாற் பிரேரிக்கப்பட்டு உதவி வித்தியா பரிக்ஷகர் ஸ்ரீ: S. கந்தையா அவர்களால் அநுவதிக்கப்பட்ட இரண்டாம் நிர்ணயம்.—

II. இத்தமிழகராதியைச் செய்து நிறைவேற்றுதற்காக நியோ கிக்கப்பட்ட சபையார், இவ்வகராதியைச் செய்யும் முறை முதலிய

எல்லாவற்றையும் தமிழ் வித்துவான்கள் பலரோடும் யோசித்துச் செய்ய எண்ணிய பெரு நன்றியை இச்சங்கத்தாராகிய நாம் என்றும் மறக்கலாகாது.

வெசிலியன் மிசியோன் மத்திய கல்லூரித் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ V. இராமலிங்கரவர்களாற் பிரேரிக்கப்பட்டு, சுப்பிரீங்கோட்டுப் பிறக்கிராசியும், நொத்தாரிசும், முன் தமிழகராதி இயற்றிய ஸ்ரீ: கதிர் வேற்பிள்ளையவர்களின் மருகருமாகிய ஸ்ரீ: S. கதிரேசர் அவர்களால் அநுவதிக்கப்பட்ட மூன்றும் நிர்ணயம்.

III அச்சபையார், பொதுவாக நமது சங்கத்துடைய துணையைக் கேட்டிருக்கிறபடியாலும், தங்கள் விஞ்ஞாபன (Memorandum) இறுதியிற் காட்டிய பல விஷயங்களுக்கு இச்சங்கத்தினுடைய உதவியைச் சிறப்பாகக் கேட்டிருக்கிறபடியாலும், இந்த யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கத்தார் தங்களாலியன்ற உதவிகளையெல்லாம் அவர்களுக்குச் செய்தல்வேண்டும்.

சைவப்பிரகாசவித்தியாசாலைத் தலைமை உபாத்தியாயர் சுன்னாகம் ஸ்ரீ: அ. குமாரசுவாமிப்புலவரவர்களாற் பிரேரிக்கப்பட்டு, உதய பானு பத்திராதிபர் ஸ்ரீ: சு. சரவணமுத்துப்பிள்ளை அவர்களால் அநுவதிக்கப்பட்ட நாலாம் நிர்ணயம்.

IV. சபையாருடைய விஞ்ஞாபனத்தின் முற்கூற்றில் தமிழ்ச் சொற்கள் விஷயமாகச் சொல்லப்பட்ட பல ஆராய்ச்சிவகைகளை அச் சபையாரே பறிந்து மனவுவகையோடு செய்யத்தொடங்கியிருக்கின்றமையால், நாங்கள் சிறிது விரித்துப் பணிவோடு சொல்லுவனவும் அவர்களுக்கு உவப்பாயிருக்கு மென்பதற்கு ஐயமில்லை. ஆதலால் பின் வருவனவற்றை நாங்கள் அவர்களுக்கு அறிவித்தல்வேண்டும். அவைகளாவன.—

(1.) அச்சிடப்பட்டனவும் படாதனவுமாகிய பழைய தமிழ் நூல்களுக்கும் அவற்றைத் தழுவிப் பிற்காலத்திற் சிறந்த வித்வான்களாற் செய்யப்பட்ட நூல்களுக்கும் உரைகளுக்கும் ஒரு நாமாவலி (அட்டவணை) எழுதுவித்தல்வேண்டும்.

(2.) நாமாவலி எழுதுவித்தபின், இலக்கண நூல்களையும், இலக்கிய நூல்களையும், வேதாந்த நூல்களையும், சித்தாந்த நூல்களையும், தேவார திருவாசகங்களையும், நாலாயிரப்பிரபந்ததிருவாய்மொழிகளையும், சிற்பசாத்திரங்களையும், வைத்தியசாத்திரங்களையும், சோதிடம் சல்லியம் முதலிய சாத்திரங்களையும், சங்கீதம் பரதமென்னும் சாத்திரங்களையும், தர்க்கசாத்திரங்களையும், கணிதசாத்திரங்களையும், புராணங்களையும், நிகண்டுகளையும், பிறவற்றையும் வெவ்வேறு பகுதியாக்கி, அவ்வகளைத் தொகைசெய்துகொண்டு, ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வோரதிகாரியைப் பொதுத்தானத்தில்வைத்து, அவர் மூலமாக அந்தநூல்களைப் பலவிடங்களிலுமுள்ள அவ்வவற்றிற்கு உரிய வித்துவான்களிடங் கொடுத்துச், சொற்களையும் பொருள்களையும் எழுதுவித்தல்வேண்டும். அதிகாரிகள் அவைகளை அகராதி முறையாக்கிச் சபைக்குக் கொடுத்தல்வேண்டும். சபையாரும் அதிகாரிகளும் கூடி, அவைகளைப் பரிசோதனைசெய்து இடைவெளிவிட்டு அச்சிட்டு, அச்சிட்ட பிரதியில் ஒவ்வொன்று முன் எழுதினவர்களுக்கும் பண்டித ஸபைகளுக்கும் அனுப்பிப் பார்ப்பித்தல்வேண்டும். அதன் பின்னரே அச்சிடுதல் வேண்டும்.

(3.) பழைய அகராதிகளில் அநேக வழுக்கள் இருத்தலினால், அவைகளிலுள்ள சொற்களையும் பொருள்களையும் நன்றாக ஆராய்ந்து சேர்த்தல்வேண்டும்.

(4.) தமிழிற் பயின்றுவராத வடசொற்களை நீக்கிவிடுதல் வேண்டும்.

(5.) கிடா கிடாய் கடாய், துடை முதலியனபோல வரும் வழூஉச்சொற்களை வழூஉச்சொல்லென்றே காட்டி அவற்றின் இயற்கை வடிவம் கடா தொடை முதலியனவென்று காட்டுதல் வேண்டும்.

(6.) (க.) சொற்களை எழுதி (உ.) அவற்றிற்குப் பொருள்களும் (ங.) அவற்றிற்கு மேற்கோளும் (ச.) பகுதி (Root) காட்ட வேண்டியவற்றிற்கு அப் பகுதியோடு (ரு) பழைய நூற்பிரமாணமும் (சூ) இலக்கணம் (Definition) கூறவேண்டியவற்றிற்கு இலக்கணமும் முறை முறையாக எழுதப்படுதல் வேண்டும்.

(7.) சா, புகு என்பன செத்தான், புக்கான் என வருதல்போலப் பகுதி வேறுபட்டு வருஞ் சொற்களையுஞ் சேர்த்துக்கொள்ளுதல் வேண்டும்.

(8.) பல ஸம்ஸ்கிருத பதங்கள் தமிழில் ஒரு சொல்லாய் வருமிடங்களில், அந்தச் சமஸ்கிருத பதங்களைக் கிரந்த எழுத்தில் எழுதி அதன்பின் அந்த அருத்தத்தை எழுதுக. உதாரணம்—அத்தம்—என்ற சொல்லின் கீழ் 𑌹𑌸𑍍𑌤𑌂-கை, 𑌅𑌰𑍍𑌥𑌂-பொருள், 𑌅𑌰𑍍𑌧𑌂-பாதி, 𑌅𑌸𑍍𑌤𑌂-அத்தகிரி.

(9.) அந்நியபாஷைச் சொற்களை இன்னபாஷைச் சொல் லென்று இயன்றவளவு சொல்லுதல்வேண்டும்.

(10.) பழமொழிகள் நியாயங்கள் ஐதிகங்களாகிய இவற்றையுஞ் சேர்த்து விளக்கல்வேண்டும்.

(11.) சொற்களுக்கு அர்த்தமெழுதும்போது அகராதிமுறையை அதிகம் பொருட்படுத்தாமல் பொருளினுடைய கௌரவ முறையை அநுசரித்தல்வேண்டும்.

(இந்த நிர்ணயத்தைப் பிரேரிக்குமிடத்துப் புலவரவர்கள் பல அகராதிகளிலுள்ள வழுக்கள் பலவற்றைத் திரள் திரளாக எடுத்துக் காட்டினார்கள்.)

இந்துகாலீசுத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீ-வ. குமாரசுவாமிப் புலவரவர்களாற் பிரேரிக்கப்பட்டு, சைவப்பிரகாச வித்தியாசாலை உபாத்தியாயர் ஸ்ரீ-சி. கணேச ஐயரவர்களால் அநுவதிக்கப்பட்ட ஐந்தாம் நிர்ணயம்.—

௫. நூல்களை ஆராய்ந்து சொற்பொருளெழுதுவோர் பலர் சம்பளமில்லாமல் அது செய்ய இயலாதவராயிருப்பதால், நூலளவுக்கும் பிரயாசத்துக்கும் ஏற்ற சம்பளம் அவர்களுக்குக் கொடுத்தல் வேண்டும்.

யாழ்ப்பாணம் டெப்பியூற்றி பிசுக்கால் (Deputy Fiscal) ஸ்ரீ: ச. சபாரத்தினமுதலியாரவர்களாற் பிரேரிக்கப்பட்டு ஸ்ரீ: தா. பொன்னம்பல பிள்ளை அவர்களால் (M. R. A. S. Retired Excise Commissioner of Travancore) அநுவதிக்கப்பட்ட ஆறும் நிர்ணயம்.—

vi. இவ்வகராதியாற் பிரயோஜனம் அடையத்தக்கவர்கள் இலங்கையிலும் அநேகர் இருப்பதால், நமது இலங்கைக் கவர்ன்மெண்டாரையும் ஒரு தொகைப்பொருள் கொடுக்கும்படி அகராதி சபையார் கேட்கவேண்டும்.

அபிதானகோச ஆசிரியர் நாவலர்கோட்டம் ஸ்ரீ: ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை அவர்களாற் பிரேரிக்கப்பட்டு, யாழ்ப்பாணம் போலீசுகிளார்க்கு ஸ்ரீ: S. W. குமாரசுவாமி அவர்களால் அநுவதிக்கப்பட்ட ஏழாம் நிர்ணயம்.

vii. அகராதி சபையின் அக்கிராசனாதிபதி சென்ற மார்ச்சுமீ ௩௧உ எழுதிய உ௮-ம் இலக்கக் கடிதத்தில் இச்சங்கத்தாருள் ஒரு புலவரைத் தங்களுக்கு உசாத்துணைவராகத் தரும்படி கேட்டிருக்கின்றமையின், இச்சங்கத்து அக்கிராசனாதிபதியும், சைவப்பிரகாச வித்தியாசாலைத் தலைவரும் ஆகிய ஸ்ரீ: த. கைலாச பிள்ளை யவர்களையே கொடுத்தல்வேண்டும்.

இவைகளான பின் அக்கிராசனாதிபதியைப் புகழ்ந்து சபை கலைந்தது.

1913-ம் ஞு ஏப்பிரல்மீ 4உ.

மற்றுள்ள இதன் தொடர்ச்சி மறுபக்கத்திற் காண்க.

**1913-ஞ் ஏப்பிரல்மீ 10உ கூடிய யாழ்ப்பாணத் தமிழ்ச்சங்கத்தில் பின்வரும் நிர்ணயமிரண்டும் சர்வாங்கீகாரமாயின.**



1. "நாளது ஞு ஏப்பிரல்மீ சஉ செய்யப்பட்ட நிர்ணயப்படி தமிழ் நூல்களுக்கு ஒரு அட்டவணை இச்சங்கத்தார் செய்தல்வேண்டும். அதற்காக இலங்கையிலுள்ள தமிழறிந்தவர்களுக்குக் கடிதம் எழுதி, அச்சிட்டு வெளிவராத தமிழ்நூல்களுடைய பெயர்களையும், அவைகளிற் சொல்லப்படும் விஷயங்களையும், அவற்றின் ஏட்டளவு வரியளவுகளையும், அறிதல்வேண்டும். அந்நூல்கள் யார் யாரிட மிருக்கின்றன என்றும், அந்நூல்களைப் பிரதி செய்துகொள்ளத் தருவார்களோ என்றும் அறிதல்வேண்டும்."

2. "பலருக்குங் கடிதமெழுதி இலங்கையிலுள்ள தமிழ்வித்துவான்களுக்கும் தமிழபிமானிகளுக்கும் ஓர் அட்டவணை எழுதல் வேண்டும்."

அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

ஸ்ரீ:

# பிழைதிருத்தம்.

---

"செந்தமிழ்"த் தொகுதி-கக பகுதி ரு-ல் கசசரு-வது பக்கம் கअ-வது வரியில் பிள்ளையவர்களல் என்றிருப்பதைப் பிள்ளையவர்களால் என்றும், ஷ பகுதி கசுஉ-வது பக்கம் உசு-வது வரியில் எதிரிக்கு என்றிருப்பதை வாதிக்கு என்றும் திருத்திக்கொள்க.

பத்திராதிபர்.

---

பாணன் - பொலிவினையுங் குளிர்மையையுமுடைய மகிழமாலிகையை யாபரணமாகவுடைய மாறன். புயசைலம் - திருப்புயங்களாகியமலை. வாய்ந்த - புலப்படுவதான. அருவிவரைமானும் - நீரருவியோடு கூடிய வரையையொக்கும். பாய்ந்ததிரை - பரந்ததிரை. புயசைலம் முத்துவடம்பூண்டதால் நீரருவியுடன்கூடிய மலையை யொக்குமெனக் கூட்டுக. திணை - பாடாண். துறை - புயவகுப்பு.

மலைமதிதேன்மாறன்வரைவேல்விழியாண்
முலைவதனநண்பாமொழி. (208)

இது நிரனிறையுவமை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இடம்பெடங்கூறல்.

புருவநயனம்பொருசிலைவேல்போன்ற
திருமகணின்னேடுவரிற்செல்வா—கருவிளைமென்
பூநீனிறமாயன்புட்குழிசூழ்வாசமலர்க்
காநீர்த்தடமாங்கடம். (209)

இதுவுமது. இவையிரண்டும் பெயரொடுபெயர் நிரனிறையுவமை. வாசமலர்க்காநீர்த்தடமாம்-பரிமளமலர்ச்சோலையும் வாவியும் போலக் குளிர்மையையுடையவாம்; கடம் - சுரமென்றவாறு. நின்னெடுவருகி லவளுக்கெனக் கூட்டுக. ஒழிந்த வகல முறையிற் கொள்க. பகுதி - உடன்போக்கு. துறை - ஆதரங்கூறல்.

காருலாவியகொழும்பொன்மணிமாடவெயிற்பிழம்புகதுவநாளு
மேருமால்வரையெனவேபொலிந்தபணிவரைக்குலங்கள்வேலைநீர்சூழ்
பாருமாடகநகரிற்சிறந்தவிறன்மதன்மகுடபந்திமானும்
வாருலாமுகிழ்முலைமங்கையருமலைமகள்குழுவின்வாழ்வார்மன்னே. ()

என்பது குணவதிசயவுவமை. திணை - பாடாண். துறை - நகர வாழ்த்து. (குருகாமான்மியம்.)

வார்செறிந்துகல்லாரமன்னியகலத்தவாய்த்
தார்செறிந்தவல்லியெழுதற்கிடமாஞ்—சீர்செறிந்த
நற்றிருமால்வைகியதென்னுகைத்தடமானு
முற்றிழையாண்முற்றுமுலை. (211)

இது செம்மொழிச்சிலேடையுவமை. தடத்திற்குந் தனத்திற்குஞ் சிலேடை.

(இ - ள்.) தண்ணீர்பொருந்திச் செங்கழுநீரோடுங்கூடி யிட மகன்றதாய்ப் பூநெருங்கின வல்லிக்கொடிக டோன்றுதற் காகாமாந் தடத்தையொக்கும், கச்சினதகத்தடங்கி மாணிக்கப்பூ ணிலைபெற்று மார்பிடத்தவா யொழுங்குசேர்ந்த தொய்யிலெழுதுதற் கிடம்பெற்றன முற்றிழையா ளிளமுலையென்றவாறு. பொலிவுகுடிகொண்ட நல்ல திருமால்வைகு மழகிய திருநாகைத்தடத்தை யெனக் கூட்டுக. தடத்தின்மேற் சொல்லுங்கால், வார்—தண்ணீர். செறிதல்-பொருந்துதல். கல்லாரம் - செங்கழுநீர். மன்னி - கூடி. தார் - பூ செறிதல் - நெருங்குதல். வல்லி - கொடி. எழுதல் - தோன்றுதல். இடமாம் - ஆகரமாம். தனத்தின்மேற் சொல்லுங்கால், வார் - கச்சு. செறிதல் - அடங்குதல். கல்லாரம் - மாணிக்கப்பூண். மன்னி - நிலைபெற்று. அகலம் - மார்பு. தார் - ஒழுங்கு. செறிதல்—சேர்தல். எழுதல் - எழுதுதல். இடமாம் - இடம்பெற்றதாம் என்க. பகுதி - பாங்கற் கூட்டம். துறை - செவ்விசெப்பல். பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந்துரைத்தலுமாம்.

மான்மதங்கூர்வெங்களபமட்டிக்கமைந்துளவாய்க்
கானிலவாவாரநிழல்கைக்கொண்ட—ஞானமுனி
செஞ்சொற்றமிழ்மலையமேபோலுஞ்சிதரன்வாழ்
தஞ்சைத்திருமான்றனம். (212)

இது பிரிமொழிச் சிலேடையுவமை. இது மலையத்திற்குந் தனத்திற்குஞ் சிலேடை.

(இ - ள்.) மயக்கத்தைத் தருங் கடமுண்டான வெம்மையைச் செய்யும் யானையும் புலிக்கேறும் வைத்தகேறும் நிறைந்துளவாய்க் காடாய இலவும் அச்சாவும் சேர்ந்த மலைப்பக்கங்கள் குளிர்மையைத் தன்னிடத்துக்கொண்ட தமிழ்மலையை யொக்கும், கத்தூரிமிகுந்த விருப்பத்தைத்தருஞ் சந்தனச்சேற்றைப் பூசப் புளகித் திறுகிய வலியையுடையவாய்ப் பரிமளநிலைபெற்று முத்தினொளியைத் தன் னிடத்துக்கொண்ட புனமான்போலும் விழியையுடையாள் தனம்

என்றவாறு. ஞானமுனி செஞ்சொற் றமிழ்மலையை யெனவுஞ் சித ரன்வாழ் தஞ்சைத் திருமான்றனமெனவு முன்னும் பின்னுங் கூட்டுக. கூர் வெங்களபம் - வினைத்தொகை. ஏகாரம் - அசை. பொதியத் தின்மேற் சொல்லுங்கால், மால் - மயக்கம் மதம் - கடாம். கூர் - உண்டான. வெம்மை - வெப்பம். களபம்-யானை. மட்டு-பூவிற்றேன். இக்கு - வைத்ததேன்; "தேன், றுளியோடுமதுத்துளி" யென்றார் சிந்தாமணியினும். அமைதல் - நிறைதல். உளவாய் - உண்டாய். கான் - காடு. இலவு - இலவமரம். ஆ - ஆச்சாமரம். வாரம் - பக்கம். நிழல் - குளிர்மை. முலைமேற்சொல்லுங்கால், மான்மதம் - கத்தூரி. கூர்தல் - மிகுதல். வெம்மை - விருப்பம் களபம் - சந்தனச்சேறு. மட்டித்தல் - பூசுதல். மைந்து - வலி. கான் - பரிமளம். நிலவா - நிலைபெற்று. ஆரம் - முத்துவடம். நிழல் - ஒளி. கைக்கொண்ட வென்ப திருதலைக்குமொருபொருள். இது பகுதி - இயற்கை. துறை- நலம்புனைந்துரைத்தல்.

நடுக்கற்றறைவளத்தினன்பொருள்களெல்லா
மிடுக்கற்றுதவுமிபல்சான்—றெடுக்கமற
வேய்ந்தமலைபமெனவளர்கின்றான்பரன்சீ
ராய்ந்ததமிழ்மகிழ்மாறன். (213)

இருவகைச் சிலேடையும் விரவி யிரண்டுபொருளைக் கவிநாயக னுக் குவமையாக்கி யவற்றை யிரட்டுறமொழிந்து மூன்றாவது கவி நாயகன் மேலுஞ் சிலேடை செல்வதாக வவனு மவைபோலிருந்தா னென்னு மூன்று பொருள் பயந்த சிலேடையுவமை. இது பொதியத் திற்குங் கடலுக்குங் காரிமாறப்பிரானுக்குஞ் சிலேடையுவமை.

(இ - ள்.) அசைவற்றுப் பக்கப்பாறைகளின் வளத்தோடுங் கூடி நல்லபொருள்களையெல்லாங் குறைவற்றளிக்கு மிடல்பமைந் தழி வின்றித் தகுதியடைந்த பொதியமலையொப்பெனவும் தழையா நின் றனன், மத்திமம் பாராகிய தறைவளத்தோடுங்கூடி நல்ல பொருள் களை யெல்லாங் குறைவறவளிக்கு மிபல்பமைந்து அழிவின்றித் தக வடைந் தழகிய வலைமையுடைய கடலை யொப்பெனவுந் தழையா நின்றனன், அவன் யாரெனில் உண்மைநூல்களை யோதாதுணர்ந்து பிறர்க்குணர்த்தும் வளத்தினோடுங்கூடி நல்ல பொருள்களையெல்லாங்

குறைவற வளிக்குந் தகுதியடைந்த பரத்துவ சொரூப ரூபகுண விபூதியாகிய பொலிவினையாராய்ந்த திருவாய்மொழி யென்னுந் தமிழையுடைய திரு மகிழ்மாறன் என்றவாறு. மலையத்தின்மேற் சொல்லுங்கால், நடுக்கு - அசைவு. அற்று - இன்றி. அறை - பாறை. வளத்தின் - வளத்தோடுங்கூடி. கடன்மேற் சொல்லுங்கால், நடு-மத்திமம். கற்றறை - பாராகிய தறை. வளத்தின் - வளத்தோடுங்கூடி. மாறன்மேற் சொல்லுங்கால், நடுக்கற்று - உண்மைநூல்களையோதாதுணர்ந்து. அறை - உணர்த்தும். வளத்தின் - வளத்தோடுங்கூடி. என்க. எல்லாம் -முழுதும். இடுக்கு - குறைவு. அற்று - இன்றி. உதவும் - அளிக்கும். இயல் - இயல்பு. சான்று - அமைந்து. ஒடுக்கம் - அழிவு. அற்று - இல்லையாக. என்க. இப் பாட்டினுள் "வளத்தி னன்பொருள்களெல்லா மிடுக்கற்றுதவு மியல்சான்றொடுக்கமற வேய்ந்த" வென்னுந் துணையு மூன்றுபொருட்கு மத்தச்சிலேடை யொன்றாய் நின்றன. அவற்றுள்ளும் பொருளென்பது பலபொருளொருசொல்லாதலின் மலை முதலிய மூன்றுபொருட்கு முறை முறையே சந்தனம் அகில் குங்குமம் தக்கோலம் ஏலம் இலவங்கம் சாதிக்காய் தேன் என்பனவும் பிறவும், சங்கு முத்து பவளம் என்பனவும் பிறவும், சித் தசித் தீச்சுர மென்பனவுமாம். இதனுள், ஏய்ந்தமலைய மெனநின்ற பெயரெச்சவாய்பாட்டைக் கடலைக்கூறுமிடத்து ஏய்ந்து என வினையெச்சவாய்பாடாக நிறுத்தி அம் அலை யென்பவற்றை இடையில் ஏற்பன வந்தனவாக வளர்கின்றானென்னுந் தன்னெச்சமான வினையோடுங் கூட்டுக. பரன்சீராய்ந்த தமிழ் என்பது காரண காரிய மயக்கம். திணை - பாடாண். துறை - செந்துறைப்பாடாண்பாட்டு.

பெற்றாளிகழவளர்த்தாளிடர்செயப் பேர்த்துறவொன்
றற்றாகமெங்குங்கருகியும்வாய்விட்டரற்றுமந்தோ
பொற்றாமரைக்கண்ணன்விண்ணோர்பிரான்புட்குழியில்வஞ்சங்
கற்றார்பொருட்பிரிவுற்றிடைவேனிற்கருங்குயிலே. (214)

இது அத்தச்சிலேடையுவமை. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - குயின்மேல்வைத்துக்கூறல். இவை சொற்பொருள் காரணமாகவும் உவமைபிறக்கு மவை முன்னர்க் காட்டுது மென்று மவை யிவையெனவுணர்க.

அறிவுடையார் தத்துவநுண்பொருளுரையாய்ந்தறிகழகத்
தறிவொன்றில்லா
வறிதுடையாரடைதரிற்சிற்குணத்தினராய்த்தலைப்படுமெவ்
வாழ்வுபோல
வெறிவரிவண்டொர்நறுமென்சந்தனப்பூம்பொதுப்பரிடை
விராயவேனை
முறிபடிதண்சினைவெளிற்றுத்தாருவுமாங்கதிற்கமழு
முதன்மைத்தாமே. (215)

இது தற்குணவுவமை. துறை—பருப்பதவாழ்த்து.

சிலைவணக்குந்திருநுதலார்சிற்றிடையைவணக்கியவச்
சிறுமைநோக்கி
முலைவணக்கஞ்செய்ததுபோன்முதுக்குறைவந்தடைந்துபொறை
முதிரநோன்று
ணிலைவணக்கங்கொண்டதுகண்டீன்றதாய்சுமந்திறுத
னெறித்தன்றென்றே
தலைவணக்கங்கொண்டுகதிர்நிலமகட்கேசரணமெனச்
சாய்ந்தமன்னோ. (216)

இது தற்குறிப்பேற்றவுவமை. (இவையிரண்டுங் குருகாமான்மியம். நாடுவாழ்த்து.)

கொடிமேல்வளருமிருகுன்றுமுளவென்னும்
படிமேதகப்பணைத்தடாவாய்—வடிவேற்கட்
பொற்றொடிக்கைப்பூமகள்கோன்புத்தூர்வரைமடமான்
சிற்றிடைமேற்கொங்கைத்திரள். (217)

இது அற்புதவுவமை; என்னை? குன்றின்மேற் கொடிவளர்வதல்லது கொடிமேற் குன்று வளர்வதின்று, ஆதலான் அற்புதவுவமை. அற்புதமென்பது ஆச்சரியம். பகுதி - சேட்படை. துறை-பாங்கிக்கவயவங்கூறல். பாங்கன் செவ்விசெப்பலுமாம்.

மின்னுமரவும்விளங்கிழாய்நின்னிடையும்
பன்னுதமிழ்மாறன்பனிவரைவா—யுன்னில்

விருத்தமுளவாயிருப்பமெய்புவமைக்கென்னோ
பொருத்தமுடைத்தென்னும்புவி. (218)

இது விரோதவுவமை. பகுதி - இடந்தலை. துறை - நலம் புனைந்துரைத்தல்.

எப்பொருளுங்கோதற்றிசைக்குமறையம்மறைபோன்
மெய்ப்பொருளெல்லாஞ்சொலுநின்மெய்த்தமிழு—முப்பொருளு
மாசின்றுணர்த்துமயனயன்போன்மாறநீ
யாசின்றுணர்த்துமவை. (219)

இது ஒப்புமைக்கூட்டவுவமை. எப்பொருளு மென்பன "மிக்க விறைநிலையு மெய்பா முயிர்நிலையுந், தக்க நெறியுந் தடையாகித்-தொக்கியலு, மூழ்வினையும் வாழ்வினையும்" என்பனவாம். முப்பொருளுமென்பன:—அங்ஙன முதலிற் கூறிய விறை அரி அயன் அரனென்னுமவர் மூன்றுபொருளாய் முக்குணமாய் மூன்றுதொழிலாயிருக்குமெனக் கூறியவண்ணமே குற்றமின்றி யுணர்த்து மென்பதாம். இன்றியென்னும் வினையெச்ச வாய்பாட்டிகரம் இன்று என உகாவிறுபிற்று; என்னை? "அன்றியின்றியென் வினையெஞ் சிகரந், தொடர்பினுளுகர மாய்வரி னியல்பே" என்றாகலின். அவற்றை யென்பது அவையென இரண்டாவதிறுதியிற்றொக்கது. கோதற என்பது - கோதற்றென்பதனைக் கோதறவென்றாக்குக. முன்னது - பனுவல்வாழ்த்து. பின்னது - இயன்மொழிவாழ்த்து.

மாடகுளிகைக்கொழும்பொற்றகட்டமைத்தமுழுமணிவால் வயிரநிலம்
பாடல்சால்பசுமணிபொன்னிறப்புருடராகமிவை பத்திவாய்ந்து
கோடலால்வளர்ந்தருசெங்கேழ்கிளர்மாண்செக்கரொடுங் குணறவொன்றில்லா
வாடகாசலக்குடுமிவளைத்தெழுமிந்திரதனுவொத் தவிர்வதொன்றே. (220)

இஃ தேதுவுவமை. துறை-நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்.)

பூரண மாங்கண் மலர்க்கும்புத்திக்குந்தித்திக்குங்
காரணத்ததாமோ கடலமிர்தந்—தாரணிமேற்
கன்னியிடத்தார்பாவக்காகோதரத்துவளர்
பொன்னியிடத்தாரமுதைப்போல். (221)

இது விலக்குவமை. துறை - கடவுள்வாழ்த்து.

அளிமருவும்பொற்காவகமணந்துஞ்சங்க
வொளிமருவுநீணிதியுட்கொண்டும்—விளிவில்லா
நன்னரங்கவீடருளநாடாதருளரங்கன்
றென்னரங்கநேர்வரும்புத்தேள். (222)

இதுவும் விலக்குவமை.

(இ - ள்.) அளிமருவும் பொற்கா - கொடையைப்பயிலும் பொற்சொரூபமான கற்பகக்கா. மணந்து - குடிபுகுந்து. சங்கவொளிமருவுநீணிதி - சங்கநிதி. திருவரங்கத்தின்மேற் சொல்லுங்கால், வண்டு பொருந்திய பொலிவையுடைய சோலைகள் மணர்ந்து பரிமளங் கூர்தல். சங்கவொளிமருவுநீணிதி - பாஞ்சசன்னியத்தைத்தரித்த அன்பர்க் கழியாவைப்பாகிய அரங்கநாதன். நன்னர் - நன்மை. வீடு - பரமபதம். நாடாது - ஒவ்வாது; அப் பரமபதத்தைக்கொடுக்கப் புத்தேள் நினையாது. திருவரங்கம் பரமபதங்கொடுக்கு நினைவுள்ளதாமாதலாற் புத்தேளைத் திருவரங்கத்துக் குவமைகூறுவது பொருந்தாதென விலக்குக. நேர்வரும்புத்தேளென்பது இகழ்ச்சிக்குறிப்பு; எதிர்மறையு ளடங்கும். இங்ஙன முவமையைக் கூறிவிலக்குதலால் விலக்குவமையாயிற்று. இதனுள்ளுஞ் சிலேடை விரவிற்றேனும் வீடருளநாடாதென்பதனுல் விலக்குவமை யென்பதே நோக்கம். தண்டியாசிரியரும் "குழைபொருது நீண்டு குமிழ்மேன் மறியா, வுழைபொருதென் னுள்ளங் கவரா" வென்னும் விலக்குவமையினுஞ் சிலேடை விரவியதூஉங் காண்க. திணை - பாடாண். துறை - நகரவாழ்த்து. ஆக உருவகவுவமை முதலாக விலக்குவமை யீறுகப் பதினொன்றும் அடைவே வந்தவாறு காண்க (உசு)

112\. சிறப்பிற்றீர்ந்தசெய்கையவாகி
யிறப்பவுயர்த்தலிழிந்தன்மிகுத்தல்
குறைத்தல்பான்மாறுதல்கொள்கடனிலவே.

(எ - ன்.) உவமைக்குக் கூறிய பொதுவிதிச்சூத்திரத்துட் பெருமையுஞ் சிறுமையும் பெற்றியிற்சிறந்து மென்பதற்குச் சிறப்பிற் றிர்ந்து வருவனவாய்க் கடியப்பட்டன முன்னர்க் கூறப்படுமென்று மவையிவையென்ப தூணர்—ற்று.

(இ - ள்.) ஒன்றினை யுவமிக்குங்காற் சிறப்பினை நீங்கிய செய்கையை யுடையவா யிறப்பவுயர்ந்த வுவமேயத்திற் கிறப்ப விழிந்த வுவமானத்தினை யுவமித்தலு மிறப்பவிழிந்த வுவமேயத்திற் கிறப்ப வுயர்ந்த வுவமானத்தினை யுவமித்தலு முவமேயவடைக் குவமான வடை மிகப்புணர்த்தலு முவமேய அடைக் குவமானவடை குறையப் புணர்த்தலும் ஆண்பாற்குப் பெண்பா லுவமித்தலும் பெண்பாற் காண்பா லுவமித்தலும் ஒருமைப்பாற்குப் பன்மைப்பா லுவமித்தலும் பன்மைப்பாற் கொருமைப்பா லுவமித்தலும் பெரியோ ராமெனக்கொள்ளுங் கடனிலவா மென்றவாறு.

ஆனைபெருத்தமகழ்வான்வெரினேய்க்கும்
பூனையிடியேறுபோன்முழங்கு—மூனை
யயிலரிபேறன்னுளிவளிவடன்னுசி
பயிலணிதாராகணமொப்பாம். (223)

இதனுள் இறப்ப விழிந்த அகழ்வான்வெரினை யிறப்பவுயர்ந்த யானையின் முதுகிற் குவமைகூறியதூஉம், இறப்ப விழிந்த பூனை முழக்கிற்கு இறப்பவுயர்ந்த இடியேற்றின் முழக்கை யுவமைகூறிய தூஉம், அரியேறுசி யிறப்பவுயர்ந்த வஃறிணையாண்பாலை யுயர் திணைப் பெண்பாற் குவமைகூறியதூஉம், நாசியாபரணமான முத்தி னொருமைக்குத் தாராகணப் பன்மையை யுவமைகூறியதூஉம் வழு வாயிற்று.

பைங்குவளைமுல்லைபனிவண்டுலாங்குமுதந்
திங்களிடத்தாயினபோற்செவ்விதரு—மிங்கிதமே
கற்றமர்கூர்கண்ணகைவாய்காமுறவாழ்வெய்தியவிம்
முற்றிழையாள்சோதிமுகம். (224)

இதனுள், உவமானமான குமுதத்துட் புணர்ந்த வண்டிற் குவமேயமின்றி யுவமானவடை மிகுந்து வழுவாயிற்று.

தேனருவிநீரருவியோடே சிறந்துள நற்
றூனவடமேருவெனுஞ்சால்பிற்றே—மானனையார்
சித்திரப்பொற்கச்சணிந்துசெய்யமணிவடமு
முத்தவடமும்பூண்முலை. (225)

பொற்கச்சணிந்தென்னு முவமேயவடைக் குவமானவடை குறைந்து வழுவாயிற்று. பொற்கச்சு - பொன்னெழுத்துக்கச்சு.

நமன்மடந்தைபன்னுனிவனிவன்றன்னுரி
சமனையளிங்கிவர்க்குத்தையா—லமர்புதல்வ
ரெண்ணிருவர்க்கொப்பாகுமன்றேயமன்சமரிற்
பண்ணமைத்தாங்கேறும்பகடு. (226)

இதனுள் உயர்திணையாண்பாற் குயர்திணைப் பெண்பாலு முயர்திணைப்பெண்பாற் குயர்திணையாண்பாலும் உயர்திணையாண்பாற் பன்மைக் கஃறிணையாண்பாலொருமையுஞ் சிறப்பிற் றீர்ந்தனவாய் வழுக்கின்றாய்க் கூறுதலால் வழுவாயிற்று.

வாலிலாச்சம்புவெனவாழ்மதங்காவந்ததற்குப்
பாலிலாவுண்டிபடையேமான்—மேலுமக்குக்
கூகைக்கறியிலையேகோதிலாத்தேனுடனே
பாகைச்சொரிந்தென்பயன். (227)

இதனுள் இங்ஙனம் வாலிலாச்சம்புவெனப் பழித் துவமைகூறுதல் வழுவன்று. சம்பு - நரி. பகுதி - பாத்தையிற்பிரிதல். துறை - பாணனைப்பழித்தல். (உஎ)

(113) பொதுவினுஞ்சிறப்பினும்புணர்ந்துளவாகி
யிதுவழக்கிதுசெய்புளெனுமீரிடத்தும்
வெளிப்படைகுறிப்பெனவிழுமியநெறியாற்
கொளப்படுமுவமவுருபினைக்கூறி
னன்னபோலவனையமான
வென்னநேரவிறப்பநிகர்ப்ப
நாடநளியநடுங்கநந்த
வோடவொன்றவொடுங்கவொட்டக்

கள்ளக்கருதக்காட்டக்கடுப்ப
வெள்ளவிழையவெதிரவேய்ப்ப
மருளமலையமாறமதிப்ப
வெஃறவந்தவேரவேய
வாங்கவொப்பவமரவியையப்
புல்லவுறழப்புரையப்பொருவ
வனைதுணைகெழுவிழ்தழைசெத்தற்றணி
யென்றிவைநாற்பானெட்டும்பிறவு
மொன்றியதிறத்தாலொழுகுதலுளவே.

(எ - ன்.) இஃதுவமேயத்தினையு முவமானத்தினையு மொப்பு மைப்படுத்துங்கா லிடையினு மீற்றினும்வரு முவமவுருபினை யினைத் தெனக் கூறுத லுதலிற்று.

(இ - ள்.) கொள்ளப்படு முவமவுருபினை என்பது இது வினைப் பாலுவமம் இது பயனிலையுவமம் இது மெய்ப்பாலுவமம் இஃ துருவி லுவமம் என நால்வகைத்தாக மனத்தான் மதித்துக்கொள்ளப்படுதலை யுடையவாய்ப் பொதுவானுஞ் சிறப்பானும் பொருந்துவதுளதா யிது வழக்கிட மிதுசெய்யுளிடமென விரண்டிடத்தினோடுங்கூடி வெளிப்படை குறிப்பென வருஞ்சொற்களுக்கு வரையறைகூறின் அவை, அன்ன போல வென்பனமுதலாக அற்றணி யென்பன வீறாக வெண்ணப்பட்ட நாற்பத்தெட்டும் பிறவுமாகிப் பொருந்துங் கூறு பாட்டா னொழுகலாறுடைத்தா மென்றவாறு. பிறவுமென்பதனால் எடுத்தோதினவே யன்றி வெல்ல, வென்ற, வியப்ப, ஒத்த, ஒக்கும், தகைய, தகைப்ப, போற்ப, காய்ந்த, நோக்க, மருளும், புரையும், துலை என்றற் றொடக்கத்தனவும், ஐந்தாம்வேற்றுமை யுருபாய்வரும் இன்னும், என, என்னென வரும் எச்சவாய்பாடுகளாய் வருவனவும், பிறவுங் கொள்க. சொல்லினை யீண்டுநாலு மயக்கம். இவற்றுட் பலவும் செயவெனெச்சமாய வாய்பாட்டான் வந்தனவெனினும்போல வென்னுஞ்சொல் புலிபோலவந்தானென வினையெச்சவாய்பாட்டான் வினைகொண்டும், புலிபோலும் மறவனென்புழியும் புலிபோன்றமறவ னென்புழியும் பெயரெச்சவாய்பாட்டாற் பெயர்கொண்டும், புலி போன்மறவ னென்புழி யிடைச்சொல்வாய்பாட்டாற் பொதுவாயு

நிற்கும். இவ்வோதிய வாய்பாடெல்லா நான்குவமத்திற்கும் பொது வென்ப நீண்டுக் கூறினர். இனிச் சிறப்புவகையா னுரியவாம்வகை ஒல்காப்புலமைத் தொல்காப்பியனாரும் உவமவியலுள் "அன்ன வாங்க மான விறப்ப, வென்ன வுறழத் தகைய நோக்கொடு, கண்ணிய வெட்டும் வினைப்பா லுவமம்" "அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்" "எள்ள விழையப் புல்லப் பொருவக், கள்ள மதிப்ப வெல்ல விழ, வென்றாங் கெட்டே பயனிலை யுவமம்" "கடுப்ப வேய்ப்ப மருளப் புரைய, வொட்ட வொடுங்க வோட நிகர்ப்பவென், றப்பா லெட்டே மெய்ப்பா லுவமம்" "போல மறுப்ப வொப்பக் காய்த்த, நேர வியப்ப நளிய நந்தவென், றொத்துவரு கிளவி யுருவி னுவமம்" "தத்த மரபிற் றோன்றுமன் பொருளே" என்ற சூத்திரங்களா னுணர்க இவற்றுள், அணியென்பன முதலாய சில வுருபுக ளீறு விகாரப்பட்டு நிற்பனவு முள. அஃதேல் அணி, வந்த, துலை என்னு முருபுகள் முன்னோர் கூறிய வுவமவுருபுத் தொகைச் சூத்திரங்களு ளில்லையாலோ வெனின், அவை "முல்லை பணிந்த முறுவலாள்" எனவும், 'கயல்வந்தகண்ணியர்' எனவும், "தோல்வி, துலைபல்லார் கண்ணுங் கொளல்" எனவும் இலக்கியங்களுட் கண்டமையாற் காட்டியதெனக் கொள்க. ஒழிந்தனவாய் மறைந்த வுவமவுருபுகட்கு மீண் டிலக்கியங் காட்டி விறப்பப்பெருகும். அவைகட்கும் வந்தவழிக் கண்டு கொள்க. (உஅ)

உ-வது உவமையலங்காரம் முற்றும்.

---

## ௩-வது உருவக வலங்காரம்.

114. முக்கியப்பொருளையொப்புடைப்பொருளெனமதித்
திருபெயரொட்டாயிசைப்பதுமுருவகம்.

(எ - ன்) வைத்தமுறையானே யுருவக மென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்.) உவமேயப்பொருளையு முவமப்பொருளாக வுட்கொண் டிரண்டுபொருளையு மிருபெயரொட்டாக வொற்றுமை கொளுத்தி யுரைப்ப துருவக மென்னும் அலங்காரமா மென்றவாறு.

உம்மையா லிரண்டுபொருளையு மொற்றுமைகொளுத்தா துவமை யாத லுவமேயமாத லிரண்டிலொன் றுருவகச் சொல்லோடு தொக்கு மாட்டேறில்லாது வரு முருவகமு முளவென்றவாறு. மூன்றுதொக்கு வருவனவு முள. இவற்றிற்கெல்லாஞ் செய்யு ளுருவகவிரியுண் முன் னர்க்காட்டுதும். அஃதாக, உவமையும் பொருளுமென இதன் முதனூலுடையார் கூறவும் இந்நூலுடையார் முக்கியப்பொருளை முதல்வைத்ததியாதோ வெனின், உவமைபோலாது முக்கியப்பொ ருளை முதல்வைத் தொப்புமைப்பொருளை யதன்பின்னர்வைத் தொற்றுமைகொளுத்துவதே யுருவகத்திற்கு மிக்கதோர் அறிகுறி யென்பதுதோன்ற வைத்தாரெனக்கொள்க. (உக)

115. பொருண்முதலினுமுவமைபதாம்புணர்வழி
யொற்றிடைதோன்றறிரிதலோடொன்றிய
மற்றதற்குறுசொல்விரியாவயினே.

(எ - ன்) உவமைக்கு முருவகத்திற்கு மெய்தியதோ ரைய மறுத்துணர்—ற்று.

(இ - ள்.) முக்கியப்பொருண் முன்னு முவமப்பொருள் பின்னு மாக வருவ துருவகத்திற்கு மிக்க வறிகுறியென்றூர் ; அவ்வாறன் றிப் பொருண் முதலே வரினு நிலைமொழியாகி யுயிரு மொற்று மீறாய் வரு முவமேயச்சொல்லும் வருமொழியா யவைமுதலேவரு முவமச் சொல்லுந் தம்மிற் புணருமிடத் தவற்றினிடையி லொற்றுத் தோன்று திரிதலின்றி யவற்றோடு மவ் வுருவகத்திற்குரிய சொல்லும் விரியா விடத் துவமையாம் பகுதிப் முளவென்றவாறு.

உதாரணம்:—வாய்ப்பவளம், (வாயென்றபவளம், வாய்பவளமாக.) குழற்கொன்றை; கொங்கைக்குரும்பை யெனவு மிவை யுருவகம். வாய் பவளம். குழல் கொன்றை, கொங்கை குரும்பை யெனவு மிவை யுவமை. "வாய்ப்பவளந், துடிக்கின்றவா" எனவும், "குவவின கொங்கை குரும்பை குழல்கொன்றை" எனவுங் கண்டுகொள்க. ஒன்றிய வென்றதனல் வதனசந்திரன், கரகமலம், கரபுண்டரீகம் எனவும் நிலைமொழியுவமேயவுயிர்த்தின்முன்னர் உவமையாய வரு மொழிமுதல் வல்லெழுத்துமுன்ன ரொற்று மிகா துருவகமா மிடமு

முள. இது உவமவிரியினுள், தலைதடுமாற்ற வுவமையின்கண்பொருண் முதலேவந்த முவமை யாயினவாறு கண்டுகொள்க. (ருo)

116. அதுவே,
தொகையினும்விரியினுந்தொடரிருவகைத்தே.

(எ - ன்.) இதுவு மவ்வுருவக மின்னவகைப்படு மென்கின்றது

(இ - ள்.) அவ்வுருவகமென்னு மலங்காரந் தனக்குரியசொற் றொக்கும் விரிந்தும் வருமொழியோடுந் தொடர்ந்து நிற்கு மிரண்டு கூறுபாடுடைத்தென்றவாறு உம்மை யிரண்டனுள் முதலது சிறப் பும்மை யாதலால் அதற்குரியசொற் றொக்குவருதலே சிறப்புடைத் தெனக் கொள்க. ஏனைய திழிவுசிறப்பும்மை. (ருக)

117. அடையிடைபுணரினுங்கடிநிலையிலவே.

(எ - ன்.) இதுவு மவ் வுருவகந் தொகையினும் விரியினும் புணர்வுழி யெய்துவதோர் வழுவமைப் புணர்—ற்று.

(இ - ள்.) இரண்டு பொருளையுந் தம்மி லொற்றுமைகொளுத் தும்வழி யிடைப்பட வுவமைக்கண் ணடைசொற் புணர்த்துக் கூறினு முருவகமேயாம்; நீக்கப்படாதென்றவாறு. உம்மையான் முதலே யடைபுணரினு நீக்கப்படாதாம்; எனவே தொகைநிலைவகை யானும் அடைசொற்புணராமலும் புணர்ப்பதே சிறப்புடைத்தென்ப தாம். இவற்றிற்குச் செய்யுள் வருமாறு:—

முருகவிழளகக்காட்டைமுன்னிடாவல்குற்றேரும்
பருமணிவடத்திற்சேர்த்தபடாமுலைக்களிறுமுந்திப்
புருவவிற்குனித்துநாட்டப்பொருகணையுடக்கிமைந்தர்
செருவிழந்தோடமார்பிற்செஞ்சவேசெலுத்துவாரே. (228)

என்பது தொகையுருவகம். இதனுள் படாமுலை, பொருகணை யென்பன அடை. துறை - நாடுவாழ்த்து. (குருகாமான்மியம்.)

கண்கழுநீராய்க்கரங்கள்காந்தளாய்த்திங்களவி
பன்களாய்ச்செவ்வாய்பதுமமாய்—நண்பனே

வாய்ந்தமடவரற்குமாறன்மணிவரைவா
யீர்ந்தண்பொழிலாமிடம். (229)

இது விரியுருவகம். பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடங்கூறல். (கஉ)

118. ஒருதொடர்பினுளிருமையுமுறலுளவே.

(எ - ன்.) தொகைவிரியுருவக முணர்—ற்று.

(இ - ள்.) தொக்கும் விரிந்தும்வரு மிரண்டுதன்மையு மொருசெய்யுளகத்து வருதலு முள வென்றவாறு.

பெண்ணாரமுதளித்தபேரின்பத்தீஞ்சுவைபெற்
றுண்ணாநினைவேற்குறுதியெனக்—கண்ணா
லளித்தவரு ளோக்காமமிர்தினைக்கண்டுள்ளந்
தளிர்த்ததையிங்கார்க்குரைப்பேன்முன். (230)

இது தொகைவிரியுருவகம். துறை—பாங்கியையறிதல்.

கதிர்முலைக்குவடுந்திண்டோட்சைலமுங்கலவிமுந்நீ
ரெதிர்கொளநிறீஇமத்தாகவிவறலாந்தாம்புபூட்டி
முதிர்பொறிப்புலவர்மான்பின்முறைமுறைசுழற்றுமாற்றாற்
சதிர்பெறப்பிறந்தவின்பத்தனியமிர்தருந்துநீரார். (231)

திணை - பாடாண். துறை - காடுவாழ்த்து. இதனுள்ளு முதலேயு மிடையினு முவமேயத்தினு முவமையினும் அடைசொற்புணர்ந்ததுங் காண்க. (குருகாமான்மியம்.) (கங)

119. உரைத்தவையினிவரும்விரிக்குறுபொதுவே.

(எ - ன்.) இதுவு மத் தொகை விரிகளா லெய்து மிலக்கணமுணர்—ற்று.

(இ - ள்.) இங்ஙனமுரைத்த தொகையும் விரியு மேற்கூறப்படுமுருவகவிரிக்கு மிக்க பொதுவிலக்கணமா மென்றவாறு. (கச)

120. இயைபியையின்மையேகதேச
மொருபொருள்டலபொருளுருவகஞ்சிறப்பே

விருத்தமவிருத்தநட்புவியனிலை
யேகவங்கமனேகவங்க
மவயவமவயவிமுற்றெனவாய்ந்த
நவையறுசிறப்பினுனுன்கதன்விரியே.

(எ - ன்) உருவக மென்னு மலங்காரத்தின் விரியிலக்கண முணர்—ற்று.

(இ - ள்.) இயைபுருவகமும், இயைபிலுருவகமும், ஏகதேச வுருவகமும், ஒருபொருளுருவகமும், பலபொருளுருவகமும், உருவக வுருவகமும், சிறப்புருவகமும், விருத்தவுருவகமும், அவிருத்தவுருவக மும், நட்புருவகமும், வியனிலையுருவகமும், ஏகாங்கவுருவகமும், அநே காங்கவுருவகமும், அவயவவுருவகமும், அவயவியுருவகமும், முற்றுரு வகமும் என ஆராய்ந்த குற்றமற்ற சிறப்பினையுடைய வுருவகவிரி பதினாறுமென்றவாறு. இவற்றிற்கெல்லாம் உருவகமென்னும்பெயரை அதிகாரத்தாற் கூட்டியுரைத்ததனோடும் எண்ணும்மைத்தொகையும் விரித்துரைக்கப்பட்டது. நட்பென்பது சமாதானம் இவையெல்லாஞ் சொல்லின்முடியு மிலக்கணத்தன. அல்லதுரையினுங் கொள்க.

அவற்றுள், இயைபுருவக மென்பது ஒருதொடர்பினுட் பல பொருளையு முருவகஞ்செய்புங்காற் றம்முட் காரணகாரிய மியை புடைத்தாகவைத் துருவகஞ்செய்வது:—

நித்தர்முத்தரிற்புகழ்நிபுணன்பராங்குச
னுத்தமஞானமென்றௌளிர்திருப்பாற்கடல்
புரந்தசெந்தமிழ்மறையாயபுத்தமிர்த
நிரந்தரமுலகின்மெய்ந்நெறிநிலைதழைவான்
பூமகளெனும்பெயர்புனைமலர்நிதியொடந்
தாமமாதவனெனுஞ்சங்கநிதியினை
யருளுடைமையின்வெளிப்படுத்தருளவுமவை
வருபவர்வருகெனவாழ்வுபெற்றிருப்பவும்
வாழ்நாளதன்கண்வழிப்படுசரிதையின்
வீழ்நாள்படாமைவீட்டினையெய்தா
தொல்லையிற்பிறந்திறந்துழல்வோர்
வல்வினையதனில்வலியதொன்றிலையே. (232)

இஃ தியைபுருவகம்.

(இ - ள்.) அநந்த கெருட சேனாபதிகளோடும் பரமபதத்து முத்தரும் புகழு மிகவும் வல்லோனாகிய சிபராங்குசன் றிருஞான மென்றொளிரும் திருப்பாற்கடலளித்த திருவாய்மொழியெனும் புத தமிர்தம் எல்லாநாளு முலகின்கண் சிமந் நாராயணனே பரப்பிரம மென்று முண்மைமார்க்கநிலை தழைக்கும்படி மலர்மடந்தையெனப் பெயர்புனை பதுமநிதியுடன் கூடிய பரமபதத்தையுடைய மாதவ னென்னுஞ் சங்கநிதியைத் தனது திருவுள்ளக்கருணையுண்டான தன்மையால்வெளியிடவு மவை யிருடீலகமாகி முத்திவேண்டினவர் வருவார் வருகவென்று தம்மினீங்காது வாழ்ந்திருக்கவுந் தமக் குள்ள வாழ்நாள் வீழ்நாள் படாமை மனோவாக்குக் காயங்களால் அருச்சனைபுரியு மொழுக்கத்தினான் மோக்கத்தினைப் பொருந்தாது சிறுவரையிற் பிறந்து மிறந்து முழல்வோ ரும்மையி லிழைத்த தீவினை போல வலியுடையதொன் றில்லை யென்றவாறு. மலர்நிதி-பதுமநிதி; சங்கநிதி - பாஞ்சசன்னியத்தைத் தரித்த பெரியநிதி; திருவு மாயோனும். இதனுள், திருப்பாற்கடன் முதலாக அடைவே காரண காரியத்துடனியைத் துருவக மாயினவாறு காண்க. பா - நேரிசை யாசிரியம். திணை—பாடாண்பொதுவியல். துறை—பனுவல்வாழ்த்து.

ஆரவடநிரருவியாமாணிக்கத்
தார்கெழுசீர்த்தேனருவிதானாகப்—பேரழகு
பாரிக்குமாறன்பனிவரைமான்வார்புனைந்து
பூரிக்குங்கொங்கைப்பொருப்பு. (233)

இஃதியைபிலுருவகம். ஆரவடம் - முத்துவடம். மாணிக்கத் தார் - மாணிக்கமாலை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - செவ்வி செப்பல்.

ஏகதேசவுருவக மென்பது ஒரு செய்யுளகத்து ஓரிடத் தொரு பொருளை யுருவகஞ் செய்யுங்கால் மாட்டேறுபெற வுருவகஞ்செய் தப்பொருளோடு சம்பந்தமுறப் பிறிதோர்பொருளைச்செய்யுளகத்துப் பிறிதோரிடத்து மாட்டேறுபெற வுருவகஞ்செய்யாது தொகைநிலை வாய்பாட்டாற் கூறுதல்:—

அறியாமையென் னுமகவிருளைச்சிக்கப்
பிறியாதறிவிருக்கப்பெற்றுங்—குறியாத
தீச்சொற்பயில்வரேசெண்பகமாறன்பவள
வாய்ச்சொற்றிறம்பயிலாமல். (234)

இஃதேகதேசவுருவகம். இதனுள் அறியாமையென்னு மக விருளை யென மாட்டேறுபெற வுருவகஞ் செய்ததனோடு மெதிராகச் சம்பந்தமுற ஞானமாம் விளக்கென மாட்டேறுபெற வுருவகஞ் செய்யாது தொகைநிலைவாய்பாட்டா னறிவெனக் கூறியவாறு காண்க. செண்பகமாறன் பவளவாய்ச்சொல்-திருவாய்மொழி. திறம்-சித்தசித்தீச்சுரத்தை மயக்கமறவிளங்கக்கூறுங்கூறுபாடு. பயிலாமல்-இடைவிடா துணர்வினாற் சிந்தியாமல். இது வுவமேயமு முருவக வுருபுமாகிய விரண்டுதொக்க தொகையுருவகம். ஞானவிளக்காவது திருவாய்மொழி; பிறரறியாமையென்னு மிருட்டறக் கூறிய ஞான மாகிய விளக்கு. பயில்வரே யென்பது பரசமயவாதியரை. ஏகாரம் - இரக்கத்தின்கட் குறிப்பு. துறை - இதுவுமது.

புன்பனுவனஞ்சம்பொசிக்கின்றபேதையர்பே
ரின்பமுறமெய்புணர்வாரேனோருந்—தன்பால்
விருந்தருந்தத்தானருணாவீறனூர்கூறு
மருந்தருந்தாரந்தோமதித்து. (235)

இதுவுமது. இதனுள் நாவீறனூர்கூறு மருந்தென்பது திருவாய் மொழியாகிய மருந்து. மருந்தென்பது - அமிர்தம். எனவே திருவாய் மொழியாகிய மருந்தென வுருவகஞ்செய் ததனோடுஞ் சம்பந்தமுறும் படி பிறவியாகிய பிணியைத்தீர்த்து முத்தியாகிய பேரின்பத்தைத் தரு மருந்தென வுருவகஞ்செய்யா துவமேயமுதலிய மூன்றினையு மிருவகைத் தொகைநிலைவாய்பாட்டாற் கூறியவாறு காண்க. மெய் புணர்வார் - தத்துவத்திரயத்தி னுண்மையுணர்வார். தன்பால் விருந்தருந்த - அம் மூன்றினையும் மயக்கமறவுணர்த்தும் ஞானமான அமிர்தத்தைத் தமது மெய்புணர்வா னுவட்டாது புதுவதுபுதுவதாக வுரிசிக்கவும் என்க. அருந்தாரந்தோ என்ப திரக்கம். மெய்ப்பொருண் மாறன் - உண்மைப்பொருளை யுணர்ந்தமாறன்; உண்மைப்பொரு ளாகிய மாறனென்றுமாம்.

மிக்கவரிதாளின்மெய்யன்பினைவித்தித்
தக்கதவத்தினமுந்தான்பொழிந்துட்—புக்கதோர்
ஞானமுருவியபின்னன்முத்தியைவிளைக்கு
மானபரன்காரிதருமன். (236)

இது உவமையு முருவகவுருபு மாட்டேறில்லாதுவந்த வுருவகம்; என்னை? அரிதாளாகிய செய்யின்கண் அன்பாகிய வித்தை விதைத்துத் தவமாகிய நீரைப்பொழிந்து ஞானமாகிய முளையுருவியபின் முத்தியாகிய போகத்தை யென மாட்டேறு பெறாது வந்தமையா லுணர்க. ஒழிந்த அகல முரையிற்கொள்க. இவை யிரண்டுதொக்கது. இவற்றுள் முன்னையது பனுவல்வாழ்த்து. இது திணை - வாகையைச் சார்ந்த புறத்திணை. துறை - அறக்களவழி. இவை மூன்று மாட்டேறிலாதுவந்த வுருவகம். இவற்றிற்கு "அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற், பிறவாழி நீந்தலரிது" எனவும், "சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு, மேமப் புணையைச் சுடும்" எனவும், "பவளவாய்ச் செறுவு தன்னு ணித்திலம் பயில வித்திக், குழவிநா றெழுந்து காளைக் கொழுங்கதி ரீன்" றெனவும், "அஞ்சவரு தானை யமரென்னு நீள்வயலுள், வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்கும்" எனவும் முந்துநூல்களினு மடைவே வந்தவாறு காண்க.

ஒருபொருளுருவக மென்பது உயர்திணை அஃறிணை யென்று சொல்லப்பட்ட காட்சிப்பொருளுங் கருத்துப்பொருளு மொருசெய்யு ளகத்து வந்தா லவற்று ளொருபொருளை யுருவகஞ்செய்தல் :—

பிறப்பாரிறப்பார்பிறப்பாயவேலை
துறப்பானெருபோதுந்துவார்—சிறப்பாகுஞ்
செப்படைத்ததென்னரங்கர்சேவடிமேன்மானிடாய்க்
கைபடைத்தும்வாழ்ந்தகதை. (237)

இஃ தொருபொருளுருவகம். அரங்கன், மானிடர்கை, சேவடி யென்னும் உயர்திணை யஃறிணைகளை யுருவகஞ்செய்யாது கருத்துப் பொருளாய பிறப்பென்னும் அஃறிணையை யுருவகஞ்செய்தலா னென்றறிக. இனைபாடான். துறை - வாயுறைவாழ்த்து.

பலபொருளுருவக மென்பது அவ்விருபொருளையு மொருசெய்யு ளகத் துருவகஞ் செய்தல் :—

தீதற்றமெய்ஞ்ஞானத்தெப்பமுடன்மேதகுநால்
வேதக்கடல்கடந்தவித்தகத்தாற்—கோதற்ற
வந்தாமத்தீவினுட்புக்காழியானுமணியைத்
தந்தானம்பூதூர்வந்தான். (238)

இது பலபொருளுருவகம். அந்தாமத்தீவு—விரசைக்கக்கரை யாகிய பரமபதம். திணை—பாடாண். துறை—அறுமுறைவாழ்த்தி னுண் முனிவனைவாழ்த்தல்.

உருவகவுருவக மென்பது ஒன்றனை முதலே யுருவகஞ் செய் ததனைப் பெயர்த்து முருவகஞ் செய்தல் :—

மத்தம்புரியவிச்சைவாராழியாமிருளென்
சித்தமினித்தேறுமேதேமகிழ்த்தார்—முத்தன்
முகத்தாமரையாமுழுமதியென்செவ்வி
யகத்தாமரையகத்தாக. (239)

இஃ துருவகவுருவகம். இதனுள், மத்தம்—மயக்கம். புரிதல்—தருதல். அவிச்சை—அறியாமை. அவிச்சையாம் வாராழி யென வுருவகஞ் செய்ததனை மறித்து மிருளென வுருவகஞ்செய்ததும் முகத்தாமரையா முழுமதி யெனவும் உருவகவுருவகம் வந்தவாறுங் காண்க. துறை—இதுவுமது.

சிறப்புருவக மென்பது ஒருபொருளையெடுத் ததற்குச் சிறந்த அடைகளை யுருபித் தவற்றானே யதனை யுருபித் துரைப்பது:—

நாரங்குழலாய்நளினமுகமாய்முகுளங்
கூர்வெம்முலையாய்க்கொடியிடையா—யூர்திரைகள்
வெண்டுகிலதாகிவிளங்குமகிழ்மாறன்
வண்குருகூர்த்தண்பொருநைமாது. (240)

இது சிறப்புருவகம். நாரம்—பாசி. வெம்முலை—விருப்பத்தைத் தரு முலை. பொருநைமாது—பொருநையாகியபெண். துறை—நதிவாழ்த்து.

விருத்தவுருவக மென்பது ஒருபொருட்குக் கூடாதன பலவுங் கூட்டி யுருவகஞ் செய்வது:—

வேம்பாலிசைந்தசுவைவெவ்விடத்தினேடுதித்த
தாம்பாலதன்றறலின்பாலன்று—பாம்பா
லிமிழ்திரைவாயிற்பிறந்ததென்பதன்றுமாறன்
றமிழ்மறையாஞ்செஞ்சொலமிர்தம். (241)

இது விருத்தவுருவகம். வேம்பு—கைப்பு. கைப்பைத் தனக்குச் சுவையாகவுடைய நஞ்சினேடும் பிறந்ததாம் பகுதியையுடைய தன்று. அறலின் பாலன்று—சலத்தினது மயமாம் பகுதியையுடைய தூஉமன்று. பாம்பா.........தன்று—பாம்பாகிய தாம்பா லாரவாரிக்குந் திரையையுடைய கடலைக் கடையப் பிறந்ததென்று கூறுவதூஉமன்று. காரிமாறப்பிரான் திருப்பவளத்திற் பிறந்த திருவாய்மொழியாகிய வினிய சொல்லின்மயமா மமிர்தமென்றவாறு. அமிர்திற்கு விடத்தினேடுதிப்பது முதலாயதுஞ் சலமயமாவதுஞ் சுபாவம். இந்த அமிர்தத்திற் கவையின்மையால் விருத்தவுருவகமாயிற்று. துறை—பனுவல்வாழ்த்து.

அவிருத்தவுருவக மென்பது ஒருபொருட்குக் கூடுவனவாந் தன்மை பலவுங் கூட்டியுருவகஞ் செய்வது:—

ஓர்பொழுதுந்துஞ்சாதலமர்தறுதுளித்தாம்
போர்புனைவேலண்ணல்பொருட்கேகிற்—சீர்பெருகுந்
தண்ணூர்பசுந்துளபத்தார்மார்பன்றஞ்சைமான்
கண்ணாகியகார்க்கடல். (242)

இது அவிருத்தவுருவகம். அண்ணல்—அண்மைவிளி. ஒழிந்த அகல முரையிற்கொள்க. பகுதி—பொருள்வயிற்பிரிதல். துறை—செலவழுங்குவித்தல்.

ஈட்டுருவக மென்பது ஒருபொருளை நன்முக வுருவகஞ்செய்து அதனைத் தீங்குதருவதாகக் கூறி யத்தீங்கு அதனால் வந்ததன்றென் றதற்குப் பிறிதோர் காரணங் கூறுதல்:—

தீங்கிளவியென் றுயிர்க்குந்தெள்ளமிர்தம்வெவ்விடத்துப்
பாங்கெழுமைகூர்தலணிமாற—னங்கைப்
பகுத்திருவே தீவினையின்பாங்காயதென்றே
மதித்திருக்குமின்றென்மனம். (243)

இது நட்புருவகம்.

(இ - ள்) இனிய கிளவியென வொலிக்கு மொள்ளிய வமிர்த மானது வெம்மையைச்செய்யும் விடத்தின்கயப்பா முரிமையை விளைத்தல் நின்னிடத்துண்டாய பாங்கினாலுண்டாய தல்லவென்று மெனது தீவினையின் பாங்காயதென்றுஞ் சந்தயமற விசாரியாநின்ற திப்பொழு தென்மனமென்றவாறு. உயிர்த்தல் - ஒலித்தல். கூர்தல் - விளைதல். பாங்கு - வாரம். பகுதி - பரத்தையிற்பிரிதல். துறை - பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகன் வாயில்வேண்டப் புறத்தொழுக்க முண்டென்று வாயின்மறுத்துக் கடுஞ்சொற்கூறிய விற்பரத்தை யுடன் புறத்தொழுக்க மின்றென்றுகூறித் தன தாற்றாமையே வாயிலாகக் கூடியது.

வியனிலையுருவக மென்பது ஒன்றினங்கம் பலவற்றையு மொரு செய்யுளகத்துக்கூறி யவற்றுட் சிலவுருவகஞ்செய்து சிலவற்றை யுருவகஞ் செய்யாது அவயவியை யுருவகஞ்செய்வது:—

வையம்பரவுமகிழ்மாறன்செவ்வாயுந்
துய்யநயனத்துணைப்போதுஞ்—செய்ய
முகத்தாமரையுடன்கைம்முத்திரையுங்கண்ட
சுகத்தார்க்குமுண்டோதுயர். (244)

இது வியனிலையுருவகம். இதனுள் அவயவி முகத்தாமரை. இதன்கண் ணவயவியுடன் அவயவங்களை யுருவகஞ் செய்து மற்றை யொன்றை யுருவகஞ்செய்யாமையுங்காண்க. துறை-கடவுள்வாழ்த்து. பழிச்சினர்ப்பரவலுமாம்.

ஏகாங்கவுருவகமென்பது ஒன்றினங்கம்பலவற்றி னொன்றை யுருவகஞ்செய்வது :—

மாறன்பனிவரைமேல்வாண்முகச்செவ்வாயிவட்கு
வேறன்றிவளெனவேமெய்யுணர்விற்—கூறொன்றக்
காட்டுகின்றதொண்பொற்கனங்குழைமேற்பல்காலு
மோட்டுகின்றகட்காவியுற்று. (245)

இது ஏகாங்கவுருவகம். ஒருபொருளாவ திதனுண் முகமாகிய வவயவி. இதன்பொரு ளுரையிற் கொள்க. துறை - பாங்கிமதியுடன்பாட்டின் யறிதல்.

அநேகாங்கவுருவக மென்பது ஒன்றினங்கம் பலவற்றையு முருவகஞ் செய்வது:—

செங்கைத்தளிர்நயனச்செவ்வேன்மறைப்பவா
மங்கைத்திருமால்வரைமடவாய்—கொங்கைக்
களியானைக்கட்படாநீக்கிபோகண்ணுற்
றெளியானைக்காக்குமியல்பு. (246)

இது அநேகாங்கவுருவகம்.

(இ - ள்.) திருமால் சிவாமங்கைவரையில் வாழு மடப்பத்தை யுடையாய்! பெறுதற்கரிய நின்னோடும் பேரின்பத்தை யனுபவித்துப் பின்னரதுபெறாது வருத்தமிக்கு நின்கண் ணெளியனுவேனைக் கருணை புரிந்து காக்குமியல்பு செங்கையாகிய தளிரா னயனமாகிய சிவந்த வேலை மறைத்துக் கொங்கையாகிய களியானையினது முகபடாத்தினை நீக்கிக் கொல்லும்படியே யவற்றை வெளியில் வைத்ததோ? இஃ தருளுக்குத் தகாதென்றவாறு. பகுதி - பாங்கற்கூட்டம். துறை—காணிக்கண்புதைக்கவருந்தல். எளியானை யென்றது தன்னைப் பிறன் போலக்கூறல்.

கொங்கைக்குவடுங்குழற்காருமேலிருந்த
சங்கைக்கருண்மாயன்றஞ்சைவாய்—மங்கைக்குப்
பொய்யேயுளதென்கைபோற்றுதில்லென்கை
மெய்யேயிடையாம்வெளி. (247)

இதுவுமது. சங்கை - ஐயம். ஏகார மிரண்டும் எதிர் மறை. இடையாம்வெளி யுளதென்கை பொய்யே யிலதென்கை

மெய்யேயெனத் தேற்றேகாரமாக்கிக் கூட்டினுமாம். பகுதி - இடந் தலைப்பாடு. துறை—மருங்கணைதல்.

அவயவவுருவக மென்பது அவயவமே யுருவகஞ்செய் தவய வியை வாளாது கூறுவது:—

நிறத்தாரைவேலிமையாநீடுறையைநீக்கிப்
புறத்தாயிடரிழைக்கும்போர்மே—லறத்தான்
வருந்தாவிரங்குவதென்மாலரங்கத்தின்பம்
பொருந்தானனத்தாய்புகல். (248)

இது அவயவவுருவகம்.

(இ - ள்.) திருமாலரங்கத்தினிடத் தழகுகுடிகொண்ட முகத் தினையுடையாய்! நினது செவ்வரி பரந்த கண்ணாகியவே லிமையாகிய வுறையை நீக்கி வெளிப்பட்டுத் துன்பத்தைச் செய்யும் பூசன்மேலும் யான் மிகவும் வருந்தும்படி கலுழ்வதற்குக் காரணம் யாதெனக்கூறு வாயாகவென்றவாறு. தாரை - கண். உறை - கவிசனை. அற-மிக. வருந்தா - வருந்த. இரங்குதல் - அழுதல். இன்பம் - ஆகுபெயர். பகுதி - பொருட்குப்பிரிதல். துறை - கருத்தறிந்தழுத கண்ணீர் துடைத்தல்; என்னை? பொருள்வயிற்பிரிந்த தலைவன் உள்ளக் குறிப்பினைக் கரந்து பன்னாளும் புதுவதுவாக வுறுப்பினைப்பாராட் டியதா லிஃதொன்றுடைத்தென அவனது பிரிவைபுட்கொண்டழுத கண்ணீராதலின்.

அவயவியுருவக மென்பது அவயவியை யுருவகஞ்செய்து அவயவத்தை வாளாதே கூறுவது:—

முதிராமுலையுமுறுவற்குறிவந்
தெதிர்பாயுங்கண்களுங்கண்டெய்தி—வதனமதிப்
பொற்றொடியைமாறன்பொருப்பிடைவைத்திங்கெதிர்ந்த
வற்புதனேதிண்ணியனுவான். (249)

இஃ தவயவியுருவகம். துறை - பாங்கன்றலைவனை வியத்தல். இதனுள் வதனமதியென்றது அவயவியுருவகம்.

பெண்ணமுதேபங்கைபாற்பேரைமால்தன்சிலம்பிற்
றன்னாரும்பூவேங்கைதலைநாட்செய்—கன்னி
தனைக்கொய்தனமேற்றமரிற்செறிப்பான்
றினைக்கொய்திறம்வினையாதே. (250)

இது மகா அவயவியுருவகம். இதனுள், பெண்ணமுதே யென்றது மகா அவயவி யுருவகம். தன்னாரும்பூ..............கன்னி - குளிர்ந்த நறுவிதாம் பூவாமுன்பே வேங்கை வைத்த அரும்பு. பகுதி - பகற்குறி. துறை - வேங்கையொடுவெறுத்துவரைவுகடாதல்.

முற்றுருவக மென்பது அவயவ அவயவிகளை யேற்றவிடத்தோடும் பிறவிடத்தினேடு முற்ற வுருவகஞ் செய்வது:—

வட்டவதனமதியுறுதற்பிறையும்
பெட்டநகைநிலவும்பேர்த்தறியாக்—கட்டளகக்
கங்குலின்மேன்மாறன்கனவரைவண்டீரிருந்தா
விங்கிவருக்குண்டோவிடை. (251)

இது முற்றுருவகம். பெட்ட - விரும்பப்பட்ட. பேர்த்தறியா - நீக்கியறியாத. கட்டளகக்கங்குல் - ஐம்பாலாகக் கோலஞ்செய்த குழலாகிய விருட்பிழம்பின்மேல். ஒழிந்த அகல முறையிற்கொள்க. பகுதி - இடந்தலை. துறை - வண்டகற்றிமருங்கணைதல்.

மண்படர்தாட்டாமரையுமைபடர்கட்காவியையுங்
கொண்டுமுலைக்கோங்கரும்புங்கொண்டதோர்-பெண்கொடியைக்
கண்டனையேனன்பாகழறலைமாறன்சிலம்பில்
வண்டமர்தண்பூஞ்சோலைவாய். (252)

இதுவுமது. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - கழற்றெதிர் மறுத்தல். இதன்பொரு ளுரையிற்கொள்க. ஆக இயைபுருவக முதலாக முற்றுருவக மீறாகப் பதினறு மடைவே கண்டுகொள்க(கடு)

121. உரைபெறுசிலேடைவேற் றுமைபுடனேது
வபனுதிபுவமைபென்றவற்றெடும்விரவும்.

(எ - ன்.) அவ்வுருவகம் என்னும் அலங்காரம் பிறவாய அலங்காரங்களோடும் விரிவருமென்ப துணர்—ற்று.

௨

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ௵ வைகாசிமீ [பகுதி-எ.
Vol. XI. May—June. 1913. No. 7.

## இந்தியபசுபரிபாலனசங்கம்*

### இதன் நோக்கங்களும் கருத்துகளும்.

இந்தியாவில் பலவிடங்களினின்றும் இந்தச் சங்கத்தின் நோக்கங்களைப்பற்றிப் பலரும் விரும்பிக்கேட்பதால், அவரவர்களுக்குத் தனித்தனி பதில் அளிப்பது கூடாமையின், இதனைப்பற்றிப் பின் வருமாறு பிரசுரிக்கலாயினோம்.

(1) முதல் முதல் இச் சங்கம் சாதி, மத, துரைத்தன விஷயங்களுள் ஒன்றையும் பொருத்ததன்றென அறிவிக்கலாயினோம். முற்றிலும் பால், தயிர் முதலியவற்றை விருத்திசெய்வதும், வியவசாயத்துக்கு உதவிசெய்வதுமாகி, வர்த்தகமுறையை வகித்தே நடைபெறுவது. ஆதலால் ஐரோப்பியர், இந்தியர், ஹிந்துக்கள், மகமதியர், கிறிஸ்தவர், புலால் உண்பவர், உண்ணாதவர், ஏழை, பணக்காரர் யாவரும் இச் சங்கத்தில் சேரலாம்.

(2) ஆயினும், ஹிந்துக்கள் மிகுதியாகச் சேராதபோது இச் சங்கம் அதிகமாக விருத்தியடையாதாதலால், அவர்களுடைய உதவியைக் கோருவதனிமித்தம், பசுச்சாலைகளின் பொருட்டு வாங்கப் படுங்கால்நடைகள் அவைகள் உபயோகமில்லாமற்போனபோது விற்கப்படமாட்டா. இந்த ஜீவகாருண்யச்செய்கையை யாரும் மறுக்கமாட்டார்களென வெண்ணுகிறோம்.

---

* இது, மகா-௱-௱-ஸ்ரீ ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை பீ.ஏ. பீ.எல். அவர்களால் ஆங்கிலத்தினின்று மொழிபெயர்த்தளிக்கப்பட்டது.

(3) இச் சங்கத்தின் நோக்கம், சுத்தமான பால் தயிர் நெய் முதலியவற்றைப் பெருக்கவும், உழவு முதலியவற்றிற்கு உதவியாகப் பசுமாடுகளையும் உழவுமாடுகளையும் விருத்திசெய்து வளர்க்கவும் ஆங்காங்குப் பெரிதும் சிறிதுமான மாட்டுக்கொட்டங்களை ஏற் படுத்துவதேயாம்.

(4) ஆயின், வியாபாரமுறையாக நஷ்டமில்லாமல் இந்த நடத்த முடியுமா? இதனைத் தக்கபடி அறிந்து நடத்துவோர் எங்ஙனம் கிடைப்பர்? எனச் சிலர் கேட்கவும் கூடும். இவர்களுக்கு நாம் இதில் எவ்விதமான பயமும் இல்லையென உறுதிகூறுவோம். ஒரு சாதாரண இடையன் எட்டுமாடுகளைவைத்துக்கொண்டு, சுலபமாக அதனை வளர்த்தும், தன் குடும்பத்தைப் பாதுகாத்தும், மற்றக் கல்யாணம், இழவு, முதலிய பல குடும்பச்செலவுகளை நடத்தியும் வருவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். நம்முடைய மாட்டுக்கொட்டங்களும் இம் முறையினையே அநுசரித்து வருவதுடன், அம் மாட்டுக்கொட் டங்களைப், புதிதாய் அநுசரித்துவரும் சுகாதாரவிதிப்படி அமைத் துப், பாதுகாப்பதனால் இக் கால்நடைகள் தொடுநோய் முதலிய வைகளினால் நஷ்டமடையாமல் காக்கவும்படும். நாம் சரியாய் மேற் பார்ப்போமானால், எவ்விதத்திலும் அழிவு உண்டாகாதென உறுதி கூறலாம். கண்பார்வையில்லாமற்போனால் ஒருவன் தன் பெட்டியி லிருக்கும் பணத்தையும் பாதுகாக்கவல்லனோதான்? மாட்டுக்கொட்டங் களைப் பஞ்சாயத்தார்மேற்பார்வையின்பேரில், சாதாரண ஆயர்களே வழக்கப்படி நடத்திவருவார்கள்.

(5) ஒவ்வொரு கொட்டமும், வெகுசன சம்மதரீதியாகவும், தற்காலம் பல விடங்களில் விருத்தியாய்வரும் கோவாப்ரேடிவ் சங்க மாதிரியாகவும் நடத்தப்படும். பொதுக்கூட்டத்தில் கூடிய சங்கத் தார்களுடைய ஆட்சிக்குள்ளாகும். அவர்கள் பொதுக்கூட்டத்தில் நிர்வாகசபை அல்லது பஞ்சாயத்தாரை நியமிப்பார்கள். இவர்கள் சங்கத்தாருக்கு உத்தரவாதிகளாயிருந்து, காரியங்களை மேல்நடத்து வார்கள். எல்லாக் கூட்டங்களிலும், பெரும்பாலார் சம்மதத்தின் பேரில் காரியங்கள் உறுதிப்படும். அந்தமுடிவுகள் யாவரையும் கட்டுப் படுத்தும். சங்கப்பணம், பொதுக்கூட்டத்தில் நியமிக்கப்பட்ட ஒருவ

ரிடம் இருக்கவேண்டும். அவர் சாமீன்இன்றித் தகுந்த பெரிய மனிதராகவாவது, சாமீன்பேரில் சம்பளம்பெற்ற ஒரு வேலைக்கார ராகவாவதிருக்கலாம். தங்கள் பணம் எவ்விதமிருந்தால் நலமென்ப தைத் தீர்மானிப்பது சங்கத்தார்கள் கடமை. பொக்கிஷதாரரின் கணக்குகளைச் சங்கத்தார் எவரேனும் குறித்தகாலத்திற் பார்க்க இயலும். இவரும், காரியத்தலைவரும், அவர்கள் ஆட்களும் பஞ்சா யத்தாருக் குட்பட்டவர்களாவார்கள். பஞ்சாயத்தார், பொதுக்கூட் டத்துக்கு உட்பட்டவர்களாவார்கள். இவர்களுடைய அதிகாரவரம்பு, கடமைகள், ஒருவருக்கொருவர் ஒழுகும்முறைகள் இவைகளைப் பற்றிய விரிவான விதிகளைப் பின்னர் எழுதுவாம்.

(6) இவ்விதசங்கம் அவசியமென்பதைப்பற்றிப் பின்வருமாறு கூறுவாம்.

கலப்பில்லாத பால் நெய் எவ்விதம் கிடைக்கச் செய்வதென்னும் விஷயம் அதி சீக்கிரம் நாம் கவனிக்கவேண்டியது அவசரமாகிறது; இவற்றின் விலைகள் நாளுக்குநாள் மிகுந்துவருகின்றபடியால். நமக் குத்தெரிய நெய்படி ரூபாய்ஒன்றுக்கு கிடைத்துவந்தது. இப்பொழுது அதன் விலை ரூ. மூன்றாய்விட்டது: பால்விலை படி ரூபா. 2 அணா விலிருந்து $5\frac{1}{2}$ அணாவுக்கு ஏறிவிட்டது. ஆனால் கடையில் கிடைக் கக் கூடிய பால், அதன் வெண்மையைத்தவிர மீதமெல்லாம் குழாய்த் தண்ணீரே. நெய் என்று பேர் சொல்லிக்கொண்டு கடலையெண் ணெய், தேங்காய் எண்ணெய், குசம்பா எண்ணெய், கொழுப்பு, மா, முதலியவற்றையே உட்கொள்ளுகிறோம். இவ்விதமாகக் காலவள வில் பால் நெய் நமக்குக் கிடைக்காமற்போய்விடவும் கூடும். அப் பொழுது நம்சந்ததியார்கள் தங்கள்முன்னோர்கள் உழக்குப்பால் சாப்பிட்டுவந்தார்களென்று பெருமைபாராட்டித் தாங்கள் குலப் பெருமையுடையவர்களாக நடிக்கவும் கூடும். 1950ம் வருடத்தில், மகாநவமி முதலிய விசேஷதினங்களில், சுவிஸ்தேசத்திலிருந்து சீசா வில் அடைத்துவரும் பட்டுக்குஞ்சங்களால் அலங்கரித்த ஒரு புட்டி யை ரூ. 3-11-க்கு வாங்கித் தம் பெருமை பிறர்க்குக்காட்டவும் கூடும். (இப்பொழுதே கிராமங்களிலும் கூட சுவிஸ் பாற்புட்டியும், வெண் ணெய் டப்பாவும் ஏராளமாய் வழங்குகின்றன.) ஆகையால், நாங்கள்

50 கோடி ரூபாய் முதலுள்ள ஒரு சங்கத்தை யுண்டுபண்ணி, ஏழை யும்பணக்காரரும் சேரும் வண்ணம் பங்கு ஒன்றுக்கு ரூ. 5 ஏற்படுத்த உத்தேசித்திருக்கிறோம். நாட்டுப்புறங்களில் குடிகளுக்கு பணம் கிடைப்பது அரிதானபடியால் அவர்கள் பங்கை தானியம், கால்நடை, எரு, வைக்கோல் முதலியவைகளினாலும் செலுத்துவதல்லாமல், சில நாட்களில் வேலைசெய்வதாலும் பிரதிசெய்யலாம். ஒவ்வொரு முக்கிய கிராமங்களிலும், அக்கம்பக்கத்திலுள்ள மூன்று நாலு கிரா மங்களின் சேர்க்கையுடன், ஒரு மாட்டுத்தொழுவை யேற்படுத்தி, அதில் பசு, எருது, எருமை, கன்றுடன் மொத்தம் 50 சேர்த்துவைக்க விரும்புகிறோம். எருதுகள் சங்கஅங்கத்தவர்களுக்கு உழவுவேலைக்குக் கூலிக்குக் கொடுக்கப்படும். பசுக்கள், பால் தயிர் நெய் கொடுக்கும். எரு முதலியவற்றையும் சரியானபடி பயன் படுத்துவோம். எவ்விதக் குறைவு முட்டுப்பாடுகளுக்கும் சரிசெய்தபின்னும் வரவு செலவைப் பார்க்கும்போது, முதல் வருடமுடிவிலேயே நாம்போட்ட செலவை எடுக்க முடியும். முதல் வருஷத்தில் இன்னலாபம் கிடைக்குமென்று சொல்ல முடியாது. ஆனால் நாளடைவில், நூற்றுக்கு 15 அல்லது அதிகமாகவே கிடைக்கும். இப்படி ஒவ்வொரு கிராமங்களில் ஏற் படும் கொட்டங்களும், தாலுகாவுக்கு முதன்மையான ஊரில் ஏற்படுத் தப்படும் ஊர்க்கொட்டத்துக்குச் சேர்க்கையாகும். இவ்வூர்க் கொட் டங்கள் எல்லாம் சேர்ந்து, ஜில்லாவுக்கு முதன்மையான நகரில் ஏற் படுத்தப்படும் நகரக் கொட்டத்துக்கு கிளைகளாகும். இந்நகரக் கொட் டங்களுக்கு மேலாக இராஜதானி நிர்வாகசபையும், இராஜதானிகளுக் கெல்லாம் பொதுவாய் இந்தியபசுபாலனசங்கமும் ஏற்படும். இச் சங்கத்தில் வேலையில் அமரும் சிப்பந்திகளுக்கு ரூ 2 முதல் ரூ1000 வரையும் சம்பளம் ஏற்படுத்தப்படும். இவ்வேற்பாட்டில் நம் நாட் டில் உள்ள யாவரும் சேருவார்களென்று நம்புகிறோம். இந்தியாவி லுள்ள பெரும்பாலாரும் புலால் உண்ணாதவர்கள். அவர்கள் தேகத் துக்கும் மூளைக்கும் பலத்தைக் கொடுக்கத்தகுந்த சிறந்த உணவு பால் தயிர் நெய்யே ஆகும். நம்முடைய அளவில்லாத அருள் பூண்ட அர சாங்கத்தாரால், இவ்வுணவுகளைக் கலப்பில்லாமல் விற்கவேண்டி எத் தனையோ சட்டதிட்டங்க ளேற்படுத்தப்பட்டிருந்தும், நம்மவர்களு டைய கட்டுறவில்லாமல் அச்சட்டங்கள் பயன்படாமற் போகின்றன.

முதல் முதலில் நமக்குக் கட்டாயமாய் வேண்டுவதென்னவென்றால் வேலையாட்களுக்குச் சம்பளம் கொடுக்க இயலும்வரை, ஊக்கமும் மெய்ம்மையுமுள்ள சிலகனவான்கள் சேர்ந்து இதனை ஆரம்பிப்பதே.

ஒரு ஜில்லா முழுமைக்கும் கொட்டங்கள் ஏற்படுத்துவதற்கு நேரிடும் செலவு, வரவு, மேற்பார்வை முதலியவைகளைப்பற்றி கீழ்க் குறித்திருக்கின்றோம். இது மிகவும் பெரிதானதாகத் தோன்றினும், முதலில் கிராமக்கொட்டங்களை ஏற்படுத்தி, பின்னர் மெதுவாக ஊர்க்கொட்டங்களையும் ஏற்படுத்துவோமானால் மற்றவெல்லாம் நாளடைவில் கைகூடிவரும்.

இதனை முடிக்குமுன் நாம் ஒன்று கேட்போம். சிறிது ஊன்றி உணரவேண்டும். உங்கள் உணவுக்குப்போதுமான பால் நெய் கிடைக்கின்றதா? கிடைப்பதும் உங்கள் உடம்புக்குக் கெடுதிசெய்யாமல் நன்மையைச் செய்வதாயிருக்கின்றதா? கிடைத்தாலும் சென்ற முப்பது வருஷமாக உள்ள விலைவாசியை முன்னிட்டு இந்த வுணவு உங்களுக்கு எளிதில் கிடைக்கின்றதா? இப்படி யில்லாமையால், உங்களுடைய உடம்புகளுக்கு ஊறு செய்துகொண்டு, பணத்தை அதிக விரயப்படுத்தியும், உங்கள் உணவின் சுவையைக் குறைத்துக்கொண்டிருக்கிறீர்களென்றே சொல்லுவேன்.

குறிப்பு :— இதுவிஷயமாய் இன்னும் தெரிந்துகொள்ள விரும்புவோர் அடியில் கையொப்பமிட்டவர்க்கு எழுதித் தெரிந்துகொள்ளலாம்.

17, Aminabad Park,<br>Lucknow,<br>25th April 1913. A. B. LAL, F. R. H. S.<br>*Provisional General Secretary.*

17, அமீனபாத் பார்க், ஏ. பி. லால், எப். ஆர். எச். எஸ்.<br>லக்னோ. தற்காலப் பொதுக்காரியதரிசி.

(குறிப்பு:—கணக்கு விவரங்கள் கிராமக்கொட்டம், ஊர்க்கொட்டம், நகர்க்கொட்டம் முதலியவைகளுக்கு மூலப்பிரதியில் கொடுக்கப்பட்டிருந்தாலும், முதலில் கிராமக் கொட்டங்களுக்குமட்டுமே

கொடுத்தல் போதுமானபடியால் அதுமட்டுமே பின்வருமாறுகாட்டப் பட்டிருக்கிறது.)

கிராமக்கோட்டம்.

(50-கால்நடைகள் அடங்கியது.)

I.

| | ரூ |
|---|---|
| **கோள்முதல்.** | |
| 15 கறவைப் பசுமாடுகள் 3-சேர் பால் கொடுப்பன ஒவ்வொன்று 30 ரூ வீதம் | 450 |
| 10 கறவை எருமை 5-சேர் பால் கொடுப்பன ஒவ்வொன்று 50 ரூ வீதம் | 500 |
| 12 உழவு எருதுகள் ஒவ்வொன்று ... 40 ரூ வீதம் | 480 |
| 13 பலனில்லாத கன்று மாடுகள் ... 15 ரூ வீதம் | 195 |
| ஆக ரூ | 1625 |
| பால் வருஷ முழுதும் கிடைப்பதற்கு மாற்றுமாட்டில் விலை குறையக்கூடியதில் ... ... ... ரூ | 1000 |
| கொட்டம், கால்நடை ஒன்றுக்கு ... ரூ 5-வீதம் | 250 |
| எதிர்பாராத செலவுகள் ... ... ... | 125 |
| ஆக ரூ | 3000 |

II.

| | |
|---|---|
| **தீவனச்செலவு.** | |
| 50 கால்நடைகளுக்கு மாதம் 6 ரூ வீதம் எட்டு மாதத்திற்கு | 2400 |
| ஷை கால்நடைகளுக்கு மாதம் 2 ரூ வீதம் பீ 4-க்கு ரூ | 400 |
| ஆக ரூ | 2800 |

## III.

### ஆட் கூலி.

| | | |
|---|---|---|
| 1 | மானேஜர் மாதம் ஒன்றுக்கு | 15 |
| 1 | குமாஸ்தா ... ... ... | 10 |
| 1 | சேவகன் ... ... ... | 6 |
| 6 | இடையர்கள் 4 ரூ. வீதம் | 24 |
| 2 | மாடுமேய்க்கும் சிறுவர்கள் 2. ... | 4 |
| 4 | வேலைப்பெண்கள் ரூ. 3—8. ... | 14 |
| 1 | காவல்காரன் ... ... ... | 4 |
| 1 | தபால்காரன் ... ... ... | 5—8 |
| | மற்றுமுன்னிடாத செலவு ... | 17—8 |
| | | 100. |
| | வருஷம் ஒன்றுக்கு ரூ. | 1200. |

## IV.

### வரும்படி

| | | |
|---|---|---|
| 15 | கறவைப்பசு தினம் 3-சேர் வீதம் | 45 |
| 10 | எருமை 5 ,, ,, | 50 |
| | ஆக சேர் | 95 |

| | |
|---|---|
| 45 சேர் பசும்பால் ரு-க்கு 12 சேராக ரூ | 3-12—0 |
| 50 சேர் எருமைப்பால் நெய்செய்வதால் கிடைக்கும் | |
| நெய் 3-சேர் 2-சிட்டைக்கு சேர் 1-க்கு 1-ரூ. வீதம் | 3—2—0 |
| தயிர் மோர் 50 சேர் சேர் ½ அரை அணு வீதம் | 1—9—0 |
| எரு கால்நடை 1-க்கு 3-பை வீதம் | 0-12—6 |
| 6 ஏர் உழவுமாடுகள்கூலி ஏர் 1க்கு 8-அணு வீதம் | 3—0—0 |
| நாளொன்றுக்கு ரூ | 12—3—6 |
| வரு 1-க்கு ரூ | 4398-12—0 |
| செலவு போக லாபம் ... ... ரூ | 398—12—0 |

இலாபம் ரூ 398—12—0 யும் கொள்முதல் ரூ 3000-க்கும் பங்கிட நூற்றுக்குப் பதினைன்றுவீதம் வட்டி கட்டுகிறது. (இதில் கன்றுகளி னபிவிருத்தி மதிப்புத்தொகை சேர்க்கப்படவில்லை.)

## V.

### கிராம சபை

கிராமம் ஒன்றுக்கு இரண்டு அங்கத்தினர்.

நிர்வாக சபையார் ஐவர்.

இரண்டு சபைக்கும் மானேஜர் காரியதரிசி.

---

ஸ்ரீ:

# பசுபரிபாலனசங்கமும்

## அதன் பயனும்.

இதற்குமுன் நம் செந்தமிழ்ப்பத்திரிகையின் தொகுதி—கூ பகுதி—சல் (கஅச ஆம் பக்கமுதல் கககூ ஆம் பக்கம் வரை) பசுபரிபாலனம் என ஒருநீண்ட வியாசம்எழுதி வெளியிடப்பெற்றிருக்கிறது.

அதில் பசுபரிபாலனம் இந்துக்களுக்கே சொந்தமெனக் கொள்ளாது இந்துதேசவாசிகளாகிய எல்லோருக்கும் பொதுவானகடமையெனக் கொள்ளவேண்டு மென்பதும், உழுதொழிலேயே முக்கிய ஜீவனமாகக்கொண்ட இத்தேசத்துச் சனவாழ்க்கை நிலைபெற்றிருப்பதற்குப் பசுபரிபாலனமே முக்கிய காரணமென்பதும், அதனை யிக்காலத்தவர் கைந்நெகிழ விட்டுவருதலால் உணவுப்பொருளின்வறுமை யதிகரித்து வருகிறதென்பதும் விளங்கக்காட்டிச் சனவாழ்க்கையின் நன்மையைக்கருது மறிவுடையோர்களாற் பசுபரிபாலனத்துக்குரிய முறைகளைப் பலவாற்றானுங் கண்டு கற்பித்துப் பாதுகாக்கவேண்டுமென்று வேண்டப்பட்டிருக்கிறது.

அதனை இந்நாட்டுத் தமிழ்ப்பத்திரிகைகள் பலவும்ஆதரித்துப் படிபுரையா யெழுதி வெளியிட்டிருக்கின்றன.

இக்கருத்துக் கிணங்கியதாகவே இப்பொழுது லக்னோவைச் சார்ந்த அமீன்பாத்பார்க்கில் தற்காலப் பொதுக்காரியதரிசியாயிருந்து பொது நன்மையைநாடிப் பாடுபட்டுவரும் கெண்ணியமுள்ள ஏ. பி. லால் எப். ஆர். எச். எஸ். அவர்களால் ஆங்கிலத்தில் எழுதி வெளியிடப்பட்ட இந்தியபசுபரிபாலனசங்கஸ்தாபனப் பிரேரணபத்திரம் வந்தது.

அதனை ஆங்கிலங்கல்லாத தமிழர்களு மறிந்துகொள்ளும்படி மகா-ா-ா-ஸ்ரீ ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை, பி. ஏ., பி. எல்., அவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு இதன்முன் சேர்க்கப்பெற்றிருக்கிறது.

2

அதைப் படித்துணரும் இந்துதேசவாசிகளாகிய எல்லோருக்குமே இந்நாட்டில் ஊர்தோறும் பசுபரிபாலனசங்கம் ஸ்தாபிக்கப்படவேண்டுமென்பதும், அது லாபகரமானதென்பதும், நன்குவிளங்கும்.

பசுமந்தை வைப்பதனுல் லாபம் கிடைக்குமானுல் இதுவரை கிராமவாசிகளும் நகரவாசிகளும் தாமே சொந்தமந்தை ஏன் வைத்துக்கொள்ளவில்லை யென்று கேட்கலாம்.

பசுக்களுக்கு மேய்ச்சல்வசதி யில்லாத கிராமங்களிலும் நகரங்களிலும் அவற்றிற்கு இரைகிடைப்பது அருமையாயிருப்பதனுல் அங்குப் பசுத்தொழுக்க ளமைக்கப்படாமலிருப்பதல்லது மேய்ச்சல் வசதியுள்ள மலையடிவாரத்துள்ள ஊர்களிலும் பசுமந்தைகளில்லாதிருக்கவில்லை.

ஆகையால் மேய்ச்சல்வசதியுள்ள இடங்களில் அங்குள்ளோர் இயல்பாகவே சொந்தமந்தைகளைவைத்து அதன் பிரயோஜனத்தைச் சுலபமாக அடைந்துவருகிருர்கள்.

அம்மந்தைகள் மலையடிவாரங்களிலுள்ள ஊர்களிலும் காடடுத்துள்ள கிராமங்களிலும் ஒதுக்காகவும் சுருக்கமாகவு மிருப்பதால் அதன் சமீபத்திலில்லாத கிராம நகரவாசிகளாகிய ஜனத்தொகைகளுக்கு அவை பயனளிப்பதற்கு எட்டாதனவாயும் போதாதனவாயுமிருக்கின்றன. மற்றக் கிராமவாசிகளும் நகரவாசிகளும் அவரவரூர்களில் ஸ்தாபிக்கப்படும் பசுக்கொட்டங்களாலேயே பயனடையவேண்டியவர்களாயிருக்கிருர்கள். ஆகையால் கிராமச்சங்கங்களும் நகரச்சங்கங்களும் ஸ்தாபிக்கவேண்டிய தவசியமாயிருக்கிறது.

ஆனுல் பசுக்களைக் குளிர்காலத்தில் மேய்த்து வளர்ப்பதற்குப் பசும்புற்றரிசுநிலங்களையும், கோடைக்காலத்தில் இரைகொடுத்து வளர்ப்பதற்கு இரைப்படப்புக்களையும் உண்டுபண்ணிக்கொண்டாலன்றி இவையில்லாத கிராம நகரங்களில் பசுத்தொழுவைத்து நடத்துவது கஷ்டசாத்தியமாகும்.

ஆதலால் ஒவ்வொரு கிராமங்களிலுமுள்ள தரிசுநிலங்களில் மழைபெய்தநீர் உருண்டோடிப் போகாமல் வேண்டுமளவு தங்கும்படி அடுத்தடுத்து வரம்பெடுத்துத் தடுத்துச் சிறைக்காடுவளர்த்துப் பசும்

புற்றறைகளை யுண்டாக்கிக்கொள்ளவேண்டும். பயிரிடும் புன்செய் நிலங்களிற் சிலபாகம் இறுங்குநாற்றுப் பயிரிட்டு அறுத்துச்சேர்த்து இரைப்படப்பை யுண்டாக்கிக்கொள்ளவேண்டும். இப்படி இவ்விரண்டும் செய்துகொள்ளப்படுமானல் எல்லா நகரங்களிலும் கிராமங்களிலும் இச்சங்கங்களை ஸ்தாபித்து நடத்துவது எளிதாகும்.

ஆயினும் இதற்கு அரசியலுடையாராதரவும் பெற்ருல் அது மிகுந்த சாதகமாயிருக்கும். இச்சங்கம் வர்த்தகமுறைபற்றி நடைபெறுவதாயிருப்பதால் இதற்கு அரசியலுடையார் ஆதரவு எவ்வாறு செய்யக்கூடுமென்று சந்தேகிக்கக்கூடாது. வர்த்தகமுறைபற்றி நடைபெறும் ஐக்கிய நாணயச்சங்கங்கள் அரசியலுடையாரா லாதரிக்கப்பெற்று அவர்களுடைய மேற்பார்வைக்குள் நடைபெற்றுவரவில்லையா? அப்படியே யிதுவும் நடைபெறக்கூடுமென்பதி லென்னதடை.

ஐக்கிய நாணயச்சங்கங்களில் நடைபெறும் லிகிதங்களுக்கு முத்திரைக்கடிதம் பத்திரப்பதிவு முதலியவற்றை வரியிலியாக்கி யுதவி செய்திருப்பதுபோலப் பசுக்களின் மேய்ச்சற்றறையாகிய தரிசுநிலங்களையும், தானியவிளைவுகருதாமற் பசுக்களினிரைக்குபயோகமாகவே இறுங்குநாற்றுப் பயிரிடும் புன்செய்நிலங்களையும் இறையிலியாக்கி யுதவிபுரியவும் கூடும். பசுக்களின்பொருட்டுச் செய்யும் இவ்வுதவியா லுண்டாகும் பொருட்குறைவை ஜீவகாருண்யமின்றிவிற்கப்படும் பசுக்களுக்குத் தக்க வரிவிதித்து அப்பசுக்களிலிருந்தே ஈடுபண்ணிக் கொள்ளவு மிடமிருக்கிறது. ஆதலால் அரசியலுடையாருதவியையும், மேற்பார்வையையும் இச்சங்கங்கள் அடைதற்குரியனவாயிருக்கின்றன.

இனி இச்சங்கத்தாலாகும் பிரயோஜனங்களும் பின்வருவனவற்ருல் நன்கு விளங்கும்.

இச்சங்கங்கள் ஸ்தாபிக்கப்பட்டு நடைபெறுமாயின் விலைகொடுத்து வாங்கி யுண்பவர்களுக்கெல்லாம் சுத்தமான பால் தயிர் நெய் இவை சுலபமாகக் கிடைக்கப்பெறுவதுடன் அவற்றின் விலையும் குறைவடையக் கூடுமென்பது முதலாவது பிரயோஜனமாகும்.

தனதில் ஏர்வைத் துழுதுபயிர்செய்பவியலாத சொற்பநிலமுடைய எளிய குடிகளும் இச்சங்கத்திற் பங்கு சேர்ந்துகொண்டால்

சங்கத்திலிருந்து கொடுக்கும் வாடகையேர்களைப் பெற்றுத் தங்கள் நிலங்களை உரிய காலத்தில் உழுதுபயிர்செய்து ஜீவிக்கவும் உபகார மாயிருக்கும்.

பால் தயிர் நெய் விற்பதிலும் எருதுகளை வாடகைக்கு விடுவதி லும் எருமுதலிய விற்பதிலுமிருந்தே வரும் வரும்படிகள் சங்கத் தின் சகல செலவும்போக ஷை 1-க்கு ரூ 100-க்கு 10-வட்டிக்கு மேலாகவே பங்காளிகளுக்கு லாபம் கிடைக்கத்தக்கதாயிருப்பதால் நல்ல லாபகர மாகவுமிருக்கிறது.

மூன்று வயதுள்ள ஒரு பெண்பசுவை வாங்கி ஒருவன் வளர்த்து வந்தால் அது பத்துவருஷத்திற் சற்றேறத்தாழப் பத்துப் பசுக்களாக விருத்தியடைகிறபடியால், சிறிதும் பெரிதுமாகிய கன்று காளைகளை யும் பசுக்களையும் விலை நிரவல் செய்துபார்த்தாலும் பத்துவருஷத்தில் மூலதனம் ஒன்றுக்கு ஐந்துமடங்குவீதம் தன்னடையே விருத்தி யடையக்கூடியதாயுமிருக்கிறது.

இப்படியாக மூலதனம் தன்னடையே விருத்தியடையக்கூடிய தாயிருப்பதனால் பிரேரணபத்திரத்திற் சொல்லியபடி உபயோக மில் லாதிருக்கும் பசுக்களை ஜீவகாருண்யம் கருதி விலைக்குக் கொடுக்காம லிருந்தாலும் மூலதனத்துக்குக் குறைவுண்டாகாதென்பதும், அதனாற் சங்கத்துக்கு நஷ்டமுண்டாகமாட்டாதென்பதும் யாவரும் தெரிந்து கொள்ளத் தக்கது.

உபயோகமில்லாத பசுக்களை விற்றுவிடாமல் ஜீவகாருண்யம் பற்றி வைத்துக்கொள்வதனும் சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கும் சேராதவர்களுக்கும் பின்னீடு பலவித நன்மைகளுண்டாகக் கூடு மென்பது பின்வருவதுகொண்டு கண்டுகொள்ளலாம்.

பசுக்கள் பத்துவருஷத்திற் சற்றேறத்தாழ ஒன்று பத்தாக விருத்தியடையக்கூடிய இயல்போடு கூடியிருப்பதனால் அவ்வாறு காலடைவில் விருத்தியடையும் பசுக்களையெல்லாம் சங்கத்தாராற் பாதுகாப்பது கஷ்டசாத்தியமாகும். அப்பொழுது வேலைக்குபயோக மாகும் எருதுகளிற் சிலவற்றை ஜீவகாருண்ய நிபந்தனத்துக்குட்

பட்ட சங்கத்தின் அங்கத்தவர்களுக்குக் குறைந்தவிலைக்காவது, அல்லது இரைபோட்டுப் பாதுகாத்துக்கொள்ளும்படி இனமாகவாவது சங்கத்தாரால் கொடுத்துவிடக்கூடும். அப்பொழுதுதான் பசுபரிபாலனத்தில் வைக்கும் ஜீவகாருண்ய நிபந்தனத்தின் பயனாக எருத்தின்விலையைக் குறைத்துக்கொள்ளவும், இல்லாமற்செய்யவும் இயலுமென்பது வெளிப்படையாம்.

எருத்தின் விலையைக் குறைத்துக்கொண்டால் எளியகுடிகளும் ஏர்வைத்து வியவசாயம் செய்வார்கள். ஏர்களும் எளிதிற்கிடைக்கும். ஏர்வாடகையுமிறங்கும். எளிதில் ஏர்கிடைப்பதனாலும், ஏர்வாடகை இறங்குவதனாலும்,இக்காலத்து ஓரேருழவுச்செலவுக்குள் ஆறேருழவு முடியும். முடியவே "தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும், வேண்டாது சாலப் படும்" என்றபடி ஒருபிடி எருவும் வேண்டாது உழவின்மிகுதியால் விளைவுமிகும். விளைவுமிகவே தானிய விலை குறையும். தானியவிலை குறைய உணவுப்பொருளின் வறுமை நீங்கும். உணவுப்பொருளின் வறுமைநீக்கமுண்டாகுமானால் அது சங்கத்தைச் சார்ந்தவர்கள் சாராதவர்களாகிய இந்துதேசவாசிகளெல்லாராலும் விரும்பத்தக்கதே.

ஆதலால் அதனையுண்டாக்கி இந்துதேசவாசிகளையெல்லாம் வாழ்விக்கவல்ல பசுபரிபாலன ஜீவகாருண்யம் இந்துக்களுக்கே சொந்தமானதெனக் கொள்ளும் தப்பபிப்பிராயத்தை யொழித்து இந்துதேசவாசிகளாகிய எல்லோருக்குமே பொதுவான கடமையெனக்கொண்டு எல்லோருமொத்திணங்கி இந்துதேசமெங்கும் இச்சங்கத்தைநாட்டி இம்மைமறுமைப் பயனிரண்டையு மெளிதிலடைந்து இன்புற்று வாழ்வாராக.

திரு. நாராயணையங்கார்,

பத்திராதிபர்.

---

# அந்தகக்கவி வீரராகவ முதலியார் காலம்



(கருரு-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

யாழ்ப்பாணவைபவத்திலே "வீரராகவன்" என்னுமோர் அந்தகக்கவி சோழதேசத்திலிருந்து இலங்கைக்கு வந்து "நரசிங்கன்" என்றும் "பாலசிங்க" னென்றும் "சயதுங்கவீரவராசசிங்க" னென்றும் வழங்கப்பட்ட வோரரசன்பேரிற் பிரபந்தமொன்றியற்றி அவ்வரசனிருந்த செங்கடகநகரிக்குப் போய் அவர் முன் யாழ்வாசித்துப்பாடினபோது அவர் அகமகிழ்ந்து இலங்கையின் வடதிசையிலுள்ள "மணற்றிட"லென்னும் நாட்டைக் கவிராயருக்குபகரித்தன ரென்றும் அவர் அந்நாட்டுக்கு "யாழ்ப்பாண" மெனப் பெயரிட்டுத் தமிழகத்திலிருந்து தமிழ்க்குடிகளை அழைப்பித்துக் குடியேற்றி அவர்கள்மேலும் அங்கிருந்த சிங்களவர்மேலும் பட்சபாதமின்றிச் செங்கோல் செலுத்திச் சந்தானமின்றி வயோதிபராய் இறந்துபோக யாழ்ப்பாணநாடு சிலகாலம் ஓரரசுமின்றிப் பெருங் குழப்பமுற்றிருக்குங் காலத்தில் "மழவ"னென்னுமொரு வேளாளப் பிரபு "சிங்கையாரிய"* னென்னும் சோழகுலத்திராசகுமார னொருவனை மதுரையிலிருந்து கொண்டுவந்து யாழ்ப்பாணத்துக் கரசனுக்கின னென்றும், அக்காலத்திலே "சிங்கையாரிய"னுடைய மந்திரி "புவனேகவாகு" என்பான் அங்குள்ள கந்தசாமிகோயிற்றிருப்பணி கி. பி. 10-ம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் நிறைவேற்றின னென்றும் சொல்லியிருக்கின்றது. தற்காலம் தமிழிலுள்ள யாழ்ப்பாணவைபவப் பிரதிகளிலே † இவ் வந்தகக்கவியாரை "அந்தகக் கவிவீரராகவமுதலியார்" என்று சொல்லியிருப்பது கவனிக்கத் தக்கது.

---

* Vide English Translation of "Yalpana Vaipava Malai" by the Late C. M. Bitto Esq., pp: 13—14. இவ்வரசன் கூழங்கையனாயிருந்தமைபற்றி இவனுக்குக் கூழங்கையாரியன், விசயகூழங்கைச்சக்கரவர்த்தி என்னும் மறுநாமங்களு மிருந்தன வென்று வைபவம் கூறுகின்றது.

† முதலியாரவர்கள் பதிப்பித்த "செய்யூர்முருகன்பிள்ளைத்தமிழ்" ஆசிரியர் வரலாறு 18-ம் பக்கம் பார்க்க.

இஃதிப்படியாக "யாழ்ப்பாணச்சரித்திரம்"* என்னும் வேறோர் நூலின்படி இலங்கையரசன் "விபீஷணன்"கைக்கீழிருந்த வோர் யாழ்ப்பாடியார் அயோத்திக்குப்போய் இலங்கையின் வடபாகத்தில் "மணற்றிட"லென்று வழங்கப்பட்ட தேசத்திலே தான் குடியேற்றின ஆயிரங்குடும்பங்களை ஆளும்படி ஓர் இராசகுமாரன் வேண்டுமென்றிரக்க ஸ்ரீராமனுக்கு மைத்துனனான குலகேது என்பவன் மகனொருவன் அவ்வியாழ்ப்பாடியுடன் புறப்பட்டு "மணற்றிட"லுக்கு வந்து அதன் பெயரை "யாழ்ப்பாணம்" என்று மாற்றி "கூழங்கையாரியச் சக்கரவர்த்தி" யென்னும் பெயருடன் அரசுநடத்தினு னென்றும் இச்சம்பவம் நடந்த காலம் கலியுகாப்தம் 3000 வரையில் என்றும் அறியக்கிடக்கின்றது. மேலும், மேற்குறித்த "ஆரியச்சக்கரவர்த்தி"க்கு மாமன்முறையான "திசை உக்கிரசோழ"னுடைய பேர்த்தி "மாருதப்பிரவீகவல்லி" யென்பாளை "உக்கிரமசேனசிங்க" னென்னும் ஓர் இராசகுமாரன் மணந்து அவளிடத்தி லொரு குமாரனைப் பெற்றானென்றும் இவன் பெரியவனானபோது நெடுங்காலமாய் இலங்கையை ஆண்டுகொண்டிருந்த "விபீஷணன்" இவனை அழைப்பித்து "சயதுங்க வீரவராசசிங்க" னென்ற பட்டப்பெயரையுங் கொடுத்துத் தனக்குப்பின் ஈழத்தரசனாக நியமித்தனன் என்றும் இந்நூலிலே சொல்லப்பட்டுள்ளது.

"கைலாயமாலை"† என்னும்நூலில் இலங்கையரசனொருவன் சோழவம்சத்தவளான ஒரு மாதை மணம்புரிந்து "நரசிங்கராசன்" என்னுமொரு குமாரனைப் பெற்றானென்றும் இவன் தன் தகப்பனுக்குப் பின் சிங்காசனமேறி அரசாண்டுவருங்காலத்தில் யாழ்ப்பாணனொருவன் தன் கந்தருவத்தினால் இவ்வரசனை மகிழ்வித்துநின்பேரில் ஒரு தேசத்தைப் பரிசாகப்பெற்று அதற்கு யாழ்ப்பாணமென்று பெயரிட்டுத் தானே அந் நாட்டுக்கரசனாய் நெடுங்காலமாண்டு சந்ததியின்றி

---

* Vide "Appendix to the Yalpana Vaipava Malai" pp. 44, 45.

† Vide "Appendix to the Yalpana Vaipava Malai" pp. 30, 31.

இந்நூல் சோழதேசத்துச் செந்தியப்பன் மகன் "முத்துராச" னென்னும் புலவரால் செய்யப்பட்டது. Vide "Appendix to the Yalpana Vaipava Malai" pp. 44.

இறக்க அரசனில்லாமல் தேசத்திற் சிலகாலம் பெருங் கலாதிகள் நிகழ்ந்துவருங்காலை "மழவ"னென்னு மொரு வேளாளப்பிரபு "செழியசேகரன்" மகன் "செகராசசிங்க ஆரியன்" என்பானை மதுரையிலிருந்து வரவழைத்துக் கலியுகாப்தம் 3000-ல்* யாழ்ப்பாணத்துக்கரசனுக்கினன் என்று கூறப்பட்டுள்ளது.

"யாழ்ப்பாணவைபவமாலை" என்னும் நூல் கி. பி. 1736-ல் இலங்கைத்தீவில் உலாந்தாக்காரர் கைக்குள்ளகப்பட்ட பாகங்களின் மேல் தேசாதிபதியாயிருந்த "வான்" இம்கோபின் காலத்தவரான† ஜான்மக்கறு என்பவருடைய கேள்விப்படி "மயில்வாகண"மென்னும் தமிழறிஞரால் "கைலாயமாலை" முதலிய பழையநூல்களை ஆதாரமாகக் கொண்டியற்றப்பட்டதென்றும் "செகராசசேகர" அரசன் காலத்தில் "பரராசசேகரன் உலா" "இராசமுறை" என்னும் நூல்களைச் செய்த "வையா" வென்னும் புலவனூர் இம் மயில்வாகணருடைய முற்பிதாக்கள் வழியினரென்றும் அதன் முகவுரையிலே கூறியுள்ளது. மேற்சொல்லிய "செகராசசேகர" அரசர் "பரராசசேகர" அரசருடைய உடன்பிறந்தாரே என்பதற்கு அவ்வையாவென்பவர் "பரராசசேகரன் உலா" என்னும் நூலுக்காசிரியரென்ற உண்மையே போதிய சான்றாகும். "செகராசசேகரன்" தன் காலத்திருந்த தமிழ்வித்துவான்களி லொருவரென் றறியப்பட்டவர். அவர் யாழ்பாணத்தில் "தமிழ்ச்சங்க"மொன்றை உண்டாக்கினரென்றும், அவருடைய உதவியினால் பல புதுநூல்கள் இயற்றப்பட்டு வெளியிடப்பட்டனவென்றும்,"செகராசசேகரம்"என்னுமோர் அரிய சோதிடநூல் அவராலே செய்யப்பட்டதென்றும் அவர் காலத்திலேயே ஆரியத்திலிருந்து தமிழுக்கு "இரகுவம்சம்" "பசகேசரி" என்பவராற் செய்யுள்ரூபமாகத் திருப்பப்பட்டதென்றும் வைபவத்திலிருந்து அறியக்கிடக்கின்றது.‡ ஆகையால் "வையா" வென்பவர் அந்தகக் கவிவீரராகவர் காலத்தவராதல் வேண்டும். அவர்

---

* Vide idem p. 86. See also "Tamil Phutarch" by Sinon Casie Chetty pp. 118—9.

† Van Imhogg.

‡ Vide "Yalpana Vaipava Malai p. 26.

பாடிய "பராசசேகரன் உலா" "இராசமுறை" பென்பன இக்காலத்தில் எவ்விடத்தும் இல்லாமையால் இறந்தொழிந்தன போலும்.

"யாழ்ப்பாணச் சரித்திர" மென்னும் நூலாசிரியர் யாரென்று தெரியவில்லை. யாழ்ப்பாடியின்பெய ரின்னதென்றும், யாழ்ப்பாணத்தைப் பரிசாகக்கொடுத்த அரசனுடையபெய ரின்னதென்றும் இந்நூலிற் சொல்லப்படவில்லை. "வைபவத்தோடு இது முற்றும் முரணி மாறுபட்டிருப்பதால்" "வைபவ"முடையார் இந்நூலைக் கிஞ்சித்தேனும் கொண்டாடினரல்லர் என்பது தெளிவாம்.

இனி, "கைலாயமாலை"யிலும் இவ்வியாழ்ப்பாடியின் பெயரின்னதென்றும் அவர் அந்தகராயிருந்தமையும் கூறப்பட்டில. "வைபவ"த்திற் சோழதேசத்திலிருந்துவந்த அந்தகக்கவிவீரராகவரென்றும் "யாழ்ப்பாணச்சரித்திரத்தில்" யாழ்ப்பாடியென்றும் "கைலயமாலையில்" யாழ்ப்பாடிக்கவியாரென்றும் இவர் குறிக்கப்பட்டுள்ளார். யாழ்ப்பாணத்துச் "செந்தமிழ்வசனசிங்கம்" முத்துத்தம்பிப்பிள்ளையாரவர்களும் தமது பாலபாடமொன்றில் * யாழ்ப்பாடியார் காஞ்சிபுரத்தவரென்றும் தமது இலங்கைச்சரித்திரத்தில் † அவர் சோழதேசத்திலிருந்து வந்தவரென்றும் கூறியிருக்கின்றனர். "வைபவமாலை"யிற் சொல்லப்பட்ட அந்தகக்கவிவீரராகவர் "பராசசிங்கன்"காலத்தில் இருந்த அந்தகக்கவிவீரராகவமுதலியார்தானே? பெயருமொன்று. இருவரும் கண்ணிலிகள். அவருமொரு கவியார். இவருமொரு கவியார். இருவருங் காஞ்சிபுரத்தோடுதொடர்புடையர். இருவரும் யாழ்ப்பாணர். இருவரும் சோழமண்டலத்திலிருந்து ஈழத்துக்கு வந்தவரெனப்படுவர். அவரும் ஈழத்தரசன் "சயதுங்க வீரபராசசிங்கனை"ப் பாடிப் பெறுதற்கரிய பரிசுகள்பல பெற்றவர். இவரும் ஈழத்தரசன் "சயதுங்கவீரவராசசிங்கனை"ப் பாடி அரும் பெரும்பரிசுகள் பெற்றவர். இப்படிப் பலபாற்பட்ட ஒற்றுமையையுடைய சம்பந்தங்களை உடையோரான இருவர் வெவ்வேறான காலங்களில் ஈழத்துக்கு வந்தனரென்று கொள்வது சிறிதும் பொருந்தாதன்றே. குப்புசாமிமுதலியார் வைபவத்திற் சொல்லப்பட்ட, அந்தகக்கவி

---

* இலகுபோத இரண்டாம்பாலபாடம் 32, 33-ம் பக்கங்கள் பார்க்க.

† இலங்கைச்சரித்திரசூசனம் 34-ம் பக்கம் பார்க்க.

விரராகவமுதலியாரும்" "சேயூர்முருகன்பிள்ளைத்தமிழ்" ஆசிரியரான அந்தகக்கவிவிரராகவமுதலியாரும் வெவ்வேறுகாலத்திலிருந்த இருவராயிராமல் ஒருவரேயென்று கொண்டு அவர் கி. பி. 10-ம் நூற்றாண்டி லிருந்தவரென்று "வைபவம்"சொல்வதைப் பிழையென மறுத்துப்போந்தனர். அஃதிப்படியாயின் வைபவமுடையார், வீரராகவர் "பரராசசிங்க"னுக்கு அநேக தலைமுறைகளுக்கு முன்னிருந்தவரெனச் சொல்லிப்போந்தகாரணமென்ன? முன் காட்டியபடி வைபவமுடையார் பரராசசிங்கன் காலத்துக்கு ஏறத்தாழ இருநூறு வருடங்களுக்குப் பின்னிருந்தவராதலால் அந்தகக்கவிவீரராகவமுதலியார் யாழ்ப்பாணத்துக்கு வந்து அரசர்மேற் கவிபாடிப் புகழ்பெற்ற செய்தி அவர்காலத்திற் பரம்பரைப்பழங்கதையாய்ப் பேசப்பட்டிருக்குமென்பதற் கையமின்று. ஆயின், அவர் தம்வைபவத்திற்கு ஆதாரமாகக்கொண்ட நூல்களிலொன்றாகிய "கைலாயமாலை"யில் நரசிங்கராசனிடமிருந்து யாழ்ப்பாடிக்கவியொருவர் பின்பு யாழ்ப்பாணமென்றுவழங்கப்பட்ட வேளூரைப் பரிசாகப்பெற்றனரென்று சொல்லியிருக்கின்றமை கவனிக்கப்படத்தக்கது. இந்நூலில் செகராசசிங்க ஆரியன் நல்லூரென்னும் தன் ராஜதானியையும் அந்நகர்க்குள்ளிருந்த கைலாயநாதர்கோயில் முதலிய ஆலயங்களையுங் கட்டினனென்றும் அவ்வரசன் காலத்திலே நடந்தேறிய வேறுஞ் சில சம்பவங்கள் ஆசிரியர்காலத்தையடுத்து நடந்தனபோலவும் சொல்லியிருப்பதினால் இந்நூல் இச்"செகராசசேகரசிங்கன்" காலத்திலேயே இயற்றப்பட்டதென்பது ஸ்ரீ திற்றேப்பிள்ளையவர்களது துணிபாகும். * கைலாயமாலை கைலாயநாதர்கோவிலின் பேரிற் பாடப்பட்ட ஒரு நூலாதலாலும் போர்த்துக்கீசர் பதினேழாம்நூற்றாண்டின் நடுப்பகுதிவரையில் அக்கோவிலை அழித்துப்போட்டதை வைபவத்திலிருந்து ஊகிக்கக்கூடியதாயிருத்தலாலும் † இம்மாலை 17-ம் நூற்

---

* Vide "Appendix to the Yalpana Vaipava Malai" pp. 44-46.

† Vide "Yalpana Vaipava Malai" p. 47.

பரராசசேகரன் மகன் "பரநிருபசிங்கன்" கி. பி. 1626-ல் இறந்துபோக அவன் மகன் "பரராச"சிங்கனும் பறங்கிகளுடைய தயவினாலே சுகவாழ்வை அநுபவித்துக் காலஞ்சென்றுபோகப் பறங்கிகள் தாங்கள் முன் அழிக்காது விட்ட கோயில்களெல்லாவற்றையும் அழிக்கத்தொடங்கினார்களென்று "வைபவம்" சொல்லுகின்றது.

ருண்டுக்குமுந்தியே உண்டாக்கப்பட்டதென்பதற்குச் சிறிதையமு மின்று. வைபவ ஆசிரியர் தந்நூலுக்கு அடியாகக்கொண்ட பழைய நூல்களில் இம்மாலேயுமொன்றென்று முன்னர்ச் சொல்லப்பட்டது. வைபவாசிரியர் யாழ்ப்பாடியாருக்கு "மணற்றிட" லேப் பரிசளித்த "சயதுங்கவரராசசிங்க" அரசருக்கு "பாலசிங்கன், நரசிங்க"னென்ற பெயர்களும் இருந்தனவென்று சொல்லியிருப்பது * விசேஷகவனிப் புக்குரியது.

மேற் சொல்லப்பட்ட உண்மைகளேயெல்லாம் ஒருங்கு திரட்டி நோக்குங்கால் "நரசிங்க"னென்னும் இலங்கை அரசனொருவன் தமிழக்குலத்தவனுகிய வோர் யாழ்ப்பாடிக்கவி தன்கந்தருவத்திற மையினுற் றன்னே மகிழ்வித்ததின்பேரில் இவனுக்குத் தன் நாட்டி னொரு பாகத்தைப் பரிசளித்தானெனவும் அக்காரணம்பற்றி அந்நாடு பிற்காலத்திலே "யாழ்ப்பாண"மென வழங்கப்பட்டதெனவும் ஒரு பழங்கதை இக் கைலாயமாலேயுடையார்காலத்திலே இருந்ததாக நினேக்க இடமுண்டாம். வைபவ ஆசிரியர் தன்காலத்தில் ஊரெங் கும் கன்னபரம்பரையாய்ப் பேசப்பட்டுவந்த அந்தகக்கவி வீரராகவ முதலியார்செய்திகள் முந்தினயாழ்ப்பாடியாரோடு சம்பந்தப்பட் டனவென்றுநினேத்து இரண்டுகதைகளேயும் ஒன்றுக்கிக் கலந்து விட்டனர். சிலர் "வீரபரராசசிங்க"னென்றும்† சிலர் "வீரவரராச சிங்க"னென்றும் சொன்ன ஒரு அரசன்காலத்திலே இருகண்ணுந் தெரியாதவரும் வீரராகவரென்னும் நாமமுடையவருமான ஒரு யாழ்ப் பாடிக்கவியார் சோழதேசத்திலிருந்து யாழ்ப்பாணம் வந்து அரசன் முன்பாடி அருமையான பரிசுகளேப் பெற்றுரென்றசெய்தி ஊர்க் கதையாயிருக்கலாம். இக்கதையிலிருந்தே வைபவமுடையார் நரசிங்க னுக்கு "வரராசசிங்க" னென்ற பெயரும் இருந்திருக்கவேண்டு மென்று நினேத்து அப்படியே தன் நூலில் எழுதிவிட்டார். கைலாய மாலேயிலுள்ளது இக்கதையின் ஆதிரூபமென்றும், வைபவத்தி

---

* Vide "Yalpana Vaipave Malai" pp. 12, 13.

† "பரராசசிங்க" னென்ற பெயரே "வரராசசிங்க"னென்று திரிவு பட்டதுபோலும். "ப"வ்வும் "வ"வ்வும், பலராமன், வலராமன், பழை, வழை என்ற சொற்களிற் போல ஒன்றுக்கொன்று மாறிவரக்கூடிய எழுத்துக்க ளென் றெவரும் ஒத்துக்கொள்வர்.

னுள்ளது இருகதைகள் ஒன்றோடொன்று சேர்ந்து உண்டான தென்றுங் கொள்ளலாம். யாழ்ப்பாடியின் பெயரும் அவர் அந்தக ரென்ற குறிப்பும் அவர் பாடிய அரசன் வீரவராசசிங்கனென்பதும் அவர் சோழதேசத்திலிருந்து வந்தவரென்பதும் பிந்தினகதையின் பாகங்களாம்.

இனி "கைலாயமாலை"யிற் குறித்த முதற் கதையிலே சரித்திர உண்மை உளதோ இலதோவெனச் சிறிதாராய்வாம்.

(தொடரும்.)

வே. ஜோ. தம்பிப்பிள்ளை, (M. R. A. S.,)

---

உ

# தொல்காப்பியம்: பொருளதிகார ஆராய்ச்சி.

(இவ் வாராய்ச்சி மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் 12-வது வருஷோத்சவக் கொண்டாட்டத்துக்காகக் கூடிய சபையில் 25—5—13 உயன்று மகா-௱-௱-ஸ்ரீ ஜெ. எம். நல்லசாமிபிள்ளை பீஏ., பீஎல்., அவர்கள் அக்கிராசனத்தின்கீழ் மதனப்பள்ளி ஹிந்துஹைஸ்கூல் உபாத்தியாயர் மகா-௱-௱-ஸ்ரீ வே. முத்துசாமி ஐயர் பீஏ., எல்டி., அவர்களாற் படிக்கப்பெற்றது.)

## முகவுரை.

---

தமிழ்மொழியில் தழைத்திருக்கும் இலக்கணங்களுளெல்லாம் மிகவும் பண்டையது தொல்காப்பியமே. அகத்தியம்* என்னும் இலக்

---

* "வீங்கு கடலுடுத்த வியன்கண் ஞாலத்துத், தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென, வடுேரேத்தும் வாய்மொழிப் பலபுகழ், ஆனாப்பெருமை யகத்தியன் என்னும், அருந்தவ முனிவன் ஆக்கிய முதனூல்" எனப் பன்னிரு படலத்தின் சிறப்புப்பாயிரத்தின்கண்ணே அகத்தியம் முதனூல் எனக் குறிக்கப்படுவதாலும், நச்சினார்க்கினியரும், தொல்காப்பிய உரைக்கண்ணே ஆங்காங்கு 'இது அகத்தியம்' எனச் சுட்டிப்போதலானும், அகத்தியம் மிகப்பழைய நூலென்பது போதரும்.

கணநூல் தொல்காப்பியத்தினும் காலத்தால் முந்தியது எனினும், அந்நூல் இக்காலத்து முழுவதும் கிடைக்கப்பெறவில்லை. அதிலிருந்து சில சூத்திரங்களே, உரையாசிரியர்கள் மேற்கோள்களாகக் காட்டிய இடங்களிற் காணப்பெறுகின்றன. 'தொல்காப்பியம்' என்னும் பெயரே அந் நூலின் பழமைக்கு ஒருவாறு போதியசான்றாகும்; எங்ஙனமோ எனில் தொல்காப்பியம் என்னும் தொடர்மொழி பழைய நூல் என்னும் பொருளுடைத்தாகலின். தொல்காப்பியனார் இயற்றியது தொல்காப்பியம், என இத் தொடர்க்குப் பொருள்கூறுவது நூன்மரபெனினும், அகத்தியனார்தம் பன்னிருமாணக்கருள் ஒருவரும் திரணதூமாக்கினியார் என்னும் இயற்பெயருடையவரும் ஆகிய ஒரு புலவரால் இயற்றப்பட்ட இந்நூல், முன்னர் ஏதோ ஒரு பெயரால் வழங்கி வந்தது. கடைச்சங்கத்தார் காலத்திலேயே மிகப் பழையநூலெனக் கருதப்பட்டு, அக் காரணம்பற்றித் தொல்காப்பியம் என்னும் பெயர் வாய்க்கப்பெற்றதுபோலும் எனத்துணிதலும் ஓராற்றாற் பொருத்தமுடைத்தேயாகும். அஃது எவ்வாறாயினும் ஆகுக. தொல்காப்பியம் மிகப் பழைய இலக்கணநூல் என்பதே யாம் இங்குக் கூறவந்தது. கடைச்சங்கத்தார்க்கு இதுவே இலக்கணநூலென்றக்கால், இதன் தொன்மை வெள்ளிடைமலைபோல் தெள்ளிதிற் காணக்கிடக்கின்றது.

இந்நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்தினையும் விரித்துக்கூறும். இதுபோன்று இவ்வைந்தினையும் ஒருசேரச் சிறக்க விளக்கிச்சொல்லும் நூல், பிற்காலத்தியற்றப்பெற்றதும், 'குட்டித்தொல்காப்பியம்' எனப் பேர்வாய்ந்ததும் ஆகிய வைத்தியநாததேசிகர் இயற்றிய 'இலக்கணவிளக்கம்' என்பதொன்றே என்று கூறலாம். பிற இலக்கணநூல்களுள் எழுத்தையும் சொல்லையும் எடுத்தியம்புவ சில; பொருளிலக்கணமே புகலுவ சில; செய்யுள் இயலே செப்புவ சில; அணியொன்றினையே அணிந்துரைப்பன சில; மற்றைநான்குடன் பொருளினையும் விரித்துக்கூறும் சிறப்புடைய பழையநூல் தொல்காப்பியமே. அதன்கட் கூறியாங்கு, பொருளிலக்கணம் இத்தகைத்து என்பதும், அப் பொருளிலக்கணம் கருவியாக அறியப்பெறும் பண்டைக்காலத்தாரது வழக்கங்களும் நடையுடைபாவனை முதலியவைகளும் இவை இவை என்பதும்

மற்றும் இவைபோல் நுணுகி அறியப்படுவன இன்ன இன்ன என்பதும், பிறவும் ஒருவாறு இவ் வியாசத்தின்கண்ணே விளக்கிக்காட்டப் படும்.

பண்டைத்தமிழ்நூல்கள்பலவற்றிற் பொதிந்துள்ள பொருள் இவை இவையென இக்காலத்தார்க்குத் திறந்துகாட்டும் திறவுகோலெனச் சிறப்புற்றுத்திகழ்வது உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் உரை யென்பது கற்றறிந்தோர் யார்க்கும் ஒப்ப முடிந்ததாம். அப் பேரறிவாளரது உரை யிலதேல், சங்கத்தமிழ்நூல்களிற் பல இருந்தும், அவை இக் காலத்தார்க்கு இறந்தனவேயாகும். இதனாலன்றோ,

"பச்சைமா லனைய மேகம் பொழிபுனல் பருகிக் கான்ற
எச்சிலாற் றிசையு முண்ணும்; அமிழ்தென வெழுநா வெச்சில்
மெச்சிநா ளுளும் விண்ணோர் மிசைகுவர்; வேத போத
நச்சினார்க் கினிய னெச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்." எனவும்,

"எவனுலக வாயிடைவர் தமுதவா யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை எழுதி யீந்தோன்
எவன்பரம உபகாரி, எவனச்சி னார்க்கினியன் எனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெப்போது மலர்கவென தகத்து மன்னோ." எனவும்,

நச்சினார்க்கினியர் துதியாகப் பாடல் எழுந்தன. இப்பெரியாரது உரை இவ்வாராய்ச்சிக்குப் பெரிதும் உதவியா யிருந்ததெனல் கூறாமலே அமையும்.

கடைசியாக, இம்முகவுரையை முடிக்கு முன்னர், இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட விஷயத்தினது அருமை பெருமையினையும், அதனை எடுத்துரைக்க முயலும் எனது அறிவின் சிறுமையினையும் நோக்கின் நான் அவையடக்கம் கூறுவது இன்றியமையாதது ஆயிற்று. இங்கு யான் இம்முயற்சிக்கண் தமிழபிமான மேலீட்டினாற் பிரவேசிக்கின்றேனேயன்றி, தமிழ்ப்பயிற்சிமேலீட்டினால் அன்றென்பதைச் சிறிதும் உபசாரமொழியாகக்கொள்ளாது, முழுதும் உண்மைமொழியெனவேகொண்டு, இயற்கை நற்குணமுடைய இன்றமிழ்ப்புலவராயினோர், என் முயற்சியாகிய

இதனை முற்றிலும் கடியாவண்ணம் அவர்களை மிக்கவணக்கத்துடன் கேட்டுக்கொள்கின்றேன்.

பொருட்சிறப்புமுதலியன

தமிழ்மொழியில் இலக்கணம் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம் என ஐவகைப்பட்டுள்ளது. பிறமொழிகளின் இலக்கணங்களை நோக்கின், அவற்றில் எழுத்து, சொல், யாப்பு, அணி என்னும் இந்நான்கிற்கும் இலக்கணம் காணப்படுகிறதே யன்றி, பொருட்கு இலக்கணம் இன்னதென வரையறுத்துக் கூறப்பெற்றிலது. இங்ஙனம் சிறப்பாகத் தமிழ்மொழி யொன்றிலேயே, இலக்கணம் வகுக்கப்பெற்ற 'பொருள்' என்பதுதான் யாது? அது எங்ஙனம் இலக்கியங்கட்கு இன்றியமையாது வேண்டப்படுவது? முற்காலத்து வகுக்கப்பெற்ற பொருளிலக்கணத்தால் இக்காலத்து யாம் அறிந்துகொள்ளற்பாலன யாவை? என்பவற்றைக்குறித்து இங்குச் சிறிதுபொழுது ஆராய்வோம்.

'பொருள்' என்பது நூலாசிரியன் நுவல்வதற்கெடுத்துக் கொண்ட விஷயமாகும்; அவ்விஷயந்தானும், மாந்தர்க்கு உறுதி பயத்தற்பாலவென உயர்ந்தோரால் ஓதப்பெற்ற அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றில் ஒன்றையேனும், ஒன்றுக்கு மேற்பட்டவற்றையேனும் விதந்து சொல்வதாகும். இந்நான்கினையே வடநூலார் தர்மார்த்த காமமோக்ஷம் என்னும் நான்கு புருஷார்த்தங்கள் என்பர். உற்று நோக்கின், இந்நான்கினுள் அடங்காத புறம்பாகிய விஷயம் இவ்வுலகில் ஒன்றுமின்று என்பது எல்லார்க்கும் தெள்ளிதிற் றெரிந்ததே. எனவே, மானிடர்க்குறுதி பயக்கும் விஷயமென்று நூலாசிரியன் அறிந்து, தன் நூலின்கண் நுவலும் விஷயமே, தமிழிலக்கணத்திற் "பொருள்" எனப் புகலப்பெறுவதாகும்.

இன்னதன்மைத்தாகிய பொருள் இலக்கியத்துக்கு உயிர்போன்றது. மற்றை எழுத்து, சொல், யாப்பு, அணியிவை, புறவுறுப்புக்கள் போன்றன. யாங்ஙனமோ எனின், இலக்கியத்தின்கண், மற்றைய நான்கின் இலக்கணம் எத்துணைச் செவ்விபெறச் செறிந்திருப்பினும், 'பொருட்'சிறப்பு இல்லாக்கால் அவ்விலக்கியம் படிப்போர்க்குச் சிறிதும் பயன்படாதாகலின் என்க.

பித்தனொருவன் பிதற்றுவனவற்றை ஏட்டின்கண் எழுதிவெடுப்போமானால், அவற்றில், எழுத்தும் சொல்லும் காணப்படுதல் இயல்பே. கற்றுவல்லானொருவன், பித்துண்டு பிதற்றுவனேல், அவன் கூறுவனவற்றுள் யாப்பும் அணியும் இசைந்திருத்தலும் கூடும். அப்பித்தன் கூற்றுட் செம்பொருள் சிறிதும் இராதென்பது யாவர்க்கும் தெரிந்த விஷயம். பொருட்பொருத்தமுற ஒருவன் பேசுவனேல், அவனும் பித்தனல்லன்; அவன் பேச்சும் பிதற்றுதலாகாது. ஆதலின் 'பொருள்' இன்றி எழுத்து, சொல், யாப்பு, அணி இவை யியங்கின் அவற்றிற்குச் சிறப்புச் சிறிதும் இல்லை என்பது போதரும்.

இக்கருத்தினையே நாற்கவிராசநம்பி இயற்றிய 'அகப்பொருள் விளக்க'த்தின் பதிப்பாசிரியராகிய யாழ்ப்பாணத்துத் தெல்லிப்பழை வித்துவான் சிவாநந்தையர் "எழுத்தும் சொல்லும், யாப்பும், அணியும், என நான்கும் தன்னைநோக்கிநிற்பத் தா னவற்றுள் ஒன்றையும் நோக்காது நிற்றலால், பொருளிலக்கணம் மற்றை நான்கினும் சிறப்புடைத்து" என்றும் "எக்காலத்தும், எவ்விடத்தும், யாவரானும், அறிந்து பயனெய்துதற்குரியதும், எய்தத்தகுவதும், எய்தவேண்டுவதும், எய்தப்படுவதும் பொருள் ஒன்றே பிறிதில்லை" என்றும் கூறிப்போந்தனர்.

மற்றும் கடைச்சங்கத்தார்காலத்தில் உக்கிரப்பெருவழுதி, தான் பஞ்சம்வந்தபோது கலைந்துபோகும்படி சொல்லியனுப்பிய புலவர்களை, அந்தப்பஞ்சம் நீங்கி நாடு நாடாகிய பின்னர் அழைத்துவரும்படி சில ஏவலாளரை அனுப்ப, அவரும் "எழுத்ததிகாரமும், சொல்லதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக்கொணர்ந்து 'பொருளதிகாரம் வல்லாரை எங்குந்தலைப்பட்டிலேம்' என்று வந்தார். வர, அரசனும் புடைபடக்கவன்று எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே. பொருளதிகாரம் பெறேமே எனின், இவை பெற்றும் பெற்றிலேம்" எனச்சொல்லி வருந்தினன் என்பதும், பின்னர் ஆலவாயினவிர்சடைக்கடவுள் தம்பெயரால் அகப்பொருள் விஷயமாக, 'இறையனாரகப்பொருள்' என்னும் நூலை இயற்றியருளினர் என்பதும் அந்நூற்கு நக்கீரனார் 2000-ஆண்டுகட்குச் சற்று முன்பின் எழுதிவைத்த உரையானே உணரப்படும். இம்

மேற்கோளாலும் பொருளினது சிறப்பு அங்கையங்கனியென அறியக் கிடக்கின்றது.

இன்னும் தொல்காப்பிய அச்சுப்புத்தகத்தில் ஈற்றின்கண் தொல் காப்பியனார் துதியாகக் காணப்படும்.

> “ ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப் பியனடி
> பல்காற் பரவுது மெழுத்தோடு
> சொல்கா மருபொருட் டொகைதிகழ் பொருட்டே ”

என்னும் செய்யுளில், எழுத்தும் சொல்லும் ஓர் அடைமொழியும் பெறாது வாளாநிற்ப, பொருள்மாத்திரம், அழகிய - விரும்பத்தக்க, என்னும் அர்த்தத்தையுடைய ‘காமரு’ என்னும் அருநயம் வாய்ந்த அடைமொழி பெற்றுநிற்கும் சிறப்பும் இங்கு நோக்கற்பாலது.

மற்றும், அணியினது சிறப்பை விளக்க ஒரு பழமொழியுண்டு; அஃது “அணியிலாக் கவிதை, பணியிலா வனிதை” என்பது. அணி யில்லாக் கவியினை, ஆபரணங்களணிந்திராத அங்கனைக்கு நேர் எனக் கூறும் இம் முதுமொழிக்கிணங்க, பொருளிலாக்கவிதை, தெருளிலா வனிதை எனப் பொருளினது சிறப்பினை ஒரு புதுமொழியாற் புனைந்துரைத்தல் பொருத்தமுடைத்து. ஒரு பெண்ணுக்கு அறிவே, அணியினும் மிக வேண்டற்பாலது போல, செய்யுட்கு அணியினும் பொருளே மிகவும் இன்றியமையாததென்பது இவ் வுவமைமுகத்தா லும் வலியுறுத்தப்பட்டது.

எனவே, ‘பொருளிலார்க்கிவ்வுலகமில்’ எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் செல்வப்பொருளைக்குறித்துக்கூறியது, இங்குக் கல்விப்பொருட்கும் சாலவும் ஏற்புடைத்தாகின்றது.

இதுகாறுங் கூறியவாற்றால், பொருளினதுசிறப்பு இத்தன் மைத்து என்பது கூறப்பெற்றது. இத்துணைச் சிறப்புவாய்ந்த பொருளினது இலக்கணத்தைக்குறித்து, ஆராயப்புகுமுன்னர், பொருட்கு இலக்கணவரையறை இன்றியமையாதுவேண்டற்பாலதா என்பதைக் குறித்துச் சற்றுவிவரிப்போம். இவ்வுலகின்கண் தான் மிக்க விரிவானதாயும் தன்னுட் பல பிரிவுகளுடைத்தாயும், அப்பிரிவு கள் தாமும் யாதொரு முறையுமின்றி, தாறுமாறாய்க் கலந்திருக்கப்

பெற்றதாயும், உள்ள ஒரு விஷயத்தினை, அங்ஙனமே கொண்டு, அத னுட் பொதிந்துள்ள நுணுக்கங்களை ஆராய்ந்து அறிவது எத்துணை அரியது என்பதையும், அவ்விஷயத்தையே அத னுட்பிரிவுகளுக் கேற்றவாறு அடைவுபடுத்துப் பின்னர் அதனை ஆராய்வுழி அம் முயற்சி எவ்வளவு எளியது என்பதையும் நம்மிற் பலரும் அனுபவத் தில் அறிந்திருக்கிறோம். சாதாரணமாக ஒரு குடும்பத்தின் வரவு செலவு கணக்கைச் சரிவர வைத்துவரவேண்டுமானால், அதனை இன்ன இனங்களுக்கு, இன்ன நாட்களில் இன்ன இன்ன தொகை வரவென்றோ, செலவென்றோ, பேரேட்டில் வரைவதைப் பேரேட்டி லும் சிற்றேட்டில் வரைவதைச் சிற்றேட்டிலும் வரைந்துவந்தால், அக்கணக்கு யாவர்க்கும் எளிதில் விளங்கும். அதாவது இன்ன இன்ன லக்ஷணங்கள் அமையுமாறு நாம் கணக்கு வைக்கவே[illegible]ண்டு மென்னும் நோக்கம் நமக்கிருப்பின், அந்தக் கணக்குவேலை [illegible]தி எழுதி முடிவதுடன், நமக்கு அது அடிக்கடி பெரும்பயனை [illegible]ளிக் கும். அன்றி, எல்லாக் கணக்குகளையும் ஒன்றாய்ச்சேர்த்துக் [illegible]ழப்பி எழுதிவைத்திருக்கும் ஒருவனுக்கு, அக்கணக்கினால் அசௌகரியமே நிரம்ப எற்படுகின்றது. இவ்வாறே மிகப்பரந்த அளவினையுடைய பொருட்கும் இலக்கணம் இன்றியமையாது வேண்டற்பாலதென, மேல்நோக்காக நோக்குவார்க்கும் வெளிப்படையாக விளங்கும். இந் நோக்கம் பற்றியே, தொல்காப்பியனார் முதலாயவரெல்லாம் பொருட்கு இலக்கணம் விரிவாக வகுத்துள்ளார்கள்.

அப்படியாயின் ஆங்கிலம்போன்ற, சிறப்புமிக்க நவீன பாஷை கட்குப் பொருளிலக்கணமில்லையே எனின், அவற்றின்கண் வெளிப் படையாகப் பொருட்கு இலக்கணம் வரையறுத்துக் கூறப்பெற்றிரா விடினும், நூனயம் உணர்ந்து நூற்றிறத்தினைப் பத்திரிகைவாயிலா கவும், தனிப்புத்தகவாயிலாகவும் வெளியிட்டுதவும் நுண்ணறி வுடையார் பலர் அந்நாடுகளிற் பல்கி இருக்கிறார்கள். அன்றியும் பொதுவாக எல்லாநூல்களும், சிறப்பாக நாடகநூல்களும் நூலா ராய்ச்சித்திறத்திற் கைவந்துள்ள சர்க்கார் உத்தியோகஸ்தர்களால் (censor of plays போன்றவர்கள்) சரியென ஒப்புக்கொள்ளப்படடல் வேண்டும். அன்னார் இந்நூல் கடியத்தகுவதெனக் கருதுவரேல், அந்நூல்பிரசுரம் பெறுதொழியும். இவற்றையெல்லாம் நோக்கின்,

கல்விநலங்கைவந்துள்ள நவீன நாகரிகநாடுகளிலும், கல்விப்பொருட்கு ஓராற்றால் இலக்கணவரம்பு ஏற்பட்டே யுள்ளது என்பது போதரும்.

எனினும், உலகின்கண்ணே பழையனகழிதலும் புதியனபுகுதலும், மற்றை நான்கினைக்காட்டிலும் பொருளின்கண் மிகவும் சேர்தலால் எவராலும் பொருட்கு முடிந்த விலக்கணம் வகுத்தல் இயலாது. ஆழ்ந்து நோக்குமிடத்து, பொருளானது காலதேசவர்த்தமானங்களுக்கியைய மாறிவரும் இயற்கையுடைத்தாகலானும், புதிய அரசியல், நாகரிகவேறுபாடு முதலியவை காரணமாகப் பொருளின் தன்மை, மிக்கவேறுபாடுறுகின்றதாகலானும், எழுத்து, சொல், யாப்பு அணி இவற்றிற்குப்போல இப் பொருளுக்கும் திட்டமாக இலக்கணவரம்பு பண்டைநூல்களில் ஏற்படுத்தியுள்ளார் என்பதுபற்றி அவ் விலக்கணங்களினின்றும் சிறிதும் பிறழாது நடத்தல் வேண்டுமென்பாருளரேல், அன்னார் கொள்கை அத்துணைச் சிறப்புடைத்தன்று. கடவுளால் தரப்பெற்ற இயற்கையறிவையுடையவொரு புலவன் தன் மனத்தின்கட் டோன்றும் ஒரு விஷயத்தை இன்ன இன்ன இலக்கணவரைக்கிணங்கவே கூறவேண்டும் என வுரைப்பது அப் புலவனது மனோபாவத்திற்கு ஒரு தளையிடுவதுபோலாகும். ஆதலின் முன்னோர் கூறியுள்ள இலக்கணத்தை ஆராய்ந்து அதனின்றும் அக் காலத்து ஜனசமூகத்தினது அமைப்பு இன்னவாறு இருந்தது என்றும், மாந்தர்தம் நடைபுடை பாவனைகள் இன்ன இன்ன என்றும், அரசியல் இவ்வண்ணம் நடைபெற்றது என்றும் அறிந்து கொள்வதே மிகவும் பொருத்தமுடைத்து.

(தொடரும்.)

வே. முத்துஸாமி ஐயன்.

---

ஸ்ரீ:

# IX.

# மழவராயன் சாசநம்.

---

செந்தமிழ் XI: 58-ம் பக்கத்தின் தொடர்ச்சி.

ஸ்வாமி நம்மாழ்வார் ஸந்நிதிக்குக் கிழ்புறம் யாகசாலைமண்டபம்.

சுலோகங்கள்.

## I.

(1) ஸ்வஸ்திஸ்ரீ
[illegible]
[illegible] (2) [illegible] ।
(3) [illegible] (4) [illegible]
[illegible] ॥

## II.

(5) [illegible]
[illegible] (6) [illegible] ।
[illegible]
[illegible] (7) [illegible] ॥

[illegible] ॥

### இவற்றின் கருத்து.

(1) பத்துத் திக்குகளிலும் பேர்படைத்த ஸ்ரீநகரி யென்னும் பெயரையுடைய பட்டணத்தில், யுத்தத்தில் வல்ல அப்பாண்டான் மழவராயன் (தாத) என்பவன், நிலமுழுமைக்கும் அலங்காரமாகிய ஒரு மண்டபத்தைச்செய்தான். அதில் ஸ்ரீஹரி தன் நாயகியாகிய லக்ஷ்மியோடு விளையாடி, திருப்பாற்கடலின் மத்தியில் வசித்ததனு லுண்டாகிய ஜாட்யத்தை உடனே விட்டார். ஜாட்யம் - ஜடத்தின் தன்மை. ஜடம் = ஜலம், டகர லகர மயக்கம்.)

(2) திருநகரிக்குத் தலைவரான நின்றவாதிப்பிரானாகிய ஹரிக்கு இந்த பூமியில் இரண்டு இருப்பிடமுள்ளன. அவையாவன:—பக்தி நிறைந்த அப்பாண்டான் மழவராயனுடைய ஹ்ருதயமும் அவனாற் செய்த அழகிய சிறந்த மண்டபமுமாம். 'நதூாஹிகாவியயெவாழ' என்பது விளங்கவில்லை.

குறிப்பு:—மாளவராயன் என்பது மழவராயன் எனத் திரிந்த தாகத் தெரிகிறது. இது உத்தியோகப்பெயர். உத்தியோகமாவது சேனாதிபத்தியம். காலிங்கராயன் என்பதுமப்படியே. 'காலிங்கராயனி விருந்து,' 'மழவராயனிலிருந்து' என்று சாசனங்களில் வருமிடத்து 'அரமனையில் அந்த மண்டபத்தில் அரசனெழுந்தருளியிருக்கும் போது எனப்பொருள்படுகிறது. ஆஸநம் என்றும் பொருள் கொள் ளலாம். அரசர்கள் தங்கள் மண்டபம் அல்லது ஆஸநங்களை சேனாதி பதியின் பெயரால் வழங்கிவந்தார்களென்று தெரிகிறது. இங்குக் குறித்த 'மழவைராயன்' பாண்டியன்ஸேநாபதி. அவன் பெயர் 'தாத' என்று கூறியிருக்கிறது. அப்பதத்திற்கு 'அப்பாண்டான்' என்று பொருள்கொண்டோம். அதற்குப், பின்வரும் திருக்குரு கைத் திருப்பணிமாலைச்செய்யுள் பிரமாணம் இங்கு மழவராயன் ஒரு மண்டபம் கட்டினனென்று சொன்னபோதிலும் ஸ்ரீசைலநாத திவ்யசூரிசரிதமும், யதீந்த்ரப்ரவணப்ரபாவமும் பாண்டியன் குதிரை வாங்கக் கொடுத்த பணத்தைக்கொண்டு இவன் ஆழ்வாருக்கு மதிள் கட்டுவித்தானென்று கூறுகின்றன. திருப்பணிமாலையில் பாண்டி யன், யானைவாங்கப் பணம்கொடுத்தானென்றிருக்கிறது. அத்திருப் பணிமாலைச் செய்யுள் வருமாறு:—

"தானமழைப்புழைநெடுங்கைத்தந்திகொடுவருகெனக்கோற்றருபொன்யாவு
மானபராங்குசத்தந்திக்குட்பெரியதிருமதிளாமடுக்கல்கண்டான்
மீனவர்கோன்வாயிற்காரிய........புவியேழும்விரிந்தகீர்த்தி
மானபரனப்பாண்டான்மழவராயன்குவளைமாலையானே."

மண்டபம் இம்மதிலை யடுத்துக்கட்டியிருப்பதால் சாசனத்திற் சொன்ன மண்டபமும் திருப்பணிமாலையிற் கூறிய திருமதிலும் இவனே கட்டியிருப்பானென்பதற்கையமில்லை.

# X.

## விஜயரங்க சோக்கநாத நாயக அரசரின் ஆழ்வார் திருநகரிச்சத்திர சம்பந்தமான தாம்ரப்பட்டயம்.

---

(தேலுங்கிலிருந்து மோழிபேயர்த்தது)

"Taylor's Manuscript" என்னும் புத்தகத்தில் இவ்வரசர் இரண்டு வருஷத்திற்கொருதரம் ஸ்ரீவைகுண்டம் ஆழ்வார்திருநகரி ஊர்களுக்குப்போய் அங்குள்ள விஷ்ணுகோவில்களுக்கு வேண்டிய திரவியம் நகைமுதலிய கொடுப்பாரென்றெழுதியிருக்கிறது. ஸ்ரீவைகுண்டத்தில் இவர் அரமனை இருந்ததெருவுக்கு 'சச்சைத்தெரு' என்று பெயர்வழங்குகிறது. இச்சாசநம் தூத்துக்குடி சப்கலெக்டர் ஆபீஸில் இப்போதிருக்கிறது. முதலில் தென்கலைத்திருமண்முதலிய வைஷ்ணவ சின்னங்கள் செதுக்கப்பட்டிருக்கிறன. இவ்வரசரின் சிலையமைந்த தூணொன்று ஆழ்வார் திருநகரிச்சத்திரத்தின் சந்நிதியிற் காணப்படுகிறது. இவர் 1705—1736 கி. பி வரை அரசாண்டவர். விஜயநகரத்தரசனை கனகிரியாண்ட ஸ்ரீரங்கராஜனை, தன் முன்னோர்போல உபசாரமாகத் தலைவனாக இவர் ஒப்புக்கொள்கிறார்.

ஸ்ரீ:

ஸ்வஸ்திஸ்ரீ விஜயாப்யுதய சாலிவாஹநசகாப்தம் 1641 ஆகிய விகாரிநாமஸம்வத்ஸரம் வைசாகசுத்தஅஷ்டமி குருவாரம் புஷ்ய நக்ஷத்ரம் சுபயோக சுபகரணம் கூடின இந்த குரு புஷ்யயோக சுப தினத்தில் ஸ்ரீமத் ராஜாதிராஜ ராஜபரமேஸ்வர வீரப்ரதாபவீர ஸ்ரீ ஸ்ரீரங்காயலய்யவாரு கநகிரி நகரத்தில் ரத்நஸிம்ஹாஸநாஸீநராய் ப்ருதிவிசாம்ராஜ்யம் செய்துகொண்டிருக்கும்போது, காஸ்யபகோத்ரம் சோக்கநாதநாயநிவாரு பௌத்ரனும் ரங்ககிருஷ்ண முத்துவீரப்பநாயநிவாருபுத்ரனுமான ராஜஸ்ரீ விஸ்வநாதநாயநி விஜயரேங்க சோக்கநாத நாயனிங்வாரு, பாரத்வாஜகோத்ரம் ஆபஸ்தம்பஸூத்ரம் எஜுச் சாகாத்யாயியான வேங்கடாத்ரிஸோமயாஜுலவாரி பௌத்ரரான கொம்ரஸோமயாஜிவாரி புத்ரனைன நிவ்ர்த்தி சுப்ரம்ஹண்யஸோமயாஜியவர்களுக்குக்கொடுத்த அக்ரதாநபத்ரம் தர்மசாசநம்:—நாம் ஆளு

கிற (?) ராஜ்யத்திலே அமரநாயகனுக்கு (?) கட்டளை செய்த மதுரா ராஷ்ட்ரம் திருநெல்வேலி சீமையில் தாம்ரபர்ணீ தீரத்தில் ஆழ்வார் திருநகரி ஸ்தலத்தில் நாம் ஏற்படுத்தின அந்நதான தர்மத்துக்கு ஆழ்வார் திருநகரியைச் சேர்ந்த நாட்டுப்புறத்தில் 'கோமாறனேரி கிராமம் நன்செய் புன்செய் மாவடை மரவடை பனைசகிதம், எல்லை சதுரமானதும், வடகரை கீழ்படாகையில் நன்செய்த்திருத்துக்கால் 12 கோட்டை விரைப்பாடும், நாராசக்கால் 8 கோட்டை விரைப்பாடும் கூரா (கறி ?) 20 கோட்டை விரைப்பாடும், உள்ளூரில் தென்கரைப் பெரியகுளத்தின்கீழ் 14 கோட்டை விரைப்பாடும், ஸ்ரீ வைகுண்டத்தில் சடகோபனேரியைச் சேர்ந்த வைகுண்டநாதப்பெரியகுளத்தின் கீழ் நன்செய் 30 கோட்டை விரைப்பாடும், கீழ்படாகையில் கொடிக்கால் 2 கோட்டை விரைப்பாடும், வாழைத்தோட்டம் விஸ்தாரம் 10 கோட்டை விரைப்பாடும், அதற்கு வடக்கே ஓடை நிலம் 20கோட்டை விரைப்பாடும், கணியான் கூடல் பனந்தோப்பு எல்லை சதுரமாயிருப்பதும், உள்ளூரில் பாலம் கட்டு நெல்வித்தோட்டமும், புதுக்குடிக்காலுக்கு மேல்புறம் மாந்தோப்பும், வெள்ளூர்க்குளம் உள்வாய் (?) பபறு கோட்டைவிரைப்பாடும், கோவில் ஸ்வதந்த்ரம் நித்யகட்டளை அன்னம் தளிகையிரண்டும், தேங்குழல் ஒன்றும் காற்படி நெய்யும் காற்படி எண்ணெயும் யாவனை விலைவாசி சத்ரம் மெத்தை தொட்டிக் கட்டும் ஸ்வர்ணதாயம் நிதி நிக்ஷேப ஜலதருபாஷாண அக்ஷண்ய ஆகாமி (?) அஷ்டபோக தேஜஸ்வாம்யமும் இதோடு கூடினதை ஸஹிரண்யோதகதாராபூர்வமாய் கட்டளை செய்தருளினார். இந்த க்ரமத்தின் நன்செய் புன்செய் மாவடை மரவடை தோப்புத்துறவு இது முதலானதை அநுபவித்துக்கொண்டு அந்நதாந தர்மத்தையும் யாகாதிக்ருதுக்களையும் செய்துகொண்டும் ஆசந்திரார்க்கஸ்தாயியாய் புத்ரபௌத்ர பாரம் பர்யமாய் அந்நதாந தர்மம் செய்துகொண்டு சுகமாயநுபவித்துக்கொண்டு இருப்பீராக.

இத்தர்மத்துக்கு விகாதம் செய்தவர்கள் காசியிலே (செய்த) பிர்ம்மஹத்யாதிபாபத்தில் போகக்கடவர்கள். துருக்கரில் விகாதம் செய்தவர்கள் மக்காவில்..............கொன்ற பாபத்தில் போகக்கடவர்.

ஊ௦கெவஹமிநீலொகெ ஹவெ-ஷாஒவஹ-எஹ-ஜாழ ।

நலெஹாஜ்ஜா-நகாஜ ஞாஹா விஷுக்தாவஹ-ஃயாஈ ॥ க ॥

𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌾𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌗𑍁𑌣𑌂𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌪𑌰𑌦𑌤𑍍𑌤𑌾𑌨𑍁𑌪𑌾𑌲𑌨𑌮𑍍 ।
𑌪𑌰𑌦𑌤𑍍𑌤𑌾𑌪𑌹𑌾𑌰𑍇𑌣 𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌂𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌂𑌭𑌵𑍇𑌤𑍍 ॥ ௨ ॥

𑌦𑌾𑌨𑌪𑌾𑌲𑌨𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌦𑌾𑌨𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍇𑌯𑍋𑌽𑌨𑍁𑌪𑌾𑌲𑌨𑌮𑍍 ।
𑌦𑌾𑌨𑌾𑌤𑍍𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑌾𑌲𑌨𑌾𑌦𑌚𑍍𑌯𑍁𑌤𑌂𑌪𑌦𑌮𑍍 ॥ ௩ ॥

𑌅𑌹𑍋𑌰𑌾𑌘𑌵𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌕𑌲𑍍𑌪𑌕𑍋𑌟𑌿𑌶𑌤𑍈𑌰𑌪𑌿 ।
𑌨𑌶𑍍𑌰𑍁𑌤𑌂𑌨𑌾𑌪𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌂𑌮𑍇 𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌾𑌪𑌹𑌾𑌰𑌿𑌣𑌮𑍍 ॥ ௪ ॥

𑌸𑍍𑌵𑌦𑌤𑍍𑌤𑌾𑌂𑌪𑌰𑌦𑌤𑍍𑌤𑌾𑌂𑌵𑌾 𑌯𑍋𑌹𑌰𑍇𑌤𑌵𑌸𑍁𑌨𑍍𑌧𑌰𑌾𑌮𑍍 ।
𑌷𑌷𑍍𑌟𑌿𑌵𑌰𑍍𑌷𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿 𑌵𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌾𑌂𑌜𑌾𑌯𑌤𑍇𑌕𑍃𑌮𑌿𑌃 ॥ ௫ ॥

ஸ்ரீவிஜயரங்கசொக்காதய்ய வார்லு.

சுலோகங்க்ளின் கருத்து.

லோகத்தில் எல்லாவரசர்களுக்கும் ஒரே சகோதரிபோல்வது. பிராமணன் பொருட்டுக் கொடுக்கப்பட்ட பூமி அநுபவிக்கத்தகுந்த தில்லை. (தங்கை—அநுபவிக்கத்தகுந்தவளல்லள்) (நகாக்ராஹ்யா) தீர்வை வாங்கத்தக்கதில்லை (கையாற்பற்றத்தகுந்தவளல்லள்) (க)

வேறொருவராற் செய்யப்பட்ட தர்மத்தைக் காப்பாற்றுதல், தன்னாற்செய்யப்பட்ட தர்மத்தைப்பார்க்கிலும் இரண்டுபங்கு புண்ய முள்ளது. இன்னொருவராற் கொடுக்கப்பட்டதை யபகரிப்பதனால் தன்னாற் கொடுக்கப்பட்டதும் பலனற்றதாய்விடும். (உ)

(தான்) தானஞ் செய்தல், முன்தானஞ்செய்யப்பட்டதை ரக்ஷித்தல் இவ்விரண்டுக்குள் (தன்) தானத்தைப் பார்க்கிலும் முன் தர்மத்தை ரக்ஷித்தல் சிறந்தது. தான் தானம் செய்வதனால், (அழியும்) ஸ்வர்க்கத்தையும், பிறர் தானத்தை ரக்ஷிப்பதனால் அழியாத பரம பதத்தையுமடைகிறான். (௩)

ஏ ராகவ! ராஜ ராஜ! தான் கொடுத்ததைத் தானே யபகரித்த வனை நூறுகோடி கல்பத்திலேயும் நான் கேட்கவுமில்லை. பார்க்கவு மில்லை. (இது ஜாம்பவான் வாக்கியம்.) (ச)

தன்னாற் கொடுக்கப்பட்ட அல்லது பிறராற் கொடுக்கப்பட்ட பூமியை எவனொருவன் அபகரிக்கிறானோ அவன் அறுபதினாயிர வருஷம் விஷ்டையில் கருமியாய்ப் பிறக்கிறான். (௫)

A. M. சடகோபராமாநுஜாசாரியன்,

திருச்சிராப்பள்ளி.

---

(இ - ள்.) சிலேடைமுதலாக வுவமையீருகக் கூறப்பட்டவைந் தலங்காரங்களோடும் விரவியும் வருமென்றவாறு. உரைபெறு சிலேடை யென்றதனுல் வினைமுதலிய நான்கு காரணத்தா னுவமை பிறப்பதேயன்றி யிரட்டுறமொழியுஞ் சொற்பொருள் காரணமாகவு முவமை பிறக்கும் என்பதும், சிலேடை இக்கூறிய வுருவகத்திற்கும் காரணம் இனிமேல்வரும் பிற அலங்காரங்கட்கு முபகாரங்களாம் என்பதுந் தோன்ற நின்றதுங் காண்க. இச் சூத்திரஞ் சிங்கநோக்காம்.

அவற்றுட் சிலேடையுருவக மென்பது ஒருபொருளை யொரு செய்யுளகத் திருபொருள் பயப்பதாகப் பலவிடத்தினும் புணர்த் திறுதியினு மிருபொருள் பயப்பதாக வுருவகஞ் செய்வது:—

விற்புடைக்கீழ்மன்னிமிகுநாணிடைதழீஇச்
சுற்றுடைமாண்கோதைத்தொடைசெறியும்—பொற்புடைத்தாம்
பாணிழையாவண்டுலவும்பைந்துளவமாலுறையூர்
மாணிழையார்சேயரிக்கண்வண்டு. (253)

இது செம்மொழிச்சிலேடையுருவகம்.

(இ - ள்.) கண்ணிற்கும் அம்பிற்குஞ் சிலேடை. கண்ணின் மேற் சொல்லுங்கால், வில் - புருவம். இஃ துவமப்பேர். புருவத்தின் பரப்பின்கீழ்த் தங்கிப் பெருத்த நாணிடத்துக்கூடிச் சுற்றுதலுடைய மாட்சிமைக் குழலின்மேல் மாலையை மேனோக்கத்தாற் பொருந்துங் கண்ணாகிய வண்டெனவும், அம்பின்மேற் சொல்லுங்கால், தனுவி னகன்றவிடத்துக்கூடி மிகுந்த நாணுக்குநடுவே யெய்தி விரலிற் கட்டுதலுடைய விறற்சாடுறத் தனுவிற்குவல்லார் தொடுத்தெய்வதை யெய்தும் அம்பு எனவுங் கொள்க. பருதி - சேட்படை. துறை - கண்ணயப்புரைத்தல்.

பூங்குமிழ்மீதேறிப்புணர்க்குமதனன்கலைதோய்ந்
தோங்குவனத்தாமரையினுட்பயிலுந்—தேங்குபுனல்
வெள்ளக்குளத்துறைமால்வெற்பினில்வாழ்மெல்லியலார்
வள்ளைக்குழையார்கண்மான். (254)

இது பிரிமொழிச்சிலேடையோடுங்கூடியவுருவகம். கண்ணிற்கு மானிற்குஞ் சிலேடை. கண்ணின்மேற் சொல்லுங்கால், பொலிவையுடைய மூக்கின்மீதேறிக் காமன் புணர்க்கு நல்லகலையைக் கற்றுப் பெருத்தெழுந்த தண்ணிரகத்துத் தாமரைபோன்ற முகத்தினுட்டங்கு மிகுந்த புனலையுடைய திருவெள்ளக்குளத்துறையுந் திருமால் வெற்பில் வாழு மெல்லியலாராகிய வள்ளைக்குழையினையுடையார் கண்ணாகிய மான் எனவும், மானின்மேற் சொல்லுங்கால் பூவினோடுங் கூடிய குமிழாகிய மரத்தினைப்பாய்ந்து காமத்தைத் தன்னிடத்தே விளைக்கும் நல்லகலையைப் புணர்ந்து ஓங்கிவளருங் காட்டின்கண்ணுளவா மரைகண்டு பழகு மெல்லிய வியல்புமிகுந்த வள்ளைக்கொடியினது குழையைப்பருகுங் குறிப்பினையுடைய மானெனவுங் கொள்க. இதனுள், கண்மா னென்ப துருவகம். புணர்மதன் என்பதனை மதன் புணர் எனப் பாடமாற்றுக. துறை - இதுவுமது.

மன்பார்குளிர்விக்குமாறன்குடைமதியு
நன்பான்மதியுமதிநாடுங்கால்—முன்பாங்
குடைமதிக்குண்டாவதல்லகுன்றுதன்மைவானத்
தடைமதிக்குண்டாங்குன்றுதல். (255)

இது குணவேற்றுமை யுருவகம். வடநூலார் வெதிரேகவுருவகமென்பது மிது. குன்றுதல் - தேய்தல். மை - களங்கம். குடைமதியென்ப துருவகம். திணை - பாடாண், துறை - குடைமங்கலம்.

பேரழகார்காரிதரும்பிள்ளைமாணிக்கநெறி
சீரியமாணிக்கமுறுஞ்செய்கைத்தோ—வாரியர்கா
ணற்றுளதேற்றத்துவங்களெல்லாமுணர்ந்துணர்த்தக்
கற்றுளதாய்க்காணேன்களித்து. (256)

இதுவுமது. இதனை விலக்குருவகமென்றுங் கூறப்படும். துறை-அறுமுறைவாழ்த்தினு ளடங்கும்.

வேகத்தால்வாயுவதாம்வெண்ணீர்மைமேதகுகே
ழாகத்தாற்றூரசபிலாதிபா—மோகநிலை
காய்ந்தவுணர்வாற்சுகனுங்காசின்றயிந்திராணு
லாய்ந்துணர்ந்தவானரசிங்கம். (257)

இது ஏதுவுருவகம். வெண்ணீர்மைமேதகுகேழாகம் - வாலி தாங் தன்மை பெருமையோடு பொருந்துங் திருமேனி. தாரசயிலாதி- வெள்ளியாங்கயிலை. மோகநிலை - காமத்தினிலைமை. சுகன் - சுகப் பிரமவிருடி. ஆசின்று - குற்றமின்றி. அயிந்திரநூல் - அயிந்திர வியாகரணம். வானரசிங்கம் - சிறியதிருவடி. திணை - வாகை. துறை - சால்புமுல்லை.

முத்திரைக்கையன்றுமுளரிமலர்திதுபூந்
தொத்தணிமார்பன்றுசுவணகிரி—பத்தி
திகழானனமன்றி துதிங்கள்வாச
மகிழ்மாறனன்றிவனுமால். (258)

இது அபனுதியுருவகம். பத்தி - பரமபத்தி; அஃதாவது அன்பு. சுவணகிரி - பொன்மலை. இதனுள் மகிழ்மாறனன்றிவனு மால் என்பது உருவகம். திணையுந்துறையு மிதுவுமது.

விடமனையகட்காவிமெல்லியலாள்சோர்ந்தாள்
குடவரைபுக்கான்வெயிலோன்கொல்வா—ரடல்வேடர்
வேலவனேகங்குல்விருந்தருந்திவைகறைவாய்
மாதுறையூர்க்கெய்தன்மதி. (259)

இஃது துவமையுருவகம். பகுதி - உடன்போக்கு. துறை - நெறி விலக்கல்; விருந்துவிலக்கென்பதுமிது. இதனுள், விடமனையகட்காவி என்ப துவமையுருவகம். "மையோகுவளைக்கண்வண்டினம்வாழும்" என்பது மிது.

பொற்பிற்குரியதிருமால்கரிசொன்னபோழ்தினிலச்
சொற்பிற்படச்சென்றுதவியமாயன்றுவரையின்வாய்
வெற்பிற்புடைக்குந்தனவேழமானவிலங்கறுத்தாற்
கற்பிற்குரியவிப்புல்லோதடுத்திடைகாப்பதுவே. (260)

இதுவு முவமவுருவகம். இதனுள் வெற்பிற்புடைக்குந் தன வேழமென இடையி லடையடுத்து வந்தவாறுங் காண்க. பகுதி - மணஞ்சிறப்புரைத்தல். துறை - அக்கினிசாட்சியாகத் தலைவன் றலைவியைக் கைப்பற்றித் தீவலம் செய்து வசிட்டனையு மருந்ததி

யையு மிருவருங்கண்டு மனைவறைக்கட் பள்ளியிடத்தா ராயகாலைத் தலைவ னருமறைச்சடங்கிற்குப் படுத்ததருப்பையைநோக்கித் தலைவி காதலையுந் தனதாற்றாமையையு முட்கொண்டுரைத்தல். (நகூ)

122. ஒழிவறவுருவகமுடனேயுவமையு
மொழிவதற்கடங்காமுறைமையவாகலின்
மொழிபப்புகும்யான்மூதுணர்விலனு
லிவற்றினுக்கிதனுளிசைத்தவையொரீஇவரு
மவற்றையுமிவற்றினகப்படவுரைகொளீஇ
முற்றவுணர்த்திபமுறைமையவாக்குதல்
கற்றோரறிவின்காட்சியதாகும்.

(எ - ன்.) மேற்சொல்லிய வுருவகமு முவமையு மென்னு மிரண்டிற்கும் புறனடையுணர்—ற்று.

(இ - ள்.) உருவகமு மதற்குக் காரணமாகிய வுவமையு மென்னு மிரண்டலங்காரமு முற்றக் கூறுவதற் கடங்கா முறைமையை யுடையவாகலானு மவற்றைக் கூறுவதற்காக முந்துநூலுணர்ந்தோ ரவையின்கண் புகுதாநின்ற யான் முதிய வுணர்விலனுதலானும் இக் கூறிய விரண்டலங்காரத்திற்கு மிந்நூலுள் யானிசைத்த தொகை விரிகளைக் கடந்துவருவனவா முருவக வுவமங்களையுங் கூறியவிவற்று ளகப்படுவதாக வுரைகொளுத்தி முழுது முணர்த்தியமுறைமைய வாக்குதல் அலங்கார முதலிய விலக்கணங்களோடு மிலக்கியங் களையு முற்றக்கற்றோ ரறிவினுக் கழகென்றவாறு. உவமையின் வழி பிறந்த துருவகமாதலி னுவமைக் குரைக்கத் தகுவனவெல்லா முருவகத்திற்கு முரைத்துக்கொள்க. ஈண்டுருவக முற்கூறியதனு லதிகார மிடையறுதெனக்கொள்க. கூறியவற்றை யொரீஇயின போல் வருமவற்றுட் சிலவருமாறு :—

காமரதத்தோகைகளிவண்டினமுலவுந்
தாமரைசாரம்பற்றளிநறவுண்—டேமுறுபே
ரின்பத்தினும்பெரிதேபெவ்வுண்மாலைப்பணிந்து
துன்பற்றவர்சேர்சுகம். (261)

இது பேதத்தை யபேதமாக்கின வாய்பாட்டால்வந்த வுருவகம். இதுமுதலே உவமேயமு முவமவுருபுந்தொக்க தொகையுருவகம். என்னே? கண்ணுகிய வண்டினம் முகமாகிய தாமரை வாயாகிய வாம்பல் பானமாகிய நறவு என்பன முறையே தொக்கதா லென்றறிக. ஆனுல் அவற்றினே யவ்வாருக்கியதென்னே ? வண்டினம் போன்ற கண்களுலவுந் தாமரை போன்ற முகத்திலென்பனவோடு மேனேயவுந்தொக்கதாக விரித்துத் தொகையுவமமாக்கப் பெருவோவெனின், ஆகாது ; என்னே ? முற்றுவமை வாய்பாடாக வுவமமொன்றனேயுங் கூறும்வாய்பா டுவமை யுருவக மென்னு மிரண்டற்கும் பொதுவாய்பாடேனு மீண்டு மருட்கையென்னு மெய்ப்பாட்டுவயத்தனுகிப் புணர்ச்சியை மகிழ்ந்து பேதத்தை யபேதமாக்கி விதந்துரைத்தானுதலிற் ருெகையுருவகமாக வுரைகோடலேயாம். காட்சிக்கு "திருவளர்தாமரை" யென்னு முதற்பாட்டு மருட்கை வயத்தனுகிக் கூறிய இவ்வாய்பாடென்றுணர்க. அற்றேல், இதனகத்துப் பேதத்தை அபேதமாக்கிய தியாதோவெனின், தாமரைவேறு முகம் வேருயிருக்கவு முகத்தைத் தாமரை யென்றே பேதமறக் கூறிய வாற்ருனு மேனேயுவமேயத்தினேயு மவ்வாறே கூறியவாற்ருனு முணர்க. பகுதி - இயற்கை. துறை - புணர்ச்சி மகிழ்தல்.

மேலிருந்தவிண்ணேர்விபத்தக்கசெம்மையதாய்ப்
பாலிகையுட்டெள்ளமுதம்பாலிக்குஞ்—சால்புடைய
திங்களேக்கண்டான்மாறன்செம்பொற்றுடரியுள்யார்
தங்களுளங்கோடாதவர். (262)

இது அபேதத்தைப் பேதமாக்கிய சிலேடைவாய்பாட்டான் வந்த அற்புதவுவமை. இதனுள் அபேதத்தைப் பேதமாக்குதல் சந்திரனெருவனன்றிப் பிறனெரு சந்திரனின்முகவுஞ் செம்மையுடைய தாய்ப் பாலிகையுட் டெளிந்த அமிர்தத்தை விளம்புந் திங்களெனப் பேதித்துக் கூறினமையானறிக. பாலிகை - வள்ளமும் அதரமும் ஆதலாற் சிலேடை. பகுதி - இதுவுமது. துறை - நலம்புனைந்துரைத்தல். இதுவுந் தொகைநிலேயுளடங்கும்.

காவிற்பிறவாக்கனகக்கொடிகமல
வாவிக்கடங்காமடவன்னம்—பூவிற்

பிறவாநறுந்தேறல்பேர்நகர்மால்வெற்பி
லுறவாய்நிறையுண்ணூரு. (263)

இது சம்பந்தமுள்ளதைச் சம்பந்தமில்லையாக்கி வந்த வுருவகம். அன்றியும், காவினும் வாவியினும் என்றமையால் விரோதவலங் காரமு மிதனுள் விளைப்பாருமுளர். "மலையிடைப் பிறவா மணியே யென்கோ, வலையிடைப் பிறவா வமுதே யென்கோ" என்பனவற்றை யும் விரோதவலங்கார மாக்குமாறுபோல என்றறிக. பகுதி - இதுவுமது. துறை - இயல்பிடங்கூறல்.

கோதிலாப்பொன்னைக்குழைத்துமதன் றூரியக்கோல்
காதலாற்கைப்பற்றிக்காட்கரைமால்—போதங்
குழைந்தருள்பொற்கொம்பிற்குறித்ததென்கோவின்பந்
தழைந்தருளிக்கொம்பினையேதான். (264)

இது சம்பந்தமில்லாததனைச் சம்பந்தமாக்கிக் கூறிய மோரு வுவமை. விகாரவுவமை அதிசயவுவமை எனினுமாம். பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந் துரைத்தல்.

மாயன்குருகாபுரியனையமாதரா
ளாயந்தொழுவாழருமைபுரிற்—றாய
கனவென்கோகூடிக்குழைந்ததனைக்காமர்
நனவென்கோயாதென்கோநான். (265)

இதனுள், குருகாபுரியனையாளென்பது குருகாபுரி செயற்கையா னன்றி யியற்கையானு முதலே யழகுடையதுபோன் றிவளு மியற் கையான் அழகுடையளென்பது தோன்ற நின்றமையா லிதுவு முவ மையு ளோர் பேதம். பகுதி—இதுவுமது. துறை—ஆயவெள்ளம் வழிபடக் கண்டிது மாயமோவென்றல். "பாயும்விடையரன் றில்லை யன்னாள்" என்பது மிது. "வில்லே ருழவர் பகைகொளினுங் கொள் ளற்க, சொல்லே ருழவர் பகை" எனவும், "நல்லார்கட் பட்ட வறு மையி னின்னாதே, கல்லார்கட் பட்ட திரு" எனவும், இவைபோல்வன பிறவு மிவற்றின்பாற் கூட்டியுணர்க.

திருந்திழையாய்மாறன்றிருவாய்மொழியே
மருந்துபிறவிப்பிணிக்குமாதர்—தரும்பிணிக்கு
வாய்ந்தமருந்தென்பார்மடல். (266)

இது மாதர்தருங் காமமாகிய பிணிக்கென்பது மாதர்தரும் பிணிக்கென மாட்டேறிலாதுவந்த வுருவகம். பகுதி—மடல். துறை- உலகின்மேல்வைத்துரைத்தல். பா - இரண்டு விகற்பத்தால் வந்த நேரிசைச்சிந்தியல்வெண்பா.

வழிமதுத்தார்மாறன்மணிவரைமேன்மாதர்
விழியெழுதினுமிணைவெற்பெழுதினு
மொழியெழுதலாமோமொழி. (267)

இது மாட்டேறில்லாதுவந்த ஏகாங்கவுருவகம்; என்னை? முலையென்பவற்றை யுவமைவாய்பாடுதோன்றக் கூறினமையா லுபயமுலையாகிய விணைவெற்பெனக் கோடல்வேண்டுமென் றுணர்க. பகுதி - இதுவுமது. துறை - எழுதவரிதென்றல். பா—ஒருவிகற்பத்தால் வந்த இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

நாணுநிறையுநறுநுதாஅன்மாணிழையார்
தந்தவெங்காமத்தழல்கதுவவெந்து
தருமடன்மாவேற்றந்தரும். (268)

இஃ தேகதேசவுருவகம். இதனுள், நாணும் நிறையுமாகிய பஞ்செென வுருவகஞ்செய்யாது காமத்தழலென வொன்றையே யுருவகஞ் செய்தமையா னென்றறிக. பகுதி—இதுவு மது. துறை - நாணழி வுரைத்தல். பா - அடிதொறூஉமொரூஉத்தொடைபெற்றுவந்த இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

தருமன்றண்ணளியாற்றனதீகையால்
வருணன்கூற்றுயிர்மாற்றலின்வாமனே
யருமையாலழகிற்கணையைந்துடைத்
திருமகன்றிருமானிலமன்னனே. (269)

என்பதும் ஒருவகையுருவகம்; என்னை? தண்ணளியால் மன்னனாகிய தருமன், தனதீகையால் மன்னனாகிய வருணன், உயிர்மாற்றலால்

மன்னனாகிய கூற்று, அருமையால் மன்னனாகிய வாமன், அழகால் மன்னனாகிய காமன் என வுருவகஞ் செய்துணர்க.

மன்னர்மடங்கன்மறையவர்சொன்மாலே
யன்னநடையினார்க்காரமிர்தந்—துன்னும்
பரிசிலர்க்குவானம்பனிமலர்ப்பைந்தா
ரெரிசினவேற்றானேயெங்கோ. (270)

என்பதும் கூறிய ஒருவகை யுருவகம்.

வருந்தியீன்றாண்மறந்தொழிந்தாள்வளர்த்தாள்சொற்கேட்டில் கடிந்தாண், முருந்தின்காறுங்கூழையைமுனிவார்நின்னேயென்முனிவார், பொருந்திற்றன்றாலிதுவென்னாய்பொன்றுமளித்திவ்வுயிரென்னாப், திருந்துசோலைக்கருங்குயிலேசிலம்பவிருந்துகூவுதியால். (271)

என்றற் றொடக்கத்தன வுருவக இலக்கணம்விளங்கநின்றில வேறு மதனிடத்து மயக்கிநின்றன கொள்க. என்னே கொள்ளுமா றெனின், ஈன்ற குயிலாகியபெண் மறந்தொழிந்த காக்கையாகிய பெண் இல்கடிந்த பெண்குயிலாகியபெண்ணே யெனக் கொள்வதை மயக்கி நின்றமை காண்க. (௩எ)

௩-வது உருவக முற்றும்.

---

## ௪-வது உள்ளுறையுவமம்.

123. உணர்வதற்கரிதாமுவமப்போலி
புணர்திறம்வினையேபொருண்மெய்யுருவெனப்
பிறப்பொடுமைந்தாம்பெற்றித்தாகிச்
சிறப்புறுதிணைகளிற்றெய்வதமொழிந்த
கருப்பொருள்களனைக்கட்டுரைபயின்று
முவமையோடெதிருள்ளுறுத்தனுற்றபலா

யுவமச்சொற்றெகலொருதலையாகியு
மன்பினதளவாமகத்திணையிருவயி
னின்பதுன்பத்திசைதிரிந்திசையாத்
துணைவன்றுணைவிதோழிசெவிலி
யிணையெனும்பாங்கன்பாணனென்றிவராற்
கொள்கையின்வருங்குறிப்புரைத்தாகும்.

(எ-ன்.) வைத்தமுறையானே யுள்ளுறையுவமமென்னுமதற்குப் பொதுவிலக்கணமுணர்—ற்று. உவமப்போலியென்று மதற்குப் பெயர்.

(இ-ள்.) உணர்வினு லுணர்தற்கரிதாகிய வுள்ளுறையுவமமென்பது முற்கூறிய வெளிப்படையுவமம்போல வினைபயமெய்யுருவு காரணமாகத் தோன்றுமவற்றினேடும் பிறப்புங்கூட்டி நிலைக்களனைந் தினேடு மவ்வவ நிலங்களிற் றெய்வத மொழிந்த கருப்பொருணிலைக் களனுகவு மழகியவுரையுட் பயின்றும் வெளிப்படையாகவரு முவமப் பொருளோடும் அதற்கெதிராகிய வுவமேயப்பொருள்களை யுள்ளுறுத் துக்கொள்ளும்படித்தாயு முவமேயம் பாடலுட்பயின்றுவாராது அயலாகியு முவமவுருபு தொகுதலொருதலையாகவுங் களவு கற்பென்னுங் கைகோளினிருவகையினு மின்பதுன்பங் காட்டுவனவா யிசைதிரிந் திசைப்பனவாய்த் தலைவன் றலைவி முதலிய பெயர்களாற் குறிப்புரையாய்வரு மென்றவாறு. உணர்வதற்கரிதா மென்பதனுல் ஏனையுவமம் புலப்படக்கூறுத வுள்ளுறையுவமத்தைத் தருகின்ற கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்துக் கூடிநிற்குமென்பதாம். கொள்கையின் வருமென்பதனுல் "கிழவிசொல்லினவளறிகிளவி, தோழிக்காயி னிலம்பெயர்ந்துரையாது" எனவும், "கிழவோற்காயினுரனொடுகிளக்கும், ஏனோர்க்கெல்லாமிடன்வரைவின்றே" எனவும், "கிழவோட்குவமமீரிடத்துரித்தே" "கிழவோற்காயினிடன்வரைவின்றே" எனவும், "தோழியுஞ்செவிலியும்பொருந்துவழிநோக்கிக், கூறுதற்குரியர் கொள்வழியான" எனவும் வருங் கூற்றுக்களோடும் தோழியு முறையரும் தலைவன்கொடுமை கூறும்வழியினும் பிறவழியினுந் தலைவனூரின்கண்ணுள்ள கருப்பொருள்களா னவைசொல்லத் தலைவற்கே யன்றியுந் தலைவிக்கேற்றனவா முவமத்தன்மைத் தோற்றத்தனவா

யுள்ளுறையுவமங் கோடலும் பிறவாறு வருவனவா மவைகளுங் குறிப்புரைத்தாகு மென்பதனுறு முய்த்துக்கொள்க. பிறப்பாவது அவ்வவ நிலங்களி னிழிந்தபிறப்போடுஞ் சார்த்திக்கூறல். உள்ளுறுத்தல் - உள்ளேகுறித்தல். ஒருதலை - நிச்சயம். அகத்திணையிருவயினென்பது இறந்தது போற்றலென்னுந் தந்திரவுத்தி. இசைதிரிந்திசைத்தலென்பது செய்யுட்சொற்க டம்பொரு ளுணர்த்தாது வேறுபடக் கூறுதல். இசையா என்பது எதிர்மறை. இசையாவது சொல். சொல்லாவது எழுத்தினுலாக்கப்பட்டுப் பொருளறிவுறுத்து மோசையாகலி னிசையென்றார். இஃதாகுபெயர். என்னை? "இசை திரிந்திசைப்பினுமிசையுமன்பொருளே, யசைதிரிந்தியலா" என்னும் பொருளியற் சூத்திரத்தானுணர்க. இவற்றிற்கெல்லாம் செய்யுள் வருமாறு:—

காமர்பன்மலர்களுளியபொதும்பர்
மாமரப்பணையின்மதுகரமிழைத்த
முதுநறுந்தேறனெதுமலர்முன்னுபு
கொளத்தகுமரபிற்குன்றவாண
வரைதலின்வரையாதொழுகலினிருவிரு
மாறுபட்டொழுகியமதியினிராகலிற்
றிருமகிழ்மாறன்றிருவருட்கிலக்கா
யொழுகாதவருளத்தொன்று
மழுகாமதியின்மறுகுவல்பானே. (272)

என்பது வினையுவமப்போலி; என்னை? மாமரப்பொதும்பரகத்து மதுகரங்கள் தமக்குப் பின்னைக்கு நுகர்வதாக மறைத்துவைப்ப விளைந்ததேனை நொதுமலராராய்ந்து கைப்பற்றிக்கொடுபோங் குன்றவாணனே யென்றதனுற் களவினேடுங் கூடிய கூட்டத்தை நீட்டித்துப் பின்னரிவளை வரைந்துகொள்ளக்கடவேனென நினைந்தநினைவு தவறும் படி பருவமுதிர்ந்த விவளையும் பிறர்நயந்து பொன்னணிந்து கொடுபோவ ரதுபோல வென்பவாகலா னுவமைக்குப் பிறிதுபொருள் எதிர்த்துவமஞ்செப்பா தாண்டுப்பிறந்த கருப்பொரு ளவற்றோடு முள்ளுறுத்த வைத்தலி னிஃ துள்ளுறையுவமமாயிற்று. அவற்றோடு மிஃது நொதுமலர் கொடுபோவ ரென்னுந் தொழிலோடு

மிவளையும் பிறர்கொடுபோவரென் னுந்தோழி லுவமங்கொள்ள நின்ற மையின் வினையுவமப்போலியாயிற்று. அன்றியுங் காமர்பன்மலர் களுலியபொதும்பரென்பது நற்றாய் தோழி செவிலி முதலியோர் வைகு மனைக்குவமையாம். திணை - குறிஞ்சி. கைகோள் - களவு. கூற்று - தோழி. கேட்போன் - தலைவன். இடம் - முன்னிலை. காலம்- நிகழ்வு. பயன் - இற்செறிவுரைத்து வரைதல்வேண்டு மென்றது. மெய்ப்பாடு - அச்சத்தைச்சார்ந்தபெருமிதம். பகுதி - பகற்குறி. துறை - வருத்தங்கூறிவரைவுகடாதல். காமர் - அழகு. ஒழிந்தனவு முரையிற்கொள்க.

இறைவறங்கூராவீர்ந்தண்பொய்கைத்
துறைதொறுந்துவன்றதோடவிழ்பன்மலர்
மாந்துபுவயினிறைவெய்தியகவரி
யேங்தெழின்மாடத்தீன்றகன்றுள்ளிப்
படர்வுழிப்படர்வுழிப்பணைமுலைக்குறுங்கண்
மடைதிறந்துவளகமடுநிறைத்தொழுகு
பாற்றடினியினயப்பழிதீர்பேடையைப்
போற்றறுகளிப்பிற்புணர்ந்தவண்மூழ்கிப்
புனிதமுற்றிருசிறைபுலர்த்தியவோதிமந்
தணந்தயற்கழனிச்சாதிப்பெடைகளை
மணந்ததனனந்தலைமள்ளர்தாமுழுத
நாற்றடியதன்கணறுந்தழைபதனழிந்
தூற்றெழுகளங்கவுறுபுனலாடிப்
பண்டுதான்மரீஇயபானிறப்பேடையைக்
கண்டுதான்வளைக்குங்காமருகடல்கெழு
கண்ணகன்ஞாலங்கண்டுகண்ணயப்பான்
விண்ணவர்வியப்பான்மேதகுபடிவத்
தரவணைத்துயின்றருளரங்கத்தமுதி
னுரவுநீர்க்காவிரிக்குறுபுனலூர
புல்லேன்பொதுவுணின்மார்பெனச்
சொல்லேன்புன்மனத்தொடர்புடையேனே. (273)

இதுவும் வினையுவமப்போலி. இதனுள், இறைவறங்கூரா என்பது சிறிதும் வற்றாதவென்றவாறு. ஈர்ந்தண்பொய்கை - மிகவுங்

குளிர்ந்தபொய்கை. "துறைதொறுந்துவன்ற.................கவரி" - இடந்தோறுநெருங்கின இதழ்விரிந்த தாமரை முதலிய பலமலரையு முண்டு வயிற்றை நிறைத்தல் பொருந்தின காரான். "ஏந்தொழில்... .........தொடர்புடையேனே" எ - து உயர்ந்த . அழகையுடைய மாளிகையினிடத் தின்றகன்ற குழக்கன்றை நினைந்து செல்லுமிடத்து முறுகின முலைக்குறுங்கண் மடைதிறந்து பள்ளவாவிகளைப் பெருக்கி யோடாநின்ற பாலாற்றின் பக்கமே குற்றமற்ற தனதுபேடையைப் பாதுகாப்பற்ற களிப்பினோடும் புணர்ந் தப் பாலாற்றின்மூழ்கிப் பவித்திரமுற் றிருசிறகரும் புலர்த்திய சேவலோதிம மப் பேடையை நீங்கி யயல்வயற் கூட்டப் பெடைகளை மணந் தக்கழனிநடுவண் மள்ள ருழுத நாற்றுடிநனைந்தல நறியதழைக ளமூழ்கி யூற்றிருந்த சேறு மிகுந்த புனலிடையாடி முன்னர்த்தான்மணந்த வெண்ணிறப்பேடை யைப் புணர்ச்சிகுறித்து வளையும், அரவணைத்துயின்ற அரங்கத் தமிர்தி னுரவுநீர்க்காவிரிக்குறுபுனலூரனே! புல்லேன். பரத்தையர் பொதுவுணின்மார்பெனச் சொல்லேன் புன்மனத்தொடர்புடையே னென்றவாறு. பொதுவுணல் - பரத்தையர் பலரா யேககாலத் தின் பத்தைப் பொதுவாக அநுபவித்தல். இதனுள், பரத்தையரென்பது சொல்லெச்சம். ஒழிந்த அகல முரையிற்கொள்க. அஃதாக, இதனை யும் வினையுவமப்போலி என்ற தென்னை யெனின், தனக்குரிய பேட் டோடும் பாலாற்றினைபற்புணர்ந் ததன்பின்னர் அப்பாலாற்றின் முழு கிபசேவ லன்னப்பெடையை நீங்கி யயற்கழனியிடத்து வேற்றுப் பேடைகள் பலவற்றையும் புணர்ந் ததனள்ளிடை நாற்றுடிக்களங்க வுறுபுனலின் முழுகி யக்களங்கப்புனல் புலராமுன்னம் பண்டுதான் மரீஇயபேடையைவளையு மென்பதனால் நமதகச்சோலையினடுவட் பனிநீராற் பூரித்த புழுகுசுனையினதய லென்னோடும் பாதுகாப்பற்ற களிப்புடன் உவர்ப்பில்லா வின்பத்தைத்துய்த்தப் பவித்திரமெய்த வேண்டி முழுகி யிரவாடைகனைந்து கனைந்த குழற்கற்றை புலர்த்தி யெதிர்முகமாக விருந்தநீ நீங்கி யெனது மாளிகைக் கபலே சேரிப் பரத்தையர் பலரையுந்தோய்ந்த வேர்வோடுங் குழம்பிய மான்மதச் சேறு புலராமுன்னம் வாயில்வேண்டாதவந் தெனது பள்ளியிடத் தானுதி மணிமேகலையைப்பற்றுதற் கிருகைபால் வளையாநின்று யென் னும் உவமேபவினை கருப்பொருள் களனாகத் தோன்றிநின்றமையா

னென்றுணர்க. இது திணை - மருதம். கைகோள் - கற்பு. பகுதி - பரத்தையிற் பிரிதல். கூற்று - தலைவி. கேட்போன் - தலைவன். இடம் - முன்னிலையாயபள்ளியிடன். காலம் - நிகழ்காலம். பயன் - ஊடறீர்தல். மெய்ப்பாடு- வெகுளியைச்சார்ந்த வுவகை. இதற்குத் திணையுட்டிணை- பெண்பாற்கூற்றுப்பெருந்திணை. துறை - இல்லவைநகுதல்; அல்லது பரத்தையிற்பிரிந்துவந்தா னுற்றுமையேவாயிலாகப் புகுந்த தலைவ னூடறீர்கின்றளாய இற்பரத்தை கூற்றுமாம்.

குவளையுங்குமுதமுந்தவளவொண்பதுமமுந்
திசைதிசையோசனைதேங்கமழ்திவ்விய
வசைதீரந்தண்மயிலைவேலிப்
பொய்கையுட்செவ்வியிற்பொதியவிழ்புனிதச்
செய்யதாமரைத்தேறலையளவளா
யுவட்டாதருந்தியுமுருகியசுரும்பதன்
கரைசேர்வெள்ளிடைக்கலித்தநீர்முள்ளியிற்
பாடவிழ்ந்தயற்சுரும்புளர்ந்துணப்பதனழி
பூநறுவுண்டின்புறுபுனலூரன்
றெண்டிரைக்காவிரித்திருவரங்கேசன்
றொண்டர்தந்தொண்டர்தொடர்பினையொரீஇப்
போதம்புறந்தரப்புரைதீரின்னுயிர்க்
கேதங்கொள்ளுநரிதைப்பவிட்டகலா
தொல்லாப்புலன்வழியுய்க்கும்
புல்லறிவினுட்குடிபுகும்புன்மையனே. (274)

இது பயவுவமப்போலி. என்னை? பொய்கையுட்பவித்திரச் செய்யதாமரை பருவத்தின் மலர்ந்து புதிய தீந்தேறலை யளவளாயுண் ணத்தெவிட்டா துள்ளமுருகிய சுரும் பதன் கரையினில் மலிந்த முள் ளிடை நீர்முள்ளியை முறுக்கவிழ்ந்தபருவத்து வேற்றுச்சுரும்பு பலவுந் துவைத்துண்டைச் செவ்வியிழந்த பழம்பூவிற் சுருங்கியதேனை யுண்டின்புறுமெனவே நமது தலைவர்க் குயர்ந்தமகளி ரிழிந்தமகளி ரென்பதில்லை; புணர்ந்தின்புறுதற் கியாவருமுரிய ரென்னும்பய னுள் ளுறுத்திக்கொள்ளக்கிடந்தமையா னென்றுணர்க. திவ்விய - நல்ல. புனிதம் - பவித்திரம். அளவளாய் - உடலுமுயிருங் கலந்து. வெள்

ளிடை - வெளி. கலித்தல் - மிகுதல். புன்மையன் - அறிவினுற் சிறுமையன். வெளியினிற்குநீர்முள்ளி யெனவே வீதியினிற்கும் வேசை என்பதாயிற்று. ஒழிந்த அகலம் நம்பெருமாள் மும்மணிக் கோவைவிரித்துரையுட் காண்க. திணையும் பகுதியு மிதுவுமது. துறை - உழையரியற்பழித்தல்.

இனியதெள்ளமிர்தாயெறித்தெழுகிரணப்
பனிமதியகடுழப்பணைநெடும்பொங்கர்ப்
பூந்துணர்ததைஇயபொழிலெழினள்ளிடை
யீர்ந்தண்கோட்டகத்தினமலர்முற்றிய
பொதியவிழ்தாமரைப்பொகுட்டாசனத்து
மதிநலனுறப்புணர்மாண்புடைப்பெடையொடும்
வீற்றிருந்தின்புறுமேன்மையோதிமமொரு
பாற்படுகரைசேர்பன்மரக்காவிற்
குறுகுபுகொடுமுட்டாழைக்கூன்சினை
வெறுநிலத்தடர்தரவிரித்தபாசடைமேற்
றளிநறைமார்துபுசார்பெடைக்குருகொடு
புணர்தனுநலனுறும்புனன்மலியூரன்
பூமகளிலைகுலாம்பூண்முலைமுகடுழத்
தேமவிழ்பசுந்துழாய்த்திருமணிமார்பன்
றென்னரங்கேசன்றிருவருட்கிலக்கா
மானுடையோர்களுயிர்த்துணையெனவா
ழில்லறம்பழிபிறங்காதிருந்தில்லி
னகனமர்ந்தானுதுறையுந்
தகவேதுமிலாததவறுளோனே. (275)

இதுவும் பயவுவமப்போலி. என்னை ? இருமனமு மொருமனம் போலப் பேரானந்தமெய்தப் புணர்ந்தபேடையோடும் பொதியவிழ்ந்த தாமரைப்பொகுட்டி லரசுவீற்றிருந் தின்புறுஞ் சேவலோதிம மப் பேடையைப்பிரிந்து வாவிக்கொருபக்கமான கரைசேர் பன்மரக்காவின் புறத்து வளைந்த முள்ளுடைத்தாழை முடச்சினை வெறுநிலத்துத் தகடுபடவிரித்த பாசடைமேலிருந் ததனிடத்துத் துளித்துவிழுந் தேனையுண்ட களிப்பினுல் வெளுத்த சிறையுடைப் பெடைக்குருகைப்

புணர்தலு மானந்தமெய்தும் புனன்மலியூரனெனவே இப் பொற்புடையில்லின்கணிருந் திக்கற்புடையவளோடு மிருமனமுமொருமனமாகப் புணர்ந்து பேரானந்த மெய்தியபின்னர் யாம்புடைசூழ அரசுவீற்றிருந்தோன் இவளைநீங்கி எமது மாளிகைக் கயலாய்ப் பொலிவிழந்த சேரிப்பரத்தையைப் பெண்டன்மைமாத்திர மொத்தலிற் காமபானத்தையுண்ட புத்திப்பிரமையா லுவர்ப்பின்றிப் புணர்ந்ததனு லின்பமெய்துமூரன் றகுதியொன்றுமில னென்றுரைத்தபான்மையுள்ளுறுத்திக்கொள்ளக் கிடந்தமையா னென்றுணர்க. இதற்கும் விரித்துரை நம்பெருமாள்மும்மணிக்கோவையுரையுட் காண்க. பகுதி- இதுவுமது. துறை - தோழிதலைவனை யியற்பழித்தல்.

நீர்நிலைமுற்றியநிழன்மலிசோலையுட்
கார்வழங்காதகாலையுங்கவின்பெற
வேர்முதற்பழுத்துவியன்சினைப்பலவு
வளங்கெழுநாடவெம்மணிபுரைமாண்கவின்
புறந்தருமாயினும்புனிதநின்னின்று
லரவணைத்துயிலமர்ந்தருளரங்கேசன்
றாநீர்க்காவிரித்துறைபடிந்தல்லதை
யொல்லேன்மலரமளியினுநப்
புல்லேன்பரத்தையர்ப்புணர்ந்தநின்மார்பே. (276)

இது மெய்புவமப்போலி. என்னை? கார்வழங்காத காலையும் நிழன்மலிசோலையுட் பலவு வேர்முதற் பழுத்து வாட்டமின்றி வளனெய்தினுற்போல நீ யென்னிடத்தருளின்றிப் பரத்தையர் மாட்டுப் பிரிந்த காலத்தும் ஆயவெள்ளம் விட்டுநீங்காத எனது மனையிடத் தில்லறங்கோடாது நடத்துதற்பொருட்டித்துணைப்போது முள்ளுளே னென்றதாக வுள்ளுறுத்திக்கொள்ளக் கிடந்தமையானென்றறிக. இதற்கு மொழிந்த விரித்துரை மும்மணிக்கோவையுரையுட் காண்க. பகுதி - இதுவுமது. துறை - அணைந்தவழியூடல்.

உலைவினீரழுவத்துறுசிறையதன்க
ணலைகொழித்தலைதொறுமலைதொறுமொத்துன்
டழுங்கனுரெய்தியயாக்கையதாகியுந்

தன்னுல்வளர்க்கத்தகுசினையதன்மேன்
மன்னுதாவின்வளர்மீன்வைத்தகண்
வாங்காதுய்த்துவளர்புனலூரற்
கேவலிற்பிழையாவின்னிசைப்பாணர்
புதுவதுவாய்வழிபிழைத்திவண்போதரு
மதுசினைந்தருவிருந்தளித்திடற்கந்தோ
மதுமகிழ்மார்பினன்வழுதிநன்னாட்டவர்
குடிநிறையைக்காப்திறன்குறிப்பதுமின்றாற்
காடோடுலவுகட்காரிகை
யாதோகறிபிங்கினிதமைப்பதுவே. (277)

இதுவு மெய்யுவமப்போலி. என்னை? அழிவில்லாத நீர்க்கயத் துண் மிக்க சிறையிடத்துத் திரையெடுத் தெற்றுந்தோறு மெற்றுந் தோறு மதனாலெற்றுண்டு மிகவுர்துன்பமெய்திய யாக்கையோடுங் கூடிய மீன் றன்னுல்வளர்க்குஞ் சினையின்மேல் வைத்தகண் வாங் காது வளர்த்தாற்போல யானுந் தலைவர்பிரிந் தெனக்களித்ததுன்ப மென்மேனியை வருத்தவு மம்மேனியோடு மில்லின்கணிருந்து மென் னாலோம்பப்படு மில்லறமோம்புதற்குளனானேனென்பதுள்ளுறுத்திக் கொள்ளக்கிடந்தமைபா னென்றறிக. இதுவும் பகுதி யது. துறை - பாணனைப்பழித்தல்; தலைவிகூற்று. இதற்கும் விரித்துரை கூற வேண்டுவதில்லை.

பன்மலர்களுலியபழுமரச்சோலையுட்
டன்னிழறுணையாத்தளிர்த்தமௌவலின்மலர்
விரிகதிர்தெறுதலின்வெம்மையுற்றுணங்க
முட்புறக்குடக்கனிமுடப்பலவதனயற்
செங்கிடைமலர்கவின்சிறப்பவுநிழற்று
மொண்புனலூரற்குறுபழிவிளைக்கும்
யாமேதிலமேதிலமெனவெங்கையர்
மாளிகையயின்றுமதங்கருத்திலாற்
புலிப்பாவலர்புகழ்புரவலன்மதுர
கவிப்பாவலன்புகழ்கருணையங்கடவுள்
மதுமகிழ்மார்பினன்வண்குருகூரன்

சதுமறைப்பொருளாற்றருதமிழ்மறையினுண்
முதுமொழியுணராமூடமதடைந்த
மனனகமலமிகமறுகுன
ரினமெனலொன்ருயிகழ்பொய்ம்மையனே. (278)

இது நிறமல்லாத பண்புவமைப்போலி. என்னை? சோலையுட் டன்னிழலே துணையாகத்தளிர்த்த முல்லைக்கொடியின் மலரானது விரிந்த கதிர்தெறுதலான் வெம்மையுற்றுணங்க முடப்பலவு தனக் கயலாகத்தோன்றின செங்கிடைமலர்க்கழகுமிக அதற்கு நிழல் செய்யுமதுபோலத் தலைவனுந், தன்னையேதுணையாக ஆவிதளிரா நின்றவிவளுங்காமத்தீயால் வெந்து மேனிவாடத் தனக்கயலாய பரத்தையர்க் குடலுமுயிருந் தளிர்ப்ப நலங்கொடாநின்ருனெனப் பண்புள்ளுறுத்திக் கொள்ளக்கிடந்தமையானென்றுணர்க. பகுதி - இதுவுமது. துறை - பாணனெடுவெகுளல். கூற்று - தோழி.

ஒன்ருய்ப்பரந்தவுறுவளிகறங்கலின்
மின்ருழ்பன்மீன்மிளர்விசும்புமுசினை
சுமைமலிந்தொசிதரத்துணர்த்தமென்பூமுகை
பொறிச்சுரும்புளர்தொறுமுளர்தொறும்பொதும்பருண்
முறுக்குடைந்திழிதரூஉமொய்ந்நறுந்தேறல்
பரந்துபன்முகத்தவாய்ப்பவளக்கொடியொடுங்
குரூஉக்கட்பரூஉத்தாட்குடம்புரைசெருத்தற்
கயவாய்மேதிகட்கழுநீருண்
டுயவால்வைந்நுதித்தொடர்நெறிமருப்பிற்
புறக்காழ்வயிரப்பூங்கழைதடிந்துகு
நிறக்காழ்நித்திலநிரந்தரம்வரன்றயல்
வெள்ளிடைநிவந்தமேதகுசுவலினை
யுள்ளுயிர்ப்பெடையையுறையுளினிருத்திப்
பாலுணீர்தெரித்துப்பருகுமொண்சேவ
லாலுநீர்ச்சிறைபுக்காய்ந்திரைகொணர்வலென்
றிகந்தயலிடைப்படிந்தெழுமயர்வுயிர்ப்பான்
வாலுகவைப்பெனமறுகுபுகுறுகிவீழ்ந்

தன்மையிற்றவக்குற்றச்சப்பார்வையிற்
புராதனப்பொய்கையுட்புகுபுனலூர
பொருவருதாமரைப்புதல்வனைப்பயர்த
திருமறுமார்பன்றிருவரங்கத்துப்
பொதுலப்பெண்டிர்பொதுவுணின்மார்ப
மல்லனீர்படிந்தல்லது
புல்லேலர்தீண்டலெம்பொன்னடிச்சுவடே. (279)

இதுவும் பண்புவமப்போலி ; என்னை ? சேவலன்னம் நித்திலங்கள் வெள்ளிடைநிவந்த மேதகுசுவலினை வாலுகவைப்பெனக் குறுகியிருத்தற்கு மென்மையில்லாததனோடு மறிவிற்குப் பிரமையுற்றதனால் இலச்சையுற்றுத் தன்பேடையையிருத்திப்போந்த பொய்கையுட் புகாநிற்குமதுபோல நீயுங் கற்பு நாணு முதலிய நற்குணங்களின்றித் தன முதலியனவெய்தும் பெண்டன்மைமாத்திரமேயுடைய பரத்தைபரையு நற்குணநற்பெண்டிரென்று தோயுமளவிற் பொருண் மேற்சென்று வற்கென்ற திர்க்குணத்தாராதல்கண் டதனோடு நினது புத்திப்பிரமையுற்றதைபு நினக்கிழிபெனநாணி யெம்மனையிடத்து வந்து வாயில்வேண்டாநின்று யென்ப துள்ளுறுத்துக்கொள்ளக் கிடந்தமையானென்றுணர்க. வெள்ளிடை - வெளி. நிவந்தது - உயர்ந்தது. சுவல் - மேடு. வாலுகவைப்பு - மணற்குன்றாகிய விடம். தவக்கு- இலச்சை ; நாண். கருத்துப்பொருளாய பண்புவமப்போலி. பகுதி - இதுவுமது. துறை - அணைந்தவழியூடல். இது கூற்று - இற்பரத்தை.

ஒங்கிபகுரம்புசாருவளகவயின்வயின்
வீங்கியதிணிதோண்மிடலுடைமள்ளர்
சுதைபெய்தாற்றலிற்சுடுமென்பன்முறை
ததைவுறப்படுத்தசால்பிற்றெண்ணீர்
வார்ந்துகுகவர்முழைமதகுபடர்க்குமியிற்
சேர்ந்தசைவறவிருசிறகருமொடுக்கி
மறைபுகுநோக்கின்மனப்பட்டிமையாற்
றுறைபுகுகயலினைச்சோர்புகண்டெடுத்துக்
கூர்வாய்வெண்சிறைக்குரண்டமென்பெடைக்
கார்வாபெனவருத்தியினருத்துபுதுடித்

தயல்வீழ்வதனையற்றம்பார்த்து
மிச்சிலென்றறிந்தும்விழுநெறியொரீஇ
நச்சியுண்புலவுநாற்றத்தோடுஞ்
செங்கால்வெள்ளுகிர்ச்சேவலோதிம
மொருசிறையிருந்தவோவாச்செவ்வி
யிருசிறைப்பேடையெழின்மலர்குறுகு
நளிமலர்ப்பொய்கைநல்வயலூர
திருநெடுமாயன்றிருவரங்கத்துப்
பொருணசைப்பரத்தையர்பொறித்தநின்மார்பிற்
றனக்குறியாநிற்றழுவுபுசிதைவுறின்
மனக்கிடரிழைப்பதுமன்றி
நினக்கிடருறுமானெருங்கலெம்மிடனே. (280)

இது பிறப்புவமப்போலி. என்னை? இழிந்தகுரண்டந் தன் பேடைக் கருத்துங்கயலை யதுவாய்க்கொள்ளத் துடித் தயலேவீழ்ந்த தனை மிச்சிலென்றறிந்து மறிவினுலுயர்ந்த அன்ன மதனை யற்றம் பார்த் தெடுத்துண்ட புலானுற்றத்தோடுந் தன துத்தமப்பேடை யுறையு மழகிய சேக்கையாகிய தாமரைமலரைக் குறுகுமதுபோல நீயு முயர்ந்தகுலத்துட் பிறந்து மிழிந்தகுலத்துளோர் தோய்ந்த கன்ற மிச்சிலாகிய பரத்தையரிடத் தின்பத்தைத்துய்த்து வேற்று நாற்றத்தோடு மெமது நன்மனைக்கண் ணெம்மைத் தீண்டவந்தனை யாதலா லெம்மைத்தீண்டல் பொருந்தாதெனக் கூறினுளென் றுள் ளுறுத்துக்கொள்ளக்கிடந்தமையா னென்றுணர்க. பகுதி - இதுவு மது. திணை - பெண்பாற்கூற்றுப்பெருந்திணை. துறை - பள்ளி யிடத்தூடல். கூற்று - இதுவு மிற்பரத்தை.

விசும்புதூர்த்தெழுவியன்சினைமாத்தின்
பசும்புறத்தீங்கனிபரீஇநுகர்கடுவன்
புரப்பவர்குறுகுபுலம்புறீஇப்பொங்க
ரிரிந்தலம்போதருமீர்ந்தண்சோலையுட்
புளிங்கறிவேட்டபுன்றொழிற்றன்மையர்க்குப்
பழிப்பின்றாகப்பாகுசெய்தட்ட
கோதறுமான்பாற்குழம்புபொற்கலத்தினுட்

பெய்திருந்தாறும்பெற்றியேய்ப்ப
முடவடிப்பலவின்முதிர்பொற்குடக்கனி
வேர்முதற்பழுத்துவிரிந்தபொற்றீஞ்சுளை
பதனழிபான்மைப்பாய்புனலூர
நூற்கடற்பழகியநுண்ணுணர்வுடையோ
ராற்றலிற்பரவுசிரரங்கனுக்கமைந்த
பாற்கடன்முற்றப்பருகுதற்கெழுந்த
பேராப்பெரும்பசியாளர்தம்முன்ன
ராராவள்ளத்தமிர்தமைப்பவர்போற்
சிறுவரையின்பத்துறுதுயரிழைத்ததற்
கிரத்தலிங்கியல்பன்றாற்
பரத்தையிற்பிரிதனின்பண்பாகும்மே. (281)

இது "உள்ளுறையுவமமேனையுவமமெனத், தள்ளாதாகுந்திணையுணர்வகையே" என்னு மகத்திணையியற் சூத்திரத்தான் உள்ளுறையுவமந்தானேனையுவமமென்று கூறும்படி யுவமையு முவமிக்கப்படும் பொருளுமாய்நின் றுள்ளுறையுவமத்தினைத்தரும் கருப்பொருட்குச் சிறப்புக்கொடுத்து நின்றது; என்னை? ஆகாயத்தை மூடியெழாநின்ற அகன்ற கொம்பர்மாமரத்திற் செம்மைமுற்றாப் பசுத்தவினிய கனியைப் பறித்துநுகர் கடுவனுள தச்சோலையைக் காப்பவர் முடுகத் தனிமையுற்று அதனயற்கொம்பரிற் சுற்றித்திரியுங் காவினுட் புளிப்பாகினை யுண்ணவேட்ட புன்றொழிற்றன்மையுற்றவர்க் கூட்டுவதாகக் குற்றமில்லையாம்படி பாகுபடுத்திக் காய்ச்சின எப்பிணியுந் தீர்க்கும் பசுவின்பாற்குழம்பு பொன்னின்கலத்துட் பெய்திருத்தாறுமுறைபோல முடப்பலவின் வேரிற் குடக்கனி முற்றிப் பழுத்து விரிந்த பொன்போனிறத்தையுடைய வினியசுளை யருந்தும்பருவத்தருந் தாது செவ்வியழியாநிற்கும் பரந்த புனலூரனே, என்றதற்கு ஊரனே! நீ யுத்தமனாயஇயில்லின்கண் மாலைக்காலத்தினுஞ் செல்லாதினைய செவ்வியுடைய சேரிப்பரத்தையைப் புணர்ந்து விளையாடாநின்றகாலத் தவள் பொதுமகளாதலிற் பிறரப்பரத்தைமாளிகையைக் குறுகத் தனியுற்றுத் தனைத் தப்பரத்தைமாளிகையைச் சுற்றித்திரியுமிவ்வூரிடத் தியானு நின்வரவுபார்த் தென்னையலங்கரித்து மிகுந்த காந்தியோடுமிருப்ப நின்வரவுதாழ்ப்பக் கவினழியாநின்ற வென்

வருத்தத்தைத்தீர்ப்பா னொருசேரியினிடத் தென்மாளிகைக்கண் வந்து வாயில் வேண்டாநின்று மென்னிடத் தின்ப நின்காதற் கார்த்தி யுடையதொன்றல்ல வின்னு மச் சேரிப்பரத்தைமாளிகையிற்பிரித னினக்குக் கடனென்று காமக்கிழத்தி யுள்ளுறையுவமங்கூறினளாதலி னெனவுணர்க. அன்றியும் "உடனுறையுவமஞ்சுட்டுநகைசிறப்பெனக், கெடலருமரபினுள்ளுறையைந்தே" என்னும் பொருளியற் சூத்திரத் தா னிது சிறப்பென்றவுள்ளுறை. இச் சிறப்பென்றவுள்ளுறை "விரி கதிர்மண்டில" மென்னு மருதக்கலியுள்ளும் வந்தமை காண்க. இது சேரிப்பரத்தையினிற் புணர்ந்துவந்த தலைவன்வரவுகண்டு காமக் கிழத்தியூடியவாறுகண்டு சென்றுசார்ந்த தலைவனுட னூடதீர்கின் றுள் கூறியது. ஒழிந்த அகலம் நம்பெருமாள்மும்மணிக்கோவை விரித்துரையுட் காண்க. கோதை - ஆகுபெயர்.

மழைதவழ்பலவின்வான்சினைநீழற்
றழைதருமரம்பைதான்பொறையுயிர்ப்ப
விசும்புமிழ்திவலையின்விழுமிதின்முற்றிய
பசுங்காய்மதுரப்பலன்படுகாலை
நிறந்தபாசடைநீள்சினைவாட
விறப்பளித்துலகிற்பிறர்க்குறுபயனு
மடலவிழ்நறுமகிழ்மாலிகைமார்பன்
றுடரிமால்வரைதுறந்தனளாய்த்தொடர்ந்த
வினையேன்பெற்றமெல்லியலொருத்தியுங்
கனைகதிர்வேற்கைக்காளையுங்கடத்திடை
மன்னியதிருவுமாயோனும்போன்
முன்னியதுளதெனின்முக்கோற்பகவிர்
மதிபெறவணங்கினன்மகிழ்ந்தே
சதிர்பெறவிளம்புமென்றளர்வகன்றிடவே. (282)

என்பது மேகந்தவழாநின்ற பலவினது பெரியகொம்பர்நீழலில் வளர்ந்த வாழை யீனுநிற்ப முகில்பெய்யுந் துளியி னன்றாய் விளைந்த பசுங்கா யினிய கனியான பருவத்துப் பசுத்த விலையாகிய நீண்டசினை வாடுதலோடு மதற் கிறத்தலையுங்கொடுத் துலகின்கட் பிறர்க்கு மிக்க வூதியமாகு மாறனது துடரிமால்வரையை நீங்கினளாதலிற் றொ

டர்ந்துபோந்தவினையேன்பெற்ற மெல்லியசாயலையுடையாளொருத்தியு நெருங்கிய கிரணத்தையுடைய வேற்கைக்காளை யொருவனுமாக விருவரும் விட்டுநீங்காத திருமகளு மாயோனும்போல, முக்கோற்பகவிர் சுரத்தினிடத் தெதிர்வரக்கண்டதுளதேல் யான் கூறியவை யெல்லாம் புத்தியுட்கொண்டு மகிழ்ந்து எனது தளர்வுநீங்கச் சதிராக விளம்பு நும்மை வணங்காநின்றே னென்றவாறு. இதனுள் செய்து என்பது செயவென்னும் வினையெச்சவாய்பாடாக நின்றது. இச் செய்யுள் நால்வகையுவமப்போலியும் விரவிவந்த வுவமப்போலி. என்னை? பலவின்கிழ் வளராநின்ற வாழையீன்ற தாறுபோல நற்றாயால் வளராநின்ற வென்னாற் பெறப்பட்டாள் என வினையுவமப் போலியும், விசும்புமிழ் திவலையிற் றூறுமுற்றியதுபோல வென்னாலு மாயத்தாலும் இனையள் வினைவெய்தினளெனவே மெய்யுவமப்போலியும், பசுங்காய்மதுரப்பலன்படுகாலை நிறத்த பாசடைநீள்சினை வாடவிறப்பளித் துலகிற் பிறர்க்குறுபயனு மெனவே அங்ஙன மினையளாய் வினைவெய்திய தலைவி யிந்திரியகலினம்வந் தின்பத்திற்குரியளாயின காலத்து எனது மேனிக்கும் வாட்டந்தந் தெனதுயிரையுங் கொல்லாதுகொன் றெனக் கொருபயனுமின்றி யயலானுன கணவற்கே யூதியமாயினளென்று கொள்ளப் பயவுவமப்போலியும், பண்புவமப் போலியும், வினையுவமப்போலியு மிதனோடேகூடி முன்னும்பின்னு மிவ்வண்ணமே நால்வகை யுவமப்போலியு முள்ளுறுத்துக்கொள்ள நிகழ்ந்தமைபா னென்றுணர்க. பயவுவமப்போலியாவது வினைகாரணமாகப் புலப்படுங் காரியத்தை யுள்ளுறுத்துக் கொள்ளப்படுவதாம். அஃ நீண்டுக் கூட்டத்தாற் பிறக்கும் போனந்தம். என்னாற் பெறப்பட்டா ளென்மகள் என்பன அன்பினதிகத்தானு நற்றாயென்றுந் தானென்றும் வேறல்லவாம் ஐக்கியத்தானுங் கூறினள். பாலைக் கலியுள்ளும் "என்மகளொருத்தியு" மெனக் கூறியவாற்றானுமுணர்க. பகுதி - உடன்போக்கு. துறை - பின்சென்றசெவிலி முக்கோற்பக வரைவினுதல். இதனுள் தலைவி தோழி செவிலி இற்பரத்தை காமக் கிழத்தி உழையர் என்போர்கூற்று வந்தன. ஒழிந்தோர்கூற்றும் வந்தவழிக் காண்க. (நுஅ)

4-வது உள்ளுறையுவம முற்றும்.

---

## ௫-வது ஒட்டலங்காரம்.

124. குறித்ததைமறைத்துக்குறிக்கொளநிகர்த்ததை
நுவல்வகைதாமேயொட்டெனநுவல்ப.

(எ - ன்) வைத்தமுறையானே ஒட்டென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) புலவனுற் குறித்தபொருளை மறைத் ததனைக் கற்று வல்லோ ருட்கொள்ளும்படிக் கதற்கொத்த பிறிதொன்றினை வெளிப் படையாய்க் கூறுங் கூறுபாடுதாமே யொட்டென்னு மலங்காரமென்று கூறுவர் பெரியோரென்றவாறு. வெளிப்படையாகவென்பது சொல் லெச்சம். (௩௧)

125. அதுவே,
பொருளிடஞ்சாதிவினைகுணம்பொழுதொடு
மருளறுநெறித்தாய்வருதிறனுடைத்தே.

(எ - ன்) இஃ தவ் வலங்காரத்தின் கூறுபாடுணர்—ற்று.

(இ - ள்) அதுவே—அச்சொல்லப்பட்ட ஒட்டுப் பொருள் முதல் காலமீறுகச் சொல்லப்பட்ட வாறு மிடனுக மயக்கமற்ற நெறி யுடைத்தாய்த் தோன்றுங் கூறுபாடுடைத்தா மென்றவாறு. இவற்றிற் கெல்லாஞ் செய்யுள்வருமாறு:—

கற்றுணர்ந்தவாய்மைக்கவிப்புலவீர்கண்ணனருள்
பெற்றியன்றசெம்பொருளைப்பேணியே—சுற்றம்
வளைத்தருந்தவாழாதுவந்தயலார்கூண்டு
திளைத்தருந்தவாழ்வார்சிலர். (283)

என்பது கற்பனவாம் நூல்களைக் கற்றுணர்ந்த வுண்மையோடுங் கூடிய கவிப்புலவீர்காள்! கண்ணனருளைப்பெற் றதனு லுண்டான வுண் மைநிதியை யழியாதோம்பி யதனை மாதா பிதா முதலிய வுரிமைச் சுற்றங்க டம்மைவளைத்திருந்து நுகர்வெய்தத் தாமு முடனுண்டு வாழும் வாழ்வெய்தாதே சிலர்சம்மோடொருவழியு முறவில்லாத

வயலார் களித்தருந்த வாழ்வா ரவாறியாமை தகாதென்றவாறு. இது புலவன் குறித்தபொருளை மறைத் ததனைக்குறிக்கொளற் கதற் கொத்த பிறிதொன்றனை வெளிப்படையாய்க் கூறியது. குறித்த பொருளாவது கண்ணனருள்பெறுதலாலுண்டான வுண்மைப்பொரு ளாகிய கல்வியோடுங்கூடிய கவி. பேணுதல் - வாய்மையிழவாது போற்றுதல். சுற்றம்வளைத்தருந்தவாழாதென்பது ஆன்மாவை யீடேற்று முறுதிச்சுற்றமான பரமபதநாதனாகிய பிதாவும், பெரிய பிராட்டியாகிய மாதாவும், ஆசிரியனும் அதனைக்கேட்டு மகிழ்வெய்த அவர்களைப்புகழ்ந் தப்பாடலை யவர்களுக்கேகொடுத் திம்மைப்பய னோடு மறுமைப்பயனு முத்தியையும்பெற்றுப் பேரின்பமெய்தி வாழா தென்றவாறு. சிலர்வந்தயலார்கூண்டுவளைத்தருந்த வாழ்வா ரென்பது முன்பி லவர்களைப்போலக் கவிகளாற் புகழ்தற்கியாது மியைபில்லாத மானிடராகிய வயலாரை வாய்மையிழந்து புகழ்வதனை யவர்கேட் டுட்கொண்டுகளித்தளித்த கூறை சோறு முதலியன வுடுத்து முண்டும் வாழ்வா ரிஃதென்ன உலகியற்கை யென்றவாறு. இது பொருணிலைக்களனாகத்தோன்றிய ஒட்டு; என்னை? இரு வகைப்பொருள் கல்விப்பொருளுஞ் செல்வப்பொருளு மென்பதனு ணர்க. ஒட்டென்பதற்கு நுவலாநுவற்சி பிறிதுமொழிதல் சுட்டு என்பன பரியாயம். திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

உழவுபயன்கொள்வாருயர்நிலத்தினுள்ளாய்
விழைவுபெறவித்தியவித்தல்லா—லழகமையா
வன்பாரில்வித்தியதூஉமால்பொருட்டாற்போர்நிலத்தா
மென்பார்புலவீரெவர். (284)

என்பது உழவினாற் பயன்கொள்வார் நல்ல கழனியகத்தவாய் மகிழ் வெய்த விதைத்த நல்லவித்துச் சிமன்னாராயணன்பொருட்டால் விளைந்து களம்புகுமென உலகங் கூறுவதல்லா லுழவினுக் கியாதுஞ் சிறப்பில்லாத வலிய பாறைநிலத்தில் விதைத்ததும் விளைந்து களம் புகுதுமென்று கூறுவார் புலவீர்கா ளுலகத் தொருவருமில்லையென்ற வாறு. இதுவுங் குறித்தபொருளை மறைத் ததற்கொத்த பிறிதொன் றனை வெளிப்படையாய்க் கூறியது. குறித்தபொருளாவன :—

# புத்தக வரவு.

---

ஞானபாநு என்னும் பெயர்கொண்ட தமிழ்ப்பத்திரிகையின் முதற்றொகுதியில் 2-வது பகுதி கிடைத்தது. இப்பத்திரிகை பிரமாதீசவஷ சித்திரைமாதமுதற்றொடங்கிப் பிரதிமாதமும் டெம்மி 24-பக்கங்கொண்ட சஞ்சிகையாகப் புருஷார்த்தங்களைப் பயக்கும் கல்வி, ஒழுக்கம், தவம், ஞான முதலிய விஷயங்களோடு சமாசாரக் குறிப்பையும் கொண்டு வெளிவருவதாகக் காணப்படுகிறது. இதிற் குறிக்கப்பட்ட விஷயங்கள் குறித்தபொருளை விளக்கி யாவருக்கும் இனிது விளங்குமாறு செவ்விதானநடையிலெழுதப்பெற்றிருக்கின்றன. இதன் வருடச்சந்தா உள்நாடுகளுக்கு ரூ 1—12—0. வெளிநாடுகளுக்கு ரூ 2—4—0. வேண்டுவோர் காரியஸ்தர், ஞானபாநு, மைலாப்பூர், சென்னை. என்றவிலாசத்திற் கெழுதிப் பெறலாம்.

பத்திராதிபர்.



மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1913௵ மேமீ 1௳ முதல் 31௳ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 46 | 7 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913 ௵ எப்பிரல்மீ த்துக்கு சம்பளம் செல்லாக்கியது ரூ. ...300-10—8 | | | |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு199...0—9 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு ௸ மாதத்திற்குச் செல் 60—0—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ...123—7—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செல்லாக்கியது | 360 | 10 | 8 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 322 | 7 | 9 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு எப்பிரல்மீ த்திற்கு ஆகாராதிபோஷணைக்காக செல்லாக்கியது ரூ | 11 | 0 | 0 |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 50—8—0 | | | | பைண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ ... 20-11—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ...49—10—6 | | | | ௸ ஆபீஸ் கண்டின்ஜன்சிச்செலவுரூ14—3—9 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 34 | 14 | 9 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 100 | 2 | 6 | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ...108-14—0 | | | |
| புத்தக விற்பனை வரவு ரூ ... | 74 | 9 | 0 | ௸ ஆபீஸ் சம்பந்தமாய் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு ரூ 18—7—9 | | | |
| பிரிண்டிங் பேப்பர், கலர் ராப்பர் காயிதம் விற்றவகையில் வரவு...75-13—6 | | | | ௸ ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு 13—6—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 140 | 11 | 0 |

| | |
|---|---|
| கோர்ட்டு சம்மன் படி வரவு ரூ. | 0—8—0 |
| சங்கம் காலிநிலம் மரக்கடை வாடகை பிரமாதீசஞு சித்திரை மீ"த்துக்கு வரவு ... | 55—0—0 |
| விளம்பர வகையிற் சார்ஜ் வரவு... | 14—2—0 |
| கோர்ட்டுபீ ஸ்டாம்பு வாபஸ் செய்த வகையில் வரவு ... | 4—0—0 |
| சங்கம் பிரஸ் ஸூப்பரின்டெண்டிடம், அச்சாபீஸ் செலவுக்காக கொடுத்திருந்த பெர்மனெண்ட் அட்வான்சு வாபஸ் வரவு ... | 20—0—0 |
| Honorable S. Rm. M. இராமசாமி செட்டியாரவர்களுக்கு "தமிழ் நாவலர் சரிதை" ஏட்டுப்பிரதியிலிருந்து தயார் செய்து கொடுத்ததற்கு, காபியிங் சார்ஜ், பேப்பர் கிரயம் உள்பட மணிஆர்டர் மூலம் வரவு .. | 11—0—0 |
| சங்கம் சிப்பந்திகள் சிலருக்கு அட்வான்சு கொடுத்திருந்த தொகை வாபஸ் வரவு ... | 10-10—0 |
| சங்கப்பதிப்பு புத்தகங்கள் தவறிப் போனதற்காக இச்சங்கத்திற்கு | |

| | | | | |
|---|---|---|---|---|
| போஸ்டேஜ் வகையிற் செலவு ரூ ... | 27—0—0 | | | |
| தந்தி வகையிற் செலவு ரூ ... | 5—7—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவ ரூ | | 32 | 7 | 6 |
| ரிப்போர் வகையிற் செலவு ரூ | | 14 | 11 | 0 |
| சங்கம் ஆபீசு வைத்திருக்கிற கட்டடத்துக்கு 1913-ஞு மார்ச்சு ஏப்பிரல் மீ"த்துக்குரிய வாடகை செல்லாக்கியது ரூ | | 86 | 0 | 0 |
| லைப்ரேரி உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ரூ | | 0 | 14 | 0 |
| வண்டிவாடகையிற் செலவு ரூ | 1—3—0 | | | |
| ரசீது ஸ்டாம்புவகையிற் செலவு ரூ | 0—2—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு மைஜாடி வாங்கிய வகையிற் செலவு ரூ | 1—0—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு டேபிள் கிளாத், ஸ்டேஷனரி, கண்டின் ஜன்வலி வகையிற் செலவு ரூ | 4-10—6 | | | |
| கணக்கில் ஜாஸ்தி வரவுவைத்ததை வாபஸ் செய்த வகையிற் ரூ | 1—8—0 | | | |
| சங்கமாபீசு வைத்திருக்கிற கட்டடத்தைச் சுற்றிலுமுள்ள வெளிப்புறங்களை நன்றாய்ப்பெருக்கி சுத்தம் செய்வதற்காக செலவு ரூ | 0—4—0 | | | |
| சங்கம் சிப்பந்திகளுக்கு சிலருக்கு அட்வான்ஸ் கொடுத்த வகையிற் | 10-10—0 | | | |
| Honorable S. Rm. M. இராமசாமி செட்டியாரவர்களுக்கு "தமிழ் நாவலர் சரிதம்" காபிசெய்து கொ | | | | |

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| செல்லாக வேண்டிய தொகையில் இச்சங்கத்தில் வேலைபார்த்துவந்த லேட் கிளர்க்கு சந்தான கிருஷ்ணம் பிள்ளையிடமிருந்து வரவு ... | 20—0—0 | 211 | 1 | 6 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | | | | |
| ஆக மொத்தம் வரவு ரூ | | 754 | 11 | 9 |
| சென்ற ஏப்ரல்மீ" த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | | 849 | 14 | 4 |
| ஆக மொத்தம் ... | | 1604 | 10 | 1 |
| ஆக மொத்தம் ரூ ... | | 1604 | 10 | 1 |

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| ஒத்தற்காக சாபிலிங் சார்ஜ் செல்லாக்கியது ரூ | 10—8—0 | | | |
| சங்கம் 12-வது வருஷோத்ஸவவிஷயமாய் வித்வான்களுக்கு சாப்பாடு முதலிய உபசாரணைச்செலவு ரூ | 83-10—1 | | | |
| சங்க சம்பந்தமான வேலைகளுக்கு பிரிண்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ | 123—7—0 | | | |
| ஷை சம்பந்தமாக பைண்டிங் வேலைகளுக்கு செல் ரூ | 49-10—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ ... | | 286 | 9 | 1 |
| சங்கம் கௌரவ காரியதரிசி T. C. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்களிடமிருந்து 7—12—11, 2—11—12 இவ்விரண்டுதேதிகளிலுமாக கைமாற்று வரவு ரூ 225-ல், 27—5—13-ல் வவுச்சர்படி செல்லாக்கியது ரூ | | 100 | 0 | 0 |
| ஆகமொத்தம்செலவு | | 1067 | 14 | 9 |
| போகபாக்கியிருப்பு* | | 536 | 11 | 4 |
| ஆக மொத்தம் ... | | 1604 | 10 | 1 |

* By pass Book 470—0—0
By cash 66-11—4

T. A. Subbuvenkatarama Iyer.
*Manager.*
13—6—13.

*Audited and found Correct*
S. Gopalaswami Aiyengar,
3—7—13. *Auditor.*

உ

கடவுள் துணை.

செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ஹூ ஆனி மீ [பகுதி-அ.
Vol. XI. June—July. 1913. No. 8.

# செந்தமிழ் விரும்பும் விஷயதானங்கள்

சேந்தமிழ்ப் பத்திரிகைக்கு நிருபநேயர்கள் எழுதியுபகரிக்கும் விஷயதான மொவ்வொன்றும் நிராக்ஷேபமாக யாவராலுங்கொள்ளத் தக்கதாயும், படிப்பவர்களுக்கு அரியவிஷயங்களின் புதியவுணர்ச்சி யையுண்டாக்கவல்லதாயும், சொற்சுவை பொருட்சுவை பொருந்திய தொடருடையதாயும், தமிழ்மொழிவளர்ச்சிக்குச் சாதகமாயும், ஒருவராலும் வெறுக்கப்படாததாயும் இருக்கவேண்டுமென்பது யாவரும் நன்குணர்ந்ததே.

இத்தகைய விஷயதானங்களே நிருபநேயர்களாலுபகரிக்கப்பட்டு வரினும் இடையிடையே இம்முறையின்வழுவி வருவனவுஞ் சிலவுள. அவை செந்தமிழில் வெளியிடத்தகாதனவாயிருக்கின்றன. ஆதலால் அம்முறையின் வழுவாதெழுதப்பெறும் தமிழிலக்கண விலக்கிய ஆராய்ச்சிகளும், மற்றும் சாத்திர ஆராய்ச்சிகளும், சரித்திர ஆராய்ச்சிகளும், அந்நியபாஷைகளிலிருந்து மொழிபெயர்த்து எழுதப்படும் பௌதிகசாத்திரம், தாவரசாத்திரம், பிராணிவர்க்கசாத்திரம், சரீர தத்துவசாத்திரம், தர்க்கசாத்திரம், கணிதசாத்திரம் முதலியவற்றின் விஷயதானங்களும், மற்றும் உலகநன்மைக்குரிய பலவுமே செந்தமிழில் வெளிவரத்தக்கனவென்பதும், அவையே செந்தமிழ்நேயர்களால் விரும்பத்தக்கனவென்பதும் நிருபநேயர்கள் தாமேயறிந்து பெரும்பாலும் செந்தமிழ் விரும்பி ஏற்கத்தகும் விஷயதானங்களையே உதவிவருகின்றனர்.

*

ஆயினும் "முற்றுமுணர்ந்தவரில்லை" யென்னும் முதியார் வாக்கின்படி ஒருவர் எல்லாநூல்களினும்வல்லுநராய் எடுத்துக் கொண்ட விஷயத்துக்கு இயைபுடைய பலவற்றையு மாராய்ந்தெழுத லரிதாதலால், தெரிந்தமட்டிற் பொருந்துவனகொண்டே யெடுத்துக் கொண்டவிடயத்தை பொருவாறு பொருத்தியெழுதிமுடித்துப் பத்திரிகையில் வெளியிடுவதே யெல்லோர்க்கு மியல்பாயுள்ளது.

அவ்வாறு எழுதி வெளியிடும் பொருளுரைகளில் ஒரோவழிப் பொருந்தாமையிருந்தால் அதனைக் கண்ணுற்றறிந்தபண்டிதர்கள் பொருத்தமுள்ளதுகாட்டித் திருத்தவும், அல்லது அதனை மறுத்து உண்மைப்பொருளை நிறுத்தவும் புகுவது தகுவதேயாம்.

அங்ஙனம் புகுவார் அப்பொருளுரையைப் புரோவாதமாக வைத்து அதில் தமக்குள்ள முக்கியமான விவாதவிடயங்களைமட்டும் எடுத்துக்கொண்டு தாம் வாதியாய்நின்று எதிரியை எள்ளுதல், இகழ் தலின்றித் தக்க பிரமாணங்களைக்கொண்டு தாம் சொல்லவேண்டு மவற்றையெல்லாம் சிறிதும்குறைவற நியாயமுறையினின்றுநழு வாதுசொல்லித் தன்றுணிபுரைத்து முடித்துநிற்பதே வாதுரை யென வழங்கத்தகும் பொருளுரையாகும். இது புரோவாதமான பொருளுரையிலுள்ள பொருந்தாமைதீரத்திருத்தியும், உண்மைப் பொருளை நிறுத்தியும் திரிவுணர்வுநீக்குந் திறனுடையதாதலால் இப் பொருளுரையையும் செந்தமிழ் விரும்பத்தக்கதேயாம்.

அவ்வாறு எழுதி வெளியிடும் வாதுரையானது புரோவாதத்தி னின்றெடுத்துக்கொண்ட விவாதவிடயங்களைக்கடிதற்குப் போது மானவலியிலதாயினும், அல்லது புரோவாதம் நிலைபெறுதற்குப் போதியசாதனங்கள் பிறவு முள்ளனவாயினும் அவற்றையெல்லா மெடுத்துரைத்துத் தன்றுணிவுநிலைபெறச்செய்வது புரோவாதமுடை யார்க்குக் கடமையாயிருக்கிறது.

அக்கடமை தீர்த்தற்பொருட்டுப் புரோவாதமுடையார் சீற்றம் சிறிதுங்கொள்ளாது, வாதிக் கெதிரியாய்நின்று எதிருரையென்னும் பொருளுரை எழுதிவெளியிட விரும்புவாராயின் அதற்கும் பத்தி ரிகை யிடங்கொடுக்கவேண்டுமென்ப தின்றியமையாததே.

இவ்விரண்டு பொருளுரையுங்கண்டு துலைநாவன்ன சமநிலையி னின்று அவற்றின் வன்மை மென்மைகளைச் சீர்தூக்குவார்க்கு உண் மைப்பொருள் தானே தோன்றுமாதலால் விவாதப்பொருளைத் தெளி வுறவிளக்குதற்கு வாதுரை எதிருரைகளே போதுமெனத்தோன்று கின்றன.

ஆதலால், வாதுரைவரைவோரும் எதிருரைவரைவோரும் தம் மால் வரையத்தகும் இன்றியமையாதவிடயங்களையெல்லாம் தத்தம் பொருளுரையொன்றினுள்ளே தெளிவுபெறவெழுதிமுடித்து அம் மட்டோ டதனை நிறுத்திவிடுவதே யமைவுடையதாகக் காணப்படு கிறது.

அங்ஙனமமையாது எதிருரைமேல் வாதுரையும், அதன்மே லெதிருரையுமாக மாறி மாறி மறித்து மறித்தும் பொறித்துவரும் விடயதானங்களெல்லாம் செந்தமிழ் விரும்புமாயின் அநவஸ்தையாய் முடியுமென்பதும், பிறிதொரு புதியபொருளுரைக்குரிய இடத்தையு மடைத்துச் செந்தமிழ்நேயர்களுக்கு வெறுப்பைவிளைக்குமென்ப தும் அப்பொருளுரைவரையு நிருபநேயரா லறியத்தகுவனவாம்.

ஆதலால், வாதுரை எதிருரை எழுதிய நிருபநேயர்கள் அடுத்த முறையி னதனைவிடுத்து, வேறொருபொருள்பற்றிச் செந்தமிழ்க்கு விஷயதானஞ் செய்துவருமாறு வேண்டிக்கொள்ளப் பெறுகின்றனர்.

நிருபநேயர்க ளனுப்பிவரும் விஷயதானங்களுட் சிறந்தவற்றை யெல்லாஞ் செந்தமிழ் விரைந்தேற்றுக்கொள்ளவேண்டுமாயினும் பத்திரிகையி னிடத்தினளவுக் கடங்கவும், வெவ்வேறுவிஷயம் விர வற் கிணங்கவும் பொருளுரைகளை யடுக்கி வெளியிடவேண்டியிருத்த லால் அவற்றுட்சில வெளிவரக் காலதாமதமாவதுபற்றியும், திருப்பி யனுப்பப்படாமை சுட்டியும் நிருபநேயர்கள் சீற்றங்கொள்ளாதிருக்க வேண்டுமென்றும் வேண்டப்பெறுகின்றனர்.

செய்யுளாகவேனும் வசனமாகவேனும் செய்யப்பெற்ற பழைய நூல்களாயினும் புதியநூல்களாயினும் செந்தமிழ்வாயிலாக வெளி யிடவிரும்புஞ் சிறியநூல்களை அந்நிருபநேயர்கள் பிழையறப்பரிசோ தித்துத் தெளிவா யெழுதியனுப்பவேண்டுமென்றும் வேண்டப்பெறு கின்றனர்.

மிகவும் அருமைபெருமை வாய்ந்த விஷயதானங்களைச் செந்தமிழ்க்கு அளித்துவந்தவர்களும், அளிக்கத்தக்கவருமாகிய பண்டிதர்களெல்லாம் தமிழபிமானமுடையராய்த் தத்தம் காரியங்களுக்கிடையே சிறிதவகாசம் வாய்ப்பித்துத் தம்மாலெழுதத்தகும் விடயதானங்களை யுபகரித்துச் செந்தமிழை யாதரித்துவருமாறு வேண்டப்பெறுகின்றனர்.

திரு. நாராயணையங்கார்
பத்திராதிபர்.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# பதிபசுபாசத்தொகை.

இது மதுரைத்தமிழ்ச்சங்கத்துக்குத் திருநெல்வேலி மகா-௱-௱-ஸ்ரீ எஸ். பால்வண்ணமுதலியாரவர்களாற் கொடுக்கப்பட்ட சிவஞானபோத முதலிய சைவசாத்திரங்களடங்கிய ஏட்டிலிருந்தெடுத் தெழுதப்பட்டிருக்கிறது. இதில் ஆறுவதுகுறளின் இரண்டாமடி கூறியது கூறல்போலத்தோன்றுகின்றதாயினும் அதனுண்மைப்பொருள் சைவசமயநூல்களைக் குருபரம்பரையா னோதியுணர்ந்தார்மாட்டுக் கேட்டுரைத்தகுமென்று உள்ளபடியே பதிப்பிக்கப்பட்டது. அது பாடமன்றாய் இரண்டாமடி பல்லுயிருமீசன்பணி என்றிருக்குமாயின் பதியும் பசுவு முடையானு முடைமையுமாகிய இயைபுடைமை தோன்றக் கூறிய தெனக்கொள்ளற் கியையுமெனத்தோன்றுகிறது. இது திரிபதார்த்தங்களின் உண்மையுணர்வுதோன்ற உபதேசமுறையிற் றொகுத்துச் சொல்லப்பட்டிருத்தலால் அதனைவிரும்புவார்க் குபயோகமாகுமாறு சில திருத்தத்துடன் செந்தமிழில் வெளியிடப்பட்டது.

நூல்.

பவளநிறத் தானை முகன் பாத நினைப்பாம்
பவளமறுப் பானவனன் பர்க்கு. (க)

சிவனை நிரஞ்சனனைச் சின்மயனைச் சீவன்
பவமுமறுப் பானைநினைப் பாம். (உ)

இரவிக் கொளிபோ லிறையொடுறை வாளைப்
பரவிப் பணிவாம் பதம். (ங)

நந்திபத நந்திமா காளரெழு வர்யாவர்
தந்திருத்தா ளும்பணிவாஞ் சார்ந்து. (ச)

பதிபசு பாசந் தொகுத்துப் பகர்வா
மெதுகெதியென் பார்க்கெளிதி லே. (ரு)

இவை பாயிரம்.

பல்லுயிர்க்கு மேக னமலன் சிவன்பதியப்
பல்லுயிர்க்கு மீசன் பதி. (சா)

உடலொலியின் மூல வொலியுறைதல் போலக்
கடவுளுயிர் தோறுமுறுங் காண். (எ)

ஆதாரம் வேர்மரத்துக் கீச னனைத்துயிர்க்கு
மாதாரம் வேர்க்குமர மன்று. (அ)

ஆகஞ் சடங்கா ணணுவறியா திவ்விரண்டின்
யோகஞ் சிவனுலென் றோர். (கூ)

கருமஞ் சடம்பலத்தைக் காட்டா து காட்டு
நிருமல னென்றே நினை. (கO)

சடமாயை தானே சமையா தனுவுங்
கடவுடரு வான்வினையைக் கண்டு. (கக)

வருத்தியு நல்லன் மருத்துவனே யார்க்கு
நிருத்தனையிவ் வாறுநினை நீ. (கஉ)

உதவி யிரவி யுலகுக் கிரவிக்
குதவி செயுமோ வுலகு. (கங)

### இவை பதிதேரிசனம்.

ஆகஞ் சடந்தா னியங்கா ததனையூர்
பாகன் பசுப்பலன்றுய்ப் பான் (கச)

பொறியுமுயி ரல்ல பொறையுடனு மல்ல
வறிவே யுயிரென் றறி. (கரு)

உறக்கத் துணரா வுடலும் பொறியு
முறக்கமு மோரு முயிர். (கசா)

புண்ணியத்தாற் பாவத்தாற் புண்ணியபா வத்தாலு
நண்ணுமுயிர் மேல்கீழ் நடு. (கஎ)

### இவை பசுதேரிசனம்.

யானென் செருக்கா லிருவினையா மச்செருக்கு
* மூனமலத் தானு முயிர்க்கு. (கஅ)

செம்பிற் களிம்பென்னச் சிவனெடுற் றேதிமிர
நம்பனைக்காட் டாதுயிரி னள். (ககூ)

### இவை பாசதேரிசனம்.

பரிபாக மாகவிருட் பாசமுடை யூனை
யருவருக்கு மாவிவிருப் பற்று. (உ0)

அப்பொழுது தேசிகனை யாவேசித்தே யமல
னப்பழுதை நீக்குமரு ளால். (உக)

நீங்கவரு ணிங்காதே நின்றசிவன் கண்டாவி
யோங்கியபே ரின்பத் துறும். (உஉ)

### இவை யநுக்கிரகம்.

ஆக்கைசிறை யென்றமலத் தாதரவுற் றூற்கிந்த
வாக்கை யறைக மதித்து. (உ௩)

---

* 'மூலமலத்' என்றும்—பி - ம்.

விடம்பர்க் குரைத்தார் விழுவர்கீழ் மேலா
யடைந்தார்நல் லார்க்கறிவித் தார். (உச)

இவை பக்குவாபக்குவம் ப்ார்த்துணர்த்துகவென்றன.

இந்தவிய லைத்திரிவு மின்றியுணர்ந் தார்க்கிருண்ட
பந்தமறும் வாய்த்துறுமின் பம். (உரு)

இது நூலுணர்ந்தார் பலம்.

பதிபசுபாசத்தொகை முற்றும்.

---

உ

# பரிசோதனத்தொடர்.

நமது செந்தமிழில் 'பரிசோதனத்தொடர்' என்னுந் தலைப்பின் கீழ்ப் பத்திராசிரியரவர்கள், பல ஆராய்ச்சிகளை வெளிப்படுத்திவருகின்றனர். அவை, எழுத்துநிலைமாறியும், சொன்னிலைமாறியும் வரலாற்றுமுறைமையின்வந்தாரையும் சற்றிடர்ப்படுப்பனவாயுள்ள வற்றின் திருத்தங்களாகும். பெரும்பாலும் அச்சுப்புத்தகங்களையே படித்துவரும் தற்காலத்தவர்க்கு அவை "இழுக்கலுடையுழி யூற்றுக்கோல்" போலுதவி, நன்மை பயந்துவருகின்றன.

இவ்வாறே பிறரும் ஆங்காங்குக்காணப்படும் திருத்தங்களை வெளிப்படுத்துக வெனவும் அவர்கள் தெரிவித்திருக்கின்றமையின், அதனைமேற்கொண் டுவையெழுதப் பெறுகின்றன.

இறையனாரகப் பொருள் ௩ ஆம் சூத்திரத்துரையில், பாங்கன் கழற்றுரையாய்ப் பின்வரும்வாக்கியம் காணப்படுகிறது. அது—

"குண்டமுருகுண்டாற் குன்றி வழியடையாகாதவாறுபோலவும், யானை தொடுவுண்ணின் மூடுங்கல மில்லதுபோலவும், கடல் வெதும்பி னளாவுநீரில்லதுபோலவும், எம்பெருமான்! நின்னுள்ளம்

அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடியின்வரைத்தன்றிக் கைம் மிக்கோடுமே யென்னின் நின்னைத் தெருட்டற்பாலசீர்மையார் உளரோ? நீ பிறரைத்தெருட்டினல்லது” என்பது.

இதிற் கூறப்பெறும் உவமவாக்கியம் மூன்றினும் முதற்கண்ணதை யாராய்வுழி, அது பிழையுடையதெனத் தோன்றுகிறது. எங்ஙனமெனின்—

இப்பாடத்தால் 'குண்டம்'—யாககுண்டமெனவும், 'முருகுணல்'—மிகக்கொதிப்படைதலெனவும் பொருள்பட்டு, அவை முறையே தலைவனுக்கும், கைம்மிக்கோடுதலுக்கும் உவமையாய்க், குன்றி வழியடையாகாமை - தெருட்டுவாரில்லாமைக் குவமையாகவேண்டும். ஆகவே, நெருப்பு அளவுகடந்துகொதிப்பின், அதற்குப் பரிகாரம் பிறிதின்றென்னுங் கருத்துப்போந்து, “நீர்மிகிற் சிறையுமில்லைத் தீமிகின் மன்னுயிர் நிழற்று நிழலுமில்லை” என்னும் புறநானூறு (ருக) ஞாபகத்துக்கு வரலுங்கூடும். இதுபோலத் 'தீமிகில்' எனக்கூறுவதே யெண்பொருளவாகச் செலச்சொல்லுவதாயிருக்க அதற்குக் 'குண்டமுருகுண்டால்' எனக்கூறல் வேண்டாமையானும், அங்ஙனங்கூறிற் போந்தபயன் பிறிதின்மையானும், நெருப்புக்குக் 'குன்றி'யைக் கூறல் 'தகுதி' யன்மையானும், 'வழியடையாதல்' என்பது இங்கு உரியசொல்லன்மையானும், இங்ஙனங்கூறும்வழக்க மின்மையானும், மூன்றும் உவமவாக்கியம் இதனை யொருபுடையொத்தலால் அதனைவேறுகூறுராகலானு மென்பது.

இனித் தொல்காப்பியப் பொருளதிகாரம் கoஉ-ஆம் சூத்திரத்துறையில், பாங்கன் நிற்பவைநினை இ (உலகத்து நிற்கின்ற நற்குணங்களை நினைப்பித்து) க்கழறிக்கூறியதற்குதாரணமாக ஒரு செய்யுள் காட்டப்பெற்றிருக்கின்றது. அது,

“குன்றமுருளிற்கோடித்தேரோய்குன்றியு
ளொன்றமொழிவதுளதாமோ?—நன்றறிந்து
தாமுறையேசெய்வார்தகவிலவேசெய்தக்கால்
யார்முறைசெய்வாரோமற்ற” என்பது.

இச்செய்யுளின் முன்னிரண்டடிகளின்கருத்தையெடுத்தே “குன்றமுருண்டாற்குன்றிவழியடையாகாது” என மேற்கூறிய உவம

வாக்கியமாக இவ் வுரையாசிரியர் கூறியிருக்கவேண்டுமெனத் தோன்றுகிறது. இவ்வாறு உரைநடையாய்க்கொண்டுரைப்பது நம துரையாசிரியர்களின் வழக்கமென்பதைத் 'தலைவி * "கல்லாமற் பாகம் பட"வொழுகுந்தொன்னலஞ் சான்ற பொருளின் கண்ணும்' [பொருளதிகாரம் பக்கம் ௩டுக] எனல் போல்வன ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுமாற்றானும், பரிமேலழகருரையிற் பயின்றுவருமாற்றானும் காண்க.

"குன்றமுருண்டாற் குன்றி வழியடையாகாதவாறுபோல எம்பெருமான்! நின்னுள்ளம்........ ...கைம்மிக்கோடுமென்னின் நின்னைத்தெருட்டற்பாலார் (உளரோ) இல்லை; நீ பிறரைத் தெருட்டினல்லது. என்பது—தேவர்குழாம், மக்கட்குழாம் முதலிய பிறவற்றிற்கு வழியடையாகநிற்பதுகுன்றம்; அதுதானே யுருண்டால் அதற்கு வழியடையாகநிற்பது யாதுளது? கேவலம் குன்றிதானோ நிற்கும்! நில்லாதன்றே; அதுபோற் பிறரது வரம்புகடந்த நடத்தையைக் காணுங்காற் கடிந்து அவரை நல்லவழியில் நிறுவுந் தகுதியினனீ; நீயேயிவ்வாறு செய்யின் நின்னைத் தெருட்டுந்தகையினர் எவர் உளர்? என்னனைய பிறர் எம்மாத்திரம்? எனப் பொருட்பொருத்தமாதலையறிக.

தேவர்குழாம் மக்கட்குழாங்கட்குக் குன்றம் வழியடையாயினமை,

"குன்றிடைமுட்டிமறுகுங்குரீஇயிற்றடைப்புண்டழுங்கி
நின்றவருக்கன்முதலோர்" †எனவும்,

"இருநிலமருங்கிற்செருநரைப்பெறாது
செருவெங்காதலிற்றிருமாவளவன்
புண்ணியத்திசைமுகம்போகியவந்நாள்
பகைவிலக்கியதிப்பயங்கெழுமலை" §

---

* "உரைமுடிவுகாணானிளமையோனென்ற
நரைமுதுமாக்களுவப்ப—நரைமுடித்துச்
சொல்லான்முறைசெய்தான்சோழன்குலவிச்சை
கல்லாமற்பாகம்படும்." (பழமொழி - ௨௧)

† விந்திய வரலாறு. (காஞ்சிப்புராணம் தழுவக்குழைந்த படலம் - ௨௨௬)

§ இமயமலை. (சிலப்பதிகாரம் இந்திரவிழவூரெடுத்தகாதை—௯௬)

எனவும் வருவனவற்ருல் அறிக. இவ் விமயமலை 'எனது நாட்டிற்கு அந்நியரை வரவொட்டேன்' என நுதலுங்கருத்தினதுபோல, நம் இந்தியாவின் வடக்கண் வழியடையாக இன்றும் நின்று நிலவுவதை யாவரும் அறிவர்.

பெருமை சிறுமைகளுக்குக் குன்றத்தையும், குன்றியையும் உவமைகூறுதல் தொல்லாசிரியர் குறிபென்பதை,

> "குன்றினனையாருங்குன்றுவர்குன்றுப
> குன்றியனையசெயின்" என்பதாலும், (திருக்குறள் கூகூரு)

'வழியடை' யென்ப தீன் டுரியசொல்லென்பதை "வாழ்நாள் வழி யடைக்குங்கல்" என்பதாலும்(ஷை கூஅ) அறிக.

இவற்ருல், 'குன்றமுருண்டாற் குன்றி வழியடையாகாது' என் னும் பாடமே யுரையாசிரியருடையதென்பதூஉம், பிரதி யெழுதிய பிற்காலத்தார் தவறி 'முருகுண்டால், முறுகுண்டால்' என எழுத, அதற்கேற்பக் 'குன்றம்' என்பது 'குண்டம்' எனப் பின்னோரால் மாற்றப்பட்டிருக்க வேண்டுமென்பதூஉம், பெறப்படுகின்றது.

இதுபோலவே யாங்காக்குக் காணப்படும் சிதைவுகளையும் திருத்திப்படித்தல் அறிஞர்கடமையாம்.

இவை, என்னுடன்பிறந்தாரும், எனது நல்லாசிரியரும், எனக்குத் தலைவருமாகிய ஜலகண்டபுரம் வித்வான் அ. வரதநஞ்சைய பிள்ளையவர்களால் விளக்கப்பெற்றன.

ஜமீந்தார் உயர்தரப் பாடசாலை
காட்டுப்புத்தூர்.

இங்ஙனம்,
அ. கந்தசாமிப்பிள்ளை,
தமிழ்பயிற்றுவோன்.

---

குறிப்பு:—உசகூ ஆம் பக்கம் உஉ ஆவது வரியிலும், உசச ஆவது பக்கம் அ ஆவது வரியிலும், ஷை பக்கம் கஎ ஆவது வரியிலும் குண்டமுருகுண்டால் என்றிருப்பதை, குண்டமுறுகுண்டால் எனத் திருத்திக்கொள்க.

# பொருளதிகார ஆராய்ச்சி.

———:o:———

(உ௬௧-ம் பக்கத்தொடர்ச்சி.)

## பொருட் பாகுபாடு.

மேற்கூறியாங்கு மிக்கவிரிவினதாகிய பொருளுக்கு இலக்கணம்வகுக்கப்புகுந்தவர், தொடக்கத்திற்றானே அதனை அகப்பொருள் என்றும், புறப்பொருள் என்றும் இருவேறு பெரும்பிரிவு செய்தனர். இவ் வுலகத்தில் கல்விப்பொருளாயுள்ளது எதுவாயினும் அது புலவனது உள்ளத்தின்கண் நிகழும் உணர்ச்சியைக் குறித்தல் வேண்டும். அல்லாக்கால், அப் புலவன் தனது ஐம்பொறிகளான் உணர்ந்துகொள்ளக்கூடியதும், அவனுக்குப் புறத்தேயுள்ளதுமான ஒன்றைக் குறித்தல்வேண்டும். நமக்கு அகத்து நிகழ்வதும், புறத்து நிகழ்வதும் ஆகியவற்றுள், இவ் வுலகத்திலுள்ள விஷயங்களெல்லாம் அடங்கிவிடுகின்றனவன்றோ? ஆதலின் இப் பாகுபாடு சாலவும் ஏற்புடைத்தாகும்.

இவற்றுள் அகப்பொருள் என்பது அகத்துநிகழும் ஒழுக்கத்தையும், புறப்பொருள் என்பது புறத்தே நிகழும் ஒழுக்கத்தையும் ஈரிடத்தும் ஆகுபெயராய் உணர்த்தாநிற்கும்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப்பட்ட புருஷார்த்தங்களிற் சிறப்புப்பற்றி, காதலன் காதலிகளது அகத்து நிகழும் இன்பத்தினை அகப்பொருள் என்பது மிகப் பகுத்துரைக்கும்.

எல்லாமாந்தர்க்கும் பொதுவாகிய அறத்தினையும், (செல்வப்) பொருளினையும் விரித்துச்சொல்லும் புறப்பொருள் என்பது. வீட்டினைக்குறித்து விதந்துகூறுமோ எனின் நச்சினார்க்கினியரும், தொல்காப்பியத்திற் சிறப்புப்பாயிரவுரைக்கண்ணே "இனிப் பொருளென்பது யாதனையெனின், சொற்றொடர் கருவியாக உணரப்படும் அறம் பொருளின்பமும் அவற்றது நிலையும் நிலையாமையுமாகிய அறுவகைப் பொருளுமாம்." என்றும், "வீடுபேற்றிற்குநிமித்தங் கூறுதலன்றி

வீட்டின் தன்மை அகத்தியனாரும், தொல்காப்பியனாரும் இலக்கணத் தாற் கூறாரென்றுணர்க" என்றும் வரைந்துசென்றனர். திருக் குறள், உரைமேதாவியாகிய பரிமேலழகரும் "வீடென்பது சிந்தையும் மொழியும் செல்லாநிலைமைத்தாகலின், துறவறமாகிய காரணவகை யாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனைய மூன்றுமேயாம்" என்று கூறினார். இவ்விரு உரையாசிரியர் கருத்துக்கும் பொருத்தமாகவே, திருவள் ளுவநாயனாரும், தமது அருமைத்திருக்குறளின்கண்ணே, அறத் துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பாலே முறையின் வகுத்து, வீட்டினியலை விரிக்காதுவிடுத்தனர். எனவே புறப்பொருள் தானும் அறத்தினையும் பொருளையும் வெளிப்படையாகவும், வீட்டி னைக் குறிப்பாகவும் உணர்த்துமென்பது பெற்றும். அகத்து நிகழும் இன்பங்களில், தலைவன் தலைவியர் உள்ளத்தில் நிகழுமின்பமே சிறப் புப்பற்றி அகம் எனப்பட்டதுபோல, புறவொழுக்கங்கள் பலவற்றிற் குக் காரணமானதும், அவற்றுளெல்லாம் சிறந்ததுமாகிற அரசர் களின் ஒழுக்கமே புறப்பொருளிற் பெரிதும் வழங்கும் இயல்பினை யுடையதாய் இராநின்றது.

ஆங்கிலநூலாராய்ச்சியிற் கைதேர்ந்தவராகிய ஸ்டாப் போர்டு ப்ரூக்(Stopford Brooke) என்பவரும் தாம் இயற்றியுள்ள, 'ஆங்கில நூல்களின் வரலாறு' (A primer of English Literature)என்னும் புத்தகத்தில் பண்டைக்காலத்து ஆங்கிலகாவியங்களிற் காணப்படும் பொருள் எல்லாம் காதலர்காதலும், வீரர்தம் போர்த்திறனுமேயாம் என்றனர். இக் கூற்றுத் தமிழ்ப்பொருளிலக்கணப் பாகுபாட்டிற் கிணங்கியிருத்தல் எல்லாராலும் எளிதில் உணர்தற்பாலது.

### அகத்திணைப் பாகுபாடு.

ஐவகை யிலக்கணங்களுட் பொருள் என்பது யாது? அது எத் துணைச் சிறப்புடைத்து? அது இன்ன பாகுபாடுகளையுடையது என் பவற்றை இதுகாறும் கூறிப்போந்தோம். இனி அகம், புறம் என் னும் இருவகைப் பொருளுள் அகம் என்பதன் இலக்கணத்தையும், அதன் பிரிவாகிய எழுதிணைகளையும், அவற்றின் முதல், கரு, உரிப் பொருள்கள் யாவை என்பதையும் இங்கு எடுத்துக் கூறுவோம்.

" ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப் படாததாய்,யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார் " என நச்சினார்க்கினியர் கூறியுள்ளார்.

இத்தகைய சிறப்பியல்வாய்ந்த அகப்பொருளினை, தமிழ்லக் கணக்காரர்கள் எழ்திணைகளாகப் பிரித்தனர். அவையாவன:—கைக் கிளை, குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என் பன. அவற்றுள்,

முதலாவதாகிய கைக்கிளை என்பதற்கு ஒருதலைக்காமம் என்பது பொருள். இதனை 'ஒருமருங்குபற்றிய கேண்மை' என்பர் நச்சினார்க் கினியர்.

" காமஞ்சாலா இளமை யோள் வயின்
எமஞ்சாலா இடும்பை யெய்தி
நன்மையும் தீமையு மென்றிரு திறத்தால்
தன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெருஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றல் கைக்கிளைக் குறிப்பே.

எனக் கைக்கிளைக் கிலக்கணம் வகுத்தனர் தொல்காப்பியர். எனவே காமவின்பத்தின்சிறப்பினை யுணரப்பெருத ஒருசிறுமிமாட்டுக் காதல் கொண்டு, தன்குறிப்பினை யவள் அறியாதபோழ்தும், தானே த்ன் காதலைப்பற்றி மனத்தின்கண்ணே எப்போதும் நினைத்துக்கொண் டிருக்கும் ஒருவனது ஒழுக்கம் கைக்கிளையென்பது பெற்றும்.

இன்னும், "முன்னைய நான்கும் முன்னதற்கென்ப" என்னும் சூத்திரவுரைக்கண்ணே தலைவன் றலைவியையெதிர்ப்பட்டதுமுதல் நிகழும் "காட்சியு மையமுந் தெரிதலுந் தேறலுமென்ற குறிப்பு நான் கும்..........கைக்கிளையாதற்குரிய" என்றும், "இது தலைவிவேட் கைக்குறிப்புத் தன்மேல்நிகழ்வதனைத் தலைவன் அறிதற்கு முன்னே, தன்காதன்மிகுதியாற் கூறுவனவாதலிற் கைக்கிளையாயிற்று. இது தலைவற்கே உரியது" என்றும் நச்சினார்க்கினியர் கூறிச்செல்வதனால்,

ஆண்பாற்கைக்கிளை யொன்றே தொல்காப்பியத்தானும் அதன் உரையானும் கொள்ளக்கிடக்கின்றது.

எனினும் புறப்பொருள்வெண்பாமாலை முதலிய பிற இலக்கண நூலார் பெண்பாற்கைக்கிளையுங் கொள்ளுவர். நளன் அழகை அன்னத்தாற் கேள்வியுற்று அவன்மாட்டு மிக்க அன்புடையாளாய், அவ்வன்னம் அவனிடம் சென்று திரும்பிவருங்காறும் வருந்திநின்ற தமயந்தியின் மனநிலை பெண்பாற்கைக்கிளை யென்பது, 'கைக்கிளைப் படலம்' என அதிவீரராமபாண்டியர் நைடதத்தில், அந்த இடத்துக்கு வைத்துள்ள பேரால், இனிது விளங்கும்.

ஏழ்திணைகளிலும் முதற்கட்கூறிய கைக்கிளை இத்தன்மைத்தாக ஈற்றின்கட் கூறிய பெருந்திணை யாதெனச் சற்றுவிசாரிப்பாம்.

"பெருந்திணையென்பது பொருந்தாக்காமம்" எனச் சூத்திரம் செய்தனர் நாற்கவிராசநம்பி.

"ஏறிய மடற்றிறம், இளமைதீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக்குறிப்பே" என்பது தொல்காப்பியம்.

"மடலேறுதலும்," தலைவற்கு ஒத்த பருவத்தளாதலும், "அறிவழி குணனுடையளாதலும்," காமமிகுதியானே எதிர்ப்பட்டுழி வலிதிற் புணர்தலும் ஆகிய இந்நான்கும் கந்தருவத்துட் பட்டு வழிஇய என்றனர் உரையாசிரியர் நச்சினார்க்கினியர். மற்றும் பெருந்திணை என்பது பிற ஆறுதிணைகளும் எண்வகைமணங்களில் நான்கினையே கொள்ள, தான் ஒன்றுமாத்திரம் மற்றை நான்குமணத்தினையும் பெற்று நடத்தலால் எல்லாவற்றுக்கும் பெரியதாகியதிணை என்னும் பொருளது என்றும் இத்திணைக்கு அவர் பெயர்க்காரணங் கூறுவர்.

கைக்கிளை, பெருந்திணை என்னும் இவ்விரண்டு திணைகளும் எஞ்சிய ஐந்துதிணைகளைப்போல அவ்வளவு சிறப்புடையன அல்ல. இதுபற்றியேபோலும், இறையனார்அகப்பொருளில் முதற் சூத்திரத்தில் "அன்பின் ஐந்திணை" என நடுவண் உள்ள ஐந்திணைகளே குறிக்கப்பட்டிருக்கின்றன. அந்நூலில் ஆசிரியர் கைக்கிளை பெருந்

திணை இவற்றைப்பற்றி வெளிப்படையாகக் கூறாது விடுத்தனர். மற்றும் இவற்றிற்கு எஞ்சிய ஐந்திணைகளைப்போல முதலும், கருவும் உரியும் இல்லாது போனதும் இவற்றின் சிறப்பின்மையைத் தெரிவிக்கும். இனி இவ் எஞ்சிய ஐந்திணைகளையும் பற்றிச் சற்று விவரிப்பாம்.

இவ்வைந்திணைகள் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்பவை. இவற்றுட் குறிஞ்சி என்பது மலையும், மலைசார்ந்த இடமும். முல்லை என்பது காடும், காடுசேர்ந்த இடமும். பாலை என்பது சுரமும், சுரஞ்சேர்ந்த இடமும். மருதம் என்பது பழனமும், அது சேர்ந்த இடமும். நெய்தல் என்பது கடலும், கடல்சேர்ந்த இடமும்.

இவ்வுலகத்திலுள்ள நிலப்பரப்பு யாதாயினும் இவ்வைந்து பிரிவுகளுள் ஒன்றற்குள் அடங்குதல்வேண்டும். இவ்வைந்திற்கும் புறம்பாகிய நிலம் யாண்டும் இலது என்பது பூகோளத்தின் நிலப்பரப்பின் இயற்கை அமைப்பினை உற்றுநோக்கினோர்க்கெல்லாம் தெற்றெனத் தெரிந்த விஷயமே. இவ்வைந்தனுள் பாலைநிலம் மாந்தர்க்குப் பயன்படாமைபற்றியும், நம் தமிழ்நாட்டிற் பாலைநிலப்பரப்பு விசேஷித்துக் காணப்படாமைபற்றியும் அதனைப் பெரும்பாலும் விடுத்து, மற்றை நான்கையும் தழுவிச் செல்லுதல் நூன்மரபு. நால்வகைப்பட்ட நிலங்கள் என்னும் பொருளில்வரும் 'நானிலம்' என்னும் தொடர்மொழி, தமிழ்நூல்களிற் பெரிதும்வழங்குவது இதனையே நன்குவிளக்கும். மேலும் தொல்காப்பியனாரும்,

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையிற் சொல்லவும் படுமே."

என்று பாலையை நீக்கியே சூத்திரம் செய்தார். எனினும், பாலைக்கு நிலமேயில்லை என்று கொள்ளாது, அது மற்றை நால்வகை நிலத்திற்கும் உரியதென்றே கொள்ளல் வேண்டும் என்பது ஆசிரியர் கருத்து. சிலப்பதிகாரத்தில், மதுரைக்காண்டம், காடுகாண்காதையில் வரும்,

"முல்லையுங்குறிஞ்சியும்முறைமையிற்றிரிந்து
நல்லியல்பழிந்துநடுங்குதுயருறுத்தும்
பாலையென்பதோர்படிவங்கொள்ளும்"

என்பதனால் குறிஞ்சியிலும் முல்லையிலும் பாலை வந்தமை தெரிக்கப் பட்டது. மதுரைக்காஞ்சியில்,

"நிழலுருவிழந்தவேனிற்குன்றத்துப்
பாலைசான்றசுரஞ்சேர்ந்தொருசார்."

என்பதிலும் குறிஞ்சியிற் பாலைவந்தது காண்க.

இங்ஙனம் குறிஞ்சியே, முல்லையே, பாலையே, மருதமே, நெய் தலே என நிலத்திணைப் பாகுபாடுசெய்தது இயற்கையமைப்புக்கு மாறுதிருத்தல் முன்னரே கூறப்பட்டது. அதனைத் தொல்காப்பிய னாரும்,

"அவற்றுள்,
நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே."

என்னுஞ் சூத்திரத்தாற் கூறினர். இதனுள்ளு—நடுவணதாகிய பாலை ஒழிக்கப்பட்டது நோக்கற்பாலது. என்ப,

குறிஞ்சிமுதலியபெயர்கள், நிலப்பெயர் ...குங்கால், அவ்வவ் நிலங்களிற் சிறப்பாகவுள்ள பொருள்களின் பெய...ரே அந்நிலங்களுக்கு ஆகுபெயராய், ஆயினபோலும் என ஊகித்தற்கு இடந்தருகின்றது. முல்லையும் மருதமும் நெய்தலும் முறையே அப் பெயரிய நிலங்களிற் பெரும்பாலுங் காணப்படுகின்றன என்பது யாவரும் அறிந்த விஷயம். அதுபோலக் குறிஞ்சி என்பதும், பாலை என்பதும் தத் தமக்குரிய நிலங்களில் வளரும் செடி என்பதை நம்மிற்சிலர் அனு பவத்தில் அறிந்திராவிடினும், * "கருங்கோற்குறிஞ்சிப்பூக்கொண்டு பெருந்தேனிழைக்கும்" எனவும், * "கோடுறு பல்காய் வாலிணர்ப் பாலை" எனவும் வரும் பழையசெய்யுட்களால் அதனை அறிந்து அமைத்துக் கொள்ளலே சால்புடைத்து. இங்ஙனம் ஐவகைப் பாகு பாடுபெற்ற நிலப்பெயர்க் கியையவே, அப் பெயராலேயே வழங்கும்

---

* மேற்கோள் ஈரிடத்தும் நம்பியகப்பொருள் உரையின்கண்ணே கண் டது.

ஐவகை ஒழுக்கத்தினைக் கூறினர். இவ் வைந்திணையினையே, "அன்பின் ஐந்திணை" என இறையனாரும், "ஐந்திணை என்பது அன்புடைக்காமம்" என அகப்பொருள்விளக்கமுடையாரும் கூறினர். ஆதலின் எழ்திணைகளிலும், இவ்வைந்தே தலைவன் தலைவியர் உள்ளத்தே நிகழும் அன்பினை விளக்கிச்செல்வன என்பதும், அதுபற்றியே, முன்னர்ப் பிறிதோரிடத்திற் கூறியாங்கு, மற்றைக் கைக்கிளை, பெருந்திணை யிரண்டும் இவற்றிற் குறைந்த சிறப்பினையேயுடைய என்பதும் பெற்றும்.

இனிக் குறிஞ்சிமுதலிய பெயர்கள், நிலத்திற்காம்போது ஆகுபெயராய்ப் பொருள்விளக்கமுற அமைந்திருக்கின்றன எனினும்; அவைதாமே, அகத்து நிகழும் ஒழுக்கங்கட்குப் போாயவழி, அச்சொற்களுக்குப் பெயர்க்காரணம் கூறுவது, அத்துணை எளிதாகத் தோற்றவில்லை. இவை பண்டைக்காலந்தொட்டே இவ் வொழுக்கங்கட்குப் பெயராய் வருகின்றமையின், இவற்றை இடுகுறியென்னலே ஏற்புடைத்தென்பர் சிலர். மற்றும் சிலர் அகத்தின்கண் காம இன்பம்பற்றிநிகழும் ஒழுக்கங்களிற் சிறந்தனவாகிய புணர்தலும், பிரிதலும், (பிரிவாற்றி) இருத்தலும், (பிரிவாற்றாது) இரங்கலும், ஊடலும் ஆகிய இவ்வைந்தும் செவ்விபெற நிகழ்தற்குத் தக்க நிலங்கள், உற்றுநோக்கின் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் இவையாதலின் இவ்வைந் தொழுக்கங்களும் நிகழ்தற்குத் தக்கசிறப்பினையுடைய நிலங்களின் பெயரையே இவ்வொழுக்கங்களுக்கும், ஆகுபெயராக்கிக்கொண்டு அகத்திணை ஐந்தும் வகுத்தனர் எனக்கூறுதல் ஒருவாறு பொருத்தமுடைத்தேயாம் என்பர்.

இனி இவ்வைந்திணைகளில் ஒவ்வொன்றிற்கும் ஆசிரியர் கூறும் முதற்பொருள், கருப்பொருள் இவை இவை எனக் கூறுகின்றார்.

அவற்றையெல்லாம் இங்கோர் அட்டவணையிற் சுருக்கமும் விளக்கமுமுறச் சேர்த்துக் காட்டுவோம். அவ் அட்டவணையைச் சேர்ப்பதன் முன்னர், முதல், கரு, உரி என்பன யாவை என்பது கூறல் அவசியமாகின்றது. அவற்றுள்,

முதல் என்பது நிலமும், பொழுதும்; நிலம் முற்கூறப்பெற்ற குறிஞ்சி முதலிய ஐந்துமே; பொழுதுதானும் பெரும்பொழுது சிறுபொழுது என இருவகைத்து. ஆண்டினை ஆறுகூறு செய்து, ஒவ்வொரு பாகத்திலும் உள்ள இரண்டுமாதத்தினையும் ஆவணிமாதந் தொடங்கிக் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் எனப் பேரிட்டனர். இவ்வாறும் பெரும்பொழுதாம். நாளினை ஆறுகூறுசெய்து ஒவ்வொருகூற்றினுமுள்ள பத்துநாழிகைநேரத்திற்கும் ஞாயிறுதோன்றுநேரமுதலாகத்தொடங்கிக் காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை எனப் பேரிட்டனர். இவ்வாறுஞ் சிறுபொழுதாம்.

கரு என்பது தெய்வம், உணவு, மனிதர், விலங்கு, பறவை முதலியன.

உரி என்பது அவ்வத்திணைக்குரிய எனக் கூறப்பட்ட, புணர்தல், பிரிதல், (ஆற்றி)இருத்தல், (ஆற்றாது)இரங்கல், ஊடல் என்னும் சிறப்பொழுக்கங்கள். இனி மேற்கூறிய அட்டவணை வருமாறு:—

(தொடரும்)

வே. முத்துஸாமி ஐயன்.



# தமிழும் ஸம்ஸ்க்ருத உதவியும்.

## Tamil and the Influence of Sanskrit.



இவ் வுலகத்தின்கண் தற்காலத்தில் வஸிக்கும் மனிதஜாதியாரின் பூர்விகர்கள் ஆதிகாலத்தில் மத்யஆசியாவின் பீடபூமியாகிய ஆக்ஸஸ் நதீதீரப்ரதேசங்களில் வஸித்தனர் என்றும், பிறகு சிலகாலஞ்சென்றதும் ஜனப்பெருக்கால், அவர்கள் பலஜாதியாராய்ப்பிரிந்து நான்குபக்கங்களிலும் பரவத்தொடங்கினரென்றும், அவர்களில் துரேனியர் என்ற ஒரு பிரிவினர், கீழ்த்திசைசென்று மங்கோலியா, சீனு, திபேத் முதலான தேசங்களிற் குடியேறினரென்றும், அவ்வாறு குடியேறினவர்களில் ஒருபிரிவினர், ஹிமயமலையின் ஒரு கணவாய்வழியாய் இந்தியாதேசத்தில்ப்ரவேசித்து, தெற்கேசென்று கடைசியாய்த் தக்ஷிண இந்தியாவில் குடியேறினர் என்றும், இவர்கள் தான் த்ராவிடர் என்றும் மனிதவர்க்கசாஸ்த்ரஞ்ஞர்கள் (Ethnologists) கூறுகின்றனர்.

இது தவிர, முன் மத்தியஆசியாவில் வசித்த பூர்வஜனங்களில், ஆர்யர் என்ற மற்றொருபிரிவினர், தெற்குமுகமாய்ச்சென்று, அவர்களில் ஒரு பிரிவினர், தென்மேற்குப்ரதேசங்களாகிய க்ரீஸ், இதாலி முதலிய தேசங்களிற் குடியேறி, அங்கிருந்து ஐரோப்பாமுழுதும் பரவித் தற்காலத்தில் ஐரோப்பியர்களின் பூர்விகர்களாயினர் என்றும், இவர்களே ஐரோப்பிய ஆர்யர்களென்றும், சொல்லப்படுகின்றனர்.

ஆர்யரின் மற்றொருபிரிவினர், முதல் முதல் பாரஸீகதேசத்திற் குடியேறினர் என்றும், இவர்கள் இரேனியர் என்ற பெயர்வகித்தனர் என்றும், பிறகு சிலகாலஞ்சென்று பாரஸீகத்தினின்றும் ஒரு பிரிவினர், கீழ்முகமாய்ச்சென்று வடமேற்குத்திசைவழியாய் இந்தியாவில் ப்ரவேசித்து ஸிந்துநதீதீரங்களிலும் அவைகளின் உபப்ரதேசங்களிலும் குடியேறினர் என்றும் கூறுகின்றார்கள். அவர்கள் ஸிந்துநதீ

தீரங்களில் வஸித்ததால், அவர்களுக்கு ஸிந்துக்கள் அதாவது ஹிந்துக்கள் என்று பெயர். (ஸெண்ட் அவஸ்தா பாஷையில் 'ஸ'வுக்கும் 'ஹ' வுக்கும் வித்யாஸமில்லை.)

## உலகபாஷைகள்.

மூலபாஷைகள்:—

| | | | |
|---|---|---|---|
| I. | ஆர்யபாஷை | ஸம்ஸ்கிருதம் | |
| | | ஸெண்ட் அவஸ்தா | |
| | | க்ரீக் | ஐரோப்பியபாஷைகள். |
| | | லத்தீன் | |
| II. | ஸெமெடிக் | அராபி | |
| | | ஹிப்ரு | |
| III. | துரேனியபாஷை | மங்கோலியம் | தமிழ் |
| | | மலயம் | |

முன்கூறிய ஐரோப்பியரும், பாரஸீக இரேனியரும், இந்திய ஹிந்துக்களும், ஒரே பெரியவகுப்பைச் சேர்ந்தனர் ஆதலால், அவர்களுக்கு ஆர்யர்கள் அல்லது இந்து—ஐரோப்பியர் என்று பெயரிடப்பட்டிருக்கின்றது.

முன் கூறியவாறு ஸிந்துநதீப்ரதேசங்களிற் சிலகாலம் வசித்து வந்த ஆர்யர்கள், ஜனப்பெருக்கால், கிழக்கேயும் தெற்கேயும் பரவிப் பின்னர் ஆர்யாவர்த்தம் என்ற புண்ணியபூமியில் வசிக்கத்தொடங்கினர். அக்காலத்தில் அவர்கள், அப்ரதேசங்களில்வசித்த தாஸ்யர்கள், துரேனியர்கள், ஸித்தர்கள், நாகர்கள் என்ற பூர்விகர்களுடன் அநேக போர்புரியநேர்ந்ததென்றும், கடைசியாய் ஆர்யர்களின் அமிதபலத்தால், பூர்வகுடிகள், தென்திசைஓடிச்சென்றனரென்றும், அவ்வாறு சென்றவர்களில் ஒருஜாதியார் முன்கூறிய துரேனியர் என்றும், அவர்கள் தக்ஷிண இந்தியாவில் குடியேறினதும் அவர்கள் த்ராவிடர் என்று வழங்கப்பட்டார்களென்றும் ஊஹிக்கப்படுகின்றது. மேற்கூறியவிஷயங்களில், பிற்கூறிய சிலவற்றைத்

தவிரப் பெரும்பான்மை நிராக்ஷேபணையாய் யாவராலும் அங்கீகரிக்கப் பட்ட ஸித்தாந்தங்களன்று.

இதுவரை யகப்பட்டிருக்கும் ரிக்வேதம் முதலான ஆதிக்ரந்தங் களிற்கூட, ஆர்யரும் த்ராவிடரும் ஆதிகாலம்முதல் இந்தியாவில் வஸித்ததற்குமாத்திரம் ஆதாரங்களகப்படுகின்றனவேயொழிய, இவர்கள் எக்காலத்திலாவது அன்னியதேசத்திலிருந்ததாகவாவது, அங்கிருந்து இந்தியாவில் ப்ரவேசித்ததாகவாவது நிரூபிக்கப் போது மான ஆதாரங்கள் அகப்படவில்லை.

ஆர்யரும், துரேனியரும் அன்யதேசத்தவர்கள் என்ற சித்தாந்த மானது சிறிதுகாலத்துக்குமுன்பு ஐரோப்பியரால் அங்கீகரிக்கப் பட்ட 'மத்ய ஆசியாவே மனிதரின் ஜன்மபூமி' என்ற சித்தாந்தத்தை மறுக்க மனமில்லாததால், கொள்ளப்பட்டதாயிருக்கின்றது.

ஆதலால் மேற்கூறிய ஆர்யர்கள் த்ராவிடர்கள் இவர்களின் ஜன்மபூமி இந்தியாதேசந்தானு அல்லது அன்யதேசமா என்ற விசா ரணையானது, தற்காலத்திலகப்பட்டிருக்கும் ஆதாரங்களைக்கொண்டு நிர்ணயிக்கத்தக்கதல்ல.

ஆகையால் நிரூபிக்கவியலாத இம்மஹாவிசாரணையில் இந் நிலைமையில் தலையிட்டுக்கொள்ளாமல், நிராக்ஷேபணையான ஒரு நிலை மையிலிருந்து பிற்பட்டசங்கதிகளை விசாரிப்போம்.

அதாவது முன் ஒருகாலத்தில் உத்தரஇந்தியாவில் ஆர்யா வர்த்தமென்றதேசத்தில் ஆர்யர்கள் என்ற ஒருஜாதியார் ஸம்ஸ்க் ருதபாஷையை வழங்கிக்கொண்டு வசித்துவந்தனர்.

தக்ஷிணஇந்தியாவில் த்ராவிடர் என்ற ஒருஜாதியார், த்ரா விடம் என்ற ஒரு பாஷையை வழங்கிக்கொண்டு வசித்துவந்தார்கள்.

இவ்விரு ஜாதியாரின் பூர்வசரித்திரங்களும், இவர்களின் ஜன்ம பூமிகளும், இந்நிலைமைக்குமுன் நமக்குத்தெரியாதென்றேவைத்துக் கொள்வோம்.

இந்நிலைமையில் நாம் விசாரிக்கவேண்டியவிஷயங்களாவன :—

(1) தமிழ்ப்பாஷையும் ஸம்ஸ்க்ருதபாஷையும் தனிப்பாஷைகளா? அல்லது ஒன்றிலிருந்து மற்றொன்று ஜன்ய பாஷையா?

(2) ஸம்ஸ்கிருதபாஷை தமிழ்ப்பாஷைக்கு எக்காலம்முதல் எவ்வளவுவரை உதவி செய்திருக்கின்றது.

(3) தமிழின் அபிவ்ருத்திக்கு ஸம்ஸ்க்ருதம் எம்மட்டும் காரணமானது.

(4) தற்காலத்தில் தமிழபிவ்ருத்திக்குத் தமிழபிமானிகள் செய்யவேண்டிய கடமைகள் யாவை?

தமிழ்ப்பாஷையின் சரித்திரத்தைக் கூறும்பொழுது அதன் அபிவ்ருத்திக்குத் தக்கவாறு அதன் காலமும்,

——கி. பி. 1 வரை பூர்வகாலம் (Ancient Period)
கி. பி. 1 முதல், 1800 வரை மத்யகாலம் (Middle Period)
கி. பி. 1800 முதல்—— தற்காலம் (Modern Period)

என முக்காலங்களாய் வகுக்கப்படலாம். பூர்வகாலம் என்பது சரித்திர ஆராய்ச்சிக்கு உட்படாததாய், அதன் சரித்திரத்தைச் சரியானபடி நிர்ணயிக்கப் போதுமான ஆதாரங்களற்றதாய், கேவலம், உலகயுக்திவாதங்களாலும், நாடோடியாய்க் கர்ணபரம்பரையாய்ப் பரவியிருக்கும் கதைகளாலும், (traditions) அப்போதைக்கப்போது இதரபாஷைகளிலும், இதரதேசசரித்திரங்களிலும் ஆங்காங்குக் காணப்படும் குறிப்புக்களாலும், ஒருவாறு தந்நிலை ஊகிக்கப்பெற்றதாயுள்ள அவ்வாதிகாலமே தமிழின்பூர்வகாலமென்று பெயர். க்றிஸ்து ஜனனத்துக்கு முற்பட்ட காலமே தமிழின் பூர்வகாலமெனக்கூறலாம்.

ஏதாவது ஒரு பாஷையின் வரலாற்றை நிர்ணயிப்பதற்குக் கிடைக்கும் ஆதாரங்களை ஸ்வய ஆதாரங்கள் (Internal evidences), அன்ய ஆதாரங்கள் (External evidences) என்று இருவகையாய்ப் பிரிக்கலாம். ஸ்வய ஆதாரங்கள் என்பவைகள், அந்தந்தப் பாஷை ஸம்பந்தமான இலக்கண இலக்கியங்களில் அகப்படும் காலக்குறிப்புக்கள், தேசக்குறிப்புக்கள், சரித்திரக்குறிப்புக்கள் முதலானவைகளே.

நாம் இப்பொழுது விசாரணைசெய்யும் பூர்வகாலத்திய தமிழ் நூல்கள் யாதொன்றும் நமக்கு அகப்படாததால், தமிழின் பூர்வகால வரலாற்றை நிர்ணயிக்க ஸ்வய ஆதாரங்கள் இந்நிலைமையில் இல்லை யெனவே சொல்லலாம். இனி ஒருக்கால், அனேக பழையதமிழ் நூல்கள் அகப்படுமாயின், அவைகளைக்கொண்டு தமிழின்பூர்வகால சரித்திரமானது ஒருவேளை சரிவர எழுதப்படலாம்.

ஆகையால் இந்நிலைமையில் அன்னியஆதாரங்கள் ஏதாவதுண்டா என்று கவனிப்போம்.

அன்னியஆதாரங்கள்.

ஸம்ஸ்க்ருத ஆதாரங்கள்

ப்ராக்ருத ஆதாரங்கள்

சிலாசாஸனங்கள், ஸ்தம்பங்கள் முதலானவைகள்

அன்யதேசச்சரித்திர ஆதாரங்கள் எனப் பிரிக்கப்படலாம்.

ஸமஸ்க்ருத ஆதாரங்கள். அதாவது ஸம்ஸ்க்ருத பாஷையில் வரைந்துள்ள வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள், ஸித்தாந்தங் களில் இத்தமிழ்த்தேசத்தைப்பற்றியாவது தமிழ்ப்பாஷையைப் பற் றியாவது ஏதாவது கூறப்பட்டிருக்கின்றதா?

வேதங்கள். வேதங்களிலாவது, ப்ராஹ்மணங்களிலாவது, உப நிஷத்துகளிலாவது இத்தேசத்தைப்பற்றியாவது, இத்தேசத்தில் முற்காலத்தில் வழங்கிய பாஷையைப்பற்றியாவது யாதொருவிதமான குறிப்புக்களும் காணப்படவில்லை.

இராமாயணத்தில், விந்தியமலைக்குத்தெற்கே கிஷ்கிந்தை, ஜனஸ்தானம் முதலான இரண்டொரு இடங்களைத்தவிர மற்ற ப்ர தேசங்களெல்லாம், நிர்மானுஷ்யமானதும் அநாகரீகர்களும் நர பக்ஷணிகளுமான அரக்கர்களால் ஸஞ்சரிக்கப்பட்டதுமான தண்ட காரண்யம் என்ற ஒருபெருவனமென்று தெரியவருகின்றது. ஆனல், வான்மீகிராமாயணம் கிஷ்கிந்தாகாண்டத்திற் சீதையைத்தேடவேண் டியதாய்ச் சுக்ரீவன் ஆக்ஞாபிக்குமிடத்தில் தக்ஷிணதேசத்தை வர் ணிக்கையிற் பின்வருமாறு கூறுகின்றூர்.

𑌅𑌨𑍍𑌵𑌿𑌷𑍍𑌯 𑌦𑌣𑍍𑌡𑌕𑌾𑌰𑌣𑍍𑌯𑌾𑌨𑍍 𑌸𑌪𑌰𑍍𑌵𑌤𑌨𑌦𑍀𑌂𑌗𑍁𑌹𑌾𑌂
𑌨𑌦𑍀𑌂 𑌗𑍋𑌦𑌾𑌵𑌰𑍀𑌂 𑌚𑍈𑌵𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌵𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤
𑌤𑌥𑍈𑌵𑌾𑌨𑍍𑌧𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑌪𑍁𑌣𑍍𑌡𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚 𑌚𑍋𑌳𑌾𑌨𑍍 𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌾𑌨𑍍
𑌶𑍍𑌚𑌕𑍇𑌰𑌳𑌾𑌨𑍍

அதாவது தண்டகாரண்யப்ரதேசங்களில் தேடும்பொழுது, ஆந்த்ர தேசம், சோளதேசம், பாண்டியதேசம், கேரளதேசங்களைத் தேடுங்கள் என்று சொல்லப்பட்டிருப்பதால், பிற்கூறிய மூன்றுதேசங்களும் தமிழ்த்தேசங்களாதலால், ராமாயணகாலத்திலேயே தமிழ்த்தேசமானது மூன்று ராஜாங்கங்களாய் உயர்நிலையிலிருந்ததென்று விளங்குகின்றது.

குறிப்பு:—ஆனல், கிஷ்கிந்தாகாண்டத்தில், கூறப்பட்டுள்ள பூகோள (Geographical) வர்ணனைகள்முழுதும் பிற்பட்டு எழுதப்பட்ட ப்ரக்ஷிப்த (interpolations) ங்களென நிர்ணயிக்கப்படுகின்றது. ஆயினும், இந்தக்காண்டம் எழுதப்பட்ட அப் பூர்வகாலத்திலாவது நமது தமிழ்த்தேசங்கள் நல்லநிலைமையிலிருந்தனவென்று தெரியவருகின்றது.

மனுஸ்ம்ருதி (IV. 43-44)

𑌶𑌨𑌕𑍈𑌸𑍍𑌤𑍁 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌲𑍋𑌪𑌾𑌦𑌿𑌮𑌾𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌜𑌾𑌤𑌯𑌃
𑌵𑍃𑌷𑌲𑌤𑍍𑌵𑌂 𑌗𑌤𑌾𑌲𑍋𑌕𑍇 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌦𑌰𑍍𑌶𑌨𑍇𑌨𑌚
𑌪𑍌𑌣𑍍𑌡𑍍𑌰𑌕𑌾𑌶𑍍𑌚𑍋𑌡𑍍𑌰 𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌾𑌃 𑌕𑌾𑌮𑍍𑌬𑍋𑌜𑌾𑌯𑌵𑌨𑌾𑌶𑍍𑌶𑌕𑌾𑌃

என்ற சுலோகங்களால் தர்மநிலைகுறைந்த க்ஷத்திரியஜாதியர்கள் பௌண்ட்ரர், த்ராவிடர், ஒஷ்ட்ரர், காம்போஜர், யவனர், சகர் என்ற ஜாதியார்களாய் மாறிவிட்டனர் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. இதில் த்ராவிடர் என்பவர்கள் தற்காலத்திய தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் பேசும் ஜாதியரே.

மஹாபாரதம். (அநுசாசனபர்வம்)

𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌾𑌶𑍍𑌚 𑌕𑌲𑌿𑌙𑍍𑌗𑌾𑌶𑍍𑌚 𑌪𑍁𑌲𑌿𑌨𑍍𑌦𑌾𑌶𑍍𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌶𑍀𑌨𑌰𑌾𑌃
𑌵𑍃𑌷𑌲𑌤𑍍𑌵𑌂 𑌪𑌰𑌿𑌗𑌤𑌾𑌃 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌨𑌾𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍

இதிலும் த்ராவிடர் முதலானஜாதியர்கள், தாழ்வடைந்துவிட்டார்கள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

மஹாபாரதம் ராஜஸூயபர்வம்.

த்ராவிடா: ஸிம்ஹளாஶ்சைவ ராஜா காஶ்மீரகஸ்ததா

த்ராவிட, ஸிம்ஹல, காச்மீரராஜாக்களும் ராஜசூயயாகத்துக்கு அழைக்கப்பட்டிருந்தனர்.

மஹாபாரதம் அர்ஜுனதீர்த்தயாத்ராபர்வம்.

ஸ்நாத்வா மஹாபாஹு: ஸமுத்ரஸ்ய மஹீபதே
மணலூரேஶ்வரம் ராஜந் ஸமேத்ய விதிவாஹநம்
தஸ்ய புத்ரீம் ப்ரமதாநாம் துஹிதா வார்ஜுநஸ்ய ஸா

காவேரிநதீஸங்கமதீர்த்தத்தில் ஸ்நாநம்செய்து பிறகு கரையோரமாக மணலூர்வந்து அவ்வரசனைக்கண்டு அவன்மகள் சித்ராங்கதையை யர்ஜுனன் விவாஹஞ் செய்தான்.

ஹரிவம்சம்.

கருந்தமாத்ததாக்ரீடஶ்சத்வாரஸ்தஸ்ய சாத்மஜா:
பாண்ட்யஶ்ச கேரளஶ்சைவ கோலஶ்சோளஶ்ச பார்த்திவா:
தேஷாம் ஜநபதா: ஸ்பீதா: பாண்ட்யாஶ்சோளாஶ்ச கேரளா:

குருந்தமருக்கு அக்ரீதர் என்றபுதல்வர். அவருக்கு பாண்டியன், கேரளன், கோலன், சோளன் என்ற நான்கு புதல்வர்கள். அவர்களுக்கு பாண்டிய, சோள, கேரள தேசங்கள் பிரித்துக்கொடுக்கப்பட்டன.

கோலிஸர்ப்பா மாஹிஷிகா: தார்வாஶ்சோளாஶ்ச கேரளா:
ஸர்வே தே க்ஷத்ரியா ராஜந் தேஷாம் தர்மோ நிராக்ருத:
வஸிஷ்டவசநாத்ராஜந் ஸகரேண மஹாத்மநா,

சோளர், கேரளர் முதலானவர்கள் க்ஷத்ரியர்கள், வஸிஷ்டர் ஆக்ஞைப்ரகாரம் ஸகரமஹாராஜனால் ஆர்யதர்மங்களில் அதிகாரமற்றவர்களாய்ச் செய்யப்பட்டார்கள்.

4

மேற் கூறிய ஆதாரங்களால் நாம் அறியக்கூடிய முக்யவிஷயம் யாதெனில், அவைகளால் குறிக்கப்படுகிறபடி சோளர், பாண்டியர், கேரளர் என்ற த்ராவிடர்கள், க்ஷத்ரிய ஜாதியாராயிருந்து ப்ரஷ்டர்களானவர்கள் என்று சொல்லப்பட்டிருக்கும் சரித்திரக்குறிப்புக்களின் உண்மையும் தன்மையும் எவ்வாறிருப்பினும், குறைந்தது மேற்கூறிய க்ரந்தங்கள் எழுதப்பட்ட பூர்வகாலத்திலேயே, இத்ராவிடதேசமானது நல்லநிலைமையிலிருந்ததென்பதேயாம். ஆனால் மேற்கூறிய ஆதாரங்களால், த்ராவிடதேசமும், அதன்பிரிவாகிய சோள, பாண்டிய, கேரள தேசங்களும் மாத்திரம் குறிக்கப்பட்டிருக்கின்றனவே யொழிய தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடமென்ற நான்குபாஷைகளைப்பற்றி ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை.

அசோக சக்ரவர்த்தி. (கி. மு. 260) மகததேசத்தை யரசாண்ட மௌர்ய ராஜவம்சத்தோர் அரசனான அசோகன் பௌத்தமதத்தை ராஜமதமாக்கி அதைச் சிங்களதேசம்வரை பரவச்செய்தகாலத்தில், சேர சோள பாண்டிய தேசங்கள் தன்னுடைய மித்ரதேசங்களென அம்மஹாராஜன் தன்னுடைய சாஸனங்களிற் கூறியிருக்கின்றார்.

பினிஷியர்கள் என்ற ஒரு ஜாதியார் மேலக்கரை யோரமாய் வ்யாபாரம்செய்தனரென்றும், அவர்களின், மூலமாய்த் தோகை, அரிசி முதலான சில சரக்குக்களும், அரும்பதங்களும், கி. மு. 10-வது நூற்றாண்டில் அரசாண்ட சாலமன்காலத்தே மேல்தேசங்களிற் பரவியிருப்பதாகவும் தெரியவருகின்றது.

விஜயன். கி. மு. 543-ல் விஜயன் என்ற வங்காளதேசத்து ஒரு சிற்றரசன், இலங்கையைஜயித்துத் தன்ராஜாங்கத்தை ஸ்தாபித்தானென்றும், அவன் பாண்டியராஜன்புதல்வியை மணந்தானென்றும் மஹாவம்சமென்ற சிங்களதேசசரித்திரங் கூறுகின்றது. அக்காலத்தில் தாம்ரபர்ணிநதிசங்கமஸ்தானத்திலுள்ள கோற்கை யென்னும் நகரே பாண்டியதேசத் தலைநகரெனவும் தெரியவருகின்றது.

மகாஸ்தனிஸ். (கி. மு. 300) மகததேசமன்னனான சந்த்ரகுப்த மஹாராஜன் ஸதஸில் க்ரீக்ஸ்தானபதியாய் விளங்கிய மகாஸ்தனிஸ் என்பவர், பாண்டியதேசத்தைப்பற்றித் தான் கேள்விப்பட்டதை

எழுதியிருக்கின்றார். ஹெர்குலிஸ் என்பவருக்குப் பாண்டியா என்ற பெண்ணுண்டு. அவளுக்குத் தக்ஷிணதேசத்தை யவர் கொடுத்தார்.

மஹாவம்சம். சிங்களதேசச்சரித்திரமான மஹாவம்சத்தாலும், இத்தமிழ்நாட்டின் பூர்வகாலநிலை ஒருவாறு தெரியவருகின்றது.

ப்ளினீ (மரணம் கி. பி. 79) என்ற 'க்ரீக் சரித்திரக்காரர்' 'பாண்டியர் என்ற ஒரே ஜாதியார்தான் ஸ்த்ரீயால் ஆளப்படுகின்றனர்' என்று கூறியிருக்கின்றார். இதில் குறிப்பிட்டிருக்கும் ஸ்த்ரீயின் பெயர் மதுராவதி என்று சிலப்பதிகாரமூலமாய்த் தெரியவருகின்றது.

பெரிப்ளஸ் (80–89 கி. பி.) என்னும் க்ரந்தத்தில் பாண்டியதேசமும், அதன் தலைநகராகிய மதுரையும் சொல்லப்பட்டிருக்கின்றன.

அகஸ்டஸ் என்னும் ரோம்சக்ரவர்த்திகாலத்தில் தக்ஷிண இந்தியாவிலிருந்து ஸ்தானபதியாய்ச்சென்றவர் பாண்டிய அரசனின் ப்ரதிநிதியென்று கால்ட்வெல் (Caldwell) அபிப்ராயப்படுகின்றார்.

தாலமி. கி. பி. 80-ம் ஆண்டில் கோற்கை யென்பது கிழக்கரையில் பெரிய க்ரீக்வ்யாபாரஸ்தலமென்று தாலமியென்ற அக்காலத்துப் பூகோளசாஸ்திரியால் தெரியவருகின்றது.

ஸ்ட்ராபோ என்ற அக்காலத்து க்ரீக்சரித்திரக்காரரும் பாண்டிய தேச ஸ்தானபதி அகஸ்டஸ் சபைக்கு அனுப்பப்பட்ட விஷயத்தைக் கூறியிருக்கின்றார்.

யூதர்கள் கி. பி. 68-ம் ஆண்டில் தங்கள் புண்யக்ஷேத்ரமாகிய ஜெருஸலம் அழிக்கப்படவும் யூதர்கள் மேற்குக்கரையோரமாய்க் குடியேறினதாயும் அவர்களுக்கு கி. பி. 198-ம் ஆண்டில் அக்காலத்துச் சேரதேசத்தரசனான ஸ்ரீ பாஸ்கரரவிவர்மனால் சில ஸ்தலங்கள் சாஸனஞ் செய்விக்கப்பட்டனவென்றும் தெரியவருகின்றது. மேற்கூறியவைகளினின்றும் நாம் முக்கியமாய் அறியக்கூடியவைகளாவன:—

(1) இப்பொழுது தமிழ்நாடாய்வழங்கும் சோள பாண்டிய தேசங்களும், கேரளதேசமும் முற்காலத்தில் த்ராவிட தேசங்களெனப் பெயர்பெற்று த்ராவிடபாஷையென்ற ஒரு பொதுப்பாஷையை வழங்கிவந்தன என்றும்,

(2) அக்காலத்தில் த்ராவிடபாஷையானது தற்காலத்திற்போல தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என நான்காய்ப் பிரிபவில்லையென்றும்,

(3) இத்ராவிடதேசமானது, கிறிஸ்துஜனனத்துக்குப் பல நூற்றாண்டுகளுக்குமுன்னரே ராஜ்யங்களாய்ச் செழித்திருந்தனவென்றும்,

(4) அக்காலத்தில், ஆர்யபாஷையான ஸம்ஸ்க்ருத பாஷையானது தமிழ்ப்பாஷையோடு கலக்காமல் த்ராவிடபாஷையானது ஒரு தனிப்பாஷையாயிருந்ததென்றும் தெரியவருகின்றது. இதுதான் தமிழின் பூர்வகாலம்.

(தொடரும்)

இங்ஙனம்

ஆர். எஸ். நாராயணஸாமி ஐயர்.

---

ஸ்ரீ:

# ஆழ்வார்திருநகரிச் சாசநங்கள்.

## XI.

### நம்மாழ்வார் ஸந்நிதி 2-வது ப்ராகாரம்.

### வடவண்டைச்சுவர் கீழோரம்.

காலம் : கோமாறவர்மன் சுந்தரபாண்டியதேவர்க்கு யாண்டு ச.

விஷயம் : 'ஆழ்வார்திருப்பள்ளியெழுச்சி திருவாராதநத்துக்காக விரமேதாவிநல்லூர் புனக்குளம் தானம்.'

(1) ஸ்வஸ்திஸ்ரீ திருவாய் கேழ்விக்குமேல் ஸ்ரீ கோமாறபன்மரான திரிபுவனசக்கரவர்த்திகள் ஸ்ரீ சுத்தரபாண்டிய ஷெவற்கு யாண்டு நாலாவதன் எதிர் மூவாமாண்டு துலாநாயிற்று பதினெட்டாந்திபதியும் வ-நிவஃபக்ஷத்து த்ரயோதசியும் ஞான (?) க்

கிழமையும் மேற்ற இரேபதிநாள் ஆரிநாட்டு ஬்ரஹ்மதேஶம் ஸ்ரீ வராஙக (2) ச்சதுர்வேதிமங்கலத்து ஊஹாஸபைஹோம் திரு வழுதிவளநாட்டுத் திருநகரியில் ஆழ்வார் திருநாடுடையபிரானுக்குத் திருப்பள்ளியெழுச்சித் திருவாராதனத்துக்கு அமுதுபடி சாத்துப் படி உள்ளிட்டு வேண்டுமவையிற்றுக்கு தன்மதானமாக விநியோகந் தவித்துக்குடுத்த புனக்குளமாவது பச்சலச்சேந்தபிரான் திருமா லிருஞ் (3) சோலை நாராயணனுன அழகிய பிரான்ஊாஸர் முன்பு ஆழ் வார் திருக்கையில் ஊாநம்பண்ணின புனக்குளம் இவ்வூர் தென் பிடாகை வீரமேதாவிநல்லூர்குளமும் குளத்தின்கீழ் பூமிக்கு எல்லை யாவது கீழெல்லை புமதேவபபேரேககா (?) நக்கலுக்கு மேற்கும் தென்னெல்லை மலைக்குப்போகிற வழிக் (4) கு வடக்கும் மேலெல்லை இக் குளத்து நீர்நக்கலுக்கு மேற்கு குடியிருப்புக்கு நீக்கின நிலத்து மேலரசவீதிக்கும் (?) செடிதரத்து (?) கீழெல்லை பெருவரம் புக்கு கிழக்கும் வடவெல்லை ஓடைக்குத் தெற்கும் இந் நான்கெல்லைக் குட்பட்ட நிலம் பெரியபெருமாள் சுந்தரபாண்டிய தேவற்கு பதினேழா வது நில (5) மளந்த வீரபாண்டியன்கோலால் நிலம் இரண்டரை வேலியும் இக் குளத்தகம்பு நீர்நக்கலுக்கு மேற்கு புன்செயானரமல (?) கூறிட்ட புன்செய் நீக்கி நீக்கி உள்ள நிலத்திலே குடியிருப்புக்கு இக் கோலால் நிலம் அரையும் ஆக நிலம் மூன்றுவேலிக்கு இவ் வாண்டுமுதல் வினியோகந்தவிருமிடத்து வந்தார் (6) * நெற் கட மையும் மொழிய நீக்கி உள்ள மறப்பாடிகாவலு தடிப்ப—க்கும் காட்சி நாட்டோகரியும் வினியோகமும் பொன்வரியு மஞ்சபா (?) வினி யோகமு மற்றும் நிலத்திலும் வ—லுங் குடியிருப்பிலும் பொனெக கின மாறவகளிலுமனவக் கஞ்சில்வரி பெதுருவரி (?) அவாந்தரவரி களும் மற்று எப்பேர்பட்ட (7) தன்மதானமாக தானம்பண்ணி குடி யிருப்புக்கு மனை இறைவாச—தாமமுந்தலை ஒப்பு உட்பட மற்றும் எப்பேறபட்ட கும............கு வைக்குமவர்களுந் (?) தவிந்தோம் மஹாஸபைஹயொம். திருநாடுடையபிரானுக்கு இக்குளத்துக்குஞ் செட்ட (?) குளத்துக்கு வருடபக னெருவனும் (?) செட்டி (8) தன் கடையூடே நீர்பாஞ்சுபோந்தமையில் இனி இக்குளத்துக்கு ஆற்றில் நின்றும் இக்குளங்களுக்குப்பாஞ்சுவருகிற—நின்று மிக்குளத்துக்கு

நீரிஞ்சு (?) பாயுமிடத்திலே கால்வெட்டி..................பெறுவாரா கவும் இக்க—ம் பொ—ஆகநிலம் மூன்றுவேலியும் அழக (?) (9) ஷாஸருடைய ப—லே தானம் பண்ணினமையும் நாங்களு மிந்நிலம் சொம்மாக (சொத்தாக) தன்ம தானம்பண்ணினமையும் நாங்களுமிந் நிலம் சொம்மாகத் தன்மதானம்பண்ணி இப்பேசினவி......எப்பேற் பட்டினவுந்தவிர்ந்து இப்படி சந்திராதித்தவற் செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்வாராகவும்............பிடிபாடு பண்ணிக் குடுத்தோம் மஹா (10) (ஸபை)யாம் திருநாடுடைய பிரானுக்கு இவை பசலை சேந்தபிரான் செந்தாமரைக்கண்ணி........................

....................................................................................

தவன் எழுத்து...........................................................

(11) யூர் (ய) ஜீமூர்த்தி வாஜபேஜி ஸ்ரீ கிருஷ்ணன் எழுத்து. இவை பசலைசேந்தபிரான் திருமாலிருஞ்சோலை நாராயணனன அழகிய பிரான் ஷாஸ(ர் எழுத்து) இவை நெட்டூர் ஸ்ரீக்ரூஷ்ணன் ஸ்ரீ வாஸு தெவநு எழுத்து. இவை பசலை அவிலசோமவாஜபெஜி திருமாலிருஞ் சோலை நாராயணன் எழுத்து. இவை கந்த(ா)டை பேரா (12) டியான ஷட்ட ஹோமயாஜி எழுத்து. இவை நம்பூர் தெதுலோகநாதன் மகன் சுந்தரன் எழுத்து. இவை திருக்கடவூர் ஆ—ளும் பிரான் எ ழுத்து இவ வ பெருவாயூர் அழகன் கோவிந்தன் எழுத்து. இவை மூப்பிலா திருமாலிருஞ்சோலை நாராயணன் எழுத்து. இவை பசலை சேந்தபிரான் செந்தாமரைக்கண்ணனுன(13)ளவாளஷாஸநு எழுத்து. இவை உறுப்புட்டூர் இளையபெருமாள் எழுத்து. அதிசெபமங் கலத்து அனந்தநாராயணன் திருமா (லிருஞ்சோ)லை நாராயணன் எழுத்து. இவை குணரேசங்காதெநத (?) சுவாமிபட்டசோமாசி(எழு) த்து. இவை திருமாலிருஞ்சோலை நாராயணன் எழுத்து. இவை திருப் பேரா ஸ்ரீமா (14) தவன் திருமாலிருஞ்சோலை எழுத்து. இவை திருப் பேரா சூரியதேவன் திருமாலிருஞ்சோலை எழுத்து. இவை பசலை திருமாலிருஞ்சோலை நாராயணன் சேந்தபிரான் எழுத்து. இவை திருமாலிருஞ்சோலை ஸ்ரீக்ரூஷ்ணன் எழுத்து. இவை.........ப்பொனப் புறத்து உயக்கொண்.........டமருதூர் அ (15) மகன் தாமோதரன் எழுத்து. இவை இறைவான்சேரி திருமாலிருஞ்சோலை தேவதேவே

சன் எழுத்து. இவை குண்டூர் நங்கை ஆழ்வான் எழுத்து. இவை மாதுகுடிசிற்றயன் எழுத்து. இவை ஒப்புறை ஸ்ரீ தேவிபட்டன்மகன் ஆலங்கொண்டவி—ன் எழுத்து. இவை (16) பெருவாயில் மாறன் சேந்தன் எழுத்து. இவைபெருவாயில் அடிகள் ஸ்ரீ க்ருஷ்ணன் எழுத்து. இவை பசலைசேந்தபிரான் சிராகவன்னன பெரியகோயில் நம்பி எழுத்து. இவை பெருவாயூர் திருமாலிருஞ்சோலை நாராயணன் எழுத்து. இவை இரங்கண்டி திருமிக்காமன் திருமாலிருஞ்சே(ாலைநா ராயண)ன் எழுத்து. இவைய் (17) கந்தாடைய் பேராயிரமுடை யான் பட்ட சோமாஜியார்மகன் இபிராய (?) நாராயணன் எழுத்து. இவை பெருவாயூர் அடிகள் சாதவேதன்னன பெரியகோயில்ஊாஸநு எழுத்து. இவை பசலை திருமாலிருஞ்சொலை கேசவன் எழுத்து. இவை பசலை (ய) ஜ்ஞூ8ூதி—ி எழுத்து. இவை இறைவரன் ரைதமை (?) சொ.....................ஊத்த கோளரி எழு (18) த்து. இவை குண்டூர் நாராயணனன ஸ்ரீ வைஷ்ண (வ) ஊாஸநு எழுத்து. இவை கிராஞ்சி கண்ணன் குமாரபட்ட சோமையாஜி எழுத்து. இவை குண்டூர் திருமாலிருஞ் சோலை ஊாஸநு எழுத்து. இவை முப்பிலாச்சி நரசிங்கபட்டன் எழுத்து. இவை பெருவாயூர்வாஜபெஜியார் தெய்வச் சிலை எழுத்து. இவை.....................க்கினன ஊாஸநு எ (19) ழுத்து. இவை குரவைசேரி திருவெண்காட்டு திருமாலிருஞ்சோலை நாராயணன் எழுத்து. இவர்கள் பணிக்க பிடிபாடு எழுதினேன் ஊடுஹெக்கணக்கு விளத்தூருடையான் நிறைஞ்சசோதி திருநாடுடை யானன சீபராந்தகமூவேந்தவேளான் எழுத்து.

A. M. சடகோபராமாநுஜாசார்யன்.

---

ஸ்ரீ:

# ஆழ்வார் திருநகரிச் சாசநங்கள்.

## XII

### ஆழ்வார்சந்நிதி வடவண்டைச்சுவர் கீழ்பாகம்.

காலம்: ஜடாவர்மன் குலசேகரதேவர்காலம்.

விஷயம்: ஆழ்வார்க்கு அக்கிரமகோபநல்லூர் அம்புளிக்குளம் விற்றுக்கொடுத்தது.

(20) கோச்சடை பன்மரான திருபுவனசக்கரவத்திகள் ஸ்ரீ குல சேகரதேவற்கு யாண்டு கங-வதின் எதிர் கஉ-மாண்டு மீநநாயிற்று இரண்டாந்தியதியும் அபரவக்ஷத்து த்ரயோதஶியும்பெற்ற ரோகிணி நாள் திருவழுதிவளநாட்டு திருநாடுடையபிரான் திருநாமத்திலேய் அமுதகுணவளநாட்டு அக்கிரமகோபநல்லூர். (21)............... ட்டோம் இறையிலி தேவதானமாக விற்றுக்குடுத்த பூமியாவது நாங்கள் குருபரம்பரையுடையோமா யாண்டனுபவித்துவருகிற அம்புளிக் குளத்துக்கும் இக்குளத்தின் கீழ்வந்த நன்செய் புன்செய்க்கும் எல்லை யாவது கீழெல்லை புற்குளத்து மேலெல்லைக்கு மேற்கும் தென்னெல்லை விஜயநாராய (22) .........ல்லைக்கு வடக்கும் மேலெல்லை பொலிஞ்சு நின்றபிரான் திருவிடையாட்டம் கழுதூரான வண்டுவராபதிநல்லூற் குளத்து தென்கோம்புக்குக் கிழக்கும் வடவெல்லை வண்டுவராபதி நல்லூர் தென்னெல்லைக்குத் தெற்கும் இவ்விசைந்(த)பெருநான் கெல்லைக்குட்பட்ட குளமும் குளப்பரிப்பும் நன்செய் புன்செயும் நத்தமும் ந (23)......................... மோடையும் மீன்படுபள்ளமும் தேன்படுபொதும்பும் உடும் பொடியும் அமைதிவளியும் (?) புற்றுந் தெற்றியும் மேனோக்கின மரமுங் கீழ்நோக்கின கிணறு மற்று மெப் பேர்ப்பட்டனவெலாம் உண்ணிலமொழிவின்றி - கொவிற்று விலைக் கலஞ் செய்து குடுத்தோம் திருநாடுடைய பிரான் திருநாமத்திலேய் (24)................................நாட்டு அக்கிரமகோபநல்லூற் கீழ் வகை நாட்டோம் இப்பரிசு விற்றுக்குடுத்த இவ் வம்புளிக்குளத் துக்கு பெருநான்கெல்லைக்குட்பட்ட நிலத்துக்கு எம்மிசைந்த

விலைப்பொருளும் இறையிலி பொருளும் விலைவாவனக்கள் கொ......
......ற்றிகையிலே அறக்கொண்டு விற்று விலைக்கலஞ்செய்து வ்ரு
மாண (25)..............................டுத்தோம் திருநாடுடைய
பிரான் திருநாமத்திலே கீழ்வகை நாட்டோம் இப்பரிசுவிற்றுக்குடுத்த
இவ்வம்புளிக்குளத்து பெருநான்கெல்லைக்குட்பட்ட நிலத்தால்வந்த
கடமை........மையும் சிலவரி......வரியும் வெட்டிபாட்டமும் பஞ்சு
பீலி சந்து விக்கிரகப் பேறும் மற்றும் எப்பேறபட்ட.................
(26) இறைக (ளெல்லா)ம் இக்குள நோக்கவந்த வெபுர (?) ளெல்
லாம் சந்திராதித்தவற்றங்களேயிறுத்துக் குடுப்போமாகவும் இப்படி
சம்மதித்து விற்று விலை—வ்ருமாணம் பண்ணிக்குடுத்தோம் இவ்வம்
புளிக்குளத்துக்கு இதுவேய் விலையோலையும் வெ–செலவோலையு மங்
தாகவும் இது வல்லத............ப்பலையாவ (27) ணச்சலா உண்ப
மொரு (?)மாவறுதிப்பொருட் செலவோலை காட்டவுங் காணவுங் கட
மையின்றி விலக்குற - விற்றுப் பொருளறக்கொண்டு இறையிலி
தேவதானமாச் சந்திராதித்தவற்செல்வதாக விலைப்பொருளும் இறைப்
பொருளுங் கையிலே யுறக்கொண்டு விற்று விலைக்கலஞ்செய்து
குடுத்தோம் இறையிலிதேவதானமாக (28) திருநாடுடைய பிரான்
திருநாமத்திலே அமுதகுணவளநாட்டு அக்கிரமகோபநல்லூர் கீழ்
வகை நாட்டோம் இப்படி சம்மதித்து விற்றுக்குடுத்தேன் வேள்
ஸோமனை (?) வில்லவதரையன் எழுத்து. இப்படிக்கு இவை
பொலிஞ்சான் சீராமதேவனை தென்னவன் ஆதிச்சசூளாமணி
மூவேந்தவேளான் எழுத்து. இப்படிக்கு........கோள் புலிக்குட்டி
எழுத்து. (29) இப்படிக்கு இவை அறந்தாங்கி கணவதி எழுத்து.
இப்படிக்கு இவை வேளான் வீற்றிருந்தானை செய்யான் (?) மூ
வேந்தவேளான் எழுத்து. இப்படிக்கு இவை சீராமதேவன் எழுத்து.
இரா—ய்யபட்டன் எழுத்து. இப்படி அறிவேன் வடசெம்பிநாடு
கொடுமளூருடையான் உத்தமபாண்டியநல்லூர் வேளான் தேவன்
(30).....................................வ்ருமாணமெழுதி
......ன்ன நாட்டுக் கணக்குடன் பள்ளிகொண்டான் குணவனு—ன.
முனைஞ்சியுடையான் எழுத்து ஸ்ரீ !!!

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,
நேஷநல்-ஹை-ஸ்கூல், திருச்சிராப்பள்ளி.

# அறமும் அறவுரிமையும்.

அறம் என்பது யாது? "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்து அறன்" என்பதில் மனத்தூய்மையையும், "அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்" என்பதில் மனமொழிகளின் தூய்மையும், 'அறவினை யாதெனிற் கொல்லாமை" என்றதில் ஜீவகாருண்யம்பற்றிய வினையும், "அறன் ஈனும் இன்பமும் ஈனும்......தீதின்றி வந்தபொருள்" என்பதிற் புண்யமும், "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்கை" என்பதில் ஈகையும், "அளவு அறிந்தார்நெஞ்சத்து அறம்போல நிற்கும்" என்பதில் நீதியும், "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது" என்பதில் வருணாச்சிரமதர்மமும், "அறத்திடுபிச்சை கூவியிரப்போர்" என்பதில் அறச்சாலையும் எனப் பலவாறாகப் பொருள்சொல்லக்கிடக்கின்றது "அறம்" என்னும் மொழியாம். இவ்வாறு "அறம்" என்னும் மொழியானது பல்வேறுபொருளைத்தோற்றும் காரணகாரிய முறைமையில் ஆராயுங்கால் அவை ஒரேகருத்தைத் தழுவினவாகத் தெளியப்படும். அறம் என்னும் மொழியைப் பகுத்துப்பார்க்கினும் "அறு" என்னும் வினையடியாகப் பிறந்து (வரையறுப்பது) மனிதர், கொள்ளவேண்டியதையும் தள்ளவேண்டியதையும் வரையறுப்பதெனப்பட்டுப் பகுத்தறிவுள்ள மனிதப்பிறப்பினர்யாவரும் அனுட்டிக்கவேண்டியதோர் ஒழுக்கத்தை விளக்குகின்றது. வடமொழியிலும் இம்மொழிக்கு ஒத்தே "தருமம்" என்னும் பதமும் வழங்கி வருகின்றது. நிற்க.

ஒழுக்கத்தில் மேம்பட்டதோர் அறம் வாய்மை எனப்படும். அதினும் சிறப்புற்றது கொல்லாமை என்பது, "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன் பின்சாரப் பொய்யாமை நன்று" என்னும் திருவள்ளுவர் திருவாக்கால் நன்கு உணரப்படும். ஈசுவரன், அன்பர்களுக்குக் கருணையால் அருளிய தனுகரணபுவனபோகங்களை நிலையுறச்செய்வது கொல்லாமை என்னும் அறத்தால் என்பது தெளியக்கிடத்தலால்

திருவள்ளுவர்கருத்தானது சாலப் புகழத்தக்கதேயாம். கொல்லாமைக்குக் காரணம் அன்பு இரக்கம் இரண்டையும் தழுவிய நல்லறமாகிய ஜீவகாருண்யமேயாம்.

ஜீவகாருண்யமே திருவுருக்கொண்ட நம் பெரியோர், தியானத்தாற்கண்ட தேவபிரசாதத்தின் மகிமையினால் நாம் அறத்தைக் கடைப்பிடித்து உய்யும்பொருட்டு நம் பக்குவத்திற்கேற்பப் பற்பல அறநிலையங்களையும் அறநூல்களையும் பரோபகாரம்பற்றி அமைத்திருக்கின்றனர். அவற்றுள் தலைமைபெற்றன மூன்று; அவை வித்யாலயம், தேவாலயம், மடாலயம் என்பனவாம். அற்றுள் வித்தியாலயத்தில் நல்லறங்களைக் கற்றுணர்ந்து ஆசானிடத்து அச்சத்தினால் நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தும், தேவாலயத்திற் கற்றவாறு கடவுளிடத்திற் பக்தியாலும் பயத்தினாலும் நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தும், மடாலயங்களிற் கற்றல் கேட்டல் சுவாநுபூதியாகிய சாதனங்களால் நல்லொழுக்கத்தைத் திடப்படுத்தியும் இப்பிறவியின் பயன் அடைதற்பாலதாம். வித்தியாலயங்கள் போதகாசிரியராலும், தேவாலயங்கள் அர்ச்சகராலும், மடாலயங்கள் மடாதிபதிகளாலும் அவரவர் யோக்கியதைக்குத் தக்கவாறு நடைபெறும். இவ்வறங்களைச் செவ்வனே நடத்துதற்பொருட்டு உதவிய பொருளும், அப்பொருள் ஆட்சியும் அறம் உரிமை என்னும் பதங்களாற் குறிக்கப்படும். நிற்க.

மேற்குறித்த மூவகை அறச்சாலைகளில் முற்கூறப்பட்ட வித்தியாவிஷயமானது அரசியலுடையாரது மேற்பார்வையில் நடத்தப்பட்டுக்காலத்திற்கேற்பச் சீர்திருத்தம்பெற்றுவருகின்றது. ஏனைய இரண்டுவிஷயங்களும் அவ்வம்மதத்தினருடைய ஆளுகையில் இருந்து சீர்திருத்தம்பெறாது க்ஷீணமடைந்துவருகின்றன. இவ்விரண்டு விஷயங்களையும் உரியமதத்தினரிடம், அரசர் ஒப்பித்திருந்தபோதிலும் கண்கூடாகிய நீதிக்குறைவைக் கண்டவிடத்துக் கண்டித்து ஒழுங்குபடுத்துவதாகிய உரிமையை அவர்கள் விட்டுவிடவில்லை. திருஷ்டாந்தமாகத் தேவாலயங்களிற் கன்னிப்பருவமுள்ள தாசிகளைப் பொட்டுக்கட்டி வியபிசாரிகளாக்குகிற ஒழுக்கத்தவறுகண்டவிடத்து அதனைக் கட்டோடே நிறுத்தும்படி சட்டம் பிறப்பித்துவிட்டனர்.

நீதிக்குறைையைக் கண்டவிடத்து அதனை நீக்குகிறதற்கு யாவர் முயலினும் துணையாய்நின்று உபகரிப்பதற்கு நமது காருண்யமுள்ள ஆங்கில அரசாட்சியானது முன்வந்துநிற்கின்றது. பூர்வஅரசர் முற்காலத்தில் உண்மையை ஆராய்ந்து வெளியிட்டவர்களைச் சிறைப் படுத்தவும், எரியிலிடவும், விஷத்தாற் கொல்லவும், ஊரைவிட் டோட்டவுமாகப் பலவாறு துன்புறுத்தினர். அத்தகைய அச்சமானது இக்காலம் எட்டுணையும் நிகழ்வதின்று.

ஒருவன் உண்மையைக்கண்டு வெளிப்படுத்த மற்றொருவன் அதுபற்றி அதனை மேலூக்க இவ்வாறு சொற்பகாலத்துக்குள் ஏனைய நாட்டார் எவ்வளவு சிறப்படைந்திருக்கிறார் என்பது யாவரும் மறுக் கத்தகாததோர் உண்மையாம். வித்யாலயம் நிற்கட்டும்; தேவா லயம் மடாலயங்கள் நம்மிடத்தில் ஒப்புவிக்கப்பட்டதில் இதுவரை செய்துள்ள சீர்திருத்தங்கள் யாவை? யாவரும் தெரிசிப்பதற்காகத் திருவிழாக்களில் வெளியேவரும் உற்சவமூர்த்திகளைப் புஷ்பங்களால் மூடிவைப்பதிலும், அச்சமும் அன்பும் பயக்கத்தக்க பரிசுத்தமான மடாலயங்களைத் தங்கம் வெள்ளிகளால் அலங்கரித்துப் போகஇச்சை யை எழுப்பிவைப்பதிலும் வியபிசாரிகளை நடிக்கச்செய்வதிலுந்தான் திருத்தம் ஏற்பட்டது. கல்விவிஷயமாய்க் குறைகள் உண்டாவென் பதை விசாரித்தறிவித்தற்காக விசேஷகமிஷனர்களை ஏற்படுத்தி நமது கவர்ன்மென்றார் திருத்தஞ்செய்வதுபோல நம்முடைய ஆல யங்களின் விஷயமாயும் ஆகமசாஸ்திரங்களின் ஆராய்ச்சிவிஷயமாயும் இதுவரை என்ன ஏற்பாடுகளைச்செய்தோம்? முன்னையோர்களின் கருத்தையாவது தெரிந்துகொள்ள முயற்சிசெய்தோமா?

மடாலயவிஷயமோ முன் அநுட்டானத்துக்கு எவ்வளவோ மாறுபட்டிருக்கிறது. தேவாலயம் மடாலயம் இரண்டில் தன்னய மறுப்பு இச்சையடக்கம் முதலிய மோக்ஷசாதனங்களைப் பழகிக் கொள்ளவேண்டுவது நம்மவர்கடமை. தன்னயமறுப்பு இச்சை யடக்கம் முதலிய நன்னெறிக்குமாறாக ஏற்பட்ட எத்தகைய ஆசார மும் ஏற்கத்தக்கதன்று. நமது கொள்கைப்படி மடாதிபதிகள் மற் றைய தேவாலயங்களையும் வித்தியாலயங்களையும் நன்னிலையில் நிறுத் தும் கடமைப்பாடுகொண்டவர். அவர்கள் தங்களிடம் சந்யாசம்

பெறும் சீடர்களைப் பக்குவம்நோக்கித் தடுத்தாட்கொண்டு, குறித்த அறநிலையங்களுக்கு அதிபதியாக்கவும், அறப்பணிகளைச் செவ்வனே நடைபெறச்செய்யவும், தக்க கல்வி யறிவு ஒழுக்கங்களை வஹிக்கவும் உரியவர். "முதற்கோணல் முற்றுங்கோணல்" என்றபடி அவர்களே ஒழுக்கத்தில் தவறுவரேல் ஏனைய அறங்கள் சிர்பெறநடைபுறுவாம். நிற்க.

இத்தகைய மடாதிபர்கள் புதிய ஒழுங்குகளை ஏற்படுத்தித் தங்கள் சீடர்களில் எத்தனைபேரைக் குணப்படுத்திருக்கின்றனர்? பழமை யான நன்னடக்கையாவது ஒழுங்குறச்செய்திருக்கின்றனரா? குரு வாயுள்ளவர்களைச் சீடர்கள் சிங்காரித்துப்பார்க்கவேண்டுவது அன் பின் ஆராமையால் எழுவதோர் உள்ளநெகிழ்ச்சியேயாம். அங்ஙனம் விரும்பும் சீடர்கள் தங்கள் சொந்தசம்பாத்தியத்திலிருந்து வினியோ கிக்கவேண்டியதே தவிர முன்னரே அறவினைக்கு இயற்றிய அறப் பொருளினின்றும் செய்தல் தகுமா? அங்ஙனம் சீடர்கள் அலங் கரிக்கினும் பற்றற்ற குருவானவர்கள் அவ்வழகை யபிமானிப்பது முறைமையோ?

அறிவைப்பரப்பி உண்மையை அறிய ஒடுக்கம் தேடிய நமது பூர்விகஞானிகள், தமதுகருத்திற்கு இணங்க நாடிய ஸ்தலம் வனம் போன்று பரிசுத்தமுள்ள மடங்களா? அரசர் அரமனையொத்த அலங்காரங்களையுடைய மடங்களா? இச்சையைக்கொடுப்பதற்கு உரியது அரசர் அரமனை; இச்சையைக்கெடுப்பதற்கு உரியது ஞானிகள் மடங்கள். காம குரோத உலோப மோக மத மாச்சரியம் என்னும் ஆறு தீயகுணங்களை யடக்கி அதற்கு அறிகுறியாக உருத் திராக்ஷத்தினால் ஆறுகட்டியென்னும் காதணிபூண்டும், மனமொழி மெய்யென்னும் முக்கரணங்களின் சேட்டைகளைத்தண்டித்து அடக்கி யதற்கு அறிகுறியாகத் திரிதண்டமென்னும் கோலைத்தாங்கியும் பரோபகாரமே ஆக்கையின்பயன் எனக்கொண்டு அடியார்களுக்கு ஞானோபதேசஞ்செய்து சித்தசாந்தியையுண்டாக்கிஅன்பேவடிவாகிப் பக்குவான்மாக்கள் உள்ள இடங்களைத்தேடிப் பாதசாரிகளாகி எள் ளளவும் இடம்பமின்றித் திரிந்துகொண்டிருந்த முன்னைய மடாதிபர் களின் ஒழுக்கத்தைத் தற்காலத்து மடாதிபர்களிடத்து ஆரோபித்துப் பார்ப்பார்க்கு மனவருத்தம் மிகுதியும் உண்டாக்கத்தக்கதேயாம்.

முன்னோரது யோக்கியதையை உணர்ந்து முன்னைய அரசர், தமது அறப்பொருளை அவர் வெறுக்கவும் அவரிடம் கொண்டுய்த்தனர். அம் மகான்களுடைய உண்மை யோக்கியதையானது அவர்களிடத்திற் சிடர்களுக்கு உள்ளமும் புறமும் ஒத்த பக்தியை உண்டாக்கியது. தற்காலத்தில் மடத்தின் செல்வப்பொருளின் உரிமையானது மடாதிபர்களிடத்திற் சிடர்களுக்குப் போலியானபக்தியை உண்டாக்குகின்றது. முன்னைய குரவரைக்காணுமின் சிடர்கள் அச்சமும் அன்பும் கொண்டாடுவர். தற்கால மடாதிபரோ சிடரைக்காணின் உண்மையான அச்சமும் பொய்ம்மையான அன்பும் பாராட்டுவர். இத்தகைய தாறுமாறான நடைகளுக்குக் காரணம்யாது? நம் ஜனசமூகத்தின் அறியாமையேயன்றி வேறின்று.

ஒருதேசமானது சிறடைய விரும்பின் அந்த ஜனசமூகமானது நல்லொழுக்கமுடையதாயிருத்தல் வேண்டும். ஜனசமூகத்தின் நல்லொழுக்கத்திற்கு ஒவ்வொரு மனிதனும் தான் தான் நல்லொழுக்கமுடையனாதல் வேண்டும். மற்றப்படி எத்தனை ஆசார அனுஷ்டானங்களையும் சட்டதிட்டங்களையும் புத்தகத்தில் எழுதிவைப்பதாலும் விசேடப் பிரசங்கம் செய்வதாலும் அத்தேசத்தார் ஆக்கமடையமாட்டார். ஒவ்வொரு மனிதனும் தனக்குத்தெரிந்தமட்டில் நடக்கத் துணியவேண்டும். தன் இஷ்டனிடத்திலேனும் குற்றம் காணின் முகத்தைமாறவைத்துக் கண்டித்தல்வேண்டும். தனக்கு வயதினும் பலத்திலும் மூத்தோனாயினும் கூடாவொழுக்கம் காணப்படின் வெறுத்து விலக்கல்வேண்டும். தன்னாலியன்றவளவில் தன்னிடத்தி லுள்ள குற்றங்களை நீக்கமுயலல்வேண்டும். குற்றமில்லாதான் உலகத்தில் இலன் எனினும் "குணம்நாடிக் குற்றமு நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்" என்றபடி குணம் மிகுதியாக உடையவனே யோக்கியனானவனென்று உலகில் மதிக்கப்படுவன். சிலர் இயல்பிலே நல்லவராயினும் தாக்ஷண்யகுணத்தினால் தீநெறிச்செல்வாராகின்றனர். கண்ணோட்டம் மனிதனுக்குச் சிறந்தகுணமே. ஆனால் அதன் இலக்கணத்தையறியாமல் நெருங்கியபழக்கத்தால் நியாயந்தவறி ஒருவனுடைய விருப்பத்திற்கு இணங்குவாராகின்றனர். கண்ணோட்டமுடையார் "பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர்" என்று பெரியார் கூறியதும் பரோபகாரம் பற்றியே என்க. ஆனால் நாம் பழகும்பொழுதே

சன்மார்க்க முடையாரைத் தெரிந்து கூடல்வேண்டும். பழகியபின்னர் விட்டுநீங்குதல் கஷ்டமாகும். பொதுப்படநோக்குங்கால் தாக்ஷண்யத்தின் இயல்புதெரியாக்குறையினுல் நம்முடைய பொதுக் காரியங்கள் முழுமையும் கெடுதல் அடைகின்றன. அதற்குச் சன்மார்க்கத்துணிவு பற்றிய மனோதிடமில்லாமையே காரணம். தநயனுயினும் தன் தொடையில்வைத்து வழக்கைக் கண்டிக்கவேண்டுமென்கிற முதுமொழி நமக்குள் வழங்கினும் நமக்கு மனோதிடம் இன்னும் உண்டாகவில்லை. ஒரு மனிதன் உண்மையான நிலைபற்றிய மனோதிடம் உடையனேல் எத்தனையோ அரியகாரியங்களிலெல்லாம் சித்திபெறக் கூடும்.

பூர்வத்திலிருந்த மதஸ்தாபகர்களனைவரும் வேறு ஆதரவின்றித் தனித்துநின்று பற்பல இடையூற்றினுள்ளும் தமது கொள்கைகளை ஸ்தாபித்திருக்கின்றனர். ஸ்ரீ அப்பர்ஸ்வாமிகள், லூதர், ஸ்ரீசங்கரர், ஸ்ரீராமாநுஜர் முதலியவரது மனோதிடத்தையும் கருணையையும் அறியாதார் இலர். அவர்களுக்கு யாருடைய வுதவி யிருந்தது? அவர்களுடைய யோக்கியதைதான் துணையாய்நின்று உபகரித்தது. ஆதலால் மேற்குறித்த அறப்பொருள் ஆட்சியின் சீர்திருத்தவிஷயத்தில் யோக்கியதையின்வழியால் உண்மையான சிரத்தை எடுக்கின் எளிதிற் காரியசித்தி எய்தலாம்.

(தொடரும்.)

இலக்குமணப்போற்றி,
தச்சநல்லூர்.

---

ஸ்ரீ:

## புத்தகவரவு.

---:o:---

1. பத்மினி:—இது ஸ்ரீமத் வே. முத்துஸாமி ஐயர் பீ. எ., எல். டி., அவர்களால் எழுதப்பட்டதொரு தமிழ்க்கதை. இது யாவரும் விரும்பிப்படிக்கத்தக்க தெளிவான இனிய வசனநடையிலெழுதப்பெற்றிருக்கிறது. இதில் இடையிடையே வேண்டுமிடங்களிற் புதியவும் பழையவுமான சில செய்யுட்களும் பொருத்தமாக வெழுதிச் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. அன்றியும் நன்மக்களுக்கு

வேண்டும் அறிவு ஆண்மை ஊக்கம் கற்பு ஒழுக்கம் முதலிய நற்குணங்களைக்கொண்ட கதாநாயகர்களை நாட்டி நவீனமுறையில் இயற்றப்பெற்றிருத்தலால் உயதரப் பாடசாலைகளில் உபபாடமாக வைத்துக் கற்பிக்கத் தகுதியுடையதாயு மிருக்கிறது. ஆங்கிலங் கற்று உயர்தரப்பரீக்ஷைகளிற் றேறியவர்களுக்குள் 100-க்கு 10 பேராவது ஐயரவர்களைப்போலத் தமிழையும் விருப்புடன்கற்றுத் தமிழபிமானமுடன் இத்தகைய புத்தகங்கள் எழுதிவருவார்களாயின், தமிழ் ஆங்கிலங்கற்றவர்களால் அநாதரிக்கப்படுகிறது என்னும் அபகீர்த்தி நீங்கும். இதன் விலை அணா—பன்னிரண்டு.

2. நம்பாடுவோன்சரித்திரம்:—இது வேலூர்க் காலேஜ் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத் பு. க. ஸ்ரீநிவாஸாசாரியர் அவர்களால் கைசிகோபாக்கியானம் என வடமொழியில் வழங்கும் ஒரு திவ்வியசரித்திரத்தைச் சிறுவரும் உணரும்படி தெளிவான தமிழ்நடையி லெழுதப் பெற்றிருக்கிறது. இதன் விலை அணா—இரண்டு.

3. திருக்குறண்முதனினைப்பு:—இது அதிவீரராமன் பட்டணம் ஸ்ரீமத் மு. குருசுவாமிப்பிள்ளை யவர்களால் திருக்குறள் 133 அதிகாரத்துக்கும் 133 கட்டளைக்கலித்துறைகளில் அடைவே முதனிலைகளை யமைத்துப் பாடப்பெற்றிருக்கிறது. யாப்பருங்கலக்காரிகையின் பாடம்போற்றுவார்க்கு அதன் முதனினைப்புச்செய்யுள்போலத் திருக்குறட்பாடம்போற்றுவார்க்கு உபகாரமாகுமென்று தோன்றுகிறது. இதன் விலை அணா—நான்கு.

4. கந்தபுராணவசனச்சுருக்கம்:—இது விரிந்துபரந்துகிடக்கும் கந்தபுராணக்கதைகளின் முக்கியபாகங்களை யாவரும் எளிதிலுணரும்படி சுருக்கி மதுராந்தகம் ஸ்ரீமத் சு. கடப்பேரி சுப்பிரமணியசிவாசாரியர் அவர்களால் தமிழ்நடையி லெழுதப்பட்டது. இதன் விலை அணா எட்டு.

மேற்குறித்த புத்தகங்கள் வேண்டுவோர் அதனதன் ஆக்கியோர்க்கெழுதிக்கொள்க.

☞ மேற்கண்டபுத்தகங்கள் நான்கும் வழக்கப்படி பாண்டியன் புத்தகசாலையிற் சேர்க்கப்பெற்றன.

பத்திராதிபர்.

தவமாகிய தொழிலாற் றமதுயிர்க்கு முத்தியாகிய வூதியத்தைபெய்து மாரியர்கள் பரவுபகாரத்தாற் பூலோகமாகிய செய்யகத்து நல்ல கழனி யாகிய கோயில் முதலிய திருப்பதிகளுள் விருப்பமுற்றிருத்திய சிறப் புடையுயிர்களே திருமால்பொருட்டாற் பரமபதமெய்துமென் றுலகங் கூறுவதல்லாற் சிறப்பில்லாத பாறைநிலத்தில் விதைத்த வித்து விளைந்து களம்புகுதாததுபோல மனநலன்யாதுமில்லாத தறுகண் மையோர்வைகும் பாறையாம் பாலைநிலங்களில் வைகியவுயிர்க ளறி யாமை யேதுவாக முத்தியைப்பெறுமென்றுகூறுவார்க ளொருவரு முலகின்கணில்லையென்றவாறு. தவம் பெயர்ச்சொல்லெச்சம். உயர் நிலம் - கோயில்முதலிய திருப்பதிகள். விழைவுபெற - விருப்பம் பெற்று. வித்தியது - நியமித்திருத்தல். வித்து - ஆன்மாக்கள். இது மாட்டேறில்லா வுருவகம். வன்பார் - திருப்பதிகளல்லாத பொல்லாத வூர்கள். மால், போர்நிலம் இரண்டுஞ் சிலேடை. மால் - திருமாலும் அறியாமையும்; அல்லது மேகத்தின் பொருட்டாலென்பதுமொன்று. போர்நிலம் - சூடுநிற்குங்களமும் பரமபதமும். எல்லாவண்டத்தையு மீன் றகத்திடும் பிரகிருதிக்கு மேற்பட் டகன்ற விரசையையும் அக த்திடுநிலமாதலால் முத்திக்குப் போர்நிலமென்றும் பெயராயிற்று. போர்த்தல் – மூடுதல். இது இடநிலைக்களனாகிய ஒட்டு. திணையுந் துறையுமிதுவுமது. ஓம்படை யெனினுமாம்.

வாய்ந்ததமிழ்மாறனருட்புலவீர்மத்திமநோய்க்
கேய்ந்தமருந்தாவின்பாலென்றக்கா—லாய்ந்ததையக்
கற்றுவின்பா லுணர்ந்துகைக்கொளார்மேதியின்பால்
பெற்றூர்க்கும்போமோபிணி. (285)

இதனுள் மத்திமநோயென்பது பித்தம். அதற்கு மருந் தாவின் பாலென்றக்கால் என்பது வாகடநூ லதற்கு ஆவின்பாலே மருந் தென்றுகூறியக்காலென்றவாறு. மேதியின்பால் பெற்றூர்க்கும் போ மோபிணி யென்பது அப்பித்தமாகியபிணி எருமைப்பாலைப் பெற் றூர்க்குத்தீராதென்றவாறு. இது வெளிப்படையாகக்கூறியபொருள். குறித்தபொருளாவது, மத்திமநோய்க்கு (என்பது:— பிறர்கூறும் பதி பசு பாச மென்பவற்று ளிடைநின்ற ஆன்மாவிற்குச்

செய்த தீவினையடியாக வெய்தும் பிறவியாகிய பிணிக்கு) நால்வேதத்தின் சாரமாகிய திருவாய்மொழியென்னு மாவினிடத்துண்டாகிய வுண்மைஞானமாகிய பாலை யான்மஞானத்தினிடத்துத் தலைப்பெய்யாது,வேதமார்க்கமல்லாத புன்பனுவலாகியமேதியினிடத்துண்டான புன்மைஞானமாகியபாலாற் றீராதென்றவாறு. வாய்ந்தது - உண்டானது. உம்மை—இழிவுசிறப்பு. ஓகாரம்—ஒழியிசை. ஒழிந்த அகலமுரையிற்கொள்க. இது சாதி நிலைக்களனாகத் தோன்றிய ஒட்டு. என்னை? ஆவின்பால் மேதியின்பால் என்பவற்றாலவை நிலைக்களனாகப் புலப்படுதலானென்றறிக. திணை—இதுவுமது. துறை—செவியறிவுறூஉ; அல்லது பாடாண்சார்ந்தபொதுவியற்பாற்சார்த்திற் பனுவல்வாழ்த்துமாம்.

வளைதவழ்நீர்மண்மேன்மதிப்புலவீரந்தோ
விளைகழனிச்சார்புள்விராய—களைகளைய
வாங்குங்களைக்கோலான்மாநிலத்தார்க்கேலாத
தீங்குபுரிவார்சிலர். (286)

என்பது சங்கினந்தவழுங் கடல்சூழ்ந்தபூமியினுண்டாய புலவீர்காள்! செந்நெல்விளையுங் கழனியிடத்துவிரவுங்களையைக் களைவதற்குக் கத்தன்கொடுத்துக் கைக்கொண்ட களைகளையுங்கோலாற் களையைக்களையாது, பெரியநிலத்தின்கணுள்ளார்க்குப் பொருந்தாத தீங்காகச் சிலர் தமது கண்ணைக்களையுந் தீயதொழில்விரும்பிச்செய்வாரிஃதென்னபேதைமையோ வென்றவாறு. இது வெளிப்படையாகக்கூறியபொருள். விளைகழனி—சிவியாநின்ற வுடம்பு. உள் - ஆன்மா. சார்பு—இடம். விராயகளை—உம்மையிழைத்ததீவினை. களைய — அதனைப்போக்குதற்கு. வாங்குங்களைக்கோலால் — ஸ்ரீமந்நாராயணன்கொடுப்பக் கைக்கொண்ட மனோவாக்குக்காயங்களால், அவனைச் சிந்தித்தும், துதித்தும், கண்டுங், கீர்த்தியைக்கேட்டுந், தாமஞ்சாத்தியும், கோயில்வலம்வந்தும் போதுபோக்காது, முத்தியை விரும்புவார்புத்திக்குப்பொருந்தாத தீத்தொழில்களை விரும்பிச் செய்து தமக்குள்ளவாழ்நாளை யந்தோ வவமேபோக்காநின்றா ரினியெங்ஙனமீடேறுவ ரென்றவாறு. இதற்கும் அவரைப்போலெனக் கூட்டுக. உள்—ஆகுபெயர். அந்தோவென்ப திரக்கத்தின்கட்

குறிப்பு. மானிலம்—சிலேடை. இது குறித்தபொருள். இது வினை நிலைக்களனாகத் தோன்றியவொட்டு. என்னை? தீங்குபுரியுந்தொழில் நிலைக்களனாகத் தோன்றுதலா னென்றுணர்க. திணை—இதுவுமது. துறை—வாயுறைவாழ்த்து.

வாழ்ந்தமதிப்புலவீர்மால்வழங்குந்தூயநீர்
வீழ்ந்தநிலத்தியல்பான்மெய்திரிந்தாற்—சூழ்ந்ததனைத்
தேற்றிற்றெளிப்பதல்லாற்சேற்றிற்செறிகளங்க
மாற்றப்படுநெறித்தோமற்று. (287)

என்பது முற்றவுணர்ந்த மூதறிவாளரோடுங்கூடிவாழ்ந்த மதியை யுடையபுலவீர்காள்! மேகம்பெய்யுந் தெளிந்தநீர்தான் விழுந்தநிலத்தி னியல்பானிறம்வேறுபட்டா லதனைப்போக்குதற் குலகம் விசாரித்தறிந்ததேற்றினா லந்நீர் தெளிவதன்றிச் சேற்றுநீரா லதற்கடைந்தகளங் கத்தை யொருவராலு நீக்கப்படுமார்க்கமுடைத்தன் றென்றவாறு. இது வெளிப்படையாகக் கூறியபொருள். அது தெளியாததுபோல மாயோனளித்த நற்குணஞ் சிற்றினங்களை விரும்பிக்கொண்ட வுறவி னதுபெற்றியா னுண்மைவேறுபட்டா லெல்லாநூல்களையு மனத்தா லுள்ளி யறிவறிந்தோர் தெளிந்தஞானத்தாற் பண்டுபோற்றெளிவ தன்றிக் கரியசேறுபோற்செறிந்த சிற்றினத்தார்மாசுண்டஞானத் தாற் றேற்றப்படாதென்றவாறு. ஆதலான் மூதறிவுடையோர்நட்பு விடாதுகொள்ளவேண்டு மென்றவாறு. இது குறித்தபொருள். இதனுள் மால், நீர், வீழ்ந்த, மெய், தேற்றில், களங்கம் என்பன சிலே டை. ஆதலா னிது அடைபொதுவாய்ப் பொருள்வேறுபட்டுப் பண்பு நிலைக்களனாகத் தோன்றிய ஓட்டு ; என்னை ? வீழ்ந்தநிலத்தியல்பான் மெய்திரிந்தாலெனக் குணநிலைக்களனாகக் குறித்தபொருடோன்று தலா னென்றுணர்க. திணை—இதுவுமது. துறை—ஓம்படை.

நன்புலவீர்கங்குற்கிசைந்ததெலாநாரணனு
வின்புறவாராய்ந்தியற்றுமெஃகற்றே—புன்புலன்பெற்
றீட்டாதவரேவனேவெண்ணியதுதாமுடிக்க
மாட்டாதழுங்குமதி. (288)

என்பது நல்லறத்தினது பகுதியறிந்த புலவீர்கா ளிரவிற்கு வேண்டு வன வெல்லா நன்பகலே நாரணனருளாற் புத்திகளித்தியற்றுங் கூரறி

விலராகித் தமது மந்தபுத்தியா லவற்றை யியற்றிருந்தவர் அக்கங் குல்வந்தகாலத்துக் கங்குற்குவேண்டுவனவின்றித் தாம் எண்ணியது முடிக்கமாட்டா தழுங்குகின்ற தென்னபேதைமையோவென்றவாறு. இது வெளிப்படையாய்க்கூறியபொருள். அவரைப்போல நிலையாமை யோடுங்கூடியயாக்கை நிலைமைத்தாமுயிரோடுங் கூடியிருக்கப்பெற்ற காலத் நிம்மைக்கன்னே மறுமைப்பயனு முத்தியைப்பெறுதற் கேது வாம் ஞானநூல்களை யாராய்ந்து சித்தசித்தீச்சுரங்களையறிந் தவற் ருேடும் அன்றறிவாமென்னு தறங்களைப் பயிலாதார் மரணம் வந் தடுத்தகாலத்தி லெண்ணியிருந்த முத்தியையெய்த வேண்டுவன செய்துமுடித்திலமென் றியமதூதுவர்கூட்டத்தைக்கண்டழுங்குகின் றமை யென்னபேதைமையோ வென்றவாறு. எனவே முத்தியை யெய்துதற்கு வேண்டுவன யாக்கையிருக்கப்பெற்ற பொழுதே பின்னை யென்னுது செய்துமுடிக்கவேண்டுமென்பது பயன். இதனுள், நல் லறத்தின்பகுதியறிந்த வென்பது சொல்லெச்சம். நன்பகலேயென் பது எதிர்மறையெச்சம். இது காலநிலைக்களனுகத்தோன்றிய ஒட்டு என்னை? இரவிற்குவேண்டுவனவெல்லா நன்பகலே யியற்ற வேண்டுமென்னுங் காலநிலைக்களனுகக் குறித்தபொருடோன்றுதலா னென்றுணர்க. திணையுந்துறையுமிதுவுமது. பொழுதொடுமென்னு மும்மையாற் பிறநிலைக்களனுகத்தோன்றும் ஒட்டுமுள. அதற்குச் செய்யுள் வருமாறு:—

> எம்பெருமானின்னருள்சேரின்புலவீர்வான்பொருட்குச்
> செம்பொனுளதீவிற்செலவுற்றூற்—பம்புதிரைச்
> சங்கந்தவழ்கடலைத்தாம்பொடுபாய்கூம்பின்றி
> வங்கங்கடந்துறுமோமற்று. (289)

என்பது புலவீர்காள்! பெரும்பொருட்குப் பொன்விளைதீவிற் செல்ல நினைந்தாற் கப்பல் கயிற்றாற் கட்டப்பட்ட பாயோடுங்கூடிய பாய்மர மின்றி யத்தீவிற் றலைப்படாதென்றவாறு. இது வெளிப்படையாற் கூறியபொருள். அதுபோலப் பொன்மயமான பரமபதத்திற் செல் லக்குறித்தவர்கள் மனே வாக்குக் காயங்களா னினைத்துந் துதித்துந் தாமஞ்சாத்துவதுமுதலான சரியையின்றி யாண்டுந் தலைப்படா ரென்பதாம். இது குறித்தபொருள். கடல் — பிறப்பாயகடல்.

வங்கம் - ஆன்மா. தாம்புங் கூம்பும் பாயும் - மனம் வாக்குக் காயம். திணை - இதுவுமது. துறை - வாயுறைவாழ்த்து.

தாந்தனுறையுளெனுந்தன்பொருநையின்வடபால்
வாய்ந்தகிரணமுழுமாணிக்க—மேந்திழாய்
ஞானமுணர்ந்துணர்த்துநன்முத்தியைவிளக்குந்
தானவனுமீதெவனேதான். (290)

இதனுள், தாந்தனுறையுளெனுந்தண்பொருநையின்வடபால்- செம்பொன்மாடத்திருக்குருகூர். கிரணமுழுமாணிக்கம் - காரிமாறப்பிரான். இது அடைவிபரீதப்பட்டுப்பொருள்வேறுபட்டது ; என்னை? "ஞானமுணர்ந்" தென்பதுமுதலாயினநான்கும் மாணிக்கத்திற்கில்லையாதலி னடைவிபரீதமாயிற்று. இது முதலதுபோலப் பொருணிலைக்களனாகத்தோன்றின ஒட்டு. திணை - இதுவுமது. துறை - செந்துறைப்பாடாண் பாட்டு.

தென்னம்பொதியந்தருபொருநைத்தென்கரையின்
மன்னும்புளிக்கீழ்வளர்தருவொன்—றின்னமிர்தொத்
தான்றசுவைத்தீங்கனியோராயிரமுந்தண்ணளிகூர்ந்
தீன்றளித்ததன்பாலெமக்கு. (291)

இதனுள் மன்னும்புளியென்பது திருப்புளியாழ்வார். திருப்புளிக்கீழ்வளர்தருவாவது காரிமாறப்பிரான். இன்னமிர்தொத்தான்றசுவைத்தீங்கனியோராயிரமென்பது திருவாய்மொழியாயிரப்பாடல். இதுவும் பொருணிலைக்களனாகத்தோன்றின ஒட்டு ; அல்லது சாதிநிலைக்களனாகத் தோன்றிற்றெனினுமாம். இவை யிரண்டிற்கும் ஒழிந்த அகல முறையிற்கொள்க. தருவுங் கடவுளாதலிற் றுறை- கடவுள்வாழ்த்துமாம். இதுவு முன்னதுபோற் செந்துறைப்பாடாண் பாட்டு. அஃதே லிதன்முன்னர்க்கூறிய வுள்ளுறையுவமத்தினோடும் ஒட்டென்னு மிதனிடை வேற்றுமையாதோவெனின், அஃதே நன்று சொன்னாய்! உள்ளுறையுவமமென்பது அகத்திணைக்கைகோளிரண்டிற்குமேயுரித்தாய் அகத்திணையைந்தினும் அவ்வவ நிலங்களிற் றெய்வதமொழிந்த கருப்பொருள்களனாகப் பிறக்குமெனவும், அவ் வுள்ளுறையுவமங்கூறுவார், தலைவன் றலைவி செவிலி தோழி பாங்கன்

பாணன் ஆக அறுவரெனவும், உள்ளுறையுவமங் கூறுதற்குரியரல்லா தார், நற்றாய், தந்தை, தன்னையத்தார், ஐயன்மா ராக நால்வரெனவும், அங்ஙனங் கூறுதற்குரியோர் கூறுமிடத்து மருதம் நெய்தலென்னு மீரிடத்து மிகுந்தும், குறிஞ்சிக்க ணவ்வளவின்றியும், ஒழிந்த நில மிரண்டினு மதனிற்குறைந்தும் வருமெனவும், அங்ஙனங் கூறுமிடத் தும் வெளிப்படக்கூறுமுவமையிடத் துவமேயங் கேட்போர்மனத் தின்கண்ணும் புலவன்குறித்தவாறேநிகழ்த்துதலின் உள்ளுறை யுவமமெனவும், மேற் கூறப்படுங் கருப்பொருள்களனைத்தும் பிறக்கு மிறைச்சிப்பொருளோடுங் கூடாதனவாயும் வருமெனவுமுணர்க. இஃ தன்னதன்றாய்க் கருப்பொருளிற்பிறக்கவேண்டுமென்னும் யாப்புற வின்றிப் புறத்தினும் புறப்புறத்தினுஞ்சென்று செய்யுட்செய்யும் புலவன் முதலாயினோர் கூறுங் கூற்றாய்ச் சுட்டென்னும் உள்ளுறைய வாய் நடத்தல் வேற்றுமையென்றுணர்க. அங்ஙனமாதல் "பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ், சால மிகுத்துப் பெயின்" "நுனிக் கொம்பரேறினரஃதிறந்தூக்கி, னுயிர்க்கிறுதியாகிவிடும்" எனவும், "நெடும்புனலுள்வெல்லு முதலையடும்புனலி, னீங்கினதனைப்பிற" "கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு, நாவாயு மோடா நிலத்து" "காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா, வேலாண் முகத்த களிறு" எனவும் திருவள்ளுவர்கூறிய வலியறிதல் இடனறிதல் என்னு மிரண்டினுள்ளும், பிறநூல்களினுங் கண்டுகொள்க. தண்டி யாசிரியர் ஒட்டென்னு மலங்காரத்தினுள் அடையும் பொருளு மபல்படமொழிவதாக "வெறிகொளினச்சுரும்புமேய்ந்ததோர்காவி" யென்றதில் உள்ளுறையுவமமும், அடைவிபரீதப்படப் பொருள்வேறு படக் "கடைகொ ளுலகியற்கை" யென்பதிற் கருப்பொருள்களனைத்து ஒட்டுங் கூறினரெனினும், இந்நூலுடையார், "உடனுறையுவமஞ் சுட்டுநகைசிறப்பெனக், கெடலருமரபினுள்ளுறையைந்தே" என உள்ளுறையை யைந்தாய்ப் பிரித்தமையான் உள்ளுறையுவமம் ஒட்டு இறைச்சியென மூன்றாக்கினர். இங்ஙன மாராய்ந்து பிரித்தவிவர் நோக்கமுந் தெள்ளிதி னாராய்ந்துகொள்க. (ச0)

ரு-வது ஒட்டலங்கார முற்றும்.

---

## கூ-வது உல்லேகவலங்காரம்.

———:o:———

126. ஒருபொருட்குவமச்சொற்றெகக்கவர்த்த
பொருவமர்பொருள்பலபுணர்ப்பதுல்லேகம்.

(எ - ன்) வைத்தமுறையானே உல்லேகமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) புலவனுற் குறிக்கப்பட்டதோ ருவமேயப் பொருட் குவமவுருபுதொகப் பலவேறுவகைத்தாய்க் கவர்த்த வினைபயமெய் யுருவென்னுமேதுக்களா னெத்த வுவமானப்பொருள்களை யதற்குக் கூறுவ துல்லேகமென்னும் அலங்காரமா மென்றவாறு. (சுக)

127. அதுவே,
யொருவர்பலர்குறிப்புரைப்பதுமொன்றும்.

(எ - ன்) இதுவு மதற்கோர் புறனடையுணர்--ற்று.

(இ - ள்) அச்சொல்லப்பட்டவுல்லேகம் ஒருவர் தன்மையிற் கூறப்படுவதோடும், அவர் பிறராயுள்ளார்பலர்குறிப்புரையையும் பெய்துரைப்பதும் பொருந்துமென்றவாறு. உம்மை, யெச்சமாத லால் வினுவினும் வருமென்றுணர்க.

என்னுருயிரென்னிருகண்மணியென்னிதயத்துள்ளாய்
மன்னுரமிர்தமென்மெய்க்கணியாரம்வகுளப்பிரான்
முன்னுளெனையடிமைக்கொண்டபேருண்மூர்த்திமண்மே
னன்னுவலர்தம்பிரானுயர்வானவர்நற்றுணையே. (292)

இது ஒருவர் பலகவர்ப்பாயுரைத்தது. இருகண்—அகக்கண் ணும் புறக்கண்ணும். இடம்—தன்மை. துறை—கடவுள்வாழ்த்து.

முத்திக்குவித்தென்பர்முத்திபெற்றூர்முத்தியைவிளைக்கும்
பத்திக்குவித்தென்பர்பத்தியுற்றூர்பனுவற்றெகைதேர்
புத்திக்குவித்தென்பர்முத்தமிழ்வாய்மைப்புலவர்மண்மே
லெத்திக்கும்போற்றுந்திருமகிழ்மாலையிறைவனையே. (293)

இது பலர் பலகவர்ப்பாய்க் கூறுவரெனப் பெய்துரைத்தது. முத்தமிழ்—சித்தசித்திச்சுரத்தைக் கூறுந்தமிழ், அது திருவாய்மொழி; எழுத்துஞ் சொல்லும் பொருளுந் தேரும் வாய்மையுமாம். வாய்மை-உண்மை. துறை—இதுவுமது.

அருளதென்கோநல்லறமதென்கோகற்றறிந்தவர்மெய்ப்
பொருளதென்கோசிற்குணமதென்கோதொண்டர்புந்தியுள்ளாந்
தெருளதென்கோபிறதெய்வமென்றேதிரிகின்றசெய்கை
மருளதென்பாலணுகாதென்னையாண்மகிழ்மாறனையே. (294)

இது தன்றொழிலுரைக்கும்வினாவின்கண்வந்தது. என்கோ என்பது யான் என்றுகூறுகோ என்னும்பொருட்டு. அருள்—கருணை. நல்லறம்—துறவறம். மெய்ப்பொருள்—சீமந் நாராயணன். சிற்குணம்—சுத்தசாத்துவிககுணம். புந்தியுள்ளாந்தெருள்—பரமஞானம். மருள்—அறியாமை. அது என்பாலணுகாமை—அம்மருளென்னிடத்துச் சிறிதுமுறாமை. என்னையாண் மகிழ்மாறன்-என்னையாட்கொண்ட மகிழ்மாற னென்றவாறு. இதனுள் தன்றொழிலுரைக்கும்வினாவின்கண் ணீற்றிலோகாரமுன்னர் வருமொழிமுதற்கண்ணதாங் கசதபக்கண் மிகாதியல்பாயின. என்னை? "மாறுகோளெச்சமும்வினாவுமையமுங், கூறியவல்லெழுத்தியற்கையாகும்" என்பதனாலறிக. திணை—பாடான். துறை-பழிச்சினர்ப்பரவல். (சஉ)

சு-வது உல்லேக முற்றும்.

---

## எ. ஒப்புமைக்கூட்டம்.

:o:

128. தக்கதோர்பொருளினைச்சாற்றுழியதுபோன்
மிக்கபல்பொருள்களையுடன்விளம்புதரு
மொப்புமைக்கூட்டமெனவுரைத்தனரே.

(எ - ன்) வைத்தமுறையானே யொப்புமைக்கூட்டமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) முக்கியமானதோர்பொருளினைப் புலவன்கருதிச் செய்யுளகத்துக்கூறுங்கா லதுபோன்ற மிக்க பலபொருள்களையு மத னுடன் பொருளொப்புமையுடைத்தாய்க் கூட்டமுறச்சொல்லுத லொப்புமைக்கூட்டமென மேனாட் கற்றுவல்லோ ருரைத்தனரென்ற வாறு. (சங)

129. உயர்புகழ்ப்பழியவற்றொடுமுறுமதுவே.

(எ - ன்) இதுவும் அவ் வலங்காரத்தின் பாகுபாடுணர்—ற்று.

(இ - ள்) அவ் வொப்புமைக் கூட்டமென்னுமது உயர்ந்தபுக ழோடு முயர்ந்தபழியோடும் பொருந்திவருமென்றவாறு. உயர்வு முதனிலைத்தீவகம். ஏகார மீற்றசை.

வையம்பரவுமகிழ்மாறன்வண்டமிழுஞ்
செய்யசதுர்மறையுந்தேசிகராய்—மெய்யுணர்ந்தோர்
பேரறிவும்பேருலகுண்டானேபிரமமெனப்
பாரறிந்ததாரறிதற்பாற்று. (295)

இதனுள், மகிழ்மாறன்வண்டமிழென்றது—திருவாய்மொழி. தேசிகர்—ஆசாரியன்மார். பேருலகுண்டான்—ஸ்ரீமந் நாராயணன். பாரறிந்தது—பெரியோர்களறிந்தது. அவையல்லவெனி லென்ப தனைச் சொல்லெச்சமாக்கிக்கூட்டிப் பிரமமென்ப தாரறிதற்பாற்று என்பது ஒருவரும் அறியும்பகுதியுடைத்தன்றென்பதாம். திணை - வாகை. துறை—சால்புமுல்லை. அல்லது திணை—பொதுவியல். துறை—பனுவல்வாழ்த்துமாம். இது புகழொப்புமைக்கூட்டம்.

என்றும்பிறர்மனையாளின்பநயவாரு
நன்றிமறவாநலத்தாரு—மொன்றினைக்கொன்
றூன்பரிந்துண்ணாதவரவோரும்பூமகள்கோன்
வான்புரந்துநீடுவாழ்வார். (296)

இதுவும் புகழொப்புமைக்கூட்டம். இதனுள், நீடுவாழ்வார்—அழிவின்றிவாழ்வாரென்றவாறு. ஒழிந்த அகல முறையிற்கொள்க. திணையுந்துறையு மிதுவுமது.

வேரிமலர்மகள்கோன்மேவுந்திருமேனி
பாரினுலோகமெனும்பாவிகளு—மாரியனை

மார்தரிலொன்றென்பாரும்வன்றெண்டர்சென்மநிலை
யாய்ந்துரைப்பாருநரகத்தார். (297)

இது பழியொப்புமைக்கூட்டம். திணை—பாடாண். துறை—வாயுறைவாழ்த்து.

பொல்லாவழுக்காறுபூண்குனருமாலடியார்க்
கில்லாப்பழியொன்றிடுகுனரு—நல்லாற்றிற்
செல்குனரைமீட்குனருஞ்சேயிழையாயெய்துவன
நல்குரவுதீவாய்நரகு. (298)

இதுவுமது. நல்குரவு—வறுமை. தீவாய்நரகு—அக்கினிநரகம். எனவே இம்மைக்கு வறுமையும், மறுமைக்கு நரகு மென்பதாம். ஈரிடத்து மும்மை தொக்கன. திணையுந்துறையு மிதுவுமது.

மைந்தர்மூரல்வாய்முத்தமுண்ணுதவாய்வாயோ
மைந்தர்சொற்கொளாச்செவியுமோர்செவிகளோமழலை
மைந்தர்சிறடிச்சுவடுழாமார்புமோர்மார்போ
மைந்தர்காட்சிகண்டின்புறுக்கண்கள்கண்மலரோ. (299)

இதுவுமது. திணை—வாகை. துறை—பொருளொடுபுணர்தல். அன்றித் திணை—பொதுவியல். துறை—மகப்பெறுதழுங்கல். (சச)

எ-வது ஒப்புமைக்கூட்ட முற்றும்.

---

## அ-வது வேற்றுமையலங்காரம்.

130. ஒப்புடையிருபொருளுரையினுங்குறிப்பினு
மெய்ப்படவேற்றுமைப்படுத்துதல்வேற்றுமை.

(எ - ன்) வைத்தமுறையானே வேற்றுமையென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) உலகத்தொப்புடையனவாயிருக்கு மிரண்டுபொருளை வைத் தவற்றைக் கூற்றினலாதல் குறிப்பினலாதல் பொருள்பெறத் தம்முள் வேற்றுமைபடக்கூறுவது வேற்றுமையென்னும் அலங் காரமாமென்றவாறு. (சரு)

131. அதுவே,

ஒருபொருளிருபொருள்சமமுயர்ச்சியதெனும்
பொருள்பெறுமரபிற்புலப்படுமென்ப.

(எ - ன்) இதுவும் அவ்வலங்காரத்தினது பொருட்கூறுபா டுணர்—ற்று.

(இ - ள்) அவ்வேற்றுமையென்னுமலங்காரமாகியவது, ஒருபொருளான் வேற்றுமைசெய்தலும், இருபொருளான் வேற்றுமைசெய்தலு ; மாங்ஙனம் வேற்றுமைசெய்புங்கா லொன்றினுக்கொன்று சமமாந்தன்மையு, முயர்ந்துளதன்மையு முடைத்தெனப்பொருள்படுமிலக்கணத்தோடுந் தோன்றுமென்றுகூறுவர் பெரியோரென்றவாறு. இவற்றிற்கெல்லாஞ் செய்யுள்வருமாறு:—

உண்ணத்தெவிட்டாதுடலுமுயிருந்தளிர்ப்பத்
தண்ணென்றினிமைதருமமிர்தம்—பெண்ணமிர்தின்
செவ்வாயமிர்தனையதென்றாலுஞ்செவ்வியினி
லொவ்வாததுபழமைத்தொன்று. (300)

என்பது உண்ணுநிற்ப வுண்டோருடலுமுயிருந் தழைக்கும்படி குளிர்ந்து தெவிட்டா தினிமையைக்கொடுக்குந் தேவர்பானமாகிய அமிர்தமொத்த திப் பெண்ணாகியவமிர்தின் செவ்வாயிடத்துண்டாகிய பானமாகிய அமிர்தமென்றே ஞானலுங் காலத்தினாற் பார்க்குமிடத்துப் பழமையுடைத் தஃ திஃதப்படியன்று புதிதுபுதிதாங் தன்மையையுடைத்தாகையாற் காலச்செவ்வியா லொவ்வாதென்றவாறு. இதனுள் பெண்ணாகிய அமிர்தின் செவ்வாயிடத்துண்டாகிய பானமாகிய அமிர்தமென உருவகவாய்பாடுகள் மாட்டேறுபெற்றும் மாட்டேறுபெறாதும் வந்ததூஉங்காண்க. இஃதொருபொருள். பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

வண்ணவாய்மைச்சுடர்கண்மன்னானனத்துலவு
கன்னைதாயம்பரமாய்க்கண்டவற்று—ளொன்மை
வெளியொன்றுவேங்கடத்துன்மெய்ப்பொருளாய்நின்ற
வொளியொன்றெனும்பேருலகு. (301)

இதனுள் அழகினோடுங்கூடிய வெண்மைச்சுடர்கள் - சந்திரனும், ஆதித்தனுமாம். ஆகாயமுந் திருவேங்கடமுடையானும் ஒப்புடைப்பொருள். ஆகாயத்தின்மேற்சொல்லுங்காற் சுடர்கள் பொருந்தியமகிழ்ச்சியோடுஞ் சுற்றிவரு மிடமுடைத்தாய்ச் சலத்தைத்தரிக்கப்பட்டதா மெனவும், திருவேங்கடமுடையான்மேற்சொல்லுங்காற் சுடர்க ளிலைபெற்ற திருமுகமண்டலத்துட்பிறழுந் திருக்கண்களாகவுடைய அழகிய பரத்துவமாமெனவும் கொள்க. இஃதிருபொருள். ஒருபொருள், இருபொருள் இவையிரண்டும் சமம். கூற்று. துறை - கடவுள்வாழ்த்து.

மாறன்றமிழ்மறைக்குவாய்ந்தமறைமுப்பொருளுங்
கூறுந்திறத்தாற்குறிப்பொக்குந்—தேறத்
துயவறவேகூறுமிதுசோதியைபுட்கொள்ள
மயர்வறவேகூறுமறை. (302)

என்பதுபர்ச்சி. துயவு - அறிவுதிரிதல். இதுவும் கூற்று. திணை - பாடாண்சார்ந்தபொதுவியல். துறை - பனுவல்வாழ்த்து.

வெய்யநயனத்தசெவ்வாயவெண்ணகைய
தையல்வதனமிறைதண்காவுட்—பொய்கைதான்
வண்கழுநீர்சேதாம்பல்வால்வளைகடாமுயிர்த்த
தண்டரளநிணிரையதாம். (303)

உயிர்த்த - பெற்ற. இது சமம். குறிப்பு. பகுதி - இடந்தலை. துறை - தடங்கண்டுமகிழ்தல்.

மாதாரள்வெய்யமுலைமாணிக்கமுத்துவட
மீதுலாவுந்தகைத்தாம்வேரிமகிழ்ச்—சோதி
துடரிவரைதேனருவிதாநிரருவி
படரிபலநல்காதின்பம். (304)

வெய்யமுலை—விருப்பத்தைத்தருமுலை. வேரிமகிழ்ச்சோதி—காரிமாறப்பிரான். இன்பநல்காதென்பதனுல் இதுவுங்குறிப்பு. உயர்ச்சி. பகுதி—இதுவுமது. துறை—நலம்பாராட்டல். (சசு)

132. அதுவே,
பொருளாதியவாகான்கொடும்புணரும்.

(எ - ன்) இதுவும் அவ் வேற்றுமையலங்காரத்தின் விதப் புணர்—ற்று.

(இ - ள்) அது—அவ் வேற்றுமையலங்கார மென்னுமது பொருள் குணஞ் சாதி தொழிலென்னும் நான்கினேடும் பொருந்தி வருமென்றவாறு.

அலைபுட்படியுமரும்புனலைவாங்கி
யுலைவிலுலகுய்யவோங்கு—மலைமேற்
களிக்கும்புயல்வேங்கடவனைப்போன்முத்தி
யளிக்குந்திறனறியாதாம். (305)

என்பது அலையுட்படிதல்-திருப்பாற்கடலுட் கண்வளர்தலும், புனலை யுண்ணக் கடலுட்டாழ்தலுமாம். அரும்புனலைவாங்கியுலைவிலுல குய்யவோங்குதல்—பெறுதற்கரியபுனலை மாவலிபால்வாங்கி யுல கத்துள்ளார்பிழைக்க விச்சுவரூபங்கோடலும், கடலிற் புனலைவாங்கி யுண் டுலகுபிழைக்க விசும்பின்மேனிமிர்தலும். இது பொருள்வேற் றுமை. துறை—கடவுள்வாழ்த்து.

செம்பவளமுந்திருமால்சேறைமான்செவ்வாயின்
விம்பவளமுங்குணத்தால்வேறன்றே—யம்பவளம்
வல்லென்றிருக்குமலர்மாதர்வாயெஞ்ஞான்று
மெல்லென்றினிமைமிகும். (306)

இது குணவேற்றுமை. செவ்வாயின்விம்பவளம்—வடிவின் செல்வம். ஒழிந்த அகல முரையிற்கொள்க. துறை—நலம்புனைந் துரைத்தல்.

மந்திரத்தால்வாகடஞ்சொன்மாமருந்தாற்றீராது
புந்தியிடங்கொண்டுபுறம்போகாவாஞ்—சந்ததமு
மைவளைவேற்கண்மடவீர்மாறன்றழுவாத
பெய்வளைபாற்காமப்பிணி. (307)

இது சாதிவேற்றுமை. திணை—பெண்பாற்கைக்கிளை. துறை - கண்டுகைசோர்தல்.

மாறுங்கோலைகமற்குமாறன்மணிவரைமேற்
றேறுமயில்விழிக்குஞ்சேர்வினைதான்—வேறன்றே
நின்றொறுக்குங்கூற்றுயிரைநேரிழைகண்மன்னுயிரைக்
கொன்றளிக்குமீட்டுங்குழைந்து. (308)

இதனுள் தேறும் என்பது (மானிடமகளெனத்) தெளியும், எனவும், மயில்விழிக்கென்பது, மயில்போற்சாயலையுடையாள் விழிக்கெனவுங் கொள்க. இது தொழில்வேற்றுமை. கொன்றளிக்கை—நோய்செய்யும்நோக்கும், அதற்கு மருந்தாகிய நோக்கும். நோய்செய்யும்நோக்கு — இன்பத்தினுபை காமக்குறிப்பினைவெளிப்படுத்துகின்ற நோக்கு. மருந்தாயநோக்கு—தன்கணிகழ்கின்ற அற்புநோக்கு. பகுதி — இயற்கை. துறை—குறிப்பறிதல். நான்கொடும்புணருமென்ற தெச்சவும்மையாதலாற் பிறவலங்காரங்களோடுங் கூடியும் வருவனவுள. அவை வருமாறு:—

ஊர்தியனமம்போருகமாசனஞான
நீதிவழுவாநெறிபடைத்தும்—வேதநெறி
யோதிப்பொறியிழந்தானென்குரவனெங்கோமா
னுதித்திருமகிழ்மாறன். (309)

இது சிலேடைவேற்றுமை. பொறியிழத்தல்—பிரமன்றலையிழத்தல். எங்கோமானுகிய மாறன் பொறியென்னும்பெயரையுடைய பெரியபிராட்டியருளையெய்தினவு, னென்றமைபாற் சிலேடையால் வேற்றுமையாயிற்று. திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப் பரவல்.

ஓவாதசெம்மையுதையத்துளதெனினுந்
தாவாமறுப்படைத்ததன்மைபான்—மூவா
முதனமதுகண்ணனெனுமுத்திரைக்கைம்மாறன்
வதனமதுநேராமதி. (310)

இது விலக்குவேற்றுமை. இன்னும் வேறுபடவருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க. இது திணையுந்துறையு மது. (சஎ)

அ-வது வேற்றுமை முற்றும்.

---

## கூ-வது திட்டாந்த வலங்காரம்.

———:o:———

133. ஒருபொருட்டிறமுதற்குறித்தொப்புமைகொளத்
தெருள்புரிபிறபொருட்டிறமுஞ்செவ்விதி
னவ்வியலகத்தறைவது திட்டாந்தம்.

(எ - ன்) வைத்தமுறையானே திட்டாந்தமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) யாதாயினு மொருபொருட் கெய்திய நன்மைதீமைக் கூறுபாட்டைப் புலவனுட்கொண் டதனைத் தன்னாற்கூறப்படுஞ் செய்யுளகத்து முதலேகூறி, யதன்பின்ன ரதனோ டொப்புமைகொள் ளும்படிக்குத் தெளிவைத்தரு மற்றொரு பொருளின் கூறுபாடும் அச் செய்யுளகத் தழகுபெறக் கூறுவது திட்டாந்தமென்னு மலங்காரமா மென்றவாறு. எனவே, உள்ளுறையுவமம்போல வுவமப்பொருள் செய்யுளகத்து வெளிப்படையாகநிற்ப வேனை யுவமேயப்பொருள்க ளெஞ்சிநிற்பக் குறிப்பினாற் கொள்ளப்படுவதன்றென்பதாயிற்று.

பூரணன்மலர்மகள்புணர்மணிமார்ப
னாரணன்மதிலனயந்தனன்புரப்ப
முத்திரைக்கராம்புயமுதல்வனுவீற
னுத்தமச்சுருதியையோதாதுணர்ந்துணர்ந்
தரனுடையவற்றுளுமுபனிடதத்தால்
வரனுடைத்தாகவடித்தவண்டமிழ்மறைப்
பாடம்போற்றிநாப்பவித்திரம்படைத்தோ
ராடகமருமணிக்கிரணமோடளவளாம்
வீடடைவதுமெய்மெய்யேயாயினு
நாடரிதாகிநடைபெறுந்தொடர்புடைப்
பொதிந்தசொற்பொருணிலைபுலப்படப்புந்தியுட்
பதிந்தறியாரிருபசையறுத்துண்மை
யுணர்ந்துடலுயிர்தளிர்ப்பதுறுருறுமவர்
கணம்பயனிலவாங்காலங்கழியாத்
தேசிகரைவரைத்தேர்ந்தநற்றுணைக்கொளும்

பூசுரன்திருப்பெரும்பூதூர்முனிவன்
குருபரம்பரையுரைக்குறிப்பினத்தமிழ்மொழிப்
பொருண்மலிநோக்கினைப்புணர்த்துணர்ந்தொன்மை
யிருநிலத்தொருவடிவெடுத்தகாட்சியதாந்
திருமலையாழ்வார்திருவருட்கிலக்கெனு
மறையவர்பிரான்மணவாளமாமுனிவா
னிறைநிலையுயிர்நிலையிலைதிலைதெய்து
முறைநெறியிலைதெனமுழுவதுமுனிவறத்
துறைதொறுந்துறைதொறுஞ்சோர்வறத்தொடுத்தெடுத்
துணர்த்தியவிசித்திரக்காண்டிகையொழிவின்முற்
குணத்தொடும்பழகுபுகூர்ந்துள்ளுறுத்தித்
தோய்ந்துவட்டாததூயபேரின்பம்
வாய்ந்தவர்தாமேபுலவிர்காண்மன்ற
விமிழ்திரைப்பாற்கடலினிற்பலவளஞ்சா
ரமிழ்தினைப்பசும்பொற்றசும்பகத்தடக்கியும்
பரிசிப்பதனெடும்பரிமளிப்பதலா
துருசித்தறியாதுகிதமாமதன்சுவை
வானவர்சுவைக்கொளும்வாய்மை
நானிலத்தெவர்தெளியாதவர்நயந்தே. (311)

என்பது திட்டாந்தம்.

(இ - ள்.) சொரூபமும், ரூபமும், ஞானமும், குணமும், விபூதியும், கருணையு முதலாகியவற்றுள் யாதுமோர் குறைவிலனும் நிறைவுளான் பூமகள் விட்டுநீங்காத கவுத்துவமணியோடுங் கூடிய மார்பனுஞ் சிமந் நாராயணன் ஞானத்தையும் பேரானந்தத்தையு மன்புற்றளித்தலான் ஞானமுத்திரைக் கைத்தாமரை நாவீறுடையபிரான் ஒருநூல்களு மொப்பில்லாத நன்மையையுடைய சுருதியை நாவினுலோதாது பாடந்தரித்துஞ் சத்தவிற்பத்தியால்வருமத்தங்களை யுட்கொண்டும் ஞானமிகுந்த அச் சுருதிகளுள்ளும் நுட்பமா முபனிடத வாக்கியங்களாற் சேட்டமாகக் கோதற வடித்துரைத்த திருவாய்மொழியின் மூலமுழுதும் பழுதறவோதித் தமதுநாவிற்குச் சுத்தியுண்டாக்கினேர் இவ்வுலகிற் பேதந்தரு மிரணியத்தளவு அருமணிக்

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ஹு ஆடிமீ [பகுதி-௯.
Vol. XI. July—August. 1913. No. 9.

## பரிசோதனத்தொடர்.

(திருக்குறள்—கஉகக.)

"நனவினானல்காரைநோவர்கனவினாற்
காதலர்க்காணாதவர்"

இதற்கு, "தானாற்றுதற்பொருட்டுத் தலைமகனை யியற்பழித் தாட்கு இயற்படமொழிந்தது" என முன்னுரையும்,

"தமக்கொருகாதலரின்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர் தாமறிய நனவின்கண்வந்துநல்காத நங்காதலரை அன்பில ரென நோவாநிற்பர்" எனத் தொகுத்துரையும்,

"இயற்பழித்ததுபொறாது புலக்கின்றாளாகலின் நன்மைதோன் றக்கூறினாள். தமக்குங் காதலருளராய் அவரைக் கனவிற்கண்டறி வாராயின், நங்காதலர் கனவின்கணாற்றி நல்குதலறிந்து நோவா ரென்பதாம்" என விசேடவுரையும்,

பரிமேழகருரையாக அச்சிட்டபுத்தகங்களிலும் பழைய பலஏடுகளிலு மெழுதப்பட்டிருக்கின்றன.

இங்குக் காட்டிய விசேடவுரையுள் "இயற்பழித்ததுபொறாது புலக்கின்றாளாகலின் நன்மைதோன்றக் கூறினாள்" என்றபாகம் மட்டு மே இங்கு ஆராயத்தக்கதாயுள்ளது.

இதில் நன்மையாவது யாது? அது இங்குத்தோன்றுமாறெங் ஙனம்? தோன்றுமாயினும் அது புலந்துகூறுங்கூற்ருேடு பொருந்து மாறென்னை? எனப் பல சங்கைநிகழ்தற்கிடனுய்ப் பொருள்விளங்கா திருக்கின்றது.

இவ்வாறிருப்பதுபற்றியே ஒரு பதிப்பில் "துஞ்சுங்காற்ருேண் மேலராவர்" "விழிக்குங்கால் நெஞ்சத்தராவர்" 'கனவின்கண்நல்குவர்' 'என்று தலைமகனது நன்மைதோன்றக் கூறினுள்' என மேற்குறளிற் கூறிய கூற்றுக்களே நன்மைதோன்றக்கூறும் கூற்றுக்களாகக்கருதிக் கீழ்க்குறிப்பெழுதப்பட்டிருக்கிறது.

"இயற்பழித்ததுபொருது புலக்கின்ருளாகலின் நன்மைதோன் றக் கூறினுள்" என்னும் உரைவாக்கியத்தை யுற்றுநோக்குமிடத்து "புலக்கின்ருளாகலின்" என்பது ஏதுவாதலால், நன்மைதோன்றக் கூறவேண்டாத தலைவி புலத்தல்காரணமாக நன்மைதோன்றக்கூறி னள், என்னும் பொருள்தோன்றக் கிடக்கின்றது.

இங்கு, தலைவி தலைவன்பிரிவாற்ருது வருந்துதல்பற்றித் தலை வனது நன்மைதோன்றக் கூறவேண்டாதுநின்றே அதுதோன்றக் கூறியதாகவைத்துக்கொள்ளினும், அக்கூற்று இயற்பழித்தலை யாற் ருுந்துணையே யமையுமென்பதல்லது புலத்தனிமித்தமாகுமென்பது பொருத்தமுடைத்தன்று.

"துஞ்சுங்காற் ருேண்மேலராவர்" "விழிக்குங்கால் நெஞ்சத்த ராவர்" "கனவின்கண்நல்குவர்" என மேற்குறள்களிற் கூறிய வாக் கியங்களும் இயற்பழித்ததோழியைநோக்கித் தலைவி யியற்படமொழி தலாயுள்ளன. இவையும் தலைவி தோழியைப் புலக்குங்கருத்தின ளாகித் தலைவனதுநன்மைதோன்றக் கூறிய கூற்ருயின் அக்கூற் றுள்ள மேலைக்குறளுரையினகமாகவே, "இயற்பழித்ததுபொருது புலக்கின்ருளாகலின் நன்மைதோன்றக்கூறினுள்" என்னும் இவ் விசேடவுரைவாக்கிய மெழுதப்பட்டிருக்கவேண்டும். அக்குறளுரை களுக்குள் இஃதெழுதப்படாமையால் அஃது உரையாசிரியர் கருத் தன்றென்று தோன்றுகின்றது.

அன்றியும், பரிமேலழகர் விசேடவுரையு ளெடுத்துரைப்பவை யெல்லாம் இலக்கணங்கூறி வழுக்களைவதும் விளங்காதவற்றை விளக்குவதுமேயாம்.

இக்குறளின் றலைவிகூற்று, தலைவனது நன்மைதோன்றக் கூறுதலாயின் அது வழுவன்மையால் இலக்கணங்கூறி வழுக்களையத்தக்கதன்று ; எஞ்சிய விளக்குரையெனினும் பொருந்தாது ; ஏனெனில் ? "தானுற்றுதற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்தாட்கு இயற்படமொழிந்தது" என முன்னமே எழுதப்பட்டமுன்னுரையின் றொடர்பு தோன்ற "இதுவுமது" எனத் துறைவிளக்க மெழுதியிருத்தலால் இக்குறட்கூற்றும் இயற்படமொழிதலென விளங்குகின்றது. விளங்கவே, அவ்வியற்படமொழிதலின்வேறாகாத விதனை மறித்தும் நன்மைதோன்றக் கூறினளெனவிளக்குவது கூறியதுகூறலாம்.

அன்றியும், புலக்கின்றாளாகலின் எனப் புலத்தலை நிமித்தமாகக் கூறினமையால், புலத்தற்குறிப்புத்தோன்றுமாறு அங்ஙனங் கூறினாள் என்பதே உரைகாரர்கருத்தாகக் கொள்ளல்வேண்டும். அங்ஙனங் கொள்ளுங்கால் நன்மைதோன்றக் கூறுவதுபற்றிப் புலத்தற்குறிப்புப் புலப்படுதலின்மையால் நன்மைதோன்றக் கூறினாள் என்பது பொருந்தவில்லையென்றும், புலத்தற்குறிப் புணர்த்தற்குரிய பிறிதொருசொற் பெற்றிருக்கவேண்டுமென்றும் கருதக்கிடக்கின்றது.

இவ்வாறிருப்பதுபற்றி மதுரைத்தமிழ்ச்சங்கத்திலுள்ள திருக்குறட் பரிமேலழகருரையான பழைய ஏட்டுப்பிரதிகளைப் பார்த்ததில் அவற்றில் மூன்றுபிரதிகளில் "இயற்பழித்ததுபொறாது புலக்கின்றாளாகலிற் பன்மைதோன்றக்கூறினாள்" என எழுதப்பட்டிருக்கிறது.

இப் பாடத்தில் தலைவி தோழியைநோக்கிக் கூறுமிடத்து இயல்பாகிய ஒருமையாற் கூறக்கடவதாயிருக்க அங்ஙனங்கூறாது "நோவர்" "காணாதவர்" எனப் பன்மையாற்கூறியது இலக்கணமருங்கிற் சொல்லாறல்லாத ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியானமையால் அதற்கிலக்கண முரைக்கக்கருதி "இயற்பழித்தது பொறாது புலக்கின்றாளாகலிற் பன்மைதோன்றக் கூறினாள்" என இலக்கணமுரைத்ததாகக் கொள்ளற் கிடனுண்டாயிருக்கிறது.

"ஒருவரைக்கூறும்பன்மைக்கிளவியு
மொன்றனைக்கூறும்பன்மைக்கிளவியும்
வழக்கினாகியவுயர்சொற்கிளவி
யிலக்கணமருங்கிற்சொல்லாறல்ல"—தொல் - சொல். சூ - உஎ.

என்னுந் தொல்காப்பியச்சூத்திரவுரையுள், "தாம்வந்தார் தொண்டனார் என......உயர்சொற்றானே குறிப்புநிலையாய் இழிபு விளக்கிற்று" எனச் சேனாவரையர் கூறியவாற்றால் ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவி குறிப்புநிலையா யிழிபுணர்த்திநிற்குமென்பதும் பெறப்படும். இதனை நன்னூலார் "உவப்பினுமுயர்வினும்...........இழிப்பினும் பாறிணையிழுக்கினு மியல்பே" என வழுவமைப்பர்.

ஆதலால் இயற்பழித்ததுபொறுது புலக்கின்றதலைவி தோழியி னறியாமைபற்றி யிழிக்குங்குறிப்பொடு கூறுகின்றாளாதலிற் பன்மைதோன்றக் கூறினாள் எனக்கொள்வது பொருத்தமுடைத்தாயிருக்கிறது.

இவ்வாறு தோழியைநோக்கிப் பன்மையாற்கூறியதற் கிலக்கணமுரைத்தனராயின் முன்னிலையான அவளை அயலோரைப்பேசுவது போல் "நோவர்" "காணாதவர்" எனப் படர்க்கையாகக் கூறியதற்கு மிலக்கணங் கூறவேண்டுமேயெனின் வேண்டும்; இவ்விலக்கணம் 'பின்னதுநிறுத்தல்' என்னு முத்தியால் அடுத்தகுறளுரையிற் கூறியுள்ளார். அது வருமாறு:—

"நனவினானல்கார்ரேன்பர்கனவினாற்
காணார்கொலிவ்வூரவர்" (வள்ளுவர் - கஉஉ௦.)

என்பதன் விசேடவுரையுள் "என்னொடு தன்னிடை வேற்றுமையின்றாயின் யான்கண்டது தானுங் கண்டமையும்: அதுகாணாது அவரைக் கொடுமை கூறுகின்றமையின் அயலாளேயாமென்னுங்கருத்தால் இவ்வூரவர் என்றாள்" என இடவழுவமைத்திருக்குமாறு கண்டுகொள்க. இங்கு இவ்வூரவர் எனப் பன்மையாற்கூறிய பால்வழுவமைதியை 'முன்மொழிந்துகோடல்' என்னு முத்தியால், "இயற்பழித்ததுபொறாதுபுலக்கின்றாளாகலிற் பன்மைதோன்றக்கூறினாள்" என முற்குறளுரையிற் கூறப்பட்டமையால் ஈண்டுக்கூறாதுவிடுத்தார்.

இவ்வா றேரதிகாரத்துள் ஒருங்குணர்த்தவேண்டு மிரண்டிலக்கணங்கள் பின்னும்வருமாயின் அவற்றுள் ஒன்றினை யோரிடத்தும் பிறிதொன்றினை மற்றோரிடத்துமாக நஷ்டாசுவதக்ரதநியாயம்பற்றிச் சுருங்கக்கூறி யுய்த்துணரவைத்துச்செல்வ திவ்வுரைகாரரதியல்பேயாம். இதனைப் 'பசப்புறுபருவரல்' என்னுமதிகாரத்துள்,

"பசந்தாளிவளென்பதல்லாலிவளைத்
துறந்தாரவரென்பாரில்" (வள்ளுவர்-௧௧௮௮.)

என்னுங் குறளுரையில் "என்பார் என வேறுபடுத்துக்கூறினாள் தன்னையே நெருக்குதல்பற்றிப் புலக்கின்றமையின்" எனப் படர்க்கையான இடவழுவொன்றே யமைத்துப் பால்வழுவமையாதுவிடுத்துப் பின்,

"பசப்பெனப்பேர்பெறுதனன்றேநயப்பித்தார்
நல்காமைதூற்றாரெனின்" (வள்ளுவர்-௧௧௯௦.)

என்னுங் குறளுரையில் "இயற்பழித்ததுபொறாது புலக்கின்றாளாகலின் இகழ்ச்சிக்குறிப்பாற் கூறினாள்" எனத் தூற்றார் என்னும் பன்மை இகழ்ச்சிக்குறிப்புப்பற்றிவந்ததெனப் பால்வழுவொன்றுமமைத்து இடவழுவமையாதுவிடுத்தமையால் இவ்விரண்டனையும் நஷ்டாசுவதக்ரதநியாயம்பற்றி யொருங்குணர்த்தியதாக வுய்த்துணரவைத்தனரெனக் கொள்ளல்வேண்டும்.

நஷ்டாசுவதக்ரதநியாயமாவது:—பரியிழந்ததேருடையோனும், தேரிழந்தபரியுடையோனும் இவ்விருவருங்கூடி நேயமுடையராய் அவருட் பரியிழந்ததேருடையோனுக்கு வேண்டுழித் தேரிழந்தோன் பரியுதவவும், தேரிழந்த பரியுடையோனுக்கு வேண்டுழிப் பரியிழந்தோன் தேருதவவும் அவ்விருவரு மிரண்டுங்கொண்டு தனித்தனியூர்ந்துதிரியு முலகவழக்குப்போல்வதொரு பனுவல்வழக்கு.

இவ்வழக்குப்பற்றியே இடவழுவமைப்பொழிந்த பால்வழுவமைப்பினையும், பால்வழுவமைப்பொழிந்த இடவழுவமைப்பினையும் ஒருங்குகூட்டி, புலக்குங்கருத்தினளாய், இழித்தற்குறிப்பாற் பன்மைதோன்றக் கூறினளென்றும், அயலாளேயாமென்னுங் கருத்தாற் படர்க்கையாய்க் கூறினளென்றும் அவ்விரண்டு குறளினுமே

இடவழுவும் பால்வழுவும் இரண்டும் அமைத்தனரெனக்கொள்ளற் கிடமுண்டாயிருக்கிறது.

ஆதலால் "இயற்பழித்ததுபொறாது புலக்கின்றாளாகலிற் பன்மை தோன்றக்கூறினாள்" என்றபாடம் பொருத்தமுடைத்தாகக் காணப் படுகிறது.

புலக்கின்றாளாகலிற் பன்மைதோன்றக்கூறினாள் என்னும் இப் பாடமே, புலக்கின்றாளாகலின் பன்மைதோன்றக் கூறினாள் எனப் பிரித்தெழுதப்படவும் கூடும்; அங்ஙனம் எழுதிவருமுறையிற் பகரம் வீழ்ந்த பிரதியிற் புலக்கின்றாளாகலி ன னமைதோன்றக்கூறினாள் எனத்தோற்றுவதுகண்டு, புலக்கின்றாளாகலி னன்மைதோன்றக் கூறினாள் எனப்படித்துப் பொருள்விளங்குமாறு "புலக்கின்றாளாக லின் நன்மைதோன்றக்கூறினாள்" எனப் பிரித்தெழுதப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது.

திரு. நாராயணையங்கார்,

பத்திராத்பர்.

---

உ

# திருவள்ளுவர் தொடைநடை விளக்கம்.

பாவடிகளிலுள்ள எழுத்துச் சொற் பொருள்களை எதிரெதிர் நிறீஇத்தொடுப்பதைத் தொடையென்றனர், ஆசிரியர் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியவர். அத்தொடை பலவகைப்படினும், இன்றியமை[illegible] சிறப்பினவாக் கொண்டவை 'மோனை' 'எதுகை' 'முரண்' 'இயைபு' என நான்கே. என்னை?

"மோனை யெதுகை முரணே யியைபென
நானெறி மரபின தொடைவகை யென்ப" (தொல். செய். 88)

என்றாராகலின்.

அத்தொடைநான்கும் விகற்பங்களுடன் இக்காலத்திற்கு ஏற்பன கொண்டு, ஆசிரியர் திருவள்ளுவனார் குறட்பாவில் அமைத்து விளக்கியவாறு, இதனடியில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இவை திருக்குறள் கற்போர்க்குப் பெரிதும் பயன்படுமென்க.

## 1. மோனைத்தொடை.

### 1. அடிமோனை.

பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.

### 2. இணைமோனை.

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.

### 3. பொழிப்புமோனை.

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

### 4. ஒரூஉமோனை.

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்.

### 5. கூழைமோனை.

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

### 6. மேற்கதுவாய்மோனை.

விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

### 7. கீழ்க்கதுவாய்மோனை.

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

### 8. முற்றுமோனை.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

9. கடைமோனை.

[பின்னடியின்சீர் குறையப்பெற்றமையின் காட் டில்லை.]

10. கடையிணைமோனை.

காலைக்குச் செய்தநன்று என்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.

11. பின்மோனை.

நனவினுற் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது.

12. கடைக்கூழைமோனை.

எவ்வது உறைவது உலகம் உலகத்தொடு
அவ்வது உறைவது அறிவு.

13. இடைப்புணர்மோனை.

ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

14. வருக்கமோனை.

குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டும் நட்பு.

15. நெடில்மோனை.

ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது.

16. வல்லினமோனை.

பழமை எனப்படுவது யாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

17. மேல்லினமோனை.

நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை அற்று.

18. இடையினமோனை.

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.

19. தலையாகுமோனை.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

20. இடையாகுமோனை.

அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

21. கடையாகுமோனை.

நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

---

## 2. எதுகைத்தொடை.

1. அடியெதுகை.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

2. இணையெதுகை.

கெட்டார்க்கு நட்டாரில் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல்.

3. பொழிப்பெதுகை.

தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்.

4. ஒரூஉவெதுகை.

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

5. கூழையெதுகை.

பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

6. மேற்கதுவாயெதுகை.

வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதனோய் எல்லாங் கெட.

7. கீழ்க்கதுவாயெதுகை.

பெண்ணினுற் பெண்மை உடைத்தென்ப கண்ணினுற்
காமநோய் சொல்லி யிரவு.

8 முற்றெதுகை.

இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்.

9. கடையெதுகை.

[பின்னடியின்சீர் குறையப்பெற்றமையின் காட் டில்லை.]

10. கடையிணையெதுகை.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.

11. பின்னெதுகை.

எண்சேர்ந்த நெஞ்சத்து இடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

12. கடைக்கூழையெதுகை.

இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற்று எஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

13. இடைப்புணரெதுகை.

இறைகடியன் என்றுரைக்கும் இன்னச்சொல் வேந்தன்
உறைகடுகி யொல்லைக் கெடும்.

14. வருக்கவெதுகை.

அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானெடு ஊர்ந்தா னிடை.

15. நெடிலெதுகை.

கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று.

16. வல்லினவெதுகை.

உப்பமைந் தற்றுற் புலவி யதுசிறிது
மிக்கற்றுல் நீள விடல்.

17. மெல்லினவெதுகை.

கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று.

18. இடையினவெதுகை.

உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

19. தலையாகெதுகை.

அறவாழி அந்தணன் றாள்சேர்ந்தார்க்கு அல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

20. இடையாகெதுகை.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு.

21. கடையாகெதுகை.

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

22. ஆசிடையெதுகை.

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

23. உயிரெதுகை.

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து.

24. மூன்றுமெழுத்தொன்றெதுகை.

பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.

---

3. முரண்தொடை.

1. அடிமுரண்.

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்த திலேன்.

2. இணைமுரண்.

ஒருநாள் எழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு.

3. பொழிப்புமுரண்.

நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்.

4. ஒரூஉமுரண்.

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

5. கூழைமுரண்.

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்.

6. மேற்கதுவாய்முரண்.

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்.

7. கீழ்க்கதுவாய்முரண்.

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

8. முற்றுமுரண்.

நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது.

9. கடைமுரண்.

[பின்னடியின்சீர் குறையப்பெற்றமையின் காட் டில்லை.]

10. கடையிணைமுரண்.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

11. பின்முரண்.

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

12. கடைக்கூழைமுரண்.

கண்ணில் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினுந் தான்விதுப் புற்று.

13. இடைப்புணர்முரண்.

ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

---

4. இயைபு.

1. அடியியைபு.

[பின்னடியின்சீர் குறையப்பெற்றமையின் காட் டில்லை.]

2. இணையியைபு.

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

3. பொழிப்பியைபு.

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

4. ஒரூஉவியைபு.

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

5. கூழையியைபு.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

6. மேற்கதுவாயியைபு.

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்.

7. கீழ்க்கதுவாயியைபு.

பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்

8. முற்றியைபு.

ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி யிடத்தாற் செயின்.

9. கடையியைபு.

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

10. கடையிணையியைபு.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

11. பின்னியைபு.

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

12. கடைக்கூழையியைபு.

நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணுமை பேதை தொழில்.

13. இடைப்புணரியைபு.

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

தச்சநல்லூர்,
30—7—13. } நச்சினார்க்கினியன்.

---

# பொருளதிகார ஆராய்ச்சி.

(உருச-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

முன்காட்டிய விவரங்களை யுற்றுநோக்குவார்க்கு அவ்வவ் நிலங்களுக்குத்தகுந்த கருப்பொருளை விரித்துக்கூறியிருப்பது பண்டைத் தமிழ்ப்புலவர்கள், தமக்குப் புறம்பாயுள்ளவற்றையெல்லாம் செவ்வனேநோக்கி, அவற்றை ஒவ்வோரியையுபற்றிப் பற்பலபிரிவுகளாகப் பிரித்து முறைப்படுத்துவதில் ஆற்றவும் ஆற்றல்வாய்ந்தவர் என்பதற்குப் போதியசான்றாகும்.

இவற்றுட் கருப்பொருள்விளக்கமொன்றே, ஒருவாறு தாவரநூல் (Botany) விலங்கியல்நூல் (Zoology) பௌதிகநூல் (Geography) ஜனசமூக அமைப்புநூல் (Sociology) முதலிய இக்காலத்து மேனாட்டாராற் போற்றப்பெற்றுவரும் சாஸ்திரங்களில் ஸ்தூலமாகக்காணப்படும்பொருள்களை நம் தமிழ்ப்புலவர்கள் அறியாதவர் அல்லர் என்பதனை நிலைநாட்டும்.

இனி இவ்வகத்திணைகட்கும்,அவற்றுக்குரிய எனக் கூறப்பட்ட பெரும்பொழுது சிறுபொழுதுகட்கும் உள்ள இயைபினைச் சிறிது நோக்குவாம்.

குறிஞ்சிக்குக் கூதிரும், யாமமும் கூறியது எற்றிற்கோ எனின், குறிஞ்சி, புணர்ச்சிக்குத்திணை. களவில் தலைவியோடு புணர்ச்சி நிகழ்த்தும் தலைமகனுக்கு, அத்தலைவி எவ்வளவுக்கெவ்வளவு அரியளாகின்றாளோ அவ்வளவுக்கவ்வளவு புணர்ச்சியின்பஞ் சிறக்குமாதலானும், தலைவியினது அருமையினை இருள், மழை யிவற்றாற் களவின்கண்ணே தலைமகற்குப் புலப்படுத்துவது, ஐப்பசியும் கார்த்திகையுமாகிய கூதிர்காலமும் அதன் இடையாமமுமே ஆகலானும் கூதிரும் யாமமும் குறிஞ்சிக்குப் பொழுதாயின. முன்பனிக்காலமாகிய மார்கழியும் அத்துணைச்சிறப்பில்லாதது எனினும், பொருத்தமுடைமை பற்றி முன்பனியும் பின்னர்ச்சேர்க்கப்பட்டது. இங்ஙனமே மற்றைப் பொழுதுபாகுபாடுகள் அவ்வத்திணைகளுக்கு மிகவும் ஏற்புடைத்தாமாறு கற்றோரால் உற்றுநோக்கி உணரற்பாலது.

இத்துணை இயைபுபெறத் திணைகட்கு முதல், கரு, உரிப் பொருள்கள் கூறிவைத்தாரெனினும், இந்த வரையறைக்குட்பட்டே இலக்கியம் இயங்கவேண்டுமென்பது ஆசிரியர்கருத்தன்று. அவர் பிறஇடங்களிற்போலவே இங்கும், காப்பியப்புலவனது முயற்சி எளிதிற் கைகூடும்படி இலக்கணமுறுக்கினை இளக்கிக்கொடுத்திருக் கிறார். எங்ஙனமோ எனின், திணைகள் தம்முள்ளும் தமது உரிப் பொருளல்லாத மற்றைப்பொருட்களுள்ளும் மயங்கிவருதல் அமை வுடைத்து என்பதனை,

"திணைமயக்குறுதலுங்கடிநிலையிலவே"
"உரிப்பொருளல்லனமயங்கவும்பெறுமே"

"எந்நிலமருங்கிற்பூவும்புள்ளும்
அந்நிலம்பொழுதொடுவாராவாயினும்
வந்தநிலத்தின்பயத்தவாகும்"

என்னும் புறனடைச்சூத்திரங்களிற் சொல்லிப்போந்தனர்.

இவ்வாறு திணைகள் தம்முள் மயங்குதற்குச்செய்யுள், தமி ழிலக்கியத்திற் பல எளிதிற்காணப்படும். சூத்திரவுரையின்கண்ணே நச்சினார்க்கினியரும் எத்துணையோ மேற்கோள்கள் சங்கமரீஇய நூல்களிலிருந்து எடுத்துக்காட்டியுள்ளார். யாமும் அவராற் கூறப் பெறாதனவாகிய இரண்டொருசெய்யுட்களை இங்கு எடுத்துக்காட்டு வது பொருத்தமுடைத்தெனக்கருதி அவற்றைக் கீழேதருகின் றோம். சீவகசிந்தாமணி நாமகளிலம்பகத்தின்,

"மூலத்தடஞ்சேதகம்பொதிப்பமற்றவர்
குலத்துடன்பதித்தவிற்குதித்தவாட்கயல்
புலத்திடைக்கவரிகன்றூட்டப்போந்தபால்
நிலத்திடைப்பாய்ந்தவைபிறழுநீரவே"

என்பதில் மருதமும், முல்லையும் மயங்கியுள்ளமையும்,

"பாற்சுவையறிந்தவைபழனத்தாமரை
மேற்செலப்பாய்தலின்வெரீஇயவண்டினம்
கோற்றொடிநுளைச்சியர்முத்தங்கோப்பவர்
ஏற்றியமாலைத்தேனிரியப்பாய்ந்தவே."

என்பதில் முல்லையும், மருதமும், நெய்தலும் மயங்கியமையும், பத்துப்பாட்டில், குறிஞ்சிப்பாட்டின்கண்ணே,

"சினைஇயவேந்தன்செல்சமங்கடுப்பத்
துனைஇயமாலைதுன்னுதல்காணூஉ"

எனக் குறிஞ்சிக்குப்பொழுதல்லாத மாலைப்பொழுது மயங்கிவந்ததும், மேற்கூறிய தொல்காப்பியச்சூத்திரங்களுக் குதாரணமாகும்.

அகத்திணைப்பாகுபாட்டினையும், அவற்றின் பொருள்களையும், அவற்றோடியைபுபெற்ற மற்றும் பிறவற்றையும் சிறிதுவிரிவாக இதுகாறுங் கூறினோம்; அது எதற்கோ எனின், சங்கச்செய்யுட்களில் யாண்டும், இத்திணையும் பிறவும் பெரிதும் பயில்வன ஆகலானும், ஐங்குறுநூறு, கலித்தொகை, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை முதலாய இந்நூல்களெல்லாம் ஐந்திணைமுதலியவற்றில் ஐயந்திரிபறப் பழகியிருந்தாலன்றிப் படிப்பார்க்குப் பொருள் நயம் தோன்றாவாகலானும் என்க.

இனி அகத்தின் இருபிரிவாகிய களவொழுக்கம், கற்பொழுக்கம் என்பவற்றுள், களவொழுக்கத்தினது இலக்கணமும், அவ்விலக்கணத்தால் அறியப்படுவனவும் கூறப்படும்.

## களவொழுக்கம்.

---:o:---

களவொழுக்கம் என்பது பிறப்பு, கல்வி, அன்பு முதலியவற்றால் ஒத்த தலைவன் தலைவியர், தம்முயற்சியாலன்றி, தெய்வசங்கற்பத்தால் எதிர்ப்பட்டு ஒருவர்மாட்டொருவர்க்குத் தம்மையறியாதெழுந்த வேட்கைமிகுதியால், தம்முட் கூடிக்கலப்பது. இதனை யாழோர் கூட்டம் என்றுங் கூறுவர். வடநூலார் இவ்வொழுக்கத்தினைக் காந்தர்வமென்பர். "கந்தர்வவழக்கம் என்பது, கந்தருவரென்பார் ஈண்டுச்செய்த நல்வினைப்பயத்தால் ஒருவர் கொடுப்பாரும் அடுப்பாருமின்றி, இருவரும் ஒருபொழிலகத்து எதிர்ப்பட்டுப் புணர்வது. அதுபோன்ற கூட்டத்தினைத் தமிழர் களவொழுக்கம் என்பர்" என்று இறையனாரகப்பொருளுரையின்கண்ணே நக்கீரனார் கூறியுள்ளார்.

காட்டில் வேட்டையாடச்சென்ற துஷ்யந்தமஹாராஜன், வழி தவறிக் கண்வமுனிவரது ஆச்ரமத்தினருகேவர, அங்கு அப்போது அவனைச் சகுந்தலை எதிர்ப்பட, அவ்விருவரும் தம்முண் மனமொத்துக்கூடினர் என்பதும், அம்மணத்தினைக் கண்வமுனிவர் கடியாது, நேரிதெனக்கொண்டார் என்பதும் சாகுந்தலநாடகத்திற் காணப்படுகின்றன.

இக்காலத்து நம்நாட்டில், இவ்வொழுக்கம் பற்பல இடையூறுகளால் நிகழாதொழிந்தது எனினும், நவீனநாகரிகம்வாய்க்கப்பெற்றுள்ள மேனாட்டார் இவ்வொழுக்கத்தை இப்போதும் அனுசரித்து வருகிறார்கள். பண்டைக்காலத்தில் "பொய்யும் வழுவும்" இப்போதைப் போல, அத்துணை அதிகமாக இல்லாமையால், களவொழுக்கம் அக்காலத்து நிகழ்ந்துவந்தது. அதன்கண் இயல்பாகவே யமைந்துள்ள சிறப்புப்பற்றி, வடமொழியிற் சாஸ்திரநூல்களிலும், தமிழில் இலக்கணநூல்களிலும் இம்மணத்தின் இயலெல்லாம் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. துஷ்யந்தனும் சகுந்தலையும் மணந்தது முன்னரே கூறினேம்.

சூர்ப்பணகை இராமபிரான்மீது காதல்கொண்டு அவரைத் தன்னை மணக்கும்படிவேண்டிக்கொள்ளுஞ் சமயத்தில் இம்பர்நாடெல்லாம் பம்புபுகழ்படைத்த கம்பநாடரும்,

"காந்தர்ப்பமென்பதுண்டாற்காதலிற்கலந்தசிந்தை
மாந்தர்க்குமடந்தைமார்க்குமறைகளேவகுத்தகூட்டம்"

எனக் கூறியிருக்கிறார்.

அருச்சுனன் தீர்த்தயாத்திரைக்குச் சென்றபோது பாண்டியன் மகளாகிய சித்திராங்கதையை "ஒரு சண்பகத்தின் பூந்தண்ணீழலில்" எதிர்ப்பட்டு,

"செந்திருவையனையாளுந்திருமாலையனையானுஞ்சிந்தையொன்றாய்
வந்திருவர்விலோசனமுந்தடையின்றியுறவாடிமகிழ்ச்சிகூர்ந்து
வெந்துருவமிழந்தமதன்மீளவும்வந்திரதியுடன்மேவுமாபோற்
சந்தருவமுறைமையினாற்கடவுளர்க்குங்கிடையாதகாமந்துய்த்தார்"

என வில்லிபுத்தூரரும் கூறியிருக்கிறார்.

பிறப்பு, கல்வி, அன்பு இவற்ருல் ஒத்த தலைவன் தலைவியர் தாம் ஒருவரை யொருவர் கண்டபோதே காதல்கொண்டு சேர்ந்து துய்க்கும்(காந்தருவமணத்தின்) இன்பத்துக்குநேராக மற்றை பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்னும் எழுவகைமணத்தின்கண்ணும் நிகழும் இன்பத்தினைக் கூறுதல் ஒவ்வாது. ஏனெனில், பிரமம் என்பது நாற்பத்தெட்டு வருஷம் பிரமசரியங்காத்தானுக்குப்பன்னீராட்டைப்பிராயத்தாளை அணிகலனணிந்து கொடுப்பது; பிரசாபத்தியம் என்பது மைத்துனகோத்திரத்தான் மகள்வேண்டின் மறாது அவனுக்கு மகட்கொடுப்பது; ஆரிடம் என்பது காளையையும், பசுவையும் அலங்கரித்து அவற்றிடையே மகளை நீரிற்கொடுப்பது; தெய்வம் என்பது வேள்வியாசிரியனுக்கு வேள்வித்தீமுன்னர் மகளைக்கொடுப்பது; அசுரம் என்பது முற்குறித்துள்ள சங்கேதப்படி கொல்லேறுதழுவியோ, வில்லேற்றியோ மகட்பெறுவது; இராக்கதம் என்பது பெண்ணினைப் பெற்ருேரிடத்தும் அவளிடத்தும் அனுமதிபெறாது வலிந்துகொள்வது; பைசாசம் என்பது தனக்குமேற்பட்ட வயதினையுடையவள், தூங்குகின்றவள் இவர்களுடன் சேர்வது; எனவே இவ்வேழு மணங்களில் ஒன்றிலேனும், தலைவன் தலைவியர் இருவர் மனமும், மன்றல்நிகழ்வதற்குமுன் ஒத்திருந்தது என ஒருதலையாகக் கொள்வதற்கு ஆதாரம் இல்லையாதலின். மணமக்கள்தம்முடைய மனநிலையுணர்ந்தே மணவினைநிகழ்த்துதல் மற்றையவாகிய மணத்தைக்காட்டிலும் மாண்புடையதன்ருே ?

கந்தர்வமணத்தின்சிறப்பு இம்மட்டோ. தமிழ்ப்புலவர்கள், தாம் கடவுளர்மீது தோத்திரமாகப்பாடும் பிரபந்தங்களில் தமது "உள்ளங்கவர்ந்தெழுந்தோங்கும்" பக்தியினைத் தலைவன் தலைவியாது உள்ளத்தில்நிகழும் அன்புவாயிலாக வெளியிட்டிருக்கிருர்கள். கடவுளைத் தலைவராகவும், தம்மைத் தலைவியாகவும், பாவித்து அவர்கள் பாடியுள்ளநூல்கள் பல. அவற்றுள், மாணிக்கவாசகப்பெருமான் இயற்றிய திருச்சிற்றம்பலக்கோவையாரும், நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தமும், முறையே சைவர்களாலும் வைணவர்களாலும் மிகச் சிறந்தனவென்று பாராட்டப்படுகின்றன.

எனவே, களவொழுக்கத்தின்கண்ணே நாயகன் நாயகி இவர்கள் உள்ளத்தேநிகழும் உழுவலன்பின் உயர்ச்சி கூறியதாயிற்று.

இதுகாறும் களவொழுக்கத்தின் சிறப்புக் கூறப்பட்டது. இனி அதன் இலக்கணங்களைச் சிறிது எடுத்தியம்புவாம்.

முதற்கண் இக் களவொழுக்கத்திற்குத் தலைவனுந் தலைவியும் இன்றியமையாது வேண்டும்; பாங்கன், பாங்கி, செவிலி, நற்றாய் முதலியவர்களைப்பற்றி ஆங்காங்கு வேண்டப்படுமிடத்துக் கூறுவோம்.

தலைவன் பெருந்தன்மைக்குணமும், மனத்திட்பமும் வாய்க்கப் பெற்றவனாதல் வேண்டும். "பெருமையுமுரனும் ஆடூஉமேன" என்பர் தொல்காப்பியர். பெருமைக்குணம் என்பது "அறிவும், ஆற்றலும், புகழும், கொடையும், ஆராய்தலும், பண்பும், நண்பும், பழிபாவம் அஞ்சுதலும் முதலிய" பகுதிகளுடையது எனவும், மனத்திட்பம் என்பது "கடைப்பிடியும், நிறையும், கலங்காதுதுணிதலும் முதலிய" பகுதிகளுடையது எனவும் நச்சினார்க்கினியர் விரித்துரைத்தனர்.

தலைவியோ அச்சமும், நாணமும், மடமும், பயிர்ப்பும், நிறையும் வாய்ந்திருத்தல் வேண்டும்.

"அச்சமுநாணுமடனுமுந்துறுத்த
நிச்சமும்பெண்பாற்குரியவென்ப"

என்பது தொல்காப்பியச்சூத்திரம்.

இத்தகைய இலக்கணம் வாய்க்கப்பெறாத தலைவனும், தலைவியும் கூடுங் களவொழுக்கத்தின்கண் இன்பம் சிறவாதென்பது வெளிப்படை.

இங்ஙனம் தலைவன் தலைவியர்க்கு இலக்கணம்வகுத்தவர், அவர்கள் இன்னவருணத்தாராயிருத்தல்வேண்டுமென்பது கூறிலர். ஆதலின் அது எல்லாவருணத்தார்க்கும் பொது எனக் கொள்ளல்வேண்டும். தொல்காப்பியம் 'களவியல்' முதற்சூத்திரவுரைக்கண்ணே "களவொழுக்கம் பொதுவாதலின் நான்குவருணத்தார்க்கும் ஆயர்

முதலியோர்க்கும் உரித்து” என அந்தணர்குலத்திற் பாரத்துவாச கோத்திரத்திற் பிறந்தவராகிய நச்சினர்க்கினியர் கூறியிருப்பது கவனிக்கற்பாலது. இனி,

*“ஒத்தகிழவனுங்கிழத்தியுங்காண்ப
மிக்கோனுயினுங்கடிவரையின்றே”

என்பது இலக்கணமாதலால் உயர்ந்தவருணத்தோர் தாழ்ந்தவருணத்துப்பெண்ணைக் கந்தருவமணஞ் செய்துகொள்ளலாம் என்பதும், தாழ்ந்தவருணத்தோர் உயர்ந்தவருணத்துப்பெண்ணைக் கொள்ளுதல் பொருந்தாது என்பதும் போதரும்.

இத்தகைய தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர்கண்டவுடனே காதல்கொண்டு உள்ளமுடைதல் சிறப்புடைத்து. இங்ஙனம் கண்ட அப்பொழுதே இராமபிரானும் சீதாபிராட்டியும் ஒருவர் மீது ஒருவர் ஆருக்காதல்கொண்டார் என்பதைக் கம்பநாட்டாழ்வார்,

“எண்ணருநலத்தினளினையள்நின்றுழிக்
கண்ணொடுகண்ணிணைகௌவியொன்றையொன்
றுண்ணவுநிலைபெறாதுணர்வுமொன்றிட
வண்ணலுநோக்கினனவளுநோக்கினள்.”

“நோக்கியநோக்கெனுநுதிகொள்வேலிணை
யாக்கியமதுகையான்றோளினாழ்ந்தன
வீக்கியகனைகழல்வீரன்செங்கணுந்
தாக்கணங்கனையவடனத்திற்றைத்தவே.”

“பருகியநோக்கெனும்பாசத்தாற்பிணித்
தொருவரையொருவர்தமுள்ளமீர்த்தலால்
வரிசிலையண்ணலும்வாட்கணங்கையு
மிருவருமாறிப்புக்கிதயமெய்தினர்.”

என மிக அழகாகப் பாடியுள்ளார். திருவள்ளுவனாரும்,

---

* தொல்காப்பியம்: களவியல்.

"கண்களவுகொள்ளுஞ்சிறுநோக்கங்காமத்திற்
செம்பாகமன்றுபெரிது."

"கண்ணொடுகண்ணிணைநோக்கொக்கின்வாய்ச்சொற்கள்
என்னபயனுமில."

எனக் கூறினர். இன்னும், இவற்றுக்கியையவே,

"நாட்டமிரண்டுமறிவுடம்படுத்தற்குக்
கூட்டியுரைக்குங்குறிப்புரையாகும்"

எனத் தொல்காப்பியத்திலும்,

"அரிவைநாட்டமகத்துநிகழ்வேட்கை
தெரியவுணர்த்துங்குரிசிற்கென்ப"

என நம்பியகப்பொருளிலும் இலக்கணம் எழுந்ததும் இங்கு நோக்கற்பாலது.

அன்றியும், ஆங்கிலத்திற் பழையநாடகாசிரியராகிய கிரிஸ்டவர் மார்லோ (Christopher Marlowe) என்பவரால், தமது நாடகம் ஒன்றன்கண்ணே வரையப்பெற்ற, "who hath loved, that loved not at first sight" என்னும் வாக்கியம், உலகெலாம் புகழும் அலகிலாக்கீர்த்திவாய்ந்த ஷேக்ஸ்பியர் (Shakespeare) என்பவரால், அவரியற்றிய நாடகமொன்றில் மேற்கோளாகக் கொள்ளப்பட்டுச் சிறப்புற்றிருக்கிறது. அதனை இக்காலத்துத் தமிழ்ப்புலவர் ஒருவர் "கண்டவக்கணத்திலேகாதல்கொண்டிடா, என்டகுகாதலர்யாவராபவோ ?" எனத் தமிழில் மொழிபெயர்த்துத் தாமெழுதியதொரு புத்தகத்திற் சேர்த்திருக்கின்றார்.

இங்ஙனம் "காதலிருவர்கருத்தொருமித் தாதரவுபட்ட" ஒருவர்மீதொருவர் வேட்கைநோக்கு நோக்கியபோதே, உள்ளத்தாற் புணர்ச்சி நிகழ்ந்ததாயிற்று. ஆதலின் இவர்கண்மாட்டு மெய்யுறுபுணர்ச்சி நிகழினும், நிகழாமற்போயினும் முன்னிகழ்ந்த உள்ளப்புணர்ச்சியும் கந்தருவமாம் என்பது, நச்சினார்க்கினியர் "அச்சமு நாணும்" என்னுஞ் சூத்திரவுரைக்கண்ணே "இருவர் கண்ணுற்றுக் காதல்கூர்ந்த

வழியெல்லாம் கந்தருவமென்பது வேதமுடிபாதலின், இவ் வுள்ளப் புணர்ச்சியும் கந்தருவமாம் எனக் கூறியதனுற் போதரும்.

இப்படித் தெய்வசங்கற்பத்தால், தலைவியை எதிர்ப்பட்டுப் புணர்ந்த தலைவன், அவளைப்பிரிந்துபோகும்போதும், பின்னரும் அத் தலைவன்தலைவியரது மனநிலையையும் செய்கைகளையுந் தொல்காப் பியனார் விரித்துரைக்கின்றார். தலைமகன் பிரியும்போது தன் அன் பின்மிகுதியைத் தலைவிக்குக்காட்டுமாறு, "கருங்குழற்கற்றை மருங்குற இருத்தி, அளகமுநுதலுந் தகைபெறநீவி, ஆகமுந் தோளும் அணிபெறத்தைவந்து, குளிர்ப்பக்கூறித் தளிர்ப்பமுயங் கிப்பிரிவல்" என இறையனாரகப்பொருளில் மிக்கநயமுறக்கூறப் பெற்றுளது. இத்தன்மையனாய்ப்பிரிந்த தலைவன் பின்னர்ப் பாங்கன், தன்னிடத்து வேறுபாடுகண்டு யாதெனவினவத் தான் நடந்தது கூறலும், பின் தழை * யும், கண்ணியும் முதலிய கையுறைகொண்டு, தோழியிடத்துத் தனது குறையிரத்தலும், தோழி தலைவிமாட்டுக் குறைவேண்டலும், தோழி அதற்கிணங்கலும், பின்னர்ப் பகற்குறி, இரவுக்குறி இவற்றின்கண்ணே தலைவன் தலைவியர் கூடலும், தோழி வரைவுகடாவுதலும், தலைவன் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதலும், அன்றி அலர்மொழிவெளிப்படத் தலைவியுடன் வெஞ் சுரத்துநெறியே ஏகுதலும், தோழிமுதலியோர் தக்ககாரணங் கொண்டு செவிலிமுதலியோர்க்கு முறையே அறத்தொடுநிற்றலும் பிறவுமாகிய எல்லாம் இயற்கைப்புணர்ச்சியின்பின்னர் நிகழும் செயல்களாம்.

தோழி எனப்படுபவள் செவிலித்தாயினது மகளாய்த் தலைவி யுடன் இளமைதொட்டே உடனுறைந்துவரும் பாங்கியாவாள். அவள் தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினைமறைத்தல் முதலிய இவற் ருற் கந்தருவமணஞ்செய்துவந்த தன் தலைவியிடத்து வேறுபா டுணருவள். இங்ஙனம், இதனை முன்னுறவுணர்ந்த தோழிமாட்டுத் தழையும் கண்ணியுங்கொண்டு தலைவன் வந்து தன்குறையிரப்ப,

---

* தழை என்பது இலை, பூ முதலியவற்ருல் தொடுத்துப் பண்டைக் காலத்து இளம்பெண்கள் அணியும் ஒரு உடைவிசேடம்.

அவள் முதற்கண் தலைவியினது இளமை, பேதைமை முதலிய கூறி, அக்குறையை மறுப்பள். தலைவன், தலைவி தனக்கு இன்றியமையாதமைகூறி, "குறைமுடிக்காவிடில் மடலேறுவேன், வரைபாய்வேன்" என்னலும், தோழி அவனை ஆற்றுவித்து அகற்றுவள். பின்னர், தோழி தலைவியிடம் சென்று தலைவனது தன்மைகூறி, அவன் தந்த கையுறையைப் புகழ்வள். அதற்குத் தலைவி அறியாள் போன்றிருப்ப, தோழி தலைவனது துயர்நிலையை விரித்[illegible] அக்கு[illegible]றையை ஏற்குமாறு செய்வள்.

இங்ஙனப் பாங்கியிற்கூட்டம்பெற்ற தலைமகன் பகலில், தான் தலைமகளைக்கண்டு[illegible] என்று குறியேற்படுத்திக்கொண்டு. அவளை அவ்விடத்தேகண்டு கூடி மகிழ்வன்; அன்றியும் இரவின்கண்ணுங் கூடவேண்டி அவன் இரவுக்குறியிரப்ப, முதலில் தோழி, ஆற்றினதுஅருமை, காவலினதுகடுமை முதலியனகூறி மறுப்பள்; பின்னர், தலைவன் அவற்றுக்குச் சமாதானங்கூறவே, அதற்குத் தலைவியும் தானும் இயைவள். அவ்விரவுக்குறி இல்லின்கண்ணேயே நிகழும்.

*"இரவுக்குறியேயில்லகத்துள்ளு
மனையோர்கிளவிகேட்கும்வழியதுவே
மனையகம்புகாக்காலையான"

†"இரவுக்குறியேயில்வரையிகவாது"

என்பன இலக்கணம்.

பற்குறிக்கு இவ் வரையறையில்லை.

(தொடரும்.)

வே. முத்துஸாமி ஐயன்.

---

* தொல்காப்பியம்.

† இறையனாரகப்பொருள்.

# தமிழும் ஸம்ஸ்கிருதவுதவியும்.

## Tamil and the influence of Sanskrit.



[உகூச–ஆம் பக்கத் தொடர்ச்சி.)

### தமிழ் ஸம்ஸ்க்ருதத்தின் ஜன்யபாஷையல்ல.

தமிழ்ச்சொற்களின் அமைப்புக்களையும், இலக்கணங்களையும், பகுதி, விகுதி, சாரியை முதலான ல்க்ஷணங்களையுங் கவனித்தால், தமிழ் ஸம்ஸ்க்ருதபாஷையினின்று முற்றிலும் வேறானதென்று தெரியவரும். ஸம்ஸ்க்ருதஆர்யர்கள் தக்ஷிணதேசத்திற் குடியேற ஆரம்பிப்பதற்கு வெகுகாலத்துக்கு முன்னதாகவே, தமிழ்ப்பாஷை அல்லது அதன் பூர்வபாஷையாகிய த்ராவிடபாஷையொன்று தக்ஷிணத்தில் வழங்கிவந்ததாகத் தெரியவருகின்றது.

ஆர்யர்களின் வரவுக்கு முன்னால், தமிழ்ப்பாஷையானது வழக்குப்பாஷையாயிருந்ததுதவிர இலக்கியம், இலக்கணமென்னும் பாகுபாட்டுடன், வாசகபாஷையாய் (literary) இருந்ததோ என்பதையும், அக்காலத்தில் ஏதாவது தமிழ்நூல்கள் வரையப்பட்டனவோ என்பதையும் நிர்ணயிக்கத் தக்க ஆதாரங்க ளகப்படவில்லை.

ஆதிநூல். தமிழ்நூல்களில் ஆதிநூலாய்க் கூறப்படுவது அகத்தியம் என்னும் இலக்கணநூல். இந்நூலின் ப்ரதி யிப்பொழுது கிடைப்பதரிது. இது பெரும்பாலும் ஸம்ஸ்கிருதவ்யாகரணநூலாகிய பாணினீயத்தையே யனுசரித்திருப்பதாய்ச் சொல்லப்படுகிறது.

அகஸ்த்யர், உத்தரதேசத்தினின்றும் ஆதிகாலத்தில் இங்கு வந்த ப்ராஹ்மணரிஷியென்பதும், அவர்தான் ஆதித்தமிழாசிரியரென்பதும் யாவரும் அங்கீகரித்தவிஷயம். அவர் இங்கே வந்தகாலம் வரையறுத்துக்கூறுவது மிக்ககடினம். அவருக்குமுன் தமிழ்நூல்கள் யாதொன்று மிருந்ததாய்த் தெரியவில்லை.

அகஸ்த்யர் சிஷ்யர்கள் பதின்மர். அவர்களில் முக்கியமானவர் தொல்காப்பியர் என்ற ஓர் அந்தணர். அவரால் தொல்காப்பியம் என்ற ஓர் இலக்கணநூல், அகஸ்தியத்தை யனுசரித்தே எழுதப்பட்ட தாய்த் தெரியவருகின்றது.

ஸம்ஸ்க்ருதபாஷையின் உதவியேயில்லாதிருந்தால், தமிழ்ப் பாஷை எந்நிலைமை யடைந்திருக்குமென்பதைப்பற்றி, இப்பொழுது விசாரிப்பது வீண்முயற்சியாகும்.

அகஸ்தியர்காலமுதல், தமிழ்ப்பாஷை அபிவிருத்திக்கு ஸம்ஸ் க்ருதம் விசேஷமாய் உதவிசெய்திருக்கிறதென்பது நன்றாய் வெளி யாகின்றது.

ஸம்ஸ்க்ருதவுதவியை இருவகையாய்ப் பிரிக்கலாம். அவைக ளாவன:—(1) சொற்கடன் (Borrowing of words.) (2) பொருட் கடன் (Borrowing of ideas.) என்பனவாம்.

---

## சொற்கடன்.
## Borrowing of words.

ஸம்ஸ்க்ருதச்சொற்கள் அநேகம் தமிழ்ப்பாஷையில் வழங்கிவரு கின்றன. அவைகளாவன:—தத்ஸமம், தத்பவம், திரிபு என்பனவாம்.

தத்ஸமபதமென்பது சுத்த ஸம்ஸ்க்ருதச்சொல், யாதொரு மாறு பாடுமின்றித் தமிழில் வழங்குவதேயாம். உதாரணம்:— ஜலம், நதீ, பர்வதம், தேசம் முதலியன.

தத்பவம் என்பது, ஸம்ஸ்க்ருதச்சொற்கள் நேரேவராமல், பிராக் ருதச் சொற்களாயிருந்து தமிழில் அங்கிகரிக்கப்பட்டவைகள்.

தத்பவ - உதாரணங்கள்:—

| ஸம்ஸ்க்ருதம். | ப்ராக்ருதம். | தமிழ். |
|---|---|---|
| ஸ்த்ரீ | இத்தி | —த்தி, (வண்ணாத்தி) |
| காஷ்ட | கட்ட | கட்டை. |
| ராஜ்ஞீ | ராணீ | ராணி. |
| ஆஜ்ஞா | ஆண்ணா | ஆணை. |

| | | |
|---|---|---|
| முக்தா | முத்தா (ஹிந்தி மோதி) | முத்து. |
| ஶுக்தி | ஸிப்பி | சிப்பி. |
| ஸூசி | ஸூயி | ஊசி. |
| பத்ர | பட்ட | பட்டை. |
| ஸ்தரா | ............ | தரை. |
| ஸ்திர | ............ | திறமை. |
| ஆர்ய | அஜ்ஜ (அய்ய. பாலி) | அய்யன். |
| த்ராவிட | { தமிட (தமிழ. பாலி) } | தமிழ் |
| ப்ரவாள | பவாள | பவளம். |
| வணிஜ | வாணிய | வாணியன் |
| ம்ருத்திகா | { மட்டியா (ஹிந்தி. மிட்டி) | மட்டி. |
| க்ருஷ்ண | கண்ண | கண்ணன். |
| ஶ்ரேஷ்டி | செட்டி, சேட | செட்டி. |

என்பனவாம்.

திரிபு என்பது இருவகைப்படும். அவையாவன:—

(1) வடமொழிச்சொற்கள், சில திரிபுவிதிகளின்படி மாறுபட்டுத் தமிழில் வழங்குபவை. உதாரணம்:— உலகம், அரசன், அட்டமி, முத்தி, பக்கம், புரிதல், இராமன், அரங்கம், இலக்கணம், இலக்கியம், பகுதி முதலியன.

(2) அவ்வாறு யாதொருவிதிக்கு முட்படாது உருக்குலைந்தவை. உதாரணம்:—அவிட்டம், திருவோணம், கேட்டை, ஆயில்யம், வைகாசி, மார்கழி, பங்குனி முதலியன. ஸ்ரீ என்பது திரு என மருவியதைக் காண்க.

குறிப்பு:—தற்காலத்தில் அச்சிடப்பட்டிருக்கும் தமிழகராதிகளில் ஒன்றையெடுத்துப்பார்த்தால், பாதிக்குக்குறையாது வடமொழிகள் அல்லது மேற்கூறியவாறு வடமொழிகளின் திரிவுகளாயிருக்கும்.

வடமொழிச் சொற்களைத் தமிழாக்குவதற்குச் சில முக்கியமான விதிகள்:—

(1) கூட்டெழுத்துக்கள்:—தமிழிற் கூட்டெழுத்துக்களில்லாத தால், வடமொழிக் கூட்டெழுத்துக்கள் பின்வருமாறு மாறும்.

(a) கூட்டெழுத்தில் இரண்டு ஒற்றுக்களும் தமிழிலுள்ள எழுத்துக்களானால், ஒரு ஒற்று அயல் எழுத்தாய் மாறும். பக்தி=பத்தி.

(b) இரண்டு எழுத்துக்களின் நடுவில் அ, அல்லது இ என்ற உயிர் சேர்க்கப்படும். நேத்ரம்=நேத்திரம்.

(c) ஒன்று தமிழ் அக்ஷரமாயும், மற்றொன்று தமிழிலில்லாத அக்ஷரமாயுமிருந்தால், வடமொழியெழுத்து அதையடுத்த தமிழ்மொழி யெழுத்தாகும். அஷ்டமி=அட்டமி. புஸ்தகம்=புத்தகம்.

2. (a) ஶ. ஸ. என்பது ச என்றாகும். சங்கரன், சூத்திரம்.

(b) ஷ என்பது ச என்றும், ட என்றும் மாறும். ஷஷ்டி= சட்டி. வேஷம்=வேடம்.

(c) ஹ என்பது மொழிமுதலில் அ என்றும், நடுவில் க என்றும் மாறும். ஹரிஹரன்=அரிகரன்.

(d) க வர்க்கம் முதல் ஐந்துவர்க்கங்களும் முறையே க, ச, ட, த, ப என மாறும். கட்கம், தினம், பாலன்.

3. ரகாமுதல் வடமொழிகள்முன் அ, இ, உ வரும். அரங்கம், இராமன், உரோமம்.

---

## பொருட்கடன்.

## Borrowing of ideas.

ஸம்ஸ்க்ருதபாஷையிற் சிறந்த அநேகபொருள்கள் தமிழிற் கலந்திருக்கின்றன. அவைகள் பதப்பொருள்கள், நூல்கள், வர்ணனைகள், அலங்காரங்கள், கதாம்சங்கள் எனப் பலவகைப்படும்.

பதப்பொருள்கள் என்பவை, ஸம்ஸ்கிருதபதத்தை அதேபொருள் படுமாறு தமிழிலேயே மொழிபெயர்ப்பது. ஷண்முகன் என்பது, ஆறுமுகன் எனவும், கும்பஜன் என்பது குடமுனியெனவும், ஸூத்ரம் என்பது நூல் எனவும் வரும்.

நூல்கள்:—வடமொழிநூல்கள் பல, தமிழில் மொழிபெயர்க்கப்பட்டும், அல்லது அவைகளையனுசரித்துத் தமிழ் முதல்நூல்கள் எழுதப்பட்டுமிருக்கின்றன. இவைகளில் முக்கியமானவை இராமாயணம், மகாபாரதம், பாகவதம் முதலானபுராணங்கள், வாகடம் முதலான வைத்யசாஸ்த்ரங்கள், பதினெண்சித்தர்கள்பாடல்கள், ஜ்யோதிஷ சாஸ்த்ரங்கள், அநேக வேதாந்தநூல்கள், சைவசித்தாந்தங்கள், வைஷ்ணவசித்தாந்தங்கள் முதலியன,முதல்நூல்களாயினும், ஸம்ஸ்கிருத புராணக்கதைகளையும் வர்ணனைகளையுமே அனுசரித்து எழுதப்பட்டுள்ளன.

வர்ணனைகள்:—விந்த்யம், ஹிமாசலம், ஸப்ததீவுகள், எழுகடல்கள், மேரு, உத்தரதேசங்கள் முதலான ஸ்தலவர்ணனைகளும், கற்பம், யுகம், மன்வந்தரம், ரிது முதலான காலவர்ணனைகளும் அநேகமாய் ஸம்ஸ்கிருதபாஷையினின்றும் அங்கீகரிக்கப்பட்டவைகளே. இந்திரன், வருணன், யமன், ஸ்வர்க்கம், பாதாளம் முதலான புராண வர்ணனைகளும் ஸம்ஸ்கிருதத்தினின்று வந்தவைகளே.

அலங்காரங்கள்:—உவமைமுதலான அணிகளெல்லாம், விசேஷமாய் ஸம்ஸ்கிருத அலங்காரங்கள் தமிழிற் காணப்படுகின்றன.

மேற்கூறியவைகளினின்றும், தமிழுக்கு ஸ்வயமாகப் பெருமையேயில்லையென்று தெரிவிக்கப்படவில்லை. ஆனால், தமிழின் அபிவிருத்திக்கு ஸம்ஸ்க்ருதம் எவ்வளவோ உதவியாயிருந்ததென்றுமாத்திரம் இதனால் தெரிவிக்கப்படுகின்றது. 'ஸம்ஸ்க்ருதத்தின் உதவியேயில்லாவிடினும் தமிழ் அபிவிருத்தயடைந்திருக்கமுடியாதா?' என்னும் விசாரணை யிப்பொழுதுசெய்யத் துணியவில்லை.

---

## தமிழும் மற்ற த்ராவிடபாஷைகளும்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளமென த்ராவிடபாஷைகள் நான்காகப்பகுக்கப்படும். இப்பாஷைகள் ஒரேதாய்ப்பாஷையிற்

பிறந்த ஜன்யபாஷைகளா யிருக்கின்றன. காலக்ரமத்தை விசாரிக்கையில், தமிழ்தவிர மற்றப்பாஷைகள் பிற்பட்டு உண்டாயினவென்றே தோன்றுகின்றன.

ஆதியில், தமிழ்த்தேசத்துக்கு எல்லைகூறுமிடத்து 'குணகடல் குமரி குடகம் வேங்கடம்' என்று சொல்லப்பட்டிருக்கின்றது. தற்காலத்திலும், தமிழ்ப்பாஷை வழங்குகின்ற எல்லை இவைகளே. இவ்வெல்லைக்கு வடகிழக்கே தெலுங்கும், வடமேற்கே கன்னடமும், மேற்கே மலையாளமும் வழங்குகின்றன. ஆதியில், முற்கூறிய எல்லையில் த்ராவிடம், அல்லது தமிழின் தாய்ப்பாஷையானது வாசகபாஷையாயும், மற்ற இடங்களில், இப்பூர்வபாஷைகளின் பல சிதைவுகள் ஸ்தலபாஷைகளாயும் வழங்கிவந்திருக்க வேண்டும் என்றும், பிற்பட்டு, ஸம்ஸ்கிருத உதவிக்குத்தக்கவாறு இவ்வளவு மாறுபாடுகள் அடைந்திருக்கின்றனவென்றும் ஊகிக்கலாம்.

தமிழ்ப்பாஷையானது ஸம்ஸ்கிருதக்கலப்புக்குமுன்னதாகவே ஒரு தனி வாசகபாஷையாயிருந்தபடியால், ஸம்ஸ்க்ருதக்கலப்பு உருவத்தையேமாற்றுவண்ணம், மற்ற த்ராவிட பாஷைகளைக்காட்டிலும் தனிமையைக் காப்பாற்றிக்கொண்டுவந்தது.

தெலுங்குபாஷையானது, கி. பி. 4-வது நூற்றாண்டுக்குப் பிற்பட்டுத்தான் வேறாயிருப்பதாய்த் தெரிகின்றது. மகததேசத்தையாண்ட மௌர்யவம்சதிலகனான அசோகனால் கலிங்கதேசமும், அதையாண்ட ஆந்திரர்களும் ஜயிக்கப்பட்டார்கள் என்றும், மௌர்ய ராஜவம்சம் பலஹீனமானவுடன், ஆந்த்ரர்கள் ஸ்வாதீனர்களாய், த்ரிலிங்கதேசத்தை யரசாண்டார்களென்றும், இதுதான் தெலுங்கு தேசமென்றும், இவர்கள்பாஷை ஆந்த்ரபாஷை அல்லது தெலுங்கு பாஷையென்றும் பாஷாவித்வான்கள் கூறுகின்றார்கள். கன்னடத்தின் சரித்திரமும் இதையனுசரித்தே யிருக்கின்றது.

மலையாளபாஷையானது கி. பி. 11-வது நூற்றாண்டுக்கு முன் தனிப்பாஷையல்லவென்றும், அதற்குமுன் எழுதப்பட்ட மலையாள சாஸனங்களிலுள்ள பாஷைக்கும், தமிழ்ப்பாஷைக்கும் வித்யாஸமேயில்லையென்றும் தெரியவருகின்றது.

---

## மத்யகாலம்.

தமிழ்வாலாற்றின் மத்யகாலமானது,

(1) சங்கக்காலம் கி. பி. 200ம் ஆண்டுவரை.

(2) பௌத்தர்-க்ஷமணர்காலம் கி. பி. 800 வரை.

(3) சைவசித்தாந்தகாலம் கி. பி. 800 முதல் 1400 வரை.

(4) வைஷ்ணவசித்தாந்தகாலம் கி. பி. 1000 முதல் 1600 வரை. என நான்கு காலங்களாகப் பிரிக்கப்படலாம்.

இந் நான்குகாலங்களும் காலவரிசையாய்வருவதாய்க் கொள்ள லாகாது. ஒருகாலத்தின் இறுதியும் அடுத்தகாலத் துவக்கமும் ஸமகாலமாயிருக்கின்றன. ஏனென்றால் சங்கக்காலத்துப் புலவரிற் சிலர் பௌத்தர்களாயும் க்ஷமணர்களாயு மிருந்திருக்கின்றனர்.

அவ்வாறே சைவசித்தாந்தகாலமும் சுமார் 200 வருஷங்களுக் குமுன் துவங்கினும், பிற்பட்டு அதுவும் வைஷ்ணவசித்தாந்த காலமும் ஸமகாலமாயிருந்திருக்கின்றன.

மற்றப் பாஷாசரித்திரங்களைப்பற்றிக் கூறுமிடத்துப் பொது வாய் அரசர்காலங்களையும், பெரிய வித்யாமுயற்சிகளையும் அனுசரித் துக் காலக்ரமங்கள் பரம்பரையாய் அணிவகுப்பது வழக்கம். ஆனால், இங்கு அவ்வாறுசெய்யாமல் மதக்ரமங்களையனுசரித்துத் தமிழ் நூல்களை வகுக்கத்துணிந்தேன்.

ஏனென்றால், மற்றச் சிறுதேசங்களிற்போலல்லாமல் அகண்ட இவ் விந்துதேசத்தில், கல்விஸ்தலங்கள் ஒரேகாலத்திற் பல இருந் திருக்கின்றன. ஓரிடத்திற் பௌத்தமதக்கல்வி அதிகரித்தால் மற்றோ ரிடத்திற் சைவமதமும், இன்னோரிடத்தில் வைஷ்ணவமதமும் விருத்தியடைந்திருக்கின்றன. தமிழ்நூல்களின் தன்மையையும் தத்துவங்களையும் அறிவதற்கு மேற்கூறியவிதமே எளிதானதாகும்.

---

### 1. சங்கக்காலம். (கி. பி. 200 வரை)

இக் காலமானது, ஸம்ஸ்கிருதம்வழங்கிய ஆர்யர்கள் தக்ஷிண தேசத்திற் குடியேறத்துவங்கியகாலமுதல் ஆரம்பம். அகஸ்தியரும்,

அவர் சிஷ்யர்களான தொல்காப்பியர் முதலானவர்களுமே தமிழ் ஆதிகவிகள் என்றும், அவர்கள் பாணினீயம் என்னும் வடமொழி யிலக்கணத்தை யனுசரித்தே தமிழிலக்கணம் எழுதியிருக்கின்றார்கள் என்றும், அவர்கள் ப்ராஹ்மணர்களென்றும் முன்னரே கூறப்பட் டிருக்கின்றது.

சங்கநூல்களிற் சில.

(1) மேற்கூறிய இலக்கணங்கள், அகஸ்தியம் தொல்காப்பியம் முதலானவை.

(2) பத்துப்பாட்டு:-கி. பி. 60—95. நக்கீரர் முதலானவர்கள் எழுதியவை.

(3) எட்டுத்தொகை.

(4) பதினெண்கீழ்க்கணக்கு:-நாலடியார், இனியவைநாற்பது, இன்னாநாற்பது, குறள், பழமொழி, ஆசாரக்கோவை முதலான நூல்கள் இவ்வகுப்பைச் சேர்ந்தவை.

பதினேண்கீழ்க்கணக்குவகுப்புநூல்களை யெழுதியவரிற் சிலர், ப்ராஹ்மணர், சிலர் ஜைனராகவுமிருக்கின்றார்கள். இக்காலந்தான் திருவள்ளுவர், ஔவை, இடைக்காடர் முதலானவர்கள் இருந்த காலம்.

---

2. பௌத்தர்-க்ஷமணர் காலம்.

ஐம்பெருங்காப்பியங்கள்.

(1) மணிமேகலை:-(கி. பி. 90) பௌத்த ஆசிரியனால், பௌத்த மதஸம்ப்ரதாயத்துக் கிணங்க எழுதப்பட்டுள்ளது.

(2) சிலப்பதிகாரம்:-(கி. பி. 74-133) மகததேசத்ததிபனான சாதகர்ணியைப்பற்றியும், கஜபாகுவைப்பற்றியும் இதிற் சொல்லப்பட்டிருக்கின்றது.

(3) ஜீவகசிந்தாமணி:-இது ஜைனமதத்தையனுசரித்த காவியம்.

(4) குண்டலகேசி.

(5) வளையாபதி:-பௌத்தமதத்தை யனுசரித்த காவியம்.

இதனுல், அக்காலத்தில் க்ஷமணரும் பௌத்தரும் தமிழபி விருத்திக்கு எவ்வளவோ உதவிசெய்திருக்கின்றூர்கள் என்பது நன்கு விளங்கும்.

ஐந்து சிறுகாவியங்கள்.

இவை தவிர 5 சிறுகாவியங்கள் என ஒருவகுப்புண்டு. அவைகளாவன:—

(1) நீலகேசி:—இது ஒரு ஜைனநூல். பௌத்தம், ஸாங்க்யம், வைசேஷிகம், யோகம், வேதாந்தம் இவைகளைக் கண்டித்து எழுதப்பட்டிருக்கின்றது.

(2) சூளாமணி:—மஹாபுராணக்கதையை யனுசரித்தது.

(3) உதயணன்கதை:— ஸம்ஸ்கிருத பிருஹத்கதையிலுள்ள வத்ஸராஜன்கதையை யனுசரித்தது.

(4) யசோதரகாவியம்.

(5) நாககுமாரகாவியம் என்பனவாம்.

இவைதவிர ஜைன ஆசிரியரான வாமனுசாரியரால் எழுதப்பட்ட மேருமந்தரபுராணமும், திவாகரம் முதலான நிகண்டுகளும் கவனிக்கத்தக்கவை.

(தொடரும்.)

ஆர். எஸ். நாராயணஸாமி ஐயர்.



# தமிழ்நாட்டுக்குடிகள் பரதேசத்திற்படும் பாடுகள்.

நீருண்டு. நிலமுண்டு. வித்துண்டு. ஏருண்டு. இனமுண்டு. சனமுண்டு. கோயிலுண்டு. தீர்த்தமுண்டு. குருவுண்டு. அரசுண்டு. செங்கோலுண்டு. பஞ்சகாலத்திற் சென்றுபிழைக்க அயல்நாடுகள் எத்தனையோவுண்டு. இப்படி எல்லாவாய்ப்பு முடையதாகிய தமது பழைய தமிழ்நாட்டைக் காலந்தோறும்விடுத்துப் பரதேசஞ்செல்லுந் தமிழ்க்குடிகளுக்கும் சனங்களுக்கும் கணக்கில்லை. தாமாகப் பெரும்பொருளீட்டலாமென்றெண்ணிச் செல்வாரும், கூலித்தரவரது வஞ்ச ஆசைப்பேச்சில் வசப்பட்டு அறியா தடிமையாட்களாக மனம்பொருந்திச் செல்வாரும், இன்னவிடத்துக்குப் போகிறேமென்றறியாது வஞ்சித்துக் கொண்டுபோகப்படுவாருமாக இச் சனங்கள் மூன்றுதிறப்படுவார்கள். தாமாகமுயன்று பரதேசஞ்செல்லுகின்றவர்களுள்ளும், வஞ்சனையால் அடிமைப்படுத்தப்படுகிறவர்களொழிய, மற்றவர்கள் தங்கள் முயற்சியளவுக்குத்தக்கபடி பொருளீட்டித் தமது தேசத்துக்கு மீள்பவர்களும், சிலர் பரதேசத்திலேயே குடிகொண்டுவசிப்பவர்களு மாவார்கள். இரண்டாம் மூன்றாந்தரத்து ஏழைச்சனங்கள் சிங்கப்பூர் முதலிய மலாய்தேசங்களுக்கும், மோல்மேன், மோரிஸ், நேட்டால், பிஜி முதலிய தூரதேசங்களுக்கும் ஐந்துவருஷம் பத்துவருஷங்களுக்கு முறியெழுதிய அடிமையாட்களாகக் கொண்டுபோகப்படுகின்றார்கள். இவர்கள் ஒவ்வொருவரும், கூலித்தரவன்கையிலகப்பட்டநாள்முதலாக அக்கரைபோம்வரையிலு முண்டாகிய போசனச்செலவுகள், தரவன்செலவு, கப்பற்செலவு, வள்ளச்செலவு, வண்டிச்செலவு எல்லாமாக ரூ 160-முதல் ரூ 250-வரையும் கடனாளிகளாய்விடுகின்றார்கள். இவர்கள் அத்தேசத்திலே தினமொன்றுக்கு வேலைசெய்தாற் பெறுங் கூலி அரைரூபா முதல் முக்கால்ரூபாவுக்கு மேற்போவதில்லை. கருப்பந்தோட்டத்துவேலைக்கே பெரும்பாலும் ஆளாகின்றார்கள். பெண்களுக்குக் கூலி மிகக்குறைவு. இவர்கள் தனித்தனி செய்யவேண்டியவேலையோ சாதாரணமாக ஒருநாளில் ஒருவன் செய்துமுடிக்கக்கூடியதன்று. ஓராள் அவ்வேலை

யைப் பிரயாசத்தோடு செய்துமுடிக்கின் உடம்புநொந்து அடுத்தநாள் வேலைக்குதவாதவனுவான். அடுத்தநாள் வேலைக்குப்போகாவிடின் அடியும் உதையும் பெறுவதோடு அமைவின்மைக்குப் போலீஸ் கோர்ட்டில் தண்டனையும் பெறவேண்டிவரும். உள்ளவாறு நோயினுல் வருந்தினுலும் வேலைசெய்யப்போதல்வேண்டும். சோர்ந்து வீழ்ந்து குற்றுயிராய்க்கிடக்கும் அவசரத்திலேயே தோட்டத்து அதிகாரிகள் வைத்தியசாலைக்கு அனுப்புவார்கள். கருப்பங்தோட்டம் தேய்த்தோட்டமுதலிய தோட்டங்களிலேயுள்ள அதிகாரிகள் தமக்கு நோய்வந்தாலன்றிப் பிறருக்குவரும் நோயையும் வருத்தத்தையும் உணரும் ஆன்மாவில்லாதவர்கள். மிருகங்களுக்கும் கூலியாட்களுக்கும் என்னபேதமென்று வினவுகின்றவர்கள். ஆன்ம இரக்கமென்பது சிறிது மில்லாதவர்கள். மாலை ஆறுமணிவரையும் வேலைசெய்தவன் போய்ப் பசிதணிக்குமுன்னே அவனை அழைத்து மற்றொரு வேலைக்கு ஏவுவர். தனது நிலையைச்சொல்லி மறுக்கப்புகுவானுயின், சப்பாத்துதை தப்பாதுகிடைக்கும். இப்படியெல்லாம் வேலைசெய்தவிடத்தும் அவன் உண்டதும் உடுத்ததும்போக மிஞ்சுவதெல்லாம் அவன்மேற் கடனுகவேற்றியிருக்கும் ரூ 250-க்கு ஈடுபண்ணப்படும். ஈடுபண்ணியும் ஐந்தாம்வருஷத்திற் கணக்குமுடிக்கும்போது ஈடுபண்ணியதுபோகப் பாக்கிக்கடனு மிருக்கும். அதனையிறுப்பதெப்படி? மீண்டும் ஐந்துவருஷத்துக்கு அடிமைமுறி எழுதவேண்டிவரும். அந்த ஐந்துவருஷத்தினுள்ளே கடன்தீர்ந்து ஐம்பதுமுதல் நூறுரூபாவரையிலும் மிஞ்சினுலும் மிஞ்சும். அதற்குள் அக்காசைத் தோட்டத்துக்கு ஆதாயமாகவிடுத்து இறக்கினுமிறப்பன். தோட்டத்துக்கு ஆதாயமாக்குவதேயன்றி அப்பொருளை அவன் ஊரிலுள்ள தாயத்தாருக்கு அனுப்பும் பெருந்தகைமையைக் கேட்டறியோம். மிஞ்சிய ரூபாவைக்கொண்டு ஊருக்குமீண்டவிடத்தும் அதனைத் துறைமுகத்திலே கவர்ந்துகொள்ளும் பாதகர்களும் இருக்கிறுர்கள். அவர்களுக்குந்தப்பி வீடுசென்று இருப்பைநோக்கினுல், பத்துப்பதினைந்து மிஞ்சினுலும்மிஞ்சும். மிஞ்சாமல் உடுத்தசாரமும் போட்ட கம்பளக்கந்தையுமே மிச்சமானுலு மாகும்.

இதுவே தமது அருமைத் தாய்நாடாகிய தமிழ்நாட்டை விட்டுப் பரதேசஞ்சென்றுமீளுங் கூலியாட்களுட் பெரும்பாலா

ருடைய கதி. அவர்களை வஞ்சித்து அடிமைவலைக்குட் சிக்குவித்து வயிறுவளர்க்கும் கூலித்தரவர்களாகிய தேசத்துரோகிகள் ஜனத் துரோகிகள் சமயத்துரோகிகள் குடித்துரோகிகள் குலத்துரோகிகள் ஈசுரத்துரோகிகள் யமதூதர்கைப்பட்டகாலத்திற் படும் பாட்டை எவ்வாறு எண்ணுவோம். இப் பாதகர்கள் தாய்கதறியழப் பிள்ளையைக்கொண்டுபோய் அடிமைச்சாலையில் அடைத்துவிடுவர். புருஷன் அழப் பெண்டாட்டியை வஞ்சித்துக்கொண்டுபோய் அடைத்துவிடுவர். ஏழைச்சனங்களுடைய முறையிடு யார்காதிலேறும்? ஏறச் சொல்வதெப்படி? ஏறினாலும் வினைக்கெட்டுப்போய் விசாரித்து நீதி செய்யும் அதிகாரிதான் யாவன்? தமிழ்நாட்டைவிட்டு இப்படி வஞ்சிக்கப்பட்டுப் போய்ப் பரதேசத்திலிருந்து வருந்தித் தாய்நாட்டை நோக்கி ஓலமிட்டு அழுது அழுங்கும் அகதிகளுடைய நிலையைப் பரோபகாரிகள் தேசோபகாரிகள் தமது சிந்தையிற்கொண்டு அவர்களை மீட்பதற்கு உபாயந்தேடுவதோடு இனிமேல், தமிழ்நாட்டுச் சனங்கள் இவ்வாறு அடிமைப்பட்டுப் பரதேசம்போகாவண்ணம் ஊர்கள்தோறும் பிரசங்கஞ்செய்தலாலும், செய்வித்தலாலுந் தடுத்தல் வேண்டும். கூலிச்சனங்களுக்கு உள்ளூரிலே போதியவேலையிருக்கவும் அவர்கள் பேராசையினாலே பரதேசத்திற்போய் வருந்துவதை அவர்களுக்கு நன்றாக விளக்கவேண்டும். இப்படிக் காலந்தோறும் தமிழ்நாட்டைவிட்டுச் சனங்கள் பரதேசஞ்செல்வதால் நெல்விளைவு சுருங்கிவிட்டது. பருத்திவிளைவு குறைந்துவிட்டது. மாடு ஆடுகள் சுருங்கிவிட்டன. கைத்தொழில்கள் குறைந்துவிட்டன. தானியவிலை ஏற்றமாய்விட்டது. வஸ்திரவிலை ஏறிவிட்டது. பால் தயிர் நெய்விலைகள் ஏறிவிட்டன. ஆளில்லாமையால், தினக்கூலி ஏறிவிட்டது. கைத்தொழில் சுருங்கினமையாற் கைத்தொழிற்பொருள்கள் விலையேறிவிட்டன. இப்படிச் சனங்கள் தமது நாட்டைவிட்டுப் பரதேசத்திற் சென்று அங்குஞ் சுகமடையாது வருந்துவதோடு தமது தாய்நாட்டையும் பலவாறு கெடுக்கின்றார்கள். இவ் வுண்மைகளைத் தமிழ்வித்துவான்களும் ஏழைச்சனங்களுக்கு எடுத்து உபதேசித்துவருதல் வேண்டும்.

யாழ்ப்பாணம்,<br>
நாவலர்கோட்டம். } ஆ. மூத்துத்தம்பிப்பிள்ளை.

---

# அறமும் அறவுரிமையும்.

(உஎரு-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

முற்குறித்த மூன்று அறநிலயங்களுக்கும் முறையே போதகர் அர்ச்சகர் ஆதீனகர்த்தர் இவர்களைத் தெரிந்தெடுப்பது ஜனசமூகத்தின் கடமையாம் அவர்களுடைய கல்வியறிவைமட்டும் கவனித்தாற் போதாது. அவர்களுடைய நல்லொழுக்கத்தையே முதலில் நாட வேண்டும். ஒருகாலத்தில் மாட்சிமையுற்ற விக்டோரியாமகாராணியார் அவர்கள் உவெல்லிங்டன்காலேஜில் பரிசு அளிப்பதற்கு மாணுக்கரைத் தெரிந்தெடுக்கமாறு தம் பர்த்தாவுக்குச் சொன்னபொழுது மதியூகமாவது அதிகமான புத்தகப்படிப்பாவது உள்ள பையனைத் தெரிந்தெடுப்பதைவிட்டு மனப்பண்புடையானைத்தெரிந்து அவனுக்குப் பரிசு அளிக்கப்பட்டது. அவ்வாறு ஒழுக்கத்தையே நாடும் ஜாதியாரன்றோ அந்நியஜாதியாரை ஆளுந்திறமை வாய்க்கப்பெற்றுள்ளார்.

நம்முடயமுன்னோர் அன்புடன் அமைத்துவைத்திருக்கிற அறநூல்களின்கருத்தை உள்ளபடியாராயின் ஏனையஜாதியாரது சாஸ்திரத்தின்கருத்திற்குத் தாழ்ந்ததன்று. ஆனால் நம்மவர் சிலவுண்மைகளை விளக்குவதற்கு ஏற்பட்டவேடங்களையே அவற்றை மறைப்பதற்கு ஏற்றசாதனமாக்கிக்கொண்டதுபற்றிப் பிறர் குறைகூறநேரிடுகின்றது. காலத்திற்குக்காலம் ஜனங்களுடைய நடையுடைபாவனைகள் மாறிவருகின்றன. காலத்திற்குத்தக்கவண்ணம் கருத்துப்பிறழாமல் வேடங்களை மாற்றவேண்டியது இன்றியமையாமையாம். துறவின் வேடம் பூண்டானொருவன், அவ்வேடத்திற்குரிய வுண்மையொழுக்கத்தைத் தழுவிநிற்க இயலாதபொழுது அவ்வேடத்தைமாற்றி விவாகம்புரிந்து நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தல் உத்தமமாகும்.

ஒருவன் குருஸ்தானத்திற்கு உரிமையாகவேண்டுமெனின் அவனுடைய ஒழுக்கத்தை முதலிற் கவனித்தல்வேண்டும். கல்வியறிவானது ஒழுக்கத்திற்கு உதவியேயன்றி ஒழுக்கத்தை உண்டாக்கமாட்டாது. சாதுசங்கப்பழக்கமே ஒழுக்கத்திற்கு முக்கியமானது. சாதுக்கள் என்பார் காஷாயவேடதாரிகளல்லர் ஒருவனுடைய மனவொழுக்கம் சீரடைவதற்கு இல்லறமே சிறந்ததுணையாகும். இந்திரிய

நிக்கிரகத்திற்கு மனவொழுக்கமே மூலமன்றி மனைவி மக்களினது இன்மை காரணமாகாது. நம்முடையகையினல் நாம் களவும் செய்யலாம், உழவும் செய்யலாம். செய்யத்தக்கது இதுவென்பது நம்முடைய அறிவின் ஆதீனத்திலிருக்கின்றது. "சென்றவிடத்தாற் செலவிடாதீதொரீஇ, நன்றின்பாலுய்ப்பது அறிவு" என்றமையால் உய்க்குந்திறன் நம்மிடம் வாய்ந்துள்ளது. ஆகவே, சாதுக்களாவார் யாவரெனினும் நல்லொழுக்கத்தைக் காக்கத்தக்க சாதனங்கள் அமையப்பெற்று உள்ளுற நல்லொழுக்கத்தைக் கடைப்பிடிக்கமுயலுவோரே ஆவர். இத்தகைமைவாய்ந்த நல்லோரது இணக்கத்தினல் ஒழுக்கம் உருப்படச் சிறந்தபெருமைக்குப் பாத்திரமானவரே உபதேசம்செய்யப் பாத்திரமாவர். அவரே நாம் வணங்கத்தக்க குருஸ்தானத்தின் உரிமையை உடையார். எத்தகைய உயர்வுற்ற பதவியுள்ளவர்களிடத்தும் ஏதேனும் ஒருகுறையிருத்தல் இயல்பு. ஆகையால் ஒவ்வொருவனும் பிரஜாபயம் ராஜபயம் ஈசுரபயமாகிய முப்பயங்களில் ஒன்றேனும் உடையனயிருப்பின் அதனைநீக்கிக்கொள்ள முயற்சியுடையவனுவான். அம் முயற்சியில்லாதவன் இருமைப் பயனையும் இழந்தோனுவன். பாலப்பருவத்தில் நற்பழக்கமின்றித் தூர்ப்பழக்கமிருந்து நீக்கக்கூடாத நிலைமையையடைந்த முதியோர் தங்கள் பின்சந்ததியாராவது நன்னிலைமை பெறுவதற்குச் சாதகமாயிருத்தல்வேண்டும். தங்களுடைய தீயபழக்கங்களைத் தங்களுடைய சந்ததியார்க்குப் புலப்படுத்தாவாறு நடத்தல்வேண்டும். ஆதலால் பொதுஜனசபைகளில் ஒப்புக்கொண்ட துன்மார்க்கமுடையாருக்கு இடங்கொடுத்தல் கூடாது. அதினும் நாம் பின்பற்றக் கடமைப்பட்டவராயுள்ள போதகாசிரியர் அர்ச்சகர் மடாதிபதிகளாகிய இவர்களிடத்தில் பஹிரங்கமான குறைகள்காணப்பட்டால் உடனே அவர்களை நீக்கித் தக்கவர்களை நியமித்தல்வேண்டும். பெரியமனிதர் என்ற பெயர்வைத்துக்கொண்டு பிறருடைய வணக்கத்தைவிரும்புவோர் சிலர், தங்களுடைய துன்மார்க்கங்களை முற்றத்துறந்த முனிவர்களிடத்திலும் இருந்திருப்பனவாகக் கதைகளைக்கட்டிப் பின்சந்ததியாருடையமதிப்பைப் பெற்றுக்கொள்ளுகிருர்கள். அவ்விதம் செய்தாற் பின்சந்ததியாரை முற்றுங்கெடுத்த பாதகர் ஆகிருர்கள். ஓர் ஆசானுயுள்ளான் தன்குற்றத்தை உணர்ந்து தன்னேடு அறுதியாகு

மாறு அந்த ஸ்தானத்தைவிட்டுநீங்கிப் பின்வரும் சீடர்களாவது புத்தி யடையும்படி செய்வானாயின் அவனை யோக்கியனாக மதிக்கவேண் டும். தன்குற்றத்தை யுள்ளபடியே உணர்ந்தோன் எவ்விதமும் நல் லொழுக்கத்தையுடையவனாகத் திருந்துவான் என்பது திண்ணம். ஒருமனிதன் சோம்பலைநீக்கி நன்முயற்சியைக் கைக்கொள்வனேல் அவனும் நல்லொழுக்கமுடையவனாக மாறுவான் என்பது உண்மை. சோம்பலை வளர்ப்பானும் வளர்ப்பதற்கு உதவிபுரிவானும் பாதகனே யாவன்.

அறச்சாலைதாபித்துப் 'பாத்திரம் அறிந்து பிச்சைகொடு' என்ற முதுமொழிக்கு மாறாக,வேலைசெய்யாத சோம்பேறிகளுக்கு அன்னங் கொடுப்போன் யாசகத்துரோகம், வெகுஜனத்துரோகம், ஈசுவரத் துரோகம் இவையனைத்தும் ஒருங்கேபுரிந்தவன் ஆவன். ஜீவகாருண் யத்தைச் சிரேஷ்டமாகக்கொண்டு சோம்பலைநீக்கிக் குடும்பசகிதம் உண்டு உடுத்துச் சுகிக்குமாறு அகதிகளுக்கு வேண்டும் உதவிகள் புரிவோன் எவனோ அவனே சிறந்தபுண்ணியவானாவன். அவனே ஈசு வரன் ஜீவராசிகளுக்குத் தனுகரணபுவனபோகங்களை அருளிய திரு வருள்நோக்கத்தை நிறைவேற்றினவன் ஆவன்.

தொகுத்துக்கூறின் அறம் என்பது மனிதனுக்கு இன்றியமை யாத ஒழுக்கம் என்பதும், அவ்வொழுக்கத்திற் சிறந்தது ஜீவகாருண் யம் என்பதும், ஜீவகாருண்யத்தினாற் பெரியோர்கள் வித்யாலயம் தேவாலயம் மடலாயங்கள் ஸ்தாபித்தனர் என்பதும், வித்யாலயங்களை அரசாங்கத்தார் தம் மேற்பார்வையில் நடத்தவும், ஏனையதர்மங்களை அவ்வம்மதத்தினரால் நடத்தவும் சட்டம் அமைத்துள்ளார் என்பதும், ஒவ்வொருமதத்திலும் குறித்த அறங்கள் ஒழுங்காய் நடைபெறுமை யாற் செவ்வனே நடைபெறுவதைக் காணவேண்டுமென்பதும், அங்ங னம் நடத்துவதற்குக் குறித்த மூன்றுவகையான அறங்களுக்கும் நாயகமாயுள்ளவர் அவசியம் நல்லொழுக்கத்தினராயிருத்தல்வேண்டும் என்பதும், நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்தற்கு இடையூறான ஆசார அனுஷ்டங்களை ஒழித்தற்கு நாம் உதவிபுரியவேண்டுமென் பதும், பின்பற்றும் மாணாக்கர் அடியார்கள் சீடர்கள் கெடுதலடையா வண்ணம் நீக்கமுடியாத துன்மார்க்கமுடைய குரவரைத் தூரவிலக்கல்

வேண்டுமென்பதும், அறச்சாலை தாபித்துச் சோம்பலை வளக்கப் படுத்தாநின்ற அன்னசத்திரங்கள் அறமுடையனவல்ல வென்பதும், வேலையைக்கொடுத்து அகதிகளை இரக்ஷிப்பது மேன்மையான அறம் என்பதும், இத்தகைய சீர்திருத்தங்கள் நீதியுணர்ச்சியும் நல் லொழுக்கமும் பற்றிய மனவூக்கத்தினால் எளிதிற் கைகூடுமென்பதும், பகுத்தறிவுள்ளவர் அனைவரும் இதில் முயற்சித்தல் கடமையென் பதும் இவ் வுபந்யாசத்தின் கருத்தாம்.

இச் சீர்திருத்தங்களுக்கு அநுகுணமாக, எனது புல்லறிவிற் பட்ட ஒழுங்குகளைக்கூறி இவ் வுபந்யாசத்தை முடிப்பேனாகின் றனன்.

(1) கலாசாலையில், தற்காலம் ஏற்பட்டுள்ள மானேஜிங் கமிட்டியுடன் மாணாக்கரது ஒழுக்கத்தைமட்டும் கவனிக்கத்தக்க கமிட்டி ஒன்று ஏற்படுத்தல்வேண்டும். எழுதத்தெரிந்த ஒவ்வொரு மாணாக்கனும் தன்னுடைய தினசரிதத்தைக் காட்டத்தக்க 'டைரி'ப் புத்தகம் வைத்திருத்தல்வேண்டும்.

(2) தேவாலயத்தில் அர்ச்சகரது ஒழுக்கத்தைக் கவனிக்குமாறு ஆகமநூலுணர்ச்சியுடையாரது சங்கம் ஒன்று அவசியமானது. அச் சங்கத்தார் ஆலயங்களின் ஆகம அநுஷ்டானங்களைக் காரண காரி யங்களுடன் விளங்கும்படி வினாவிடைப்புத்தகங்களில் வெளிப்படுத் தல்வேண்டும்.

(3) மடாதிபதிகள் ஆதீனச்சொத்துக்களை மடத்திற்குரிய சிடர்களிடம் ஒப்புக்கொடுத்துச் சாஸ்திரவளர்ச்சிக்குரிய சாதனங் களைமட்டும் தம் மேற்பார்வையில் வகித்தல்வேண்டும்.

(4) அறச்சாலைகளில் அகதிகளின் தேகவலிமைக்குத்தக்க பணிகளைக்கொடுத்து இரக்ஷிக்கவேண்டும். முழுதும் வேலைசெய்யத் திறமையற்றவர்களுக்கு இலவசமாக அன்னம் அளித்தல் வேண்டும். இவ்வாறு ஆராய்ந்து அறத்தை வளர்க்கும் விஷயத்தில் நம் சந்ததி களும், இந்து மதமும், இந்துதேசமும் எவ்வித இடையூற்றினுக்கும் உள்ளாகாவாறு ஈசுவரன் அருள்புரிவார் என்பது திண்ணம்.

இலக்குமணப்போற்றி,
தச்சநல்லூர்.

---

கிரணத்தளவோடு மொருதன்மைத்தாகக்கலக்கு மந்தாமத்தை அந்தியகாலத் தடைவதோடும் சிறிது தமதுளத் தீண்டிருந் தானந்த மெய்துவதும் பிறராற் பூசனையெய்துவதும் மெய்; மெய்யேயானாலும் அதன்க ணாராய்தற்கரியதாகியொழுகும் பொருட்டொடர்புடைய மறைந்தசொல்லின்பொருள் சென்றுமுற்றுதல் வெளிப்படைபோலப் புலப்பட்டுத் தமதுபுந்தியுட்டங்கியறியாதார் அயனரனென்னு மிருவராலெய்தும் பயனைவிட்டுச் சிமந்நாராயணனே பரத்துவமென்னும் வாய்மையுணர்ந்து தமதுவாழ்நாளு ளுடலுமுயிருந்தளிர்ப்பப் பேரானந்தமெய்துவ தறியார்; அறிபவர்யாரெனிற் கணப்பொழுது முயிர்க் கிலாபமின்மையா மவப்பொழுதுகழியாத பெரியநம்பிமுதலாம் ஆரியரைவரையும் ஆராய்ந்து முத்திக்கு நற்றுணையென்ன வுறவுகொண்ட பூலோகதேவனுந் திருப்பெரும்பூதூர்முனிவன் குருபரம்பரைநோக்கத்தோடு முதலேசொன்ன தமிழ்மொழிப்பொருளான்மிகுத்த நுட்பநோக்கத்தினையு மொன்றெனப்புணர்த் துட்கொண்ட ஒள்ளியஞானம் பெரியநிலத் தொப்பற்ற மனுகுலவடிவெடுத்த காட்சிப்பொருளென்றுகூறத்தகுவதாய திருமலையாழ்வார் திருவுள்ளக்கருணைக்கிலக்கென்னு மறையவர்க்கதிபதிபாம் அழகிய மணவாளமாமுனிவனென்னுஞ்சேட்டவா னிறைநிலைமை யிஃ துயிர் நிலைமை யிஃ திறையை யுயிர்சென்றெய்து மடைவாகியவழி யிஃ தெனவு மவற்றோடு மேனைய விரண்டுமாகிய யாவையும் யாவரும் விரும்ப முதற்பத்துமுதலாய்ப் பத்தாம்பத்தீறுகு மிடந்தோறு மிடந்தோறுஞ் சந்தயமறத் தொடுத்தெடுத் துபதேசித்த பேரழகுடைத்தா முரைநடையை யொழிவில்லாத சுத்தசாத்துவிககுணத்தோடும்பயின்று வரம்பறுத் துட்கொண்டமுத்தி யனுபவித்துத் தெவிட்டாத வீறில்பேரின்பம்பவித்துள்ளார்தாமே சந்தயமில்லை; அஃ தெப்படியொன்றெனி லொலிக்குந்திரையையுடைய திருப்பாற்கடல்பெற்ற சங்கநிதிமுதலிய செல்வத்தோடும் பொருந்தியதா மமிர்தினைப் பசும்பொன்னாலாயகுடம், தனதுவாய்க்கொண் டுள்ளடக்கியு மூறுகொள்வதனோடும் பரிமளிப்பதல்லா லதற்குயோக்கியமான மதுரத்தை யுருசித்தறியாதென்பதும், துறக்கத்தவரே யிரதிக்கும் பெருமையுடையோ ரென்பதுஉ மூலகத்து ளன்புற்றுத்தெளியாதவரில்லையாதலா லப்படியொன்றெனக்கொள்க. இதனுண் முதலே

குறித்தபொருளாவது திருவாய்மொழியும் பத்தரும். அவை யப்படியே முதல்வந்து அதன்பின்ன ரதனோ டொப்புமைக்கொள்ளும்படிக் குத் தெளிவைத்தரும்படிக்குக் குறித்த அமிர்தமாம் பொருட்டிறமு மதன் பின்ன ரிச்செய்யுளகத்துக் கூறியதூஉங் காண்க. எனவே, போந்தபொருள் திருவாய்மொழிப் பாடம்போற்றுவதோடும் அத னகத் தைந்துபொருளேயுங் குருபரம்பரையா யோராசான்வழியாய் வரும் வியாக்கியானங் கேட்பதே பேரின்பமெய்துதற் குறுதியென்ப தாயிற்று. திணை—பாடாண். துறை—ஓம்படை.

ஆதித்திருமாலடியார்நிரப்பிடும்பை
வா திக்கினும்வளர்ப்பார்வன்மையே—பாதிப்
பிறைபாகியுமதியம்பேரிருள்சித்தற்குக்
குறைபாகுறைபாகுணம். (312)

இதுவுமது. நிரப்பு—வறுமை. வண்மை—கொடை. திணை—இதுவுமது. துறை—கொடுப்போர்ப்பழிச்சல்.

ஈத்துவக்குமின்பமியைந்தார்களேற்பவர்க்குச்
சேய்த்திருந்துமீத்துவப்பர் திண்ணமே—வாய்த்தமுகில்
வானம்பதியாயுமானிலத்தார்க்கேயுதவுந்
தானந்தவறுதுதான். (313)

இதுவுமது. இதனுள், மானிலத்தார்—மாயோனுலமைக்கப் பட்ட பூமியின்கணுள்ளார். இதுவு திணையுந் துறையு மது. (சஅ)

௯-வது திட்டாந்த முற்றும்.

---

## ௧0-வது தற்குணவலங்காரம்.

———:o:———

134. ஒருபொருட்குணத்தைமற்றொருபொருள்சார்ந்துழிப்
பற்றுதறற்குணமெனப்பகர்ந்தனரே.

(எ—ன்) வைத்தமுறையானே தற்குணமென்னுமலங்கார முணர்—ற்று.

(இ - ள்) யாதாயினு மொரு முக்கியப்பொருளினதுகுணத் தைச்சார்ந்தவிடத் தக்குணத்தைப் பிறிதொருபொருள் பற்றுதல் தற்குணமென்னும் அலங்காரமா மென்றவாறு.

காமர்திருப்பாற்கடலுங்கருங்கடலா
நாமந்தனைப்பயிலுநாடோறும்—பூமடந்தை
சீர்மேனியைத்தழுவுந்தேவேசநாகணையான்
கார்மேனிவண்ணங்கவர்ந்து. (314)

கவர்ந்து—உட்கொண்டு.

சாந்தமலர்ப்பொதும்பர்ச்சார்ந்தவெளிற்றுத்தருவுஞ்
சாந்தமணநல்குஞ்சால்பிற்றே—யேந்தெழில்கூர்
வாசவனார்நான்முகனார்வந்திறைஞ்சிவாழ்வுபெறுங்
கேசவனார்சேடகிரி. (315)

இதுவுந் தற்குணம். சேடகிரி—திருமலை. ஒழிந்த அகலமுரை யிற்கொள்க. அஃதேல், குணவதிசயத்திற்குந் தற்குணத்திற்கும் வேற்றுமையாதோவெனின், அதிசயஞ் சிறுமையை மிகுத்துக்கூறும்; இது மிகுந்ததை மிகுந்ததாய்க்கூறல். இவ்விரண்டனுன் முன்னை யது கடவுள்வாழ்த்து. இது மலைவருணனை. (சகூ)

கo-வது தற்குண முற்றும்.

---

## கக-வது பிரத்தியனீகவலங்காரம்.

135. ஒருபொருட்கொருதிறத்துடைபொருண்மற்றதற்
கத்திறத்தினிலொப்புடைப்பொருளதன்மே
லமர்விளைப்பதுவேபிரத்தியனீகம்.

(எ - ன்) வைத்தமுறையானே பிரத்தியனீகமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) யாதாயினு மோருவமேயப்பொருட் கொருதிறத்தாற் றோற்ற வுவமைப்பொரு ளத்திறத்தா லதற்கொத்ததோ ருவமப் பொருண்மே லமர்விளைப்பதாகக்கூறுதல் பிரத்தியனீகமென்னும்

அலங்காரமா மென்றவாறு. அனீகம்-படை. இது தற்குறிப்பேற்றத் தைப் பின்சென்றதோர்பேதம்.

தேமலர்வாவிப்புதுவைச்செல்விமுகப்பொற்பினுக்குத்
தூமதியந்தோற்றதற்பின்றேலாத—காமருசி
ரந்தாமரைமேலமர்விளக்குங்கங்குலின்கண்
வந்தாடல்பெற்றமதி. (316)

இது பிரத்தியனீகம். தேமலர்வாவிப்புதுவைச்செல்வி - சூடிக் கொடுத்தசெல்வி ; ஆழ்வார்திருமகள். ஒழிந்த அகல முறையிற் கொள்க. துறை—பெண்பாற்கடவுள்வாழ்த்து. (௫௦)

கக-வது பிரத்தியனீக முற்றும்.

---

## க௨-வது சந்தயவலங்காரம்.

——:o:——

136. உற்றதோர்பொருளினையையுற்றுணர்தல்
கற்றவர்சந்தயமெனக்கழறினரே.

(எ - ன்) வைத்தமுறையானே சந்தயமென்னும் அலங்கார முணர்—ற்று.

(இ - ள்) புலனுகர்பொறிகளானுதல் கருத்தினானுத லுற்ற தோர்பொருளினை யையமுறுதலுந் தெளிதலுஞ் சந்தயமென்னும் அலங்காரமாமென்று கற்றோர்கூறின ரென்றவாறு. (௫க)

137. அதுவே,
சுத்தசந்தயநிச்சயகெற்ப
நிச்சயாந்தமெனநிகழ்மூன்றும்.

(எ - ன்) இதுவு மதன்கூறுபா டுணர்—ற்று.

(இ - ள்) அச்சந்தயமென்னு மலங்காரம் சுத்தசந்தயமென் றும், நிச்சயகெற்பமென்றும், நிச்சயாந்தமென்றும் மூன்றுகூறாய் நடைபெறுமென்றவாறு.

திருமகளோபார்மகளோதென்னரங்கன்வெற்பில்
வருமகளோபாரோவிம்மாது. (317)

இது சுத்தசந்தயம். பகுதி - இயற்கை. துறை - ஐயுறல். பா - குறள்வெண்பா.

மெய்த்தமிழ்மாறன் றுடரிவெற்பிலெதிர்நின்றதுபூங்
கொத்தமைந்தபொன்னங்கொடியோகொ—வித்தரணி
மீதாயுடுத்தொடுத்துமேயதகைமின்னுருவோ
யாதாயதொன்றேவிது. (318)

இதுவுமது. இதனுள், பூங்கொத்தென்றது கோடு, கொடி, நீர் என்னும் பல்வகைப்பூக்களை. அமைந்தது - மிகுந்தது. இத்தரணி ...........மின்னுருவோ - மேகத்தைவிட்டுப் புவியிடத்தாய் மேக படலத்தின்மேலாய வுடுக்களைத்திணைத் தனக்குறுப்பாந் தொடர்படுத் திப் பொழிலிடத்தடைந்ததொரு மின்னுருவமோ. யாதாயதொன்றே விது என்பது எவ்வுருவ மவ்வுருவாயதொன்றெனத் தெரிதற்கரி தென்றவாறு. பகுதி - இயற்கை. துறை - ஐயுறுதல்.

குன்றுபோற்புடைத்தெழுந்தனத்தாளைச்சிறைவைத்த
கொடுமையானைத்
துன்றுபோர்க்களத்தெதிர்ந்துதொடுகணையான்முரணழியத்
துயரம்பூட்டி
யின்றுபோய்நாளைவாவெனவிமையோர்கணம்பரவ
வெம்பிரானே
யன்றுபோர்க்களத்துரைத்ததறநிலையோமறநிலையோ
வறிகிலேனே. (319)

இதுவுமது. திணை - பொதுவியல். துறை - வில்வென்றி. திணை - வாகையெனினுமாம்.

முண்டகத்தானென்னின்முகமொன்றேநான்குமுகங்
கண்டனமற்றில்லையாற்கண்ணனெனிற்—றண்டுளபத்
தாமத்தானன்றுமகிழ்த்தாமத்தானைத்துதித்தெந்
நாமத்தானென்றுரைப்பேநாம். (320)

இது நிச்சயகெற்பம். திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - நயப்புரைத்தல்.

பாடற்சுரும்பெனிலோபண்மிழற்றுங்காவியெனி
லோடைக்குளன்றியுதியாதா—லேடவிழ்தார்
வள்ளலருண்மாறன்மால்வரைமான்கண்ணேயென்
னுள்ளந்திறைகொண்டது. (321)

இது நிச்சயார்ந்தம். பகுதி - இயற்கை. துறை - தெரிந்து தெளிதல். (ருஉ)

கஉ-வது சந்தய முற்றும்.

---

## கங-வது அற்புதவலங்காரம்.

—·—(o)·—

138. அற்புதவாய்மையினறைவதற்புதமே.

(எ - ன்) வைத்தமுறையானே அற்புதமென்னுமலங்கார முணர் —ற்று.

(இ - ள்) ஆச்சரியந்தோன்றுமுண்மையினுன்மொழிவ தற்புத மென்னுமலங்காரமா மென்றவாறு.

உண்ணிர்மையற்றவர்க்கண்டாலவர்மன்னுயிர்க்கிரங்கிக்
கண்ணிர்பனிற்றும்புயன்மனுராமன்கைக்கொள்வதொன்றே
வெண்ணிர்மையுற்றநிருதரைச்சாலவெறுத்தவர்மேற்
புண்ணிர்பனிற்றச்சரமாரியன்றுபொழிந்ததுவே. (322)

இது அற்புதம். திணை - பொதுவியல். துறை - வில்வென்றி.

சங்கத்தமிழ்ச்சொற்கவிப்புலவீர்சலராசிமண்மே
லுங்கட்குமற்புதமாவதொன்றேசிங்கவோங்கலின்வாய்த்
துங்கப்படைக்கையிரணியனுகஞ்சுகிர்ந்தநர
சிங்கத்தின்மார்பின்மலர்மகளாம்பிணேசேர்ந்ததுவே. (323)

இஃ. திருவகவாய்பாட்டால்வந்த அற்புதம். சிங்கவோங்கல் - சிங்கவேள்குன்றமென்னூர் திருப்பதி. மலர்மகளாம்பிணை - பெரிய பிராட்டி. சிங்கம் - அழகியசிங்கர். சிங்கத்தின்மார்பிற் பிணைசேர்ந்த தென்பதனு லற்புதமாயிற்று. துறை - கடவுள்வாழ்த்து. (ருங)

கங-வது அற்புத முற்றும்.

---

## கச-வது நிதரிசனவலங்காரம்.

139. இவ்வகைக்குலகத்திவை நிகழ்திறமெனு
மவ்வகைக்கவைபோன்றொருபொருட்டிறங்களைக்
கோட்டமில்குணந்தீங்கெனுமிருகுறிப்பிற்
காட்டுமென்றேகழறுதனிதரிசனம்.

(எ - ன்) வைத்தமுறையானே நிதரிசனமென்னுமலங்கார முணர்—ற்று.

(இ - ள்) உலகத் திவ்வகைப்பொருட் கிவை நிகழுங்கூறுபா டென்னு மக் கூறுபாட்டிற் கவைபோன்ற பிறபொருட்கூறுபாட்டை மாறுபாடின்றி நன்மையினுந் தீமையினு மிருதிறத்தாற் குறித்துக் காணக் காட்டுகின்றதெனக் கூறுவது நிதரிசனமென்னு மலங்காரமா மென்றவாறு.

வாழ்ந்தார்வரவரவேவறிதாவர்வறுமையொடுந்
தாழ்ந்தார்தலைச்செய்வரென்பதுகாட்டுந்தரியலரைப்
போழ்ந்தார்திகிரிப்பிரான்புருடோத்தமப்பொன்னகரைச்
சூழ்ந்தாய்மதிகுறைவாய்நிறைவாம்வகைதூநகையே. (324)

இது நிதரிசனம். இது பரத்தையிற்பிரிந்துவந்ததலைமகன் வாயில்வேண்ட வூடியிருந்து வாயின்மறுத்ததலைமகளோடும் வாயி னேர்விக்குந் தோழிகூறியது. அன்றித் திணை - பாடாண். துறை - வள்ளிவாழ்த்தெனினுமாம். இதனுள் வாழ்ந்தார்வரவரவே வறிதாவர் வறுமையொடுந்தாழ்ந்தார் தலைச்செய்வ ரென்பதுகாட்டு மென்பது உலகத்து நல்வினையடிக்கொள வாழ்வெய்தினர் நல்வினைதேய்ந்து தீவினையடிக்கொள வறுமையெய்துவர்; தீவினையடிக்கொளத் தாழ் வெய்தினர் தீவினைதேய்ந்து நல்வினையடிக்கொளச் செல்வமெய்தித் தலைப்படுவ ரென்பதைக் காண்பிக்கு மென்பதாம். தரியலரைப்போழ்ந் தார்திகிரிப்பிரானென்பது சத்துருக்களுடலைப்பிளந் துயிரைப்பரு குஞ் சக்கரத்தையுடையாரென்பதாம். ஆய்மதி - இயங்குமதி. குறை வாய் - இளம்பிறையாய். நிறைவாம் - பூரணையாம். அஃதேல், திட் டாந்தத்தோ டிதனிடைவேற்றுமையாதோவெனின், திட்டாந்தம் புல வன் றன்னுற்குறித்த வொரு பொருட்கூறுபாட்டிற்குப் பிறிதொரு

பொருளின் கூறுபாட்டை யதற் குவமைகுறிக்கொளும்படிக் குவமை வாய்பாடு தோன்றாதுதொகத் தன்வினையாக அப்புலவன் கூறுதல்; இஃதன்னதன்று. ஒருபொருளின் பண்பு தொழில் பயன் முதலிய கூறுபாட்டைப் பிறிதொருபொருள் காட்டுவதாகப்படுத்திப் பிறவினை யாற் கூறுதல்; இவை தம்முள் வேற்றுமையாமென்றுணர்க. (௫௪)

கச-வது நிதரிசன முற்றும்.

---

## கரு-வது தற்குறிப்பேற்றவலங்காரம்.

140. உலகினுளொருபொருட்குற்றதன்மைத்திறம்
விலக்குபுபிறிதின்விளைந்ததென்றுட்கொண்
டேற்றுதலாகுந்தற்குறிப்பேற்றம்.

(எ - ன்) தற்குறிப்பேற்றமென்னும் அலங்காரமுணர்—ற்று.

(இ - ள்) உலகின்கணுண்டான இருதிணைப்பொருள்களுள் யாதாயினுமொருபொருட் கெய்திய தன்மைக்கூறுபாட்டை விலக்கிப் பிறிதொருகாரணத்தால் விளைந்ததெனப் புலவன் விதித் துட்கொண் டதனை யதன்கண்ணதாகவேற்றுவது தற்குறிப்பேற்றமென்னு மலங் காரமாமென்றவாறு. (௫௫)

141. அதுவே,
சராசரமெனுமிரண்டினுஞ்சார்தருமே.

(எ - ன்) இதுவும் அவ்வலங்காரத்தினது கூறுபாடுணர்—ற்று.

(இ - ள்) அத் தற்குறிப்பேற்றமென்னு மலங்காரம் இயங்கு திணையும் நிலைத்திணையுமாகிய விரண்டினுஞ் சார்ந்துபிறக்கு மென்ற வாறு.

செங்கேழ்கிளர்வேணியனு னுருவிற்
பைங்கேழுமையாளொருபாகமெனச்
சங்கேதமடைந்திவன்சமரிற்
இங்கேறுவனென்றெதிரெண்ணியதே. (325)

இது உயர்திணையிடத்துத் தற்குறிப்பேற்றம். செங்கேழ்—செப்பாகியநிறம். கிளர்வேணி—ஓங்கியசடை. பைங்கேழுமை—

பச்சென்றநிறத்தையுடைய வுமாதேவி. எதிரெண்ணியது-வருங் காலங்குறிக்கொண்டது. திணை—வாகை. துறை—பொருநன்வென்றி.

பிலம்புகுந்நீரேழ்புவனமுந்தரித்தபெருந்தகையெம்பிரான்றனைவெண்
சலஞ்சலந்திகிரியெனப்புரப்பவர்கள்சந்திரசூரியரெனச்சைலம்
வலம்பயின்றனரந்தாத்தவர்வருந்தாவகைதரித்திலமெனத்தரிப்பா
னிலம்புகுந்துயர்பூஞ்சினையொடுந்தருவாய்நிலைமரீஇயினதெனலாமே.

இது நிலைத்திணைத் தற்குறிப்பேற்றம். இது பாடாண்புறத்திணை யுட்சார்ந்த தாவரவாழ்த்து. (இவை குருகாமான்மியம்.)

தற்பயந்துமுற்றத்தனைவளர்த்ததண்டடநீ
ரெற்பயந்தவெப்புற்றிடையாதே—பொற்கமல
மின்பாசடைக்கவிகைமீநிழற்றுநீரகமே
யென்பாலுறைமாற்கிடம். (327)

இதுவும் நிலைத்திணைத்தற்குறிப்பேற்றம். நிழற்றும்-நிழலிடும். திணை—பாடாண். துறை—நகரவாழ்த்து. (௫௬)

142. உவமச்சொற்புணர்ந்தொழுகலுமுளதே.

(எ - ன்) இன்னு மதற்கோர் புறனடையுணர்—ற்று.

(இ - ள்) அத் தற்குறிப்பேற்றம் போல மான வென்னு முவம வுருபுபுணர்ந்துநடப்பனவு முளதாமென்றவாறு.

மாயன்குருகூர்வளர்மறையோர்விண்புரப்பான்
றூயவழல்வளர்ப்பத்தோன்றுபுகை—நேய
வகைத்தோட்டுவார்குழலாய்வாசவனைவிண்போய்ப்
புகைத்தோட்டுகின்றதுபோன்ம்போன்ம். (328)

என்பது ஈரொற்றுடனிலையாய ஒப்பில்போலி. இது உவமவுருபு புணர்ந்த தற்குறிப்பேற்றம். துறை—நகரவாழ்த்து. (௫௭)

கரு-வது தற்குறிப்பேற்ற முற்றும்

---

## கசு-வது அதிசயவலங்காரம்.

143. விதந்தொருபொருளினைவிழுமிதினுரைப்புழி
யுயர்ந்தோர்மதிக்குறவுரைப்பததிசயம்.

(எ - ன்) வைத்தமுறையானே அதிசயமென்னு மலங்கார முணர்—ற்று.

(இ - ள்) ஒருபொருளினை யுயர்த்தி நன்றாகவுரைக்குங்காற் கற்றுயர்ந்தோரறிவிற்குப்பொருந்தவுரைப்ப ததிசயமென்னு மலங் காரமா மென்றவாறு. (ருஅ)

144. அதுவே,
வைபம்புகழ்பொருள்பண்புவினைதிரி
பையந்தெளிவெனுமாறினும்வருமே.

(எ - ன்) இதுவும் அவ்வலங்காரத்தை விரித்துணர்—ற்று.

(இ - ள்) அதிசயவலங்காரமென்னுமது பெரியோர்புகழும் பொருளும் பண்பும் வினையும் திரிபும் ஐயமும் தெளிவு மென்னும் ஆறுகூறுபாட்டினும் வருமென்றவாறு.

வென்றித்தனுராமன்வேலைவாய்ச்சிறெழவே
கன்றிப்பொழிந்தகனல்வாளி—யன்று
வடவைநடுநடுங்கமாநீர்சுவறச்
சுடவைகியதாஞ்சோலின். (329)

இது பொருளதிசயம். வடவைநடுநடுங்க-வடவையும் வெருவி யோடுவான். மாநீர்-சமுத்திரம். சுடவைகியதன்று-அன்றுசுட்டு அதன்கண் வைகாநின்றது. சோலின்—அத்தழலின் பெருமையைக் கதைகூறியபடிகேட்டதனைச் சொல்லுமிடத்தென்றவாறு. ஒழிந்த அகலம் உரையிற்கொள்க. திணை—வஞ்சி. துறை—உழபுலவஞ்சி.

அம்பொன்மதிட்சோதியம்புலியைப்புத்தேளிர்
தம்பொன்னகராக்குந்தன்மைசால்—செம்பொன்செய்
கோயிற்றிருமால்குணங்கற்றெழுகாதார்
வாயிற்கடையாகரர். (330)

இது குணவதிசயம். இதன்பொருளுரையிற்கொள்க. துறை - நகரவாழ்த்து.

குழித்தததலத்தொடுநிலத்தையடிவைத்துயர்
குடிற்படர்முகிற்றிரளேயே
கிழித்ததுபுழைக்கையினடுக்கலையடுக்கொடு
கிளைத்ததுகவுட்கள்வழியே
சுழித்தெழமதத்தினையுயிர்த்தொளிர்கடைக்கன
றுனுக்குறநெருப்பொழுகவே
விழித்ததுதெழித்ததுருமுக்குலம்வெருக்கொள
வெயர்த்ததுமழைப்பெயலெனு. (331)

இது தொழிலதிசயம். திணை - வாகை. துறை - யானைமறம்.

பூந்தேறல்வழிந்திழிந்துபொதும்பரினுண்புளினமுறப்
புரிவெண்சங்கந்
தீந்தேறல்வழிதவழ்ந்துதுழனியுடன்கழனிபுகத்
திணிதோண்மைந்தர்
தாந்தேறலுகக்களைகட்டெறிதவளமரைமுகையைச்
சார்ந்துசார்ந்து
மேய்ந்தேறவரிவளையைக்கொழுநனையென்றளிபுலம்பி
வீழுமோர்பால். (332)

இது திரிபதிசயம். துழனி—ஆரவாரம். திணிதோள்—திண்ணியதோள். தவளமரைமுகை—வெண்டாமரைமுகை. துறை—நாடுவாழ்த்தாம். (இவையிரண்டுங் குருகாமான்மியம்.)

இருநிலமுதலாமேழ்பெரும்புவனமும்
பெருவிறன்மாவலிபெய்புனலேற்றபின்
னீரடியெனத்தாண்டிணையடியொடுநின்
கூர்திருவுருவமுஞ்சொரூபமுங்குணனு
மோரடிமுதற்கனுற்றுளத்தடங்கியதாற்
பார்புகழ்குருகைப்பரமநின்பதமோ
காரிதந்தருள்குருகாபுரிப்பரமன்
படைத்தவண்டமிழ்மறைப்பதமோவுணர்வோ
தடத்தயாதெனவெவர்தமிதெளிபவரே. (333)

இஃ தையவதிசயம். இதனுள் உருவமுஞ் சொரூபமுங் குணனு மென்பது திருமேனியுந் திவ்வியான்மாவுஞ் சுத்தசாத்துவிககுண னும். ஓரடிமுதற்கண் என்பது திருவாய்மொழி முதற்பத்தின் முதற் பாட்டில் "உயர்வறவுயர்நலனுடையவனெவனவன்" என்னு முதற் பதம். திணை—பாடாண். துறை—பழிச்சினர்ப்பரவல். பாடாண் சார்ந்தபனுவல்வாழ்த்துமாம்.

பொருள்கோடித்தெழுபடிவத்திரணியற்குமழவிடையோன்
பொருட்டிற்பொன்று
வொருகோடியிருகோடியரைக்கோடிவாழ்நாள்பெற்
றுலந்துளாற்கு
மருள்கோடித்தெழுந்தசிசுபாலனுக்குந்தம்வீடளிப்பான்
மாயாவுள்ளத்
தருள்கோடியென்றுலிங்குனைத்தொழுவார்பெறுங்கதிகட்
கையம்யாதே. (334)

இது தெளிவதிசயம். துறை—கடவுள்வாழ்த்து. (ருகூ)

145. இடஞ்சினைகாலமென்றிவற்றொடுஞ்சிவணும்.

(எ - ன்) இதுவு மதனைப் பின்னுமோர்வகையான் விரித்துணர் —ற்று.

(இ - ள்) அவ் வதிசயம் இடமுஞ் சினையுங் காலமுமென்னு மூன்றினோடும் பொருந்தியும் வருமென்றவாறு. வருமென்னும் வினைச்சொ லெச்சமாகிவிரிந்தது. அதிசயமென்ப ததிகாரத்தாற் கூட்டியுரைக்கப்பட்டது.

சிகரபந்திமேற்குடமதியகடுரிஞ்சியவாய்ப்
பகரும்வானமதுரகனுச்சியிற்பதிபடித்தா
யகலாவலத்திவொருங்குறி னுமுய்த்தடக்கும்
புகலிடத்ததாலதனைபாளவிடும்பொற்பார். (335)

இது இடவதிசயம். துறை - சினகரவாழ்த்து.

கறுத்தவனமுத்துமிழ்வன்கரிமருப்பகிலபாரம்
பொறுத்ததிக்கயமோரெட்டும்பொறுக்குமேலவற்றினுற்ற

லொறுத்ததென்றிமையோருட்கயமனுநின்றுட்குமெல்லே
நிறுத்ததுபுழைக்கைபற்றிநிறைமதியகடுபோழ்வான். (336)

இது சினையதிசயம். திணை - வாகை. துறை - யானைமறம்.

மாலையாயாமமாய்வைகறையாய்வைகுறுநன்
காலையாய்க்கங்குல்கழிந்துகமாம்—வேலே
யெழுபார்புகழ்மாறனேந்துபுகழ்மார்பந்
தழுவாத்தமியேன்றனக்கு. (337)

இது காலவதிசயம். திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - கங்குற்கிரங்கல். (சுo)

கசு-வது அதிசய முற்றும்.

---

## கஎ-வது சிலேடையலங்காரம்.

———(:o:)———

146. உயர்வுறுமொருமொழிதொடர்மொழிசெய்யுளி
னியல்பினுந்திரிபினுமியன்றுபல்பொருளைத்
தருபெயர்வினையிற்சார்வதுசிலேடை.

(எ - ன்) வைத்தமுறையானே சிலேடையென்னுமலங்கார முணர்—ற்று.

(இ - ள்) ஒருமொழியாதல் தொடர்மொழியாதல் செய்யுளிடத்துச் செம்மொழியினும் பிரிமொழியினு மொருகலாறுடைத்தாய்ப் பலபொருளைத் தருவனவாய்ப் பெயரினும் வினையினுஞ் சார்வது சிலேடையலங்காரமாமென்றவாறு. உயர்வுறுமென்றதனல் அத்தச்சிலேடையென்பதூஉ முன்னர்க்கூறப்படும். (சுக)

147. அவற்றுள்,
இயல்புசெம்மொழிதிரிபுபிரிமொழியே.

(எ - ன்) கூறியசூத்திரத்து ளியல்பினுந் திரிபினுமென்ருரவை பொருளேக்கத்தா ளிப்பெயரினவாமென்ப துணர்—ற்று.

(இ-ள்) இயல்பு திரிபு என்ற விரண்டினுள் இயல்பு செம்மொழி யென்றும், திரிபு பிரிமொழியென்றுங் கூறப்படுமென்ற வாறு

பொன்னாழிமேவும்புவனமகத்தடக்கு
மன்னாகத்துச்சிவளர்ந்தாடு—நன்னீர்க்
களந்தழைமெய்காட்டுங்கலைமதியுட்டோயும்
வளந்தழையும்விண்ணகர்வாழ்மால். (338)

இது செம்மொழிச்சிலேடை. திருமாலுக்கும் மேகத்திற்குஞ் சிலேடை. மேகத்தின்மேற்சொல்லுங்காற் பொலிவினையுடைய கடலுட்செறியும் புனலையுண்டு வயிற்றுளடக்கும், நிலைபெற்ற மலையினது கொடுமுடியைப்பொதிந்து பரக்கும், உவரறுத்த நல்லதண்ணீர்க்கிடமாகப் பெருத்தசொரூபத்தைப் புலப்படுத்தும், கிரணத்தையுடைய சந்திரமண்டலத்தைத் தனது மண்டலத்திற்குமேலாகச்சேரும், உலகிற்குவேண்டு மெல்லாவளங்களையுந் தழைக்கும், விசும்பினிடத்து மேகமெனவும், திருமான்மேற்சொல்லுங்கால், திருமகளையுந் திருச்சக்கரத்தினையும் பொருந்தும், விராட்புருடனாகி யண்டத்தை யுள்ளடக்கும், பகையெனப்பெருகின பாம்பினுச்சியிலே பதிந்தாடும், நல்லவியல்பினையுடைய களங்கனிபோலுந் தழையாநின்ற மேனியைத் தோற்றும், சுருதிமுதலிய கலைகளினறிவிற்கு மேலாயிருக்கும், சகல செல்வமும் வளராநின்ற திருவிண்ணகரத்து வாழ்வுபெறுந் திருமாலெனவுங் கொள்க. துறை—கடவுள்வாழ்த்து.

பாமாறன்வெற்பிற்படர்மின்பயோதரங்க
டாமாகவட்டந்தனைமறைக்கும்—காமன்
வினைவளர்ப்பதன்றிமிகுபோகமென்ப
தனைவளர்த்தவம்பகற்றித்தான். (339)

இது மேகத்திற்குந் தனத்திற்கும் பிரிமொழிச்சிலேடை. மேகத்தின்மேற்சொல்லுங்கால் வெற்பிற்றவழாநின்ற மின்னோடுங்கூடிய மேகங்கடா மாகாயப்பரப்புத்தன்னை மறைத்தன, காவினிடத்துப்பொருந்துங் கிரியையுண்டாக்கின, அவையன்றியுந் தமதிடத்துண்டான தண்ணீரைப்பெய் தெங்கும்பரப்பிச் சந்தனம் அகில் சாலி முதலிய போகங்களையும் வளர்த்தன வெனவும், முலைமேற்சொல்லுங்காற் பா

மாறன் முடரிவரையிடத் தியான் மானிடமெனக்குறித்த மின்போலும் இடையினையுடையாள் முலைகளிரண்டுந் தம்மைப்பெற்ற மார்பின கலத்தளவைத் தோன்றாதுமறைத்தன, காமனாலெழுப்பப்படு மோக மாகிய வினையை யென்னிடத்து வளர்ப்பதன்றி மிக்க போகசுகத்தை யும் வம்பையகற்றிநிறைத்தன வெனவுங்கொள்க. இதனுள், பிரி மொழியாவன:—மாகவட்டம் ஆகவட்டம், காமன் காவினிடத்துமன், அம்பகற்றி வம்பகற்றி என்பனவாம். வம்பு—கச்சு. பயோதரம்- மேகமும் முலையும். பகுதி — இடந்தலை. துறை—நலம்புனைந் துரைத்தல். (சுஉ)

148. இவைபினிவிரிப்பனவாமெவற்றினும்வரும்.

(இ - ள்) செம்மொழி பிரிமொழியாகிய விவ்விரண்டு மினி முன்னர் விரிப்பனவாஞ் சிலேடையனைத்தினும் பொதுவாய் விரவி வருமென்றவாறு.

மேற் சிலேடைக்குரைத்த முதற்சூத்திரத்தினு ளியல்பினுந் திரிபினும் பல்பொருளைத்தரு பெயர்வினையிற்சார்வது சிலேடை யென்னு தியன்று பல்பொருளைத்தருவ தென்றதனாற் சிலேடை நாலு வகைப்படும்; அவையாவன:—அயல்பட விரண்டுபொருளை யொன் றுவமையாகவுமொன் றுவமேயமாகவுங் குறித் தவற்றைப் பாடுமிடத் துச் செம்மொழியினும் பிரிமொழியினு மிரட்டுறமொழியுமிடத் துவமைப்பாற்படுத்திக் கூறுதலும், இரண்டுபொருளைக் கவிநாயகனுக் குவமையாய்க் குறித் தவற்றைப் பாடுமிடத் தொருமொழியினாலாதல் தொடர்மொழியினாலாதல் புலவனாற் றெடுக்கப்படுஞ்சொற் கவிநாய கன் கிரியையோடு மூன்றுபொருள் பயப்பதாகப்புணர்த் தவனு மவைபோலிருந்தானெனக் கூறுதலும், இரண்டுபொருளை யொரு மொழியினாலாதல் தொடர்மொழியினாலாத விரட்டுறமொழிந்து கவி நாயகன்மேற் சிலேடையின்றிக் கூறுதலும், ஒருசொல் லியல்பு பெயரானு மாகுபெயரானு நானுபொருள் பயப்பதாக உருவகவாய் பாட்டாற்கூறும் உடனிலைச்சிலேடையுமென. அவற்றுள், முன் னையவிரண்டுஞ் சிலேடையுவமைப்பால் வந்தன. ஒழிந்தவிரண்டும் வருமாறு:—

தேசுபெறுஞ்செவ்வித்திருமகிழ்மாறன்சரணங்
காசினிமேலென்ஞான்றுங்காத்தருள்க—மாசிலா
வாய்ந்தபுகழ்ப்பூதூர்மகிபதியைநான்மறைநூ
லாய்ந்தவெதிராசனை. (340)

இது அயல்பட விரண்டுபொருளைத் தொடர்மொழியா விரட்டுற மொழிந்து கவிநாயகன்மேற் சிலேடையின்றிவந்தது. என்னை? திருமகிழ்மாறன்சரணமென்பது திருமகள் விரும்பப்பட்ட மாயோன் திருவடியென்றும், அழகிய வகுளமாறன்திருவடிகளெனவும் ஒரு தொடர்மொழிவந்து அவை யெதிராசனைக் காக்கவெனக் கவிநாயகன் மேற் சிலேடையின்றிவந்ததனுலென்றறிக. திணை-பாடாண். துறை-புறநிலைவாழ்த்து.

தேங்கமலமாசிலாச்செங்காந்தள்பைங்குமிழ்பொற்
கோங்கரும்புகாவியுடன்கொண்டதோர்—பூங்கொடியை
வண்டுகளிக்கின்றமகிழ்மாறனூர்மால்வரைமேற்
கண்டுகளிக்கின்றனவென்கண். (341)

இதனுள், கமலமுதலிய உவமப்பொருளைந்தனுள் கோங்கரும் பென்றதொன்று மியல்புபெயராகவு மொழிந்தநான்கு மாகுபெயராக வும் வந்து அவையைந்தும் நாலுபொருள் பயப்பதாகவும் பாடினமை யா லுருவகவாய்பாட்டால்வந்த உடனிலைச்சிலேடையென்ப திதன் பெயர். என்னை? தாமரையென்னு முதலைக்கூறச் சினையமிகிளவியாகிய வாகுபெயர் தாமரைப்பூவையும், முகமாகியதாமரையென மாட்டே தில்லாத வுருவகவாய்பாட்டான் முகத்தையும், அத்தாமரைப்பூவைக் கருப்பொருளாகவுடைய மருதநிலத்தையும், அந்நிலத்து நிகழும் ஒழுக்கமாகிய வூடலையுங் காட்டிநிற்றலாலென்றறிக. ஒழிந்த காந் தள் முதலிய நான்குமூவாறு மிம்முறையே நாலுபொருள் கொள்க. எனவே, இப்பெண்ணாகிய பூங்கொடி யூடிக் கூடியிருந்து பிரிந் திரங் குதற்குரித்தாமென வுட்கொண்டு களிக்கின்றன வென்கண்ணென்று ணர்க. ஒழிந்த அகல முரையிற்கொள்க. பகுதி—இயற்கை. துறை—காட்சி. (கக)

உ
கடவுள் துணை.
# செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ஞு ஆவணிமீ [பகுதி-கo.
Vol. XI. August—September. 1913. No. 10.

## பரிசோதனத்தொடர்.

(திருக்குறள்—கூ௨oசு.)

" துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று" என்பது குறள்.

இதற்கு, முன்னுரை:—"தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளேசொல்லியது." எனவும்,

தொகுத்துரை:—"முதிர்ந்தகலாமாகிய துனியும், இளையகலாமாகிய புலவியும் இல்லையாயின், காமம் செவ்விமுதிர்ந்தபழமும் இளங்காயும் போலும்." எனவும்,

விசேடவுரை:—"மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவு மினிமைசெய்தலிற் றுனியில்லையாயிற் கனியற்றென்றும், கட்டிளமைத்தாய காய் நுகருஞ்செவ்வித்தன்றாகலிற் புலவியில்லையாயிற் கருக்காயற்றென்றுங் கூறினன்." எனவும்,

முடிவுரை:—"இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்துகூறியவாறு." எனவும் பரிமேலழகருரை யேட்டுப்பிரதிகளிலும், அச்சுப்பிரதிகளிலும் எழுதப்பட்டிருக்கின்றன.

இக்குறளினுள்ள உபமானோபமேயங்களையும், அவைபற்றி விசேடவுரையால் விளக்கப்பட்ட பொருளையும் உற்றுநோக்குங்கால் ஒரு சிறிது பொருந்தாமையுளதாய்க் காணப்படுகிறது.

*

ஏனெனில்? இக்குறளிலுள்ள உவமையணியில் உவமேயப்பொருள் காமம்; அது துனியின்மை, புலவியின்மையென்னும் அடைகளால் விசேடிக்கப்பட்டுத் துனியில்லாத காமம், புலவியில்லாதகாமம் என இருவேறுகூறுபாடெய்திநின்றது. அவ்விருகூறுபாட்டிற்கும் முறையே கனியும், கருக்காயும் உவமமாகச் சொல்லப்பட்டமையால், 1. துனியில்லாத காமம் கனியற்று; 2. புலவியில்லாத காமம் கருக்காயற்று. என இரண்டு வாக்கியமாகவைத்துப் பொருளெழுதப்பட்டு, விசேடவுரையில் "மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவு மினிமைசெய்தலிற் றுனியில்லையாயிற் கனியற்றென்றுகூறினான்." என விளக்கப்பட்டிருக்கிறது.

இதனான் முதிர்ந்தகாலமாகிய துனி காமநுகருந்தலைமகற் கினிமைபயவாதென்றும், அஃதில்லாதகாமமே கனிபோ லினிமையுடையதென்றும் பொருள்கொள்ளுமா றெழுதியிருத்தலாற் காமத்துள் துனியென்னும் புலவி விரும்பத்தகாததெனக் காணப்படுகிறது.

"புலவியில்லையாயிற் கருக்காயற்று" என்னும் பின்வாக்கியப் பொருளை "கட்டிளமைத்தாயகாய் நுகருஞ்செவ்விதன்றாகலின், புலவியில்லையாயிற் கருக்காயற்றென்று கூறினான்." என விளக்கியிருத்தலால் இளையகாலமாகியபுலவியில்லாத காமம் நுகரும் செவ்விதல்லாத கருக்காய்போ லினிமைபயவாமையாற் காமமினிமைபயத்தற்குப் புலவிவேண்டுமென்று புலவியொன்றே விரும்பப்பட்டதெனக் கருதியதாகக் காணப்படுகிறது.

இவ்வாறு முதிர்ந்தகாலமாகிய துனி வெறுப்பிற்கும், இளையகாலமாகிய புலவி விருப்பிற்கு மிலக்காயிருக்குமாயின் "இவ்விரண்டும்வேண்டுமென்று வியந்துகூறியவாறு" என் றெழுதிமுடித்துள்ள முடிவுரைக்கு இளையகாலமாகிய புலவியொன்றே பொருத்தமுடையதாக, அதனுடனெண்ணிய துனியொன்றுமட்டும் பொருத்தமில்லதாகக் கொள்ளக் கிடக்கின்றது.

அதுவும் பொருந்துமாறு, இவ்விரண்டுமென்றதற்குத் துனியின்மை, புலவி என்னும் இவ்விரண்டும் எனப் பொருள்கொள்வோமெனின்? அது பொருந்தாது. ஏனெனில்? ஒருவாக்கியத்துள் உடனெண்ணிய இரண்டுபொருளைச்சுட்டியவிடுத்து அவ் விரண்டனையும்

யாகாறு மொருமுறையேபற்றிக் கொள்ளவேண்டும். கொள்ளவே, துனியின்மையைச் சுட்டிய முறையானே புலவியின்மை சுட்டப்படுவ தல்லது அதனுண்மை சுட்டப்படாது. அதனால் "ஊடுதல் காமத்துக் கின்பம்" என்பதனோடு மாறுபடுவதாம்.

ஒருவாக்கியத்துள்ள துனி புலவிகளுள், ஒன்றனை யொருமுறை யானதன் இன்மையையும், பிறிதொன்றைப் பிறிதொருமுறையான் அதன் உண்மையையும் பொருளாகக்கொள்வது அர்த்த ஜரதி நியாயத் தாற் பாதிதமாகும். (அதாவது, ஒருசுரைக்காயில் ஒருபாதி விதைக்கு வைப்பேன் ; மறுபாதி கறிக்குவைப்பேன். என்னும் பொருந்தாவழக் குப்போல் ஒன்றனைபொன்று விரோதிக்குமென்பதாம்.) ஆதலால் "இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு" என்னும் முடிவுரைக்குத் துனியின்மையும், புலவியும் வேண்டுமென்று வியந்து கூறினானென்று பொருள்கொள்ளுதல் பொருந்தாதாகின்றது.

அன்றியும், துனி காமத்துக்கு ஒவ்வாததன்று; ஒவ்வாததாயின் குணம்பற்றி உவந்துவியந்து கூறும் தலைவன்கூற்றில் உடனெண் ணத்தகுவதன்று. புலவி, "ஊடுதல் காமத்திற்கின்பம்" எனக் காம வின்ப மிகுவிக்குங்குணமுடைமைபற்றி வியத்தற்கிலக்காயிற்று. அவ்வாறே துனியும், காமவின்ப மிகுவிக்கு மியல்புடையதாகுங் குண முடைமைபற்றியே உடனெண்ணப்பட்டிருக்கிறது. அக்குணமில தாயின் அது குற்றத்தின்பாற்பட்டுத் தலைமகனுவப்பிற் கிலக்காய தலைவிபால் அவனறியாதொழிபவேண்டும். ஒழியவே, துனியில்லை யாயிற் காமம் கனியற்று என்று தலைமகன்கூற்றில் நுழைப்பது அசம் பாவிதமாகும். தலைவன்கூற்றில் நுழைத்தமையாற் புலவியோ டொப்பக் காமவின்ப மிகுவிக்குங்குணமுடைமைபற்றித் துனியும் வேண்டுமென்று வியந்துகூறினான் எனவே கொள்ளவேண்டும். முற் குறளில் இத்துனியே தனியே வியந்து கூறப்பட்டமையான் இங்கும் அஃது உடனெண்ணத்தகுமெனக் கொள்க.

இவ்வாறுகொள்ளுங்கால் "கனி நுகர்வார்க்கு மிகவுமின்பஞ் செய்தலின்" என்றெழுதியுள்ள விசேடவுரைவாக்கியம் விரோதிக் கின்றது. எங்ஙனமெனில்? இங்குக் கூறியுள்ளகனி நுகர்வார்க்கு மிகவு

மின்பஞ் செய்யுமாயின், துனியில்லாதகாமம் இன்பஞ் செய்யுமெனவும், துனி அதற்கு விரோதமாமெனவும் கொள்ளக்கிடப்பதுகொண்டு கண்டுகொள்க.

விசேடவுரையும், முடிவுரையும் ஒன்றனையொன்று விரோதிக்குமாறு ஒருரையாசிரியரெழுதாராகலால் அவ்விரண்டனுள்ளும் தகுதியுள்ளதொன்றைப் பிறிதொன்று தழுவிநிற்குமா றெழுதப்பட்டிருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது.

தகுதியுணருமிடத்து இங்குக் கூறிய துனியென்பது யாது? புலவியென்பது யாது? அவற்றுள் ஒவ்வொன்றும் காமத்துக்கு எத்திறத்தானியைபுடையது? என்பவற்றைத் துணியவேண்டும்.

இங்கு வழங்கியுள்ள துனி புலவியென்னு மிரண்டும் வெறுப்பின் பரியாயமாய்நின்று ஊடல் என்னும் ஒருபொருள்குறித்த திரிசொல்லேயாயினும், அவை பொருளடையாய் வேறுபிரித்தெண்ணப்பட்டமையால் உவமைக்கேற்ப முதிர்ந்தகலாம் துனி எனவும், இளையகலாம் புலவி யெனவும் பொருள்வேறுபாடுகற்பித் துரையெழுதப்பட்டிருக்கிறது.

ஊடலுள், முதிர்ந்தகலாம் யாது? இளையகலாம் யாது? என நோக்குமிடத்துத் தலைவன் தவறுளனாகத் தலைவியூடுதல் இளையகலாமெனவும், தவறிலனாகவும் தவறுகற்பித் தூடுதல் முதிர்ந்தகலாமெனவும், இவை கூட்டத்தின் முன்னும் பின்னும் நிகழ்வனவெனவும், அவை காமவின்பமிகுவிக்குந் திறனுடைமையாற் காமத்துக்குத் துணையாயமையு மியைபுடையவெனவும் பின்வருமாற்றால் விளங்குவனவாம். இதனை,

> “நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
> பூவன்ன கண்ணா ரகத்து” (திருவள்ளுவர்-௧௩௦௫.)

என்ற முற்குறளினுரையுள், “புலத்தகை” என்பதற்குப் புலவி மிகுதி என்று பொருளெழுதியதுணையானே, தலைவன் தவறிலனாகத் தலைவியூடுதல் முதிர்ந்தகலாமெனவும், அருத்தாபத்தியால் அதனின்வேறுபவூடல் இளையகலாம் எனவும் உணருமாறு உரையாசிரியர் தாமே யுய்த்துணரவைத்ததுகொண்டு கண்டுகொள்க.

இக்குறளுரையுள், புலத்தகை என்றசொல்லுக்குப் புலவிமிகுதி யென்று பொருளெழுதப்பட்டிருக்கிறது. இதில் மிகுதியாவது யாதெனவாராயுமிடத்துப் புலவிக்கண் எண்ணின்மையால் எண்ணுன் மிகுதலன்று; "உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது, மிக்கற்றா னீள விடல்" என்று கடியப்பட்டமையாற் காலத்தால் மிகுதலுமன்று; மற்றியாதெனில்? குளிர்மிகுதி என்பதுபோல அதன் ஆற்றலாகிய பண்பால் மிகுதலேயாமென விளங்குகின்றது. இப்புலவிமிகுதியே அதிகாரப்பட்டமையால் அடுத்தகுறளினு மெடுத்துக்கொள்ளப்பட்டதாய்த் துனியென்னும்பெயரால் வழங்கப்பட்டிருக்கிறது. இதனை யுணர்த்தக்கருதி யுரையாசிரியர் "முதிர்ந்தகலாமாகியதுனி" யென விளக்கியுரைத்திருப்பதும் இங்கு நோக்கத்தக்கது.

ஆயினும் புலத்தகையென்பதற்குப் புலவிமிகுதியெனப் பொருளுரைப்பது எவ்வாறு பொருந்துமெனில்? ஆணிற் சிறந்தானை ஆண்டகை என்பதுபோலப் புலவியிற் சிறந்ததனைப் புலத்தகையென வழங்கினமையாற் புலவிமிகுதியெனப் பொருளுரைப்பது பொருந்துமெனக.

தலைவன் றவறிலனாக நிகழும் புலவியே புலவிமிகுதியென்பதெதனாற் பெறப்பட்டதெனின்? "நலத்தகைநல்லவர்க்கேஎர் புலத்தகை" என்பதில் நலத்தகைநல்லவர் தவறிலாதலால் அவர்வழிநிகழ்வதனைப் புலத்தகையெனவிதந்தோதினமையாற் பெறப்பட்டதெனக.

தலைவன்றவறுகாரணமாகத் தோன்றும்புலவியினும் அஃதின்றாகத் தோன்றும்புலவி வலியுடையதாதலால் அது புலத்தகையென்றும், முதிர்ந்தகலாமென்றும் வழங்கப்பட்டது. ஊடற்கு இளமையும், முதிர்ச்சியும், காரணமுளதாய்த் தோன்றலும் காரணமின்றித் தோன்றலுமாகிய மென்மை வன்மைபற்றிவழங்கும் குறிப்புக்களாம்.

இங்ஙனங் கூறிய முதிர்ந்தகலாமாகிய துனி,

"கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று." (திருவள்ளுவர். ௧௩௧௩.)

"தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று" ( „ „ —௧௩௧௯.)

"நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று" ( ,, ,, —௧௩௨௦.)

என்னுங் குறள்களாற் கூறப்படுவது. இது கூட்டத்தின்பின்பு நிகழ்வ தென்பதைப் புலவிநுணுக்கவதிகார விவரணத்துட்காண்க.

இதனின்வேறுப இளையகாலமாகியபுலவி கூட்டத்தின் முன்பு தலைவனது தவறுகண்டு தலைவிபுலத்தலென்பதனை,

"அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்" ( ,, ,, —௧௩௦௩)
"ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று" ( ,, ,, —௧௩௦௪.)

என்ற குறளுரைகளாற் காண்க.

இவ்வாறுகூறிய துனி புலவிகள், முறையே "நலத்தகை நல் லவர்க்கேஎர் புலத்தகை" எனவும், "ஊடுதல் காமத்திற்கின்பம்" எனவும் கூறப்பட்டமையால் அவை காமவின்ப மிகுவிக்குந்திற னுடையனவாய்க் காமத்துக்குத் துணையாயமையு மியைபுடைய வென்பது பெறப்படும்.

பெறவே, புலவியில்லாத காமத்தோடொப்பத் துனியில்லாத காமமும் இன்பம்பயவாதென்பது நன்கு விளங்கும்.

இங்குக் காமமென்றது யாதெனவாராயின், துனியும் புலவியு மில்லாத வென்றது "இல்லாயின்" என்றதனையானே துனி, புலவி களுக்குப் பற்றுக்கோடாகாத கலவியொழித்து, அதன் பின்னும் முன்னும் அவற்றிற்குப் பற்றுக்கோடாதற்குரிய காமபாகங்களெனக் கொள்ளவேண்டும். அவையே அத் துனி புலவிகளின் உண்மை யின்மைகளின் விகற்பநிலைக்களமாதலால் அவற்றி னொருதலைபற்றி "துனியும் புலவியு மில்லாயின்"என வழங்கற் குரியவாமாறு காண்க.

இவ்வாறு துனியில்லாத காமபாகம் இனிமை பயவாததாயிருக்க அதற்குக் கனியை யுவமையாகக் கூறிய தெதுபற்றியென்பதை விசா ரிக்குமிடத்து அக் குறளின் உரைநடையடைகளாற் றெளியலாகு மென்பது பின்வருமவற்றால் நன்குவிளங்கும்.

"துனியும் புலவியு மில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று" என்பதிற் கனியென்றசொல்லுக்குச் சொல்லாற்றல்பற்றிப் பொதுமையிற் பழமென வுரையெழுதியெழியாது, இடம்நோக்கி யவ்வாற்றலைக் குறைத்துச் செவ்விமுதிர்ந்தபழமென அடைகொடுத்து உரையெழுதப்பட்டிருக்கிறது. செவ்விமுதிர்ந்த என்னுமடையால், செவ்விமுதிராததீங்கனி விலக்கப்பட்டது. கனிக்குச்செவ்வியாவது நுகர்வார்க்கு இனிமைமிகும் பருவம், அதன் முதிர்ச்சியாவது அப் பருவமொழிபப் பின்வரும் பருவம். உரையுட் "செவ்விமுதிர்ந்தகனி" யென்றதையே விசேடவுரையுள் "மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாயகனி" என விளக்கியிருக்கின்றனர். இதில் மிகமுதிர்ந்திறுதல் நுகரும்பதனழிதல். இத்தன்மையுடைய கனியே அழிந்தகனியென வழங்கப்படுகின்றது. இது நுகர்வார்க்கு மிகவு மினிமை செய்புமென்பது பிரத்தியக்ஷவிருத்தமாய்ப் பொருளொடுபொருந்தாதிருக்கின்றது. அதனியல்பு நோக்குங்கால் நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்யாமையே யுள்ளது. இது பொருளொடுபொருந்துகின்றமையால், மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவு மினிமைசெய்யாதாதலால் என்று விசேடவுரை எழுதப்பட்டிருக்கவேண்டுமென்று தோன்றுகிறது.

இப்பாடம் படித்து உவமையொடுபொருந்த நோக்குமிடத்து, கனியொன்றே முதற்பருவத்தில் நுகருஞ்செவ்வித்தல்லாத கட்டிளமைத்தாய கருக்காயாயும், இடைப்பருவத்தில் நுகருஞ்செவ்வித்தாய பழமாயும், பிற்பருவத்தில் மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாய கனியாயும் பரிணமிப்பதுபோலக் காமம் ஒன்றே முதலில் முயங்குஞ்செவ்வித்தல்லாத இளங்காமமாயும், இடையே முயங்குஞ்செவ்வித்தாகி மிக்கவின்பம்பயக்கும் விழைகாமமாயும், இறுதியில் மிக்கவின்பம் பயவாத முதிர்காமமாயும் பரிணமிக்குமென்றும், அக் காமத்துள் மிக்கவின்பம்பயவாத விறுதிப்பாகமும் முதற்பாகமும் முறையே துனிபுலவியுடன்சேர்ந்தழி அவை இடைநின்ற விழைகாமத்தோடொப்ப மிக்கவின்பம்பயக்குமென்றும், துனி புலவிகளில்லையாயின் அவ் விருபாகமும் மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாய அழிகனியும், *கட்

* கட்டிளமைத்தாய கருக்காய் என்றது வழக்கில் கட்டக்கருங்காய் என அருகி வழங்கப்படுகிறது.

டிளமைத்தாய கருக்காயும்போல மிக்கவின்பம்பயவாவென்றும், மிக்கவின்பம் பயத்தல்பற்றி அக் காமபாகங்களிற் றுனியும் புலவியும் வேண்டுமென்று தலைவன் வியந்துகூறுதல் பொருந்துமென்றும் கொள்ளக்கிடக்கின்றது.

அன்றியும், பிரிவின்கட் காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலையலராய் மலர்ந்து பரிணமித்துவந்த காமம், கூட்டத்தின்கட் காயாய்ப் பழமாய்க் கனியாய்ப் பரிணமிக்கக்கடவதாயிருக்கத் துனி புலவிகளின் கூட்டரவால் அங்ஙனம் பரிணமியாது முழுதும் பழம் போன்றிருந்ததெனத் தலைவன் வியத்தற்கிலக்காமாறு பொருந்து கின்றது.

ஊடலுவகையிறுதிக்குறளின் விசேடவுரையுள் "முதிர்ந்த துனியாயவழித் துன்பம்பயத்தலானும்" என்றது அளவிறந்ததுனி யையாதலால் இங்குக்கூறிய அளவறிந்து கூடும்துனி இன்பம்பயக்கு மென்பது மாறுபடுவதன்று.

இங்ஙனங் கூறியவாற்ருல் மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்யாதாதலாலென்ற பாடமே, பேடை மூதுவோர் பாரக்கினல் அடைப்பொருளைநோக்காது கனியென்ற துணையேகொண்டு தருதிநோக்கி மிகவுமினிமைசெய்தலாலென யாதாவெழுதாதெழுதிய பாடபரம்பரையாக மாறியிருக்கலாமென்று தோன்றுகின்றது. ஆயினும்பண்டிதர்களின் அபிப்பிராயம் தெரிந்து திருத்தவேண்டும்.

திரு. நாராயணையங்கார்,
பத்திராதிபர்.

---



# தமிழும் ஸம்ஸ்கிருதவுதவியும்.

## Tamil and the influence of Sanskrit.



[௲௦௬-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### 3. சைவ சித்தாந்த காலம்.

கி. பி. 800-ம் ஆண்டுக்குப் பிறகு அவதரித்த சங்காசாரியருக்குப் பின் பௌத்த மதமும், க்ஷமண மதமும், பலங்குறையச் சைவ மதமானது ஸ்தாபனமாய் அபிவிருத்தியடைந்தது. சைவமதாபிவிருத்திக்கு முக்கியமான மத்யஸ்தலம், மதுரை. மதுரை ஸ்தல புராணங்களில், இக்காலத்திய தமிழ்த்தேச விவரமும், பாஷா விவரமும் தெளிவாய்க் காணலாம். இக்காலத்திய முக்கியமான ஆசிரியர்கள் திருவாசகம் எழுதிய மாணிக்கவாசகர், ஜைன, பௌத்தமதத்தைக் கண்டித்தவரான திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் முதலானவர்களே. இவர்களில் அப்பர் மாத்திரம் வெள்ளாளர். மற்ற மூவரும் ப்ராஹ்மணர்கள்.

### 4. வைஷ்ணவ சித்தாந்த காலம்.

மேற்கூறிய காலத்திலேயே வைஷ்ணவ மதமும் அபிவிருத்தியடைந்தது. வைஷ்ணவக்ரந்தகாரர், தமிழ்ப்பாஷையின் அபிவிருத்திக்கு விசேஷ காரணஸ்தர்களாயிருந்திருக்கிறார்கள். இக்காலத்தில் முக்கியமான வைஷ்ணவ சமய நூல்கள், 12 ஆழ்வாராதிகளாற் பாடப்பட்ட, நாலாயிரப்ரபந்தங்கள் இவை முக்கியமாய் ஸம்ஸ்கிருத வைஷ்ணவ புராணங்களை யனுசரித்தே யிருக்கின்றன.

இக்காலத்தில் மேற்கூறியவாறு மதாபிவிருத்திக்குக் காரணமான நூல்களைத் தவிர, வடமொழியினின்றும் அநேக புராணங்கள், இதிகாசங்கள், வேதாந்த நூல்கள், வைத்ய சாஸ்திரங்கள், ஜோதிடம் முதலான நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதுமல்லாமல், அவைகளை யனுசரித்து அநேக முதல்நூல்களும் எழுதப்பட்டன.

இராமாயணமெழுதிய கம்பரும், நளவெண்பா எழுதிய புகழேந்தியும், ஒட்டக்கூத்தரும், அஷ்டாங்கசித்தி, வாகடம் முதலான பல வைத்ய நூல்களை வரைந்த பதினெண் சித்தர்களும் இக்காலத்தவர்களே. மற்றும், தொல்காப்பியத்துக்கு உரை யெழுதிய சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்ற ப்ராஹ்மண கவிகளும், குறளுக்கு உரையெழுதிய பரிமேழலகர் என்ற ப்ராஹ்மணரும், நன்னூல் எழுதிய பவணந்தி என்ற ஜைன முனிவரும் இக்காலத்தவர்கள்தான்.

தமிழ் நூல்களென்று தற்காலத்தில் விசேஷமாய்க் கொண்டாடப்படும் நூல்களெல்லாம் அநேகமாய் கி. பி. 1600-ம் ஆண்டுக்கு முற்பட்டுத்தான் எழுதப்பட்டிருக்கின்றன. பிறகு காலக்கொடுமையால் நேர்ந்த கோலத்தாலும் தமிழரசர்களின் நாசத்தாலும், மகம்மதிய அரசரின் உபத்ரவங்களாலும், ஆதரிப்போரில்லாமல் தமிழ் க்ஷீணதசையடைந்து, சுமார் 250 வருஷ காலம், இருக்குமிடமே தெரியாது கிடந்தது. மேற்கூறியவைகளினின்றும் நாம் அறிவனயாவையெனில்,

(1) அகஸ்தியர் அல்லது ஆர்யர் வரவுக்கு முன் பல நூற்றாண்டுகளாக இந்நாட்டில், தமிழ் அல்லது அதன் பூர்வ பாஷையான த்ராவிடம் வழங்கிவந்தது.

(2) அகஸ்தியர் காலத்துக்குமுன், தமிழ் வாசக (Literary) பாஷையாயிருந்ததென்பதற்கு யாதொரு ஆதாரமுமில்லை.

(3) வழக்குப் பாஷை, வாசக பாஷையாகவும் ஆக ஆரம்பித்தது ஆர்யர் வரவுக்குப் பிறகுதான்.

(4) ஆர்யர்கள் முதன்முதற் குடியேறிய நாடுகள், அக்காலத்திற் செழிப்புற்றோங்கிப் தமிழ் நாடுகளாகிய சோழ பாண்டிய தேசங்களே.

(5) ஆர்யர்கள், தங்கள் மதஸித்தாந்தங்கள், புராண இதிகாசங்கள், உலக உற்பத்தி, ஜீவோற்பத்தி, ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், புனர்ஜன்மம், கர்மம், ஞானம் முதலான அதிபௌதிக (Metuphysical) ஸித்தாந்தங்களையெல்லாம் தமிழருக்குக் கற்பித்து, தமிழ்

நூல்கள் பலவும் ஆர்யமத அபிப்ராயங்கள் நிறைந்தனவாகவே செய்யப்பட்டிருக்கின்றன.

(6) தவிர, ஆர்யர்கள் தங்கள் பாஷைகளிலுள்ள அபூர்வமான கருத்துக்களுக்குச் சரியான பதங்கள், தமிழிற் கலந்தார்கள்.

(7) சுமார் 2000 வருஷங்களாய்த் தமிழ் நாட்டில் அரசாண்ட அரசர்களின் பெயர்களும், அவர்கள் தாங்கள் சந்தரவம்சத்தவர்கள் என்று சொல்லிக்கொண்டதும், தாங்களும் க்ஷத்திரியரென்று நிரூபிக்கச் செய்த முயற்சிகளும், ஸம்ஸ்க்ருதக் கலப்பினுடையவும் ஆர்ய நாகரீகத்தினுடையவும் மிகுதியைக் காட்டும்.

(8) அநேக தமிழ் நூல்களின் தலைப்பெயர்களும், அவைகளின் கதைகளும், ஸம்ஸ்கிருத வர்ணனைகளும், அநேக தமிழ் நூலாசிரியர்கள் ஆர்யகுலஞ்சேர்ந்த அந்தணராயிருப்பதும் ஸம்ஸ்கிருத பாஷையின் விசேஷ உதவியைக் காட்டும்.

(9) இந்நிலைமையில், ஸம்ஸ்கிருதச் சொற்கலப்புக்களையும், ஆர்யமதக்கருத்துக்களையும், ஸம்ஸ்கிருதவர்ணனைகளையும் பிரித்துவிட்டால், தமிழில் ஸ்வயமாயிருப்பது அதிக சுவல்பமாயிருக்கும் என்பனவாம்.

## தற்காலம்.

தமிழின் மூன்றுவது காலமான தற்காலம் சுமார் கி. பி. 1850-ம் ஆண்டு முதல் துவங்கியதாய்க்கூறலாம். இத்தக்ஷிண தேசத்தில் ப்ரிட்டிஷ் அரசாக்ஷி ஸ்தாபனஞ் செய்யப்பட்டதுமுதல், ராஜபாஷை ஆங்கிலமாயிருப்பினும், வ்யவஹாரபாஷையும், தேசபாஷையும் தமிழாகவே உபயோகப்படுத்தியதாலும் சர்வகலா பரீக்ஷைகள், முதலான இராஜாங்க ஆதரவுபெற்ற கல்விச்சாலைகளிலும் தமிழும் ஒரு கட்டாயமான உபபாடமாய் வைக்கப்பெற்றதாலும், கல்வியிலபிமானமுள்ளவர்கள் மறுபடி கஷ்டமில்லாமல் ஆராய்ச்சி செய்ய ஏதுவான சௌகர்யங்கள் நேர்ந்ததாலும் மறுபடி தமிழ் தலையெடுக்கத் தொடங்கிற்று.

இக்காலத்தில் முக்யமாய் எழுதப்படுகிற க்ரந்தங்கள், ஸம்ஸ்க்ருதம், இங்கிலீஷ் முதலான இதர பாஷைகளிற் சிறப்பாயுள்ள

நூல்களின் மொழிபெயர்ப்புக்களும், அவைகளை யநுசரித்துள்ள முதல் நூல்களும், நாவல்களும், நாடகங்களும், விசேஷமாய் மேல் நாட்டில் வழங்கும் பௌதிகம் முதலான சாஸ்த்ர நூல்களை யநு சரித்த இயல் (Prose) நூல்களும் பிறவுமாம்.

இக்காலத்தில் எழுதப்படும்இசை (Poetry) நூல்கள், முற்காலத் தவைபோல ஸரலமாயும், எளிதாயும், இனிமையாயுமிருக்கவில்லை.

இக்காலத்தில் இசை (Poetry) யில் முதல் நூல் யாதொன் றும் எழுதப்பட்டுப் புகழ்பெற்றதாகவுங் காணப்படவில்லை. எழுதப் பட்டவைகளின் சில பொதுவாக நடை (style) கடினமாயும் வழக் கிலில்லாது மறைந்த (obsolete) பதங்களாகவும், பொருள் சாதுரியத் தைக்குறைத்தாவது சொற் சாதுரியங்கள் நிறைந்தனவாகவு மிருக் கின்றன.

---

## தமிழ்.

'தமிழ்' என்னும் பதத்துக்கு இலக்கணம் கூறுமிடத்து, அபிப் பிராயபேதங்கள் பல இருக்கின்றன. 'தமிழ்' என்னும் பதமானது காரணப்பெயர் என்று சிலரும், இடுகுறிப்பெயர் என்று சிலரும் அபிப்பிராயப்படுகின்றனர்.

(1) தமிழ் என்பது சிறப்பு 'ழ' கரம்வாய்ந்த பாஷையென்று கூறுவர் ஒரு மதத்தார். இது யுக்திக்கு அழகாயிருப்பினும், உண் மைக்கு விரோதமென்று தோன்றும். சிறப்பு 'ழ' கரம், இப்பா ஷைக்கு மாத்திரம் விசேஷமானதன்று. இதன் ஸஜாதீயமான, மங் கோலியம், சினம் முதலான இதர துரேனிய பாஷைகளிலு மிருப்ப தாய்த் தெரியவருவதால், இதற்கு மாத்திரம் தமிழ் அல்லது சிறப்பு 'ழ'கரம்பெற்ற பாஷையென்று விசேஷப்பெயர் இட்ட காரணம் தெரியவில்லை.

மேலும், சிறப்பு 'ழ'கரமில்லாத ஸம்ஸ்க்ருதம் முதலான ஆர்ய பாஷைகளுடன் ஒப்பிட்ட பிறகுதான் இப்பெயர் சூட்டப்பட்டதென் றால், அவ்வாறு ஒப்பிட ஏதுவான ஸம்ஸ்க்ருதக் கலப்புக்காலத்துக்கு முன், இதற்கு என்னபெயர் இருந்தது என்ற சங்கையுண்டாகும்.

(2) தமிழ் என்பது தென்மொழி என்னும் பதத்தின் மரூஉ வென்பது இரண்டாவது சித்தாந்தம்,

(*a*) தென்மொழி தமிழ் என்று மருவுவதற்குச் சரியான, சப்த சாஸ்த்ர (Phonctial) விதிகள் ஒன்றுங் காணப்படவில்லை.

(*b*) தவிரவும், இதற்கு எதிர்ப் பதமான வடமொழி (அல்லது ஸம்ஸ்கிருதம்) என்பது அவ்விதிக்குட்பட்டு மருவியிருப்பதாகவும் காணப்படவில்லை.

(*c*) மேலும் தென்மொழி யென்ற நாமகரணமானது, ஸம்ஸ் கிருதம் தெற்கே வரத்தொடங்கிய காலத்துக்குப்பிறகுதான் இவ்விரு பாஷைகளையும் பகுத்தறியுமாறு, தமிழறிஞர்களாற் சூட்டப்பட்ட தாயிருக்கவேண்டும். அப்படி யிருக்குமாயின், ஸம்ஸ்கிருத வரவு காலத்துக்குமுன் இப்பாஷை எப்பெயர் பெற்றிருந்தது? அப்பெயர் முழுதும் மறைவதற்குக் காரணமென்ன? என்ற ஆசங்கைகளுக்கிட முண்டாகின்றது.

ஆனல் வடமொழிக்கு ஸம்ஸ்கிருதம் (அதாவது நன்றாய்ச்செய் யப்பட்ட பாஷை) என்ற பெயர் உலகின்கண் வழங்கிவரும் இதர பாஷைகளிலும் சிறந்த பாஷையென்று உயர்வு கருதியிட்டதன்று. ஆர்யர் வழங்கிவந்த பாஷையானது, ப்ராக்ருதர் அல்லது சாதாரண ஜனங்கள் பேசும் பாஷையான ப்ராக்ருதபாஷை அல்லது வழக்குப் (Collequial) பாஷையெனவும், ஸம்ஸ்க்ருத பாஷை அல்லது வாசக (literary) பாஷையெனவும் இருவகைப்படும். ஸம்ஸ்க்ருதம் ப்ராக் ருதத்துக்கு எதிரானது அல்லது விசேஷமானது என்பதுமாத்திரமே யொழிய, உலகபாஷைகளுக்கெல்லாம் சிறந்ததெனப் பொருள் படாது. வழக்குத் தமிழைக் காட்டிலும் வாசகத் தமிழைச் செந் தமிழ் (அல்லது செம்மையாய்ச் செய்யப்பட்ட தமிழ்) என்று வாசக (literary purposes) த்துக்கு உபயோகப் படுத்தியிருப்பது போ லாகும்.

(3) தமிழ் என்றல் இனிய பாஷை யென்று பொருள் என்று கூறுவார்கள். இதுவும் யுக்திக்கழகாயினும் உண்மைக்கு விரோதம் போலத் தெரிகின்றது. உலகத்தில் அவரவர்களுக்கு அவரவர்கள்

பாஷை இனிமைதான். அவர்களெல்லோரும் அவ்வாறு தங்கள் பாஷைக்குப் பெயரிட்டுக்கொள்ளவில்லையே.

ஆனால், வடமொழிக்கு ஸம்ஸ்கிருதம் (அதாவது நன்றாய்ச் செய்யப்பட்ட பாஷை) யென்று பெயர் வழங்குகின்றதே; அதுபோலத் தென்மொழிக்கும் தமிழ் (அதாவது இனிய பாஷை) என்ற சிறப்புப் பெயர் வாய்ந்திருக்கலாகாதா? என்ற சமாதானம் கூறலாம்.

(4) தமிழ் என்பது த்ராவிடம் என்ற சொல்லின் மரூஉவென்றும், அது வெகுகாலமாய் இடுகுறிப்பெயராய் வந்தசொல்லின் மரூஉவேயொழிய, எக்காலத்திலாவது எக்காரணம்பற்றியாவது இடப்பட்ட காரணப் பெயரல்லவென்றும் சிலர் அபிப்பிராயப்படுகின்றார்கள்.

த்ராவிடம் என்பது தமிழ் என்று மருவியதென்று கேட்க முதலில் அதிசயமாகத்தானிருக்கும். ஆனால் அநேக பாஷைகளின் பெயரைக்கவனிக்கையில், அவைகள், பூர்வகாலம் முதல், தேசம், ஜாதி முதலானவைகளில் ஒன்றைப்பற்றியே யமைந்தனவாயிருக்கின்றன. ஆங்கிலர் பேசுவது ஆங்கிலம், க்ரேக்கர் பேசுவது க்ரீக், அரபியர் பேசுவது அரபி, என்பது போல். இன்னும் த்ராவிடம் என்பது தமிழ் என்று மருவ வேறு ஆதாரங்களிருக்கின்றனவா? என்ன விதிகளால் அவ்வாறு மருவிற்று? என்று விசாரிப்போம். முற்காலத்தில் இத் தமிழ் நாடானது, த்ராவிடம், த்ரமிடம், த்ரமிழம் என்றும், இத்தேசத்தவர்கள் த்ராவிடர், த்ரமிடர், த்ரமிழர் என்றும் வழங்கப்பட்டு வந்தனர்.

மஹாபாரதம் (திக்விஜய பர்வம்).

தக்ஷிணாபதஸம்ஜ்ஞா சோளஸ்ய விஷயம் யயௌ
ததர்ச பாண்ட்யதேசாம்ஸ்சைவ காவேரீம் ஸரிதாம் வராம்।
த்ரமிடாம்ஸ்ச மஹாராஜ ஸ்த்ரியஸ்த்வத்ர ததஸ்தநா:
ஸபாவாண்டலாந்தத்ர ததர்ச த்ரேஷ்டாந்விதாம்॥
ஸஹதேவஸ்ததஸ்தத்ர த்ரமிளாநாமகாந்ததா
விஜித்ய தாநு ஸஹஸா ப்ரஸ்திதோ தக்ஷிணாம் திசம்।

[illegible]

இவற்ருல் நாமறிந்துகொள்ளுவன,

(1) அக்காலத்தில் சோழ பாண்டிய தேசங்கள் ஸ்தாபனமாயிருந்தன.

(2) பாண்டிய தேசத்தரசன் மலயத்வஜன், மணலூர் என்ற நகரில் அரசாண்டான்.

(3) அவன் மகள் சித்ராங்கதை அர்ஜுனனை விவாகம் செய்து கொண்டாள்.

(4) அவள் புதல்வன் பப்ருவாஹனன்.

(5) ஸஹதேவன் அகஸ்த்யாச்ரமம் சென்ருன்.

(6) த்ரவிட, த்ரமிட, த்ரமிழ என்பவை ஒரே பெயரைக் குறிக்கின்றன. என்பனவாம்.

ஆகையால் முற்காலத்தில் இத்தமிழ் நாடானது த்ரவிடம், த்ரமிடம் அல்லது த்ரமிளம் என்ற பெயர் பெற்றிருந்ததென்று ஆர்ய நூல்களாலறிகின்ருேம். அப்பெயர்கள் எங்ஙனம் வாய்ந்தனவோ என்பது நிர்ணயிப்பது, நிராதாரமான இந்நிலைமையில் அசாத்யமாகும்.

த்ரமிடம் என்பதும், த்ரமிளம் என்பதும் 'ட ள, யோரபேத:' என்ற ஸம்ஸ்கிருத விதிப்படி, ஒன்றுதான்.

'அக்னிமீடே (ளெ) புரோகிதம்' என்பது அக்னிமீளே புரோகிதம் என்று வருவதையும் காண்க.

த்ரமிள என்பது தமிழ் என்று எவ்வாறு மாறிற்றெனில், த்ரமிள என்னும் பதமுதலில் த்ர என்னும் கூட்டெழுத்திருக்கின்றது. அது, த்+ர்+அ என்று பிரிக்கப்படும். ஸம்ஸ்கிருதச்சொல்லில் மொழி முதலிற் கூட்டெழுத்து வருமாயின், கூட்டெழுத்தின் ஒரு ஒற்று மறைந்துவிடும்.

உதாஹரணம். சிமான், காரம், ஜோதி, தீவு, தொனி, பதுமை, வெஞ்சனம், விவஹாரம், தொக், விசனம், சேணி, சுதேசம், சாமி, கணம், ஜேஷ்டன், இவைகளில், இரண்டாவது ஒற்று மறைந்திருப்பதைக் காண்க. இதுபோலவே, த்ரமிள என்பதில் இரண்டாவது ஒற்று ர், மறைபவே (டி) தமிள என்றும் பிறகு த (த) மிழ அல்லது தமிழ் என்றும் மாறியிருக்கின்றது.

## தமிழ்த்தேசம்.

இப்பொழுது தமிழ்த்தேசமானது, திருப்பதி முதல், குமரிமுனை வரைக்கும், மேற்குத்தொடர் மலைமுதல், கிழக்கே வங்காள சமுத்ரக்கரை வரைக்கும் உள்ள நிலப்பரப்பேயாம்.

பூர்வ நிலைமை. ஆனால் முன்னொரு காலத்தில், இத்தேசமானது குமரிக்கும் தெற்கே விஸ்தாரமாயிருந்ததென்றும், தற்காலத்தில் இந்து சமுத்திரத்தின் பல தீவுகளாகப் பிரிந்துகிடக்கும், ஆஸ்த்ரேலியா, ஸுமாத்ரா, மடகாஸ்கர், அந்தமான், நிக்கோபார், லக்ஷத்தீவுகள், மாலத்தீவுகள், சிங்களம் முதலிய தீவுகளெல்லாம் ஒரே தரையாயிருந்ததென்றும், அஃது தக்ஷணத்துருவத்துக்குச் சமீபம் வரைக்கும், தற்கால ஆப்ரிக்காகண்டம், இந்துதேசம் இவைகளின் தொடர்ச்சியாய் ஓர் பெரிய கண்டமொன்றிருந்ததாகவும், அஃது சமுத்திரத்தில் ஆழ்ந்துபோய்விட்டதாகவும், அவைகளின் உயர்பாகங்கள்தான் இப்பொழுதுள்ள மேற்கூறிய தீவுகளென்றும், அவ்வாறு ஆழ்ந்த பூர்வ கண்டத்துக்கு லிமூரியா என்று பெயரிட்டிருப்பதாகவும், பூதத்வ சாஸ்த்ரஞ்ஞர்கள் (Geologist) கூறுகின்றனர்.

இதற்கு முக்ய ஆதாரம், மேற்கூறிய தீவுகள் அகண்ட கடலால் பிரிக்கப்பட்டிருந்தபோதிலும், அவைகளிலுள்ள பூர்வ குடிகளின்,

நடை, உடை, பாவனை, பாஷை முதலானவைகளும், உடற்கூறு, கபாலக்கூறு முதலான அங்கலக்ஷணங்களும் அநேக அம்சங்களில் ஒத்திருக்கின்றவென்று மனிதவர்க்க சாஸ்த்ரஞ்ஞர்கள் கூறுகின்றார்கள்.

நமது பழந் தமிழ் நூலொன்றில், குமரிக்கும், பஃறுளியாற்றுக்கும் மத்தியில் ஒரு பெரிய தேசமிருந்ததாகவும், அது 700-யோஜனை தூரமுள்ளதென்றும் அது சமுத்திரத்தில் ஆழ்ந்துவிட்டதென்றும், குறிக்கப்பட்டிருப்பதாய்த் தெரியவருகின்றது.

இப்பொழுது தமிழ் வழங்குவோரின் ஜனத்தொகை இரண்டு கோடி யென்று மதிக்கப்பட்டிருக்கின்றது. தமிழர்கள் பெரும்பான்மையோர், மேற்கூறியவாறு திருப்பதிக்குத் தெற்கே குமரி வரையிலும், சிங்களம், அந்தமான் முதலான இந்து சமுத்திரத் தீவுகளிலும், சுமத்தரா ஜாவா, முதலான தீவுகளிலும், பர்மாவின் சில பாகங்களிலும் கூலிவேலைக்காரராக தென் ஆப்ரிக்காவிலும் வசிக்கின்றார்கள்.

(தொடரும்.)

ஆர். எஸ். நாராயணஸாமி ஐயர்,
B. A. B. L.

---

உ

# நாலடியார்
# கடவுள்வாழ்த்துரை.

—:(o):—

"வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை—யாநிலம்
சென்னி யுறவ ணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

(இ - ள்) வானிடுவில்லின்—வானவிற்போல, வரவு அறியா வாய்மையால்—வரற்பாலதாகிய இடையூறு இன்னவாறுதோன்றும்

என்று அறியப்படாத சத்தியமாயிருத்தலால், கால் நிலம் தோயா கடவுளை—பாதம் நிலத்திற்படியாத கடவுளை, எம் உள்ளத்து முன்னியவை முடிக என்று—எம்முடைய மனத்திலே நினைத்தகாரியம் நிறைவேறவேண்டும் என்று வேண்டி, யாம் நிலம் சென்னி உற வணங்கி சேர்தும்—நாம் நிலத்திற் சிரம்பொருந்தவணங்கி மனத்திற் சிந்திப்பாம் என்க.

நினைத்த காரியம் நிறைவேறும்படி கடவுளை வணங்கிச் சிந்திப்பாம் என்பது இதன் கருத்து.

"வணங்கிச் சேர்தும்" என்னும் பிரதிஞ்ஞையை "வானிடுவில்லின் வரவறியாவாய்மை" என்பது ஏதுவாய்நின்று வலியுறுத்திற்று. மங்கலாசரணமாகிய கடவுள்வாழ்த்து இடையூறுகடியும் என்று வடநூலாருங் கூறுவர்.

வானிடுவில்—இந்திரவில். வரவு என்றது வரற்பாலதாகிய இடையூற்றினை உணர்த்திநின்றது. இந்திரவில்லு இன்னவாறு தோன்றும் என்பது யாவராலும் அறியப்படமாட்டாது. அதுபோல வரற்பாலதாகிய இடையூறும் இன்னவாறுதோன்றும் என்பது அறியப்படாமையின்; அதற்கு இந்திரவில்லு உவமையாயிற்று. இக்கருத்துப் பெறுமாறு நச்சினார்க்கினியரும் "கற்றவைம்பதங்கள்" என்னும் சிந்தாமணிக்கவியுரையிலே "நூல்கள் இந்திரவில் இன்னவாறுதோன்றுமென்று அது தோன்றும் முறைமை கூறுவாகலின் அங்ஙனந்தோன்றுகின்ற தேவர்க்கு அஃதுவமையாயிற்று. இக் கருத்தானன்றே "வானிடுவில்லின் வரவறியா" என்றார் பிறரும்" என்று கூறினர்.

இனி "வரவறியாவாய்மையினால்" என்பதற்குப் "பிறக்கும் பிறப்பின்றன்மையை யுணர்ந்து சத்தியத்தினால்" என்று உரைகூறுவாருமுளர். இவ்வுரையும் பொருந்துமா? சத்தியத்தினால் என்னும் ஏது "வணங்கிச்சேர்தும்" என்னும் பிரதிஞ்ஞையை எப்படி முடிக்கும்? அஃததற்கு ஆபாசமாகாதோ? வானிடுவில்லுக்கும் வரவுக்கும் பொதுத்தன்மையாது? இக்கவி மங்கலாசரணமன்றோ! மங்கலாசரணத்துக்கும் பிறப்புக்கும் இயைபு யாது?

கடவுள் என்பது முனிவருக்கும் பிறர்க்குஞ் சேறலாற் "கானிலந் தோயா" என்பது பிறிதினியைபுநீக்கிய விசேடணம். கடவுள் என்பது ஊர், பேர், உருவம் முதலிய எல்லாங் கடந்தவன் எனப் பொருள்படும். கட—பகுதி. உள்—ஒரு பெயர்விகுதி.

முன்னியவை என்றது நன்றுமுடிதல், சென்றுபயன்படல், நின்றுநிலவல் முதலியவைகளே.

இங்ஙனம்,
அ. குமாரசுவாமிப்பிள்ளை.

---

உ

# பொருளதிகார ஆராய்ச்சி.

(௩௦௦-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

இங்ஙனம் களவொழுக்கம் நிகழாநிற்பத் தலைவி காவலின் கடுமையினாலும், காமம் கைம்மிகுதலாலும், தலைவனுக்கு இரவின்கண் வரும்போது ஊறுநேரும் என்னும் அச்சத்தாலும், பிறவற்றாலும், தான் வரைவு விரும்புவதைத் தலைவனுக்குத் தோழிவாயிலாகத் தெரிவிப்பள். அதற்குத் தலைவன், அங்ஙனம் வரைந்துகொள்ளுதற்கு இடையூறு ஒன்று மின்றேல், தலைவியின் பெற்றோர்க்கு அந்தணப் பாங்கன்வாயிலாகத் தன் எண்ணத்தைத் தெரிவிப்பன். இதற்கு முன்னரே தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும், முறையே, களவொழுக்கமாக நிகழ்ந்தவற்றைக் கூறி அறத்தொடுநிற்ப, நற்றாய் முதலியோர் அம் மணத்தினுக்கிணங்குவர். செவிலிக்குத் தோழி அறத்தொடுநிற்றலுக்கு, பத்துப்பாட்டினுள், குறிஞ்சிப்பாட்டில் "அன்னாய்வாழிவேண்டன்னையொண்ணுதல், ஒலிமென்கூந்தலென் றோழி.........நோக்கம்கலங்கிக்கையற்று ஆருச்சிறுமையள்" எனத் தொடக்கத்திற் கூறியுள்ளதை உதாரணமாகக்கொள்ளலாம்.

அன்றித் தலைவன் அப்போது வரைந்துசெல்லற்கு, தன்னாலாதல், தன்னைச் சேர்ந்தோராலாதல், தலைவியைச் சேர்ந்தோராலாதல், தன் எண்ணத்துக்கு ஊறுநேரும் எனக்கருதின், தலைவியிடத்து

வரைவிடை வைத்துத் தான் பொருள்தேடப் பிரிந்து செல்வான். தன்பிரிவைத் தலைவன் தோழிவாயிலாகத் தலைவிக்குணர்த்த, அவளும், தோழியால் ஆற்றப்பெற்று, தலைவன்வரவினை எதிர்பார்த்து நிற்பள். பிரிந்துசென்ற தலைவன், மிக்கபொருளுடன் விரைவில் திரும்பிவந்து, முன்னர்க்கூறியவாறே, தலைவியின்பெற்றோர்க்குத் தெரிவித்து அவளைக் கடிமணஞ்செய்துகொள்ளுவன்.

களவொழுக்கம் பிறரால் ஒருசிறிதும் அறியப்படாதவிடத்து மணநிகழுமாறு முன்னர்க் கூறப்பெற்றது. அங்ஙனமன்றி, தலைவனும் தலைவியும் களவிற் கூடிவருவது சிறிது சிறிதாகப்பிறர் ஐயங்கொள்ளுதற்கும் ஏதுவாம். பிறர் இத்தகைய ஐயங்கொண்டுழி, அதுபற்றித் தலைவன் தலைவியர் ஒழுக்கத்தினைக்குறித்து அலர்மொழி தோன்றினும் தோன்றும். இங்ஙனம் அலர்தோன்றியவழியும் தலைவியிடத்து வரைவுவேட்கைநிகழும். தோழியும் தலைவனிடத்து அக்காரணத்தினையும், தலைவியின் நாணமிக்கநிலையையும், தலைவியைப் பிறர் மணக்கவிருக்கின்றாரென்பதையும் எடுத்துக்காட்டிக் களவொழுக்கந்தவிர்ந்து கடிமணமுடித்துக்கொள்ளல் வேண்டுமெனக் கட்டுரைப்பாள்.

இந்நிலைமையுற்ற தலைவன், தான் அப்போதே வரைந்துகொள்ளுதற்குத் தடையொன்றுமில்லாதவிடத்து முற்கூறியவாறே தலைவியின்பெற்றோர்க்குத் தெரிவித்து, தலைவியை வதுவையாற்றிக்கொள்ளுவான்.

அன்றி, அப்போழ்தே மணஞ்செய்துகோடற்கு இயலாதவனாயிருப்பின், வேறுவழியின்மையால் தலைவியைச் செவிலி, நற்றாய், முதலியவர் அறியாவண்ணம் தன்னுடன்கொண்டு வெஞ்சுரம்கடந்து வேற்றூர்க்குச்செல்ல விரும்புவான். தலைவியும், கற்பும் நாணும் தம்முட்பொருத நெஞ்சினளாய், முதலிற் செயற்பாலது யாதெனத் தெரியாது கலங்குவள். பின்னர்,

* "உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"

* தொல்காப்பியம்.

என்று இலக்கணம் கூறியாங்கு, அவனோடு உடன்போக்குக்கிசைந்து செல்லுவள். அங்ஙனஞ்சென்ற தலைவியும் தலைவனும், கொடுப்பா ரொருவருமின்றித் தாமே மணஞ்செய்து கொள்ளினும் கொள்வர். அங்ஙனம் செய்துகொண்டாலும் அது இழுக்காது என்பது,

"கொடுப்போ ரின்றியுங் கரணமு முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான"

என்னும் சூத்திரத்தாற் கிடைக்கப்பெறும்.

அன்றி அவர்கள் சென்ற வழியில்,

"பொன்போலுங் கள்ளிப் பொரிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கிசைந்தனளே"

என இரங்கிச் செவிலியும் பிறரும், அவளைத்தேடிச் சென்று, சுரத் திடை அவளைத் தலைவனுடன் கண்டு, பிறகு இருவரையும் மீட்டு வந்து, அவ்விருவர்க்கும் வதுவை செய்வித்தலும் உண்டு.

இவ்வாறு, இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்த காலந்தொட்டு, வது வையாற்றுங்காலம் வரையில்களவொழுக்கம் நிகழும்.

*"மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்
துறந்த வொழுக்கங் கிழவோற் கில்லை"

என்பதும்,

†"களவினுட் டவிர்ச்சி கிழவோர்க்கில்லை"

என்பதும் இலக்கணமாதலால், தலைவனால் இக்களவொழுக்கத்துக்கு ஒருநாளும் இடையீடு நேரிடாது என்பது போதரும். நேரும் இடையூறுகள், தலைவியாலேயே, காவல் அதிகப்படுதலானும், தலைவி பிறவற்றால் நிகழ்ந்த குறிகளைத் தலைவன் செய்குறியென மயங்கிய தனாலும், மற்றும் பிறவற்றாலும் ஏற்படும்.

இக்களவொழுக்கத்துக்குக் காலவரையறை தொல்காப்பியனார் காட்டவில்லை. இறையனார் அகப்பொருளில்,

"களவினுட் டவிர்ச்சி வரைவி னீட்டம்
திங்க ளிரண்டி னகமென மொழிப"

---

* தொல்காப்பியம், களவியல்.

† இறையனாரகப்பொருள்.

எனச் சூத்திரம் செய்தாரேனும், நக்கீரனார், அதற்குத் தான் இயற்றிய உரையின்கண்ணே, "இஃது உலகத்து இயல்பன்று........ உலகத் தொழுக்கத்துக்குக் காலவரையறை யில்லை." என்று அதனை மறுத்துப்பேசுவதனால் களவொழுக்கத்துக்குக் காலவரையறையில்லை எனக் கொள்ளுவதே ஏற்புடைத்தாகும்.

இங்ஙனம் கூறப்பெற்ற களவொழுக்க விஷயங்களெல்லாம் தொல்காப்பியத்தின்கண்ணும், அதன் உரையின்கண்ணும், மிக விரிவாக, உளநூற் (Psychology) கொள்கைகட்கு ஒரு சிறிதும் மாறாத, விரித்துரைக்கப்பட்டுள்ளனவெனினும், ஈண்டு விரிவஞ்சி, ஆராய்ச்சிக்கு வேண்டுவனவற்றையே எடுத்துக்கொண்டு, இதுகாறும் சுருக்கமாய்க் கூறினோம்.

இனிக் களவொழுக்கம் நிகழ்ந்தபின்னர்க் கடிமணநிகழுமாறும், அங்ஙனம் மணஞ்செய்துகொண்ட காதலர் இல்லறத்தில் நின்று ஒழுகுமாறும், ஆசிரியர் வகுத்த இலக்கணங் கருவியாக ஆராயப் புகுவாம்.

---

## கற்பொழுக்கம்.

கற்பொழுக்கம் என்பது விதிப்படி மணஞ்செய்துகொண்ட தலைவனும், தலைவியும் அறநூல்களிற் கொள்ளற்பாலன என்பனவற்றைக் கொண்டும், தள்ளற்பாலன என்பனவற்றைத் தள்ளியும் இல்லறத்தின்கண்ணே வழுவாது ஒழுகுவதாம்.

"கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்று பள்ளிக்கூடச் சிறுவர்கள் பாடமோதுகின்றார்கள். கணவன் சொற்கு விரோதமின்றி நடப்பது கற்பென்பது இதன்பொருள்.

முன்னர்த் தாய்தகப்பனாலும், பின்னர்த்தலைவனாலும் இன்ன இன்னவாறு ஒழுகவேண்டுமெனத் தலைவிக்குக் கற்பிக்கப்படும் ஒழுக்கமாதலின் அது கற்பெனப் பெயர் பெற்றது. "கற்பாவது தன் கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்" என ஒரிடத்தும்,

"கொண்டானிற் சிறந்ததெய்வம் இன்றெனவும், அவனை இன்ன வாறே வழிபடுக எனவும், இருமுதுகுரவர் கற்பித்தலானும், அந்தணர் திறத்தும், சான்றோர் தேத்தும், ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் ஒழுகும் ஒழுக்கம் தலைமகன்கற்பித்தலானும் கற்பாயிற்று." எனப் பிறிதோரிடத்தும், " இவளை இன்னவாறு பாதுகாப்பாய் என வும், இவற்கு இன்னவாறேநீ குற்றேவல் செய்தொழுகெனவும், அங்கியங்கடவுள் அறிகுறியாக மந்திரவகையாற் கற்பிக்கப்படுதலின், அத்தொழிலைக் கற்பென்றார்" என மற்றுமோரிடத்தும் நச்சினார்க் கினியர் நவின்று சென்றனர். இக்கற்பின் தூய்மையினை நம் தமிழ்ப் புலவர்கள் மிகச்சிறப்பாகப் பலவிடங்களிற் பாராட்டியிருக்கின்றனர்.

" பெண்ணிற் பெருந்தக்க யாவுளகற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின் "

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை "

என்றார் வள்ளுவனார்.

"உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று "

எனத்தொல்காப்பியனாரும் கூறினர்.

கற்பின்சிறப்பு இத்தன்மைத்தாக, இனிக்களவொழுக்கம் முடிந்த பின்னர், தலைவன் தலைவியர் இல்லறம் நடத்துதற்குப் புகுமுன்னர்ச் செய்துகொள்ளும் மணத்தினது இயல்பு கூறுவோம்.

முன்னர் எண்வகை மணங்கள் இன்னவென எடுத்துச் சொல் லப்பட்டன. அவற்றை,

" அந்தணருமறைமன்றலெட்டினுள் "

என இறையனார் அகப்பொருளினும்,

" மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள் "

எனத் தொல்காப்பியத்திலும், இம்மணங்கள் மறையோர் வகுத்தன என வெளிப்படையாகக் கூறப்பட்டிருக்கின்றன.

மற்றும்,

"பொய்யுங் களவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப"

என்னும் சூத்திரத்தாலும், அதற்கு நச்சினர்க்கினியர் "முதனூலாசிரியர் கூறியவாறே களவுநிகழ்ந்தபின்னர்க் கற்புநிகழ்ந்தவாறு கூறித்......தாம் நூல் செய்கிற காலத்துப் பொய்யும் வழுவும் பற்றி, இருடிகள் கரணம்யாத்தவாறுங் கூறினர். அக்களவின்வழி நிகழ்ந்த கற்பும் கோடற்கென்றுணர்க." என்றுரைகூறியதாலும், இம்மண வேறுபாடுகளும், அவற்றுக்கு விதித்துள்ள விதிகளும், ஆரியர்களால் தமிழ்நாட்டில், வழக்கம்பெறுவன வாயினஎனக்கொள்ளக் கிடக்கின்றது.

எனவே, 'பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்' கரணம் ஏற்பட்டதென்றால், கந்தருவத்திற்குச் சிறந்தகளவு நீக்கப்பட்டதோ என்றும், அங்ஙனம் களவொழுக்கம் நிகழுமேல், அது 'ஐயர் யாத்த' கரணவிதிப்படி கடியற்பாலதாயிற்றே என்றும் ஐயப்பாடு நிகழ்தல் கூடும். அக்களவின்வழி நிகழ்ந்த கற்பும் கோடற்கு" என மேலே காட்டிய நச்சினர்க்கினியர் உரையினுற் களவொழுக்கந் தள்ளப்படவில்லை யென்பதும், "ஒருவனையும் ஒருத்தியையும் எதிர் நிறீஇ, இவனைக்கொள்ள இயைதியோ நீ எனவும், இவற்குக் கொடுப்ப இயைதியோநீ எனவும் இருமுதுகுரவர் கேட்டவழி, இவர் கரந்தவுள்ளத்தான் இயைந்தவழிக்கொடுப்ப ஆகலின், அதுதானே ஒருவகையிற் கந்தருவ வழக்கமும் ஆம்" என மீண்டும் அவர் கூறுவதால் மணமக்கள் சம்மதம் பெற்றே மணவினை நிகழ்ந்ததென்பதும் பெறப்படும்.

இப்படி மணஞ்செய்யும்போது தலைமகன் தலைவிக்கு அணிகலன் பரிசமாக அளித்து, பெண்கொடுத்தற் குரியவர்களாகிய "தாயொடு பிறந்தாரும், தன்னையரும், தாயத்தாரும் ஆசிரியனும்" முதலியோர், பெண்ணைக்கொடுக்கத் தான் கொள்ளுவான். இதனால், இக்காலத்து, மாப்பிள்ளைகளுக்கு வரதக்ஷிணைகொடுக்கும்வழக்கம் அக்காலத்து இல்லை என்பது தெரியவரும். மற்றும் "முலைவிலை செப்பல்", "கன்யாசுல்கம்" முதலிய தொடர்மொழிகளால், பெண்ணுக்கே மணமகன் முற்காலத்தில் பரிசம் அளித்தனன் என்பது தெள்ளிதின் உணரலாகும். களவின் கண்ணே தலைவனேடு உடன் போக்கிற்குத் தலைவி

இணங்கி, வேற்றூர்க்குப் போம்போது, அங்குக் கொடுக்கும் மரபினர் ஒருவருமிலராதல்பற்றி, பிறரால் கொடுக்கப் பெறுமலே, தான் தலைவனை மணந்துகொள்ளுதலும் அமையும், இதற்குச் சூத்திரம்,

"கொடுப்போ ரின்றியுங் கரணமு முண்டே
புணர்ந்துடன் போகிய காலை யான" என்பது.

இதுகாறுங் கூறியவாற்றால் மணவினை நிகழுங்கால் மணமகள் காம இன்பந்துய்க்கத் தக்க பிராயத்தளாய் இருத்தல்வேண்டுமென்பது அறிந்துகொள்ளற்பாலதெனினும், வெளிப்படையாகவே, நச்சினார்க்கினியர் கல்யாணம் நடக்கும் முதல்

"மூன்று இரவில் முயக்கமின்றி........ஒழுகி.......நிகழ்ந்த மனக்குறை தீரக் கூடிய கூட்டத்தின்கண்; அது நாலாநாள் இரவின் கண்ணதாகும்" எனவும், தலைவன் தலைவிக்குக் கூறுங் கூற்றாக, அவ்வுரையாசிரியரே மீண்டும், "முதனாள் தண்கதிர்ச்செல்வற்கும், இரண்டாநாள் கந்தருவருக்கும், பின்னாள் அங்கியங்கடவுட்கும் அளித்து, நான்கா நாள் அங்கியங்கடவுள் எனக்கு நின்னையளிப்ப, நான் நுகர வேண்டியதாயிற்று என வேதங் கூறுதலால்" எனவும் கூறியதனால், தலைவி தலைவனால் முயங்கி இன்பம் நுகரும் பருவத்தினள் ஆதல் வேண்டும் என்பது போதரும். ஆதலில் இக்காலத்துத் தமிழர்களிடத்துப் பெரிதும் காணப்படும் 'பால்யவிவாஹம்' என்பது அக்காலத்து வழங்கவில்லை என்பது இவ்வாராய்ச்சியினால் அறியப்பெறும்.

(தொடரும்.)

வே. முத்துஸாமி ஐயன்.



## ஆழ்வார் திருநகரிச் சாசநங்கள்.

### XIII.

நம்மாழ்வார் ஸந்நிதி. வடக்குப்ரகாரம். மத்தியபாகம்.

காலம் :— ஹை

விஷயம் :— ஆழ்வார் மார்கழித்திருவத்யயந உத்ஸவத்துக்கு அமித குணவளநாட்டுக் கழுதூர் தானம்.

(1) ஸ்வஸ்திஸ்ரீ மாடக்குளக் கீழ்மதுரைக் கோயிற் பள்ளியறைக்கு ......... டடி ... ஸ்வாமிகள் கஷாயலநம் செப்வா (?) ......... பரும செய்ய ...........

(2) திருப்படிமாற் றுள்ளிட்டு வேண்டுவனவுக்கு அமிதகுணவ ......... (ற்குளத்து நீர்நக்கலுக்கு மேற்கும் தென்னெல்லை அம்புளிக்குளத்து எல்லைக்கு வடக்கு)

(3) குளத்து வயலுக்கும் வழிக்கும் தெற்கும் இன்னுன் ......... (மூன்றுவதின் எதிர் எழாமாண்டுமுதல் அந்தராயமும்காரிய வாராட்சியும் கண்டாள்)

(4) ணுமென்று பல்லவராயர் நமக்குச் சொன்னமையில் இவ்...... வேண்டுவனவுக்கு அமிதகுணவளநாட்டு கீழ்வகைக் கழுது ருக்குக் கீழெல்லை)

(5) லை அப்பன்குளத்து எல்லைக்கு வடக்கும் மேலெல்லை...லல... .........(க்கும் வழிக்கும் தெற்கும் இந்நான்கெல்லைக்குள்பட்ட ந—ச நிலமுங் கருஞ்செ)

(6) யமுங் காரியவாராட்ச் தண்டாளன்தரும் அச்சும் உ (........ந்த ரச் சொன்னேம் இப்படி சந்த்ராதித்தவற்செல்வதாக கல்லிலும் செம்பிலும் வெட்)...............................

(7) காமனுன வில்லவராஜன் எழுத்து. ... அருளிச்செயல் திரு வழுதிவளநாட்டுத் திருநகரி (?) பொலிஞ்சுநின்றருளிய பரம ஸ்வாமிகள் கோயில் ந—செய்வானுக்கும் ஸ்ரீவைஷ்ணவருக்கும் இவ்வாழ்வார்...... ...த.........வேண்டுவனவுக்கு அமிதகு

(8) ணவளநாட்டுக் கீழ்வகைக் கழுதூர்க்குக் கீழெல்லை மறுக்கத்து வயலுக்கும் புற்குளத்து நீர்நக்கலுக்கு மேற்கும் தென்னெல்லை அம்பு.........து எல்லைக்கு வடக்கும் மேலெல்லை கல்லனூர் குளத்து எல்லைக்குக் கிழக்கும் வடவெல்லை கண்ணங்குளத்து வயலுக்கும் வழிக்கும்

(9) தெற்கும் இந் நான்கெல்லைக்குள்பட்ட நீர்நிலமும் கருஞ்செய் புன்செய்யும் பதின்மூன்றுவதின் எதிர்ஏழாமாண்டுமுதல் ...... ராயமுங் காரியவாராட்சியும் தண்டாளன் தரும் அச்சும் உள் படத் தேவதான இறையிலியாக இடப்பெறவேணுமென்று பல்லவராயர் நமக்கு

(10) சொன்னமையில் இவ்வாழ்வார் மார்கழித்திருவத்யயநத்துக்குத் திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டுவனவுக்கு அமிதகுணவள நாட்டுக் கி...க்கழுதூர்க்குக் கீழெல்லை மறுக்கத்துவயலுக்கும் புற்குளத்து நீர்நக்கலுக்கு மேற்கும் தென்னெல்லை அம்புளிக் குளத்து எல்லைக்கு வடக்கும் மேலெல்

(11) லை கல்லனூர்குளத்து எல்லைக்குக் கிழக்கும் வடவெல்லை கண்ணங்குளத்துவயலுக்கும் வழிக்கும் தெற்கும் இந்நான்கெல்லைக்கு ......நீர்நிலமும் கருஞ்செய்யும் பதின்மூன்றுவதன் எதிர் ஏழாமாண்டுமுதல் அந்தராயமும் காரியவாராட்சியும் தண்டாளன் தரும் அச்சும்உள்படத்தேவ

(12) தான இறையிலியாய் இறுப்பதாக இட்டு நம் கேழ்வியும் தரச் சொன்னோம் இப்படி சந்த்ராதித்தவற் செல்வதாகக் கல்லிலும் செம்பிலும் வெ.........க்கொள்க இவை செவ்விருக்கைநாட்டு அச்சுதவயல் அரையன் தெ(ய்)வச்சிலையானான அரிந்தவ(மி?)ன் விழுப்பரையன் எழுத்து இவை செவ்விருக்கைநா

(13) ட்டு அச்சுதவயல் அரைபன் நாராயணதேவனான பாண்டிய தரையன் எழுத்து.

A. M. S.

---

# XIV.

## ஷை வடக்குப்ராகாரம் மத்தியபாகம்.

காலம். ஜடாவர்மன் குலசேகரதேவற்கு யாண்டு ௰௩.

விஷயம். சுவாமி பொலிஞ்சுநின்றபிரானுக்கு சிலர் கழுநூர் விற்றுக்கொடுத்தது.

சீர்மெய்க்கீர்த்தி (அகவல்).

......

(13) பூவினிற் கிளத்தி மேவி வீற்றிருப்ப
மேனில மாதர் நிதபிநபனா (?)
......போ-ர்-மடந்தை-செயப்புயத்-திருப்ப
மாக்க(லை)மடந்தை வாக்கினில் விளங்க
திசைஇரு நான்கும் இளநிலா வெறிப்ப,
மனுநெறி வளர மறைநெறி திகழ
சுடர்நெ(14)றி சமையங்களநர்(?) திளைப்ப
கான வேங்கை மைவில் லுடன்துரந்து
மீனவன் சிங்கா சனத்து வீற்றிருப்ப
என்...சுமந்த ஏழ்பொழில் வெண்குடை
...............................நிழற்ற
செங்கோல்நடப்ப......................
..................(15)றையபணிய
இருநேமி மரைவு மொருநேமி ஓங்க
இன்னமு தாகில(?) இயலிசைநாடகம்
மன்னவர் மாமணி முடிசூடி வெற்பென

(உரை நடை).

ஓங்கிய வீரசிங்காசனத்து கற்பகநிழற்கீழ்கலைவல...............

(16) ர்தருளிய ஸ்ரீகோச்சடையபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி கள் ஸ்ரீகுலசேகரதேவற்கு யாண்டு௰௩வதி எதிர்ஏழாமாண்டு இடப நா(யி)ற்றுப்பதிற்னலாந்தியதியும் பூவபக்கத்துதுவ யோ தசியும்.............................................................

(17) குணவளநாட்டு அக்கிரமகோபநல்லூர் அரையன் குலசேகரனன தெ(ன்)னவன் கலிங்கத்தரையனும் அறந்தாங்கிகணவதியும் கோன்புலிக்குட்டியும் அப்பியாண்டானும் உய்யவந்தான் நக்கப...

(18) யோமாய் ஆண்டு அநுபவித்துவருகிற கழுதூர் இப்பொலிஞ்சு நின்ற பிரானுக்குத் திருவிடையாட்டமாக முன்பே வரியிலே இட்டுவந்து கீழ்வகை நாடாய் திருவாழிக்கல்லு நாட்டி குடுத் தமையில்.......................................................

(19) ள்ளேக்கின கிணறும் மீன்படுபள்ளமும் தேன்படுபொதும்பும் உடும்பொடியும் அமை்த(?)வளியும் புற்றுந் தெற்றியும் நத்தமும் நத்தப்பாழும் சுடுகாடும் படுதுறையும் மற்றும் ஏற்பேற்பட்....

(20) குலசேகரன்னன தென்னவன் கலிங்கத்தரையனும் அறந் தாங்கி கணவதியும் கோள்புலிக்குட்டியும் அப்பி ஆண்டானும் க—ங்—கான—சான கலாவ (?) சீராமதேவன்சக்கரபாணியும் இவ்வனைவோமும் இப்படி விற்றுக்குடுத்த எங்கள்ளோபாதி செம்பாதி (?)

(21) யும் எங்களில் விசைந்த விலைப்பொருளுங் குழம்புபிள்ளை பாண் டியதரையற்கு நாங்கள் ஒற்றிவைச்ச ஒற்றிக்கலத்தில் பட்ட ஆயச்... விலைப்பொருளாகச் சாத்தி நீக்கி தம்மிலிசைந்த விலைப் பொருள் எல்லாம் கையிலே அறக்கொண்டுவிற்று விலைப்பிர மாணம்பண்ணிக்குடுத்தோம் பொலிஞ்சுநின்றபிரான் திருநாம த்திலே இவ்வனைவோமும் இப்படிவிற்றுக்குடுத்த எங்கள் ...... இவ்விலை ஓலையும் பொருள்ச்—சல்ஓலையு ஆவுதாகவும் இதுவல் லது வேறுவிலை மாவறுதிப்பொருளாசறுதி

(23) ப்பொருள்ச்செலவோலை காட்டவுங் கடவதன்றி விலைக்குறவிற்று பொருளறக்கொண்டு விற்று விலைப்பிரமாணம்பண்ணிக்குடுத் தோம் பொலிஞ்சு..........................ல் அரையன் குலை சேகரனன தென்னவன்கலிங்கத்தரையனும் அறந்தாங்கி கண வதியும் கோள்புலிக்குட்டியு.....................

(24) அப்பி ஆண்டானும் உய்யவந்தான்நக்கப்பட்டனும் சீராமதே வன்சக்கரபாணியும் இவ்வனைவோமும் இப்படிசம்மதித்து யிவ்

வி . யன் குலசேகரனான தென்னவன் கலிங்கத்தரையன் எழுத்து இப்படி அறிவேன் தென்னவன் ஆதித்த சூளாமணி மூவே

(25) ந்தவேளான் எழுத்து இவை உய்யவந்தான் நக்கப்பட்டன் எழுத்து. இப்படிக் கிவை சிராமதேவன் சக்கரபாணி எழுத்து. இப்படி சம்மதித்துவிற்று..........பிரமாணம் எழுதினமைக்கு இவை (?) கோள்புலிக்குட்டி எழுத்து........ாநது அப்பி ஆண்டான் தற்குறிவாதனமைக்குதற்கு (?)

(26) பாட்டே ஆச (?) திருவாசல் ஆரியப்பட்ட மாதவன் வாசுதேவன் எழுத்து. இவை அறந்தாங்கி கணவதி எழுத்து.

---

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,
நேஷநல்-ஹைஸ்கூல், திருச்சிராப்பள்ளி.

---

உ

# திருக்குறள்,

## "பொருள்" மயக்கம்.

---

"பிறன் பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்கள் இல்"

என்னும் திருக்குறளில் "பொருள்" என்னுமொழிகள் ஈண்டு ஆராய்ச்சி விஷயம்.

ஸ்ரீ சுப்பிரமணிய ஆசாரியர் அவர்கள் இயற்றிய ஔவையார் சரித்திரம் முதலாம் பக்கத்தில் "அநேகர் பெண்களை ஆடுமாடுகளாகவும் அவைகள் தினவு நீங்க உராய்ந்துகொள்ளும் கட்டுத்தறிகளாகவும் நினைத்துவருகிறார்கள். இக்குற்றமுடைய கொள்கை பாமரர்கள்மட்டுமே நில்லாமல் பாவலர்களுள் முதற்பாவலராகிய திருவள்ளுவ நாயனார் நெஞ்சத்தையுமன்றோபற்றியது! அதன் வலியேவலி!

அதன் வீரமே வீரம்! 'பிறனில்விழையாமை' என்னும் குறளதிகாரத்தின் கீழ்ப்பிறன்மனையாள் என்று சொல்லவந்தவர் 'பிறன் பொருளாள்' என்று கூறியிருக்கிறார். இதற்குப் 'பிறர்க்குப்பொருளாந் தன்மையுடையாள்' என்றுபரிமேழலகரும் பொருள் கூறியிருக்கிறார்" என்றும் அப்பக்கத்தின் அடியில் உடுக்குறியிட்டு "பொருளாள்' என்பதற்கு அறத்திற்கும் இன்பத்திற்கும் கருவியாகிய சிறப்புடைய பொருள் போன்றவள் என்று பொருள் கொள்வாருமுளர்" என்றும் எழுதியுள்ளார்.

இப்புத்தகமானது எனக்கு ஒரு வாரத்திற்கு முன் கிடைத்தது. இதில் ஆசாரியர் அவர்கள் திருவள்ளுவர் கருத்து மாறுபட்டதே என்பதைப்பற்றி மனம்வருந்துகையில் ஒருவாறு எனக்கும் ஐய நிகழ்ந்து ஆராய்வுழி திருவள்ளுவர் கருத்தை உற்றுநோக்காத குறையேயன்றி வேறின்றெனப் புலப்படுகின்றது. அதனை ஒருவாறு விளக்குவாம்.

"வாழ்க்கைத்துணைநலம்" என்னும் அதிகாரத்தில் திருக்குறள் ஆசிரியர் பெண்களின் இலக்கணத்தை எடுத்துக்கூறுவதில் "தற்காத்துத்தற்கொண்டாற்பேணித் தகைசான்ற, சொற்காத்துச்சோர்விலாள்பெண்" என்றருளிச்செய்தனர். "தற்கொண்டாற்பேணி" என்பதால் இனிய ஆகாரத்தாலும் இனிய ஒழுக்கத்தாலும் தன் கணவனுடைய உடலையும் உயிர் ஒழுக்கத்தையும் பேணுதலும், "தகைசான்றசொற்காத்து" என்பதால் உபயகுலத்திற்கும் மேம்பட்டதாகிய கீர்த்தியை நிலைநிறுத்தலுமாகிய தன்மைகள் பெண்களுக்கு உரிமையாக்கப்பட்டிருத்தலால், ஆசாரியவர்கள் அபிப்பிராயப்படி சாமாந்யமான அநுபவப் பொருள்களில் ஒன்றாக மகளிர் மதிக்கப்பட்டவரல்லர் என்பது திண்ணம்.

ஆகவே "பொருள்" எனுமொழிக்கு உரிய கருத்துகளை ஆராயின் திருவள்ளுவர் கருத்து வெள்ளிடை விலங்கல்போல விளங்குவதாகும். நிற்க,

"பொருள்" எனுமொழி பலபொருள் குறித்த ஒரு சொல்லேயாம். (1) "பொருள் சேர்புகழ்" (2) "பொருளற்றார் பூப்பர்"

(3) "தம்பொருள் என்பதம்மக்கள்" (4) "என்பொருளவாகச் செலச்சொல்லி" (5) "சினத்தைப்பொருளென்று கொண்டவன்" என்னும் திருக்குறள் உறுப்புகளில் பிரயோகமான "பொருள்" என்னு மொழியானது முறையே (1) மெய்ம்மை (2) செல்வம் (3) மக்கள் (4) அர்த்தம் (5) கருதுபொருள் அல்லது பயன் எனப் பலபடப் பொருள்படுகின்றது. இவற்றுள் (1) மெய்ம்மை என்னும் பொருளுக் கேற்ப வடமொழியில் உள்ள "ஸத்" என்னும் பதத்திற்கு 'பொருள்' என்னும் மொழி தமிழ்ப் பிரதிபதமாகும். ஆகவே "ஸதீ" என்னும் வடமொழிக்கு "பொருளாள்" என்பது தமிழ்ப்பிரதி பதமாகலாம். ஆகவே "பொருளாள்" என்பது - ஸதீ அல்லது கற்புடைய மனைவி எனப்படும், அல்லது - (5) பயன் எனும் பொருளில்—

அகரமுதல - ஆதிபகவன் முதற்று என்பனபோல "பிறன் பொருளாள்" என்பதைத் தொடர்மொழியாக்கி பிறனை (உயர்வற உயர்) பொருளாக அல்லது கருதுபொருளாக அல்லது பயனாக உடையவளெனப் பொருள்கொண்டு "தெய்வந்தொழஅள் கொழு நற் றொழுதெழுவாள் என்ற திருக்குறளுக்கேற்பப் பொருத்திக்காட் டவுங்கூடும்.

அவ்வாறே "அறம்பொருள் கண்டார் என்பதும் அறத்தைப் பொருளாகக்கொண்டவர் எனப் பொருட்படுத்தி இதற்கு அடுத்த குறளாகிய "அறன்கடை நின்றாருளெல்லாம்" என்பதில் அடங்கிய பொருளுக்குப் பொருத்திக்காட்டுதல் உசிதமாகின்றது. ஆதலால் 'அறம்பொருள்கண்டார்" என்பதில் பொருள் கண்டார் என்பதற்கு பொருள் நூலை ஆராய்ந்தறிந்தவர் எனப் பொருள்கோடல் ஈண் டைக்கு ஏற்குமோ என்பது ஆராயத்தக்கது.

இலக்குமணப்போற்றி,

12-9-13. தச்சநல்லூர்.

---

உ

ஸ்ரீமான்

# பொ. பாண்டித்துரைத்தேவர்

## தமிழ்ப்புத்தகசாலை. (சேலம்.)

———:(o):———

உயர்தனிச் செம்மொழியாகிய அமிழ்தினுமினிய நந்தமிழ் மொழி நாளுஞ் செழித்தோங்க, மதுரையம்பதியில் நான்காஞ்சங்க மொன்றுநிறுவி, அக்கிராசனாதிபதியாயமர்ந்தருளி, தம்வாழ்நாண் முழுமையும் மனமொழி மெய்களாற் பெரிதுமுழைத்துத் தமிழுலகம் செய்த தவக்குறையான் விண்ணுலகப் பெருவாழ்வெய்திய ஸ்ரீமான். பொ. பாண்டித்துரைத் தேவரவர்களைப்பற்றி, சேலநகரில் நடந் தேறிய அநுதாபக்கூட்டத்தில், அன்னவர் ஞாபகச்சின்னமாக ஒரு தமிழ்ப்புத்தகசாலை இந்நகரில் அமைத்தல் வேண்டுமென்று தீர்மா னிக்கப்பட்ட விஷயம் முன்னரே நம் 'செந்தமிழ்ப்' பத்திரிகையில் வெளிப்போந்தது அன்பரனைவரும் அறிந்ததே.

அத்தீர்மானத்தை நிறைவேற்றற் கேற்பட்ட காரியநிர்வாக சபையின் காரியதரிசியாகிய சேலம் முனிசிபல் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் பிர்ம்மஸ்ரீ டி. எஸ். நடராஜ ஐயரவர்கள் சுமார் ஒன்றரை வருடமாக நகரமாந்தர்களிடமிருந்து சேகரித்த 400 ரூபாய்களுக்கு இலக்கண இலக்கியங்கள், வசன நூல்கள், இக்காலத்தில்வெளிப்போந் துள்ள நவீனங்களென்றுவழங்கும் நாவல்கள் முதலியவற்றுள் முக்கியமான புத்தகங்களை வாங்கி, 'பாண்டித்துரைத்தேவர் தமிழ்ப் புத்தகசாலை'த் திறப்புக்கொண்டாட்டத்தைக் கடந்த ஆகஸ்டுமீ 28உ வியாழக்கிழமையன்று மாலை (மணிக்குச் சேலம் காலேஜில் யாவரும் வியந்து களிப்புறும்வண்ணம் நன்குநடைபெறச் சேய்தனர். அப்பெருஞ்சபை, இந்தியா சட்ட நிரூபணசபை யங்கத்தினராகிய கனம் சி. விஜயராகவாசாரியாரவர்களும், சென்னை சட்ட நிரூபண சபை யங்கத்தினராகிய கனம் பி. வி. நரசிம்மையரவர்களும், சேலம் காலேஜ் தலைமையதிகாரியும், தமிழபிமானியும், காரிய நிர்வாக சபை யின் அக்கிராசனாதிபதியுமாகிய மிஸ்டர். ஸ்பென்ஸர் ஏ. ஷுட்டி.

துரையவர்களும், ஏனைய கனதனவான்களும் எழுந்தருளியிருந்தமை யின், பாண்டித்துரைத்தேவரின் என்றுமழியாப் பெரும் புகழேன வழகுபெற்றுத் திகழ்ந்தோங்கியது. அம்மகானின் சிவஞானத்திற் கேற்ப டிப்டிகலெக்ட்டர் மகா-ா-ா-ஸ்ரீ ராய்பஹதூர் டி. என். சிவ ஞானம் பிள்ளையவர்கள் சபாநாயகராக வீற்றிருந்து சிறப்பித்தனர்.

முதலில் கடவுள் வணக்கம் முடிவு பெற்றதும், சபாநாயகர் முன்னுரையாக, தமிழ்ப்புத்தகசாலையின் பெருமையையும், சர்வகலா சங்கத்தார் தமிழ்முதலிய தாய்மொழிகளைப் புறக்கணிப்பினும், காருண்ய அரசாங்கத்தார் அவ்வாறின்றி மிக்க அவாவுடையராயிருக் கின்றனரென்றும், தற்கால விர்த்திக்கேற்பத் தமிழகராதி யொன்று பதிப்பிக்க இலட்சரூபா அவர்கள் அளித்ததே அவர்கள் அவாவினைக் காட்ட வல்ல அறிகுறியாமென்றும் புகன்று ஆசனத்தமர்ந்தனர்.

பின்னர், காரியதரிசி மிஸ்டர் டி. எஸ். நடராஜ ஐயர், பாண்டித் துரைத்தேவர் தமிழகத்திற்குப் புரிந்துள்ள அரியபெரியவுபகாரத்தை யும், அவரது புகழுடம்பாகிய தமிழ்ப்புத்தகசாலையின் வரலாற்றினை யும், தனிக்கட்டடங்கட்டித் தமிழ்ப்புத்தகசாலையைத் தழைத்தோங் கச் செய்வது இந்நகரமாந்தரின் இன்றியமையாக் கடமையென்பதை யும் வற்புறுத்திக்கூறி, நம்தாய்மொழிகட்குச் சர்வகலாசாலையாரால் நேர்ந்துள்ள பெருங்குறையை அருளுடையரசாங்கத்தார் விரைவில் அகற்றுவரென்றும், அதற்கு அநுகுணமாக, சட்டநிரூபண சபை யங்கத்தினராய் விளங்கும் மகான்களும் இவ்வரிய சமயத்தை வீணாக் காது அரசாங்கத்திற்கு எடுத்துரைத்துத் தேசோபகாரிகளாகத் துலங்கவேண்டுமென்றும் உற்சாகத்துடன் உபந்நியாசித்தார்.'

அதன் பிறகு, காரியநிர்வாகசபை யக்கிராசனாதிபதியாகிய துரையவர்கள் முன்வந்து, தமிழ்மொழி உலகிலுள்ள சிறந்த பாஷை களில் ஒன்றென்பதற்கோரையமில்லையெனவும், தமக்குத் தமிழினிடத் துள்ள தவலருமன்பிற்கு அளவேயில்லை யெனவும், ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியர், மில்டன்முதலிய நூல்களைக்கற்றுக் களிப்பதுபோல் தமிழினும் கம்பர், திருவள்ளுவர் முதலிய அரியநூல்களை ஆராய்ந்து உணர்திப்பது அறிவுடையோர் கடமையெனவும், இக்கலாசாலையி லின்று மதுரைத் தமிழ்ச்சங்கப் பரீக்ஷைக்குச் சென்ற மாணவர்கள்

வருடந்தோறும் இராஜதானிக்கு முதலாகத்தேறிப் பரிசுபெற்றுள்ளாரெனவும், பாண்டித்துரைத்தேவர் ஞாபகச்சின்னமாக இப்புத்தகசாலை இங்கு ஏற்பட்டதைப்பற்றித் தமக்குண்டாகிய பேரானந்தத்திற்கு அளவேயில்லையெனவும், தமிழபிமானம் பொங்கித்ததும்பப் பேசினர்.

பின்னர் சபாநாயகர் தம்திருக்கையால் தமிழ்ப் புத்தகசாலையைப் பேரானந்தத்துடன் கனவான்கள் கரகோஷஞ் செய்யவும், மாணவர்கள் களிகொண்டு ஆரவாரிக்கவும் திறந்தருளினர், உடனே 1912-ம் ஹூத்தில் தமிழ்ச்சங்கப் பரீக்ஷையில் இராஜதானிக்கு முதலாகத் தேறிய மாணவர் மிஸ்டர். வி. டி. கோதண்டராமையருக்குப் பதக்கப் பரிசு அன்னவரால் அளிக்கப்பட்டது.

கடைசியாக, சபாநாயகர் முடிவுரை கூறத்தொடங்கி, இப்புத்தகசாலையைப்பற்றித் தமக்குண்டாயகளிப்பாங்கடலுக்கோர் கரையிலதென்றும், இதிலுள்ள புத்தகங்களைக் கவனித்ததில் மாணவர்கள் மாத்திரமன்றிப் பெரியோரும் படித்தறிதற்குரிய பலபுத்தகங்கள் பொதிந்துளவென்றும், நம் நண்பர் மிஸ்டர். நடராஜ ஐயரவர்கள் மிகச்சிரமமெடுத்துக்கொண்டு இவ்வரிய செயலைச் செய்ததற்கு நாமெல்லோரும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேமென்றும், கனதனவான்கள் இரண்டு பீரோக்களை இருபது பீரோக்களாக்கி விடுவார்களென்பது நிச்சயமென்றும் அன்பு மீக்கூரப் பகர்ந்தனர்.

சபாநாயகர்க்கும், துரையவர்களுக்கும், காரியதரிசிக்கும் மலர்மாலையணிந்து, சபையோரனைவர்க்குங் கற்கண்டு வழங்கியபின்னர் சபைகலைந்தது. சுபம்.

இங்ஙனம்
தமிழ்விருப்பன்,
சேலம்.

---

# மதிப்புரை

---

1. திருக்குறள் வசனம்:—இது மதுரைத்தமிழ்ச்சங்க வித்வான் ஸ்ரீமத், மு ரா. அருணாசலக்கவிராயரவர்களால் திருக்குறளினுரைப் பொருளைத் தழுவித் தெளிவான தமிழ்நடையி லெழுதப்பட்டிருக் கிறது. திருக்குறட்பொருளை முறையா லுரையாலோதியுணர வல்லா ரல்லா ரெல்லோரும் அதனையெளிதிலுணர்தற் கிது பெரிது முபகார மாகு மென்ப தெமதுதுணிவு.

இப்புத்தகத்தைப்பற்றிப் பிரபலபண்டிதர்களா லெழுதப்பட்ட அபிப்பிராய பத்திரங்கள் பல இப்புத்தகத்திற் சேர்க்கப்பட்டிருக்கின் றன, அவற்றாலும் இப்புத்தகத்தின் அருமை அறியக்கிடக்கின்றது. இலக்கண நூல்கள் வசனநடையி லெழுதப்பட்டவையே இக் காலத்து மாணவர்களுக்கு மிகப்பயன்படுதல்போல இதுவும் மிகவும் பயன்படத்தக்கதென்பதிற் சிறிதுமையமில்லை. இதன் விலை ரூபா 1—4—0; தபாற் செலவு வேறு வேண்டுவோர் ஸ்ரீமத்—மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள், வடக்காவணிமூலவீதி, மதுரை. என்ற விலாசமெழுதிப் பெறலாம்'

---

2. தமிழன்:—இது, மதுரைத் தமிழ்ச்சங்கத்து உப அக்கிராச னாதிபதியும், தமிழபிமானியும், கனதனவானுமான கானாடுகாத்தான் ஸ்ரீமாந் S. R. M. C. T. பேத்தாச்சிசெட்டியார் அவர்கள் பொருளுத வியால் திருவநந்தபுரம் சென்ற்ஜோஸப்ஸ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டி தர் மகா-ா-ா ஸ்ரீ முத்துஸ்வாமிப்பிள்ளை அவர்கள் பத்திராதிபத்தியத் தில் நடைபெறும் ஒருமாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை.

இதில், தமிழ்மொழி வளர்ச்சிக்குரிய இலக்கணம், இலக்கியம், சரித்திரம், சாத்திரம் இவற்றின் சம்பந்தமான விடயங்களும், ஆங் கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட செய்யுட்களும், நூதன கவி களும், மகான்களின் சரித்திரங்களும், அவர்கள் வாய்மொழிகளும், சிறுகதைகளும், மாணவர்க்குரிய விஷயங்களும், போட்டி வியாசங் களும், சமாசாரத்திரட்டும் முதலிய பல விஷயங்கள் வெளியிடப்படு

மென்று தெரிந்து உவப்படைகிறேம், முதற்பிரதி விஜயதசமியன்று (அக்டோபர்மீ 9௳) வெளிவருமென்றும், இப்பத்திரிகைக்கு வருடம் ஒன்றுக்குப் போஷகர்கள் 4-ரூபாயும் சந்தாதார்கள் 2 ரூபாயும் வெளிநாட்டுச் சந்தாதார்கள் 3-ரூபாயுமாகச் செலுத்தவேண்டுமென்றும், உபந்யாஸத்தில் ஜயம்பெறும் மாணவர்களுக்கு உபந்நியாசத்தின் தரத்திற்கேற்பத் தமிழ்ப்புத்தகங்கள் பரிசளிக்கப்படுமென்றும், முதன் மூன்றுமாதங்களுக்குள் ஒருவருடச்சந்தா முன்னதாகச் செலுத்துமவர்களுக்கும் போஷகர்களுக்கும் 8 அணு விலையுள்ள கற்பகவல்லியென்னும் நாவல் இனுமாகக் கொடுக்கப்படுமென்றும், பழக்கமில்லாதவர்களுக்கு முன்பணமின்றிப் பத்திரிகை யனுப்பப் படமாட்டாதென்றும் நோட்டீஸில் கண்டிருக்கிறது. இப்பத்திரிகையைத் தமிழபிமானிகளெல்லோரும் வாங்கி ஆதரித்து வருவார்களென நம்புகிறேம்.

---

3. வண்ணைவைத்தீசர் ஒருதுறைக்கோவை :— இது வண்ணைநகர் வித்வான் ஸ்ரீமத். க. வைத்தியலிங்கம்பிள்ளை அவர்களால், அகப்பொருட்டுறையுள்"இடையூறுகிளத்தல்"என்னும் துறையின் ஒருபகுதியை விடயமாகக்கொண்டு நூறுகட்டளைக்கலித்துறைச் செய்யுளாற் செவ்விதாகப்பாடப்பட்டிருக்கிறது. இதற்குப் பல புலவர்களாற் கொடுக்கப்பட்ட சிறப்புப்பாயிரச் செய்யுள்கள் பலவுள்ள, அவற்றுலும் இதன் சிறப்புநன்கு விளங்கும். இதன் விலை 30 சதம்.

---

4. "அத்தாட்சிப்பிரமாண சூத்திரம்" என்னும் சாட்சிநூல்:-இஃது இலங்கை சுப்ரீங்கோர்ட் நியாயதுரந்தரராகிய யாழ்ப்பாணம் வண்ணைநகர் ஸ்ரீமான் நமசிவாயம் சிவக்கொழுந்து அவர்களால் ஆங்கிலத்தில் நின்று தமிழிற் சூத்திரரூபமாக மொழிபெயர்க்கப்பட்டது. இதில் விடயத்தொடர்பு, ருஜு, சாட்சிகொடுவோரும் அதன்பயனும் என்னும் விஷயங்கள். 11 அத்தியாயங்களாற் பகுத்துச்சொல்லப்பட்டிருக்கின்றன. இந்நூல், நியாயஸ்தலங்களில் வாதியும் எதிரியுமாகி வழக்குத்தொடர்பவர்களும், சான்றுகூறுமவர்களும் பஞ்சாயத்தில் நியாயாதிபத்தியம் வகிப்பவர்களுமாகிய தமிழ்மக்களுக்கு மிகவும்

பயன்படத்தக்கது. ஆங்கிலத்துயர்தரக் கல்வியிற்றேர்ந்த தமிழ்ப் பண்டிதர்களாற் றமிழுலகுக்குச் செய்யப்படுங் கடமைகளி லிஃ தொன்ருக மதிக்கப்படும்.

5. புட்பபந்தம்:—இது, பறங்கிப்பேட்டை வித்வானும், பென் ஷன் ஓவர்சியருமான ஸ்ரீமத். ப. சு. இலக்குமணபிள்ளை அவர்களால் ஸம்ஸ்கிருதத்தில் நின்று தமிழில் வசனநடையாக மொழிபெயர்க்கப் பெற்றுச் சேந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிடப்பட்டது. இதில் மழைக்குறிகள் மிக விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. இதன் விலை அணு 4.

---

6. திருவாரூர்ப்பன்மணிமாலை :— இது வைத்தியநாததேசிகரால் திருவாரூர்த்தியாகராஜஸ்வாமிமீது பலபாவினங்களாற்பாடிய 100-செய் யுளையுடையதொருபாமாலை. இதனை இலக்கண விளக்க பரம்பரையில் வந்த திருவாரூர் ஸ்ரீமத்-சோமசுந்தரதேசிகர் அவர்கள் அச்சிட்டு வெளி யிட்டிருக்கின்றனர். இதன் விலை அணு—2.

---

7. அமிருதசஞ்சீவினி :— இது ஆங்கிலத்தில் "ஸர் வால்டர் ஸ்காட்" என்ற பண்டிதராற் செய்யப்பட்ட டாலிஸ்மன் என்னும் கதையின் மொழிபெயர்ப்பாகத் தமிழ்நடையில், ஸ்ரீரங்கம் ஹைஸ்கூல் உதவியுபாத்தியாயர் ஸ்ரீமத்-ஸி. ஆர். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவர்க ளாலெழுதப்பட்டது. புத்திசாதுர்யத்தையும், பொழுதுபோக்கை யும் விரும்பிக் கதைப்புத்தகம்படிப்பவர்களுக்கு இது மிகப்பயன் படத்தக்கது. இதன் விலை ரூபா 1—2—0.

---

8. குசாவதி என்னும் வஞ்சகவநிதை :— இது ஸ்ரீமத்-செ. இராஜுச்செட்டியார் எம். பி. பி. ஐ. அவர்களால் படித்தற்கினிமை யுடையதாய்ப் பெண்மக்கள்தீய சூழ்ச்சிக்கு உள்ளாகாதவாறு உலகிய லோடு பொருந்த வெழுதப்பட்டிருக்கிறது. இதன் விலை அணு—8.

---

9. குலசேகரன்; அல்லது பொற்கையான்மாறன் :— இது கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்-சு. ஸ்ரீநிவாஸையங்கார், "பாலபண்டித"ரால் தெளிவான தமிழ்நடையிலெழுதப் பட்டதொரு சிறு நாடகம். இதன் விலை அணா —3.

---

10. நம்மவர் நூற்றெட்டு:—இது திருவையாறு ஜ்யோதிஷ தந்திர சபையை ஸ்தாபித்தவரும், பிருஹத்ஸம்ஹிதை முதலிய அரிய சோதிட நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவருமாகிய ஸ்ரீமத், N. சிதம்பரம் ஐயர் (B. A. F. T. S.,) அவர்களாலியற்றப்பட்டது. இதில் இந்தியர்களின் பூர்விக ஒழுக்க வழக்கங்கள் இக்காலம் மாறுதலடைந்து வருவதைக்குறித்துப் பாடப்பட்ட 108 வெண்பாக்களடங்கியிருக்கின்றன. அவை யியற்கையணியிலெளிதிற் பொருள்விளங்கி யினிமைபயக்குமாறு பாடப்பட்டிருத்தலால் எல்லாலுராமகிழத்தகன. இப்புத்தகத்தின்விலை அணா 3, தபாற்கூலி வேறு.

---

11. ஆதங்கநிக்கிரகவைத்தியவர்த்தகசாலையின்சித்திரப்புத்தகம்:— இதிலுள்ள சித்திரப்படங்களைப் பார்த்ததில், ஜாம்நகரில் ஒரு பிரதானமான வைத்திய வர்த்தகசாலை இருப்பதாகவும், அதன் அங்கமாகிய பலபல பிரிவுகளும் வெவ்வெறு கட்டிடங்களிற் றனித்தனி வேலைசெய்து வருவதாகவும், இதற்கு பாம்பே, கல்கத்தா, சென்னை, புனா, கராச்சி, இரங்கூன், கொழும்பு இவ்விடங்களிலும் ஆபீசுகளும், பிராஞ்சாபீஸ்களும் இருப்பதாகவும் காட்டுகின்றன. இவ்வர்த்தகசாலைக்கு அத்தியக்ஷராகவிருந்து சொற்பகாலத்தில் இவ்வளவு அபிவிருத்தி செய்திருக்கிற மிஸ்டர் மணிசங்கர் கோவிந்தஜீயுடைய நன்முயற்சி மதிக்கத்தக்கதே.

---

12. "ஏழைப்பெண்களுக்குப் பண்டு"— என்னும் விளம்பரம் வந்தது. அதனால், அநாதையான பெண்மக்களுக்கு கல்வியும், தொழிலும் கற்பித்து அவர்கள் கஷ்டத்தை நீக்கும் பொருட்டு, வேண்டும்

பொருள்சேர்த்து ஒரு நிர்வாகசபை ஸ்தாபிக்க வேண்டுமென்றும், அதற்குத் தர்மசிலர்களான கனதனவான்களினுதவி யெதிர்பார்க்கப் படுகிறதென்றும் தெரியவருகிறது. இது, இக்காலத்துக்கேற்ற அநுகூலமான காரியமாயிருப்பதால் இந்தியர்களாயுள்ள எல்லோரும் இதற்கு வேண்டுமுதவிபுரிய முன்வருவார்களென்ற நம்பிக்கையுடன் இச்சங்கத்தை நடத்தும் காரியதரிசினியாகிய ஸ்ரீமத், ஆர். எஸ். சுப்பலக்ஷ்மியம்மாள் (பி. ஏ.,) அவர்கள் நன்முயற்சி பயன்பெறுமாறு எல்லாராலும் பாராட்டற்பாலதே.

☞ மேற்கண்டபுத்தகங்கள் முதலியன வழக்கப்படி பாண்டியன் புத்தகசாலையிற் சேர்க்கப்பெற்றன.

பத்திராதிபர்.

---

௨

## பிழைதிருத்தம்

சென்ற ஆடிமாதத்துச் செந்தமிழ் (தொகுதி கக-பகுதி கூ) இன் உகக ஆவது பக்கத்தில், கக-வது வரியில் "போருளில்" என்றிருப்பதைப் "பொருளில்" எனவும், ஷை பக்கம் கடு ஆவது வரியில் "தொழி" யென்றிருப்பதைத் "தோழி" எனவும், ஷை பக்கம் உ அ ஆவது வரியில் "தொழிமாட்டு" என்றிருப்பதைத் "தோழிமாட்டு" எனவும் ஷை, ஷை, ௩௦௦ ஆம்பக்கம் கூ ஆவது வரியில் "குறையை" என்றிருப்பதை "கையுறையை" எனவும். ஷை பக்கம் கரு ஆவது வரியில் "கண்ணெயே" என்றிருப்பதைக் "கண்ணேயே" எனவும், ஷை பக்கம் உஉ ஆவது வரியில் "பற்குறி" என்றிருப்பதைப் "பகற்குறி" எனவும் திருத்திப்படித்துக்கொள்க.

---

149. ஒன்றுபலமுரணென்றியவினையே
நியமநியமவிலக்குவிரோத
மவிரோதத்துடனதன்விரியேழுள.

(எ - ன்) அங்ஙனம்வகைப்பட்ட சிலேடை யணியின் விரி யுணர்—ற்று.

(இ - ள்) ஒருவினைச்சிலேடை, பலவினைச்சிலேடை, முரண் வினைச்சிலேடை, நியமச்சிலேடை, நியமவிலக்குச்சிலேடை, விரோதச் சிலேடை, அவிரோதச்சிலேடையென விரி யேழுளவாமென்றவாறு. வினையென்பதனை முதலேவந்த மூன்றினுக்கு மிறுதிவிளக்காக்கி, அதன் என்பதனை யதிகாரத்தாற் சிலேடையதன்விரியெனக் கொள்க.

150. அவற்றுள்,
ஒருவினைகொள்வதொருவினைச்சிலேடை.

(எ-ன்) வைத்தமுறையானே ஒருவினைச்சிலேடை யுணர்-ற்று.

(இ - ள்) இரண்டுபொருளை யொருமொழியினாலாதல் தொடர் மொழியினாலாதல் இரட்டுறமொழிந் திரண்டுபொருட்கு மொருவினை கொள்ளமுடித்தல் ஒருவினைச்சிலேடையா மென்றவாறு.

நாதமுனிதம்பிரானுவீறன்வண்குருகூர்
மாதரணிமன்னிமழைதோயு—மோதி
யிருந்தும்பியுந்தேனுமெப்போதும்யாண்டும்
பொருந்திப்புரியும்பொறை. (342)

இது ஒருவினைச்சிலேடை. மலைக்கும், மாதராள்குழற்குஞ் சிலேடை.

(இ - ள்) நாவீறுடையபிரான் வளப்பத்தையுடைய குருகூரி னிடத்துப் பெருமைபெற்ற ஆதித்தியமண்டலத்தை யணவப்பட்டு மேகந்தவழு மலையானது, பெரியயானைத்திரளையுந் தேனிறாட்டினையு மெக்காலத்து மெவ்விடத்தும்பயிலப் பொறைபுரியுமெனவும்; இம் மாதரா ளழகுசெறிந் திருண்டநிறத்தைப்பயிலுங் குழலானது, கரிய

வண்டினையுந் தேனினையுங் கார்தன்முதலிய வெல்லாப்பூக்களினையு மெவ்விடத்தும்பயின்று பொறுத்தலைப்புரியுமெனவு மாம். இத னுள் எப்போதும் யாண்டும் பொருந்திப்புரியும்பொறை யென்பதற் குப் பொறைபுரியுமென்ப திரண்டுதலைக்கு மொருவினை. திணை— ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை—நலம்பாராட்டல். ஓதியென் பது மலையும், குழலும். (சுரு)

151. பலவினைகொள்வதுபலவினைச்சிலேடை.

(எ - ன்) பலவினைச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ - ள்) ஒருசெய்யுளகத்துப் பலவினை யிருபொருட் கிரட் டுறக்கொள்வது பலவினைச்சிலேடையாமென்றவாறு.

ஆம்பன்மலர்த்தியகவிருள்சித்தொண்கலைக
டாம்புல்லியதன்மதிவரவுந்—தீம்பர்
செறிவகற்றுமாறன்றிருவாக்கும்பேதை
யறிவகற்றியேநின்றன. (343)

இது பலவினைச்சிலேடை. சந்திரோதயத்திற்குந் திருவாய் மொழிக்குஞ் சிலேடை.

(இ - ள்) ஆம்பல் - பண்ணும், குமுதமும். அகவிருள்-உள்ள மயக்கமும், உலகினிடத்தந்தகாரமும். ஒண்கலைகள் - சுருதி மிருதி புராணமும், சந்திரகிரணமும். பேதையென்பது அறிவிலியும், மக ளேவும். அறிவகற்றியேநின்றன என்பது அறிவினைப்பெருப் பியாநின்றதென்றும், அறிவினையழியாநின்றதென்றுமாம். “அறி வகற்று, மாகலூழுற்றக்கடை” என்பதனுலறிக. மலர்த்தி, சீத்து, புல்லிய என அடைவேவந்தவாறு காண்க. திணை—பாடாண் சார்ந்தபொதுவியல். துறை-பனுவல்வாழ்த்து. அல்லது திணை-பெண் பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - தோழிநிலவுகண்டழுங்கலுமாம். ()

152. மொழிவினைமுரணுதன்முரண்வினைச்சிலேடை.

(எ - ன்) முரண்வினைச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ - ள்) மொழியப்பட்ட வினைப்பொருண்முரணச் சிலேடைப் படுத்துவது முரண்வினைச்சிலேடையா மென்றவாறு.

இன்பநந்தியவானகமதனையெய்துவதுந்
துன்பமுந்துறுமறநிலையடைவதுந்துணிவா
மன்பெரும்புகழ்மாறனைவாழ்த்துபுவணங்கி
யன்புறார்பினர்தாமெனுநாளுமிவ்வகிலம். (344)

இது முரண்வினைச்சிலேடை. அன்பில்லார்க்கு மன்புள்ளார்க்குஞ் சிலேடை.

(இ - ள்) நிலைபெற்ற பெரியபுகழையுடைய காரிமாறப்பிரானை வாழ்த்தி வணங்குவதுமின்றி மனத்தி லன்புறாருமாகிய மாறுபட்ட கிரியையுடையோர் பேரானந்தமென்பதுகெட்ட பெரியபாவங்களைக் கூடுவதுந் துன்பம்வந்தெதிர்கொளுங் கொலைமுதலிய மறத்தினிலையையடைவதுஞ் சந்தயமில்லையெனவும், காரிமாறப்பிரானை வாழ்த்துவதுடன் வணங்கி மனத்தினுனினைந் தன்புமிகுமன்புடையோர் பேரானந்தமல்கிய பரமவைகுண்டத்தைப்பெறுவதுந் துன்பங்களைதன் மிகும் அறநிலையடைவதுஞ் சந்தயமில்லையெனவும் உலகங்கூறு மென்றவாறு. உலகமென்ப துயர்ந்தோரை. மாறனை யென்பதற்கு மால்தன்னையெனினுமாம். திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப் பரவலும், பாடாண்பகுதிப் புறத்திணைப்பாற்படும் பரவார்ப்பழித்தலுமாம். (சுஎ)

153. இயல்புடைப்பொருள்கட்குளதிலதிரட்டுற
நியமித்துரைத்தனியமச்சிலேடை.

(எ - ன்) நியமச்சிலேடையாமா றுணர் - ற்று.

(இ - ள்) உயர்திணை அஃறிணை யென்னு மிரண்டினுள் விகாரப்படாதவியல்பினையுடையபொருள்கட் குள்ளது மில்லதுமாகச் சிலேடித்தபொருளைத் தேற்றம்பெறநியமஞ்செய் தவற்றுளொன்றினைக் குறிப்பினுற்கொள்வனவாய்ப் புகல்வது நியமச்சிலேடையாமென்றவாறு. நியமித்தல் - தெளிதல்.

வண்டுளர்முண்டகக்கொழும்பொற்றுணரொன்றேபங்கமுற
வளர்ந்ததெல்லாந்
தண்டழைவானகடுரிஞ்சுஞ்சண்பகமேயளிதுறந்த
சால்பிற்றென்றும்

வெண்டரளப்பொறையுயிர்க்கும்வலம்புரியேகோடியதும்
விழவின்மாதர்
மொண்டலைவார்குளிர்புனலேகம்பலையுட்கொண்டதுவு
மொழியின்மன்னே. (345)

இது நியமச்சிலேடை.

(இ - ள்) பங்கமுறவளர்ந்ததெல்லாந் தாமரைப்பூவினது சாதியொன்றுமே; அளிதுறந்த சால்பினையுடையது சண்பகமரமொன்றுமே; கோடியதும் வலம்புரிக்குலமே; குளிர்புனலே கம்பலையுட்கொண்டதும்; என்றுலகங் கூறப்படுமாதலால் ஒழிந்த உயர்ந்தோருள் மானவினமுற வளர்ந்தோருமில்லை; கொடையைக் கைவிட்டோருமில்லை; மனக்கோட்டமுடையோருமில்லை; நடுக்குற்றோருமில்லை யென்பதாம். பங்கம்-சேறும், மானவினமும். அளி-வண்டும், கொடையும். கோடியது-வளைவும், மனக்கோட்டமும். கம்பலை - ஆரவாரமும், நடுக்கமும். இவற்றுள், பின்னையநான்கும் உயர்திணையைக்குறித்துக் குறிப்பினாற்கொண்டவாறு காண்க. உளர்தல் - குடைதல். பொறையுயிர்த்தல் - பெறுதல். திணை - பாடாண். துறை - நாடுவாழ்த்து. ()

154. விளம்பியநியமம்விலக்குதல்விலக்கே.

(எ - ன்) நியமவிலக்குச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ - ள்) இங்ஙனங் கூறப்பட்ட நியமத்தின்கூறுபாட்டை விலக்கிப் பிறிதும் ஒன்றுகூறுவது நியமவிலக்குச்சிலேடையாமென்றவாறு.

கடம்புணர்ந்ததளிக்கணம்பொங்கரினிழைத்ததேக்கெறிதேங்
கமழ்செந்தேனே
திடம்புணர்ந்தகெழுதகையாடவர்கடவுஞ்சிந்துரத்தின்
றிரளொன்றுண்டான்
மடம்புணர்ந்தாரியற்கொழுநருளந்தவறுமடந்தையரே
மறிந்துநாடி
னடம்புணர்ந்ததுகிற்கொடித்திண்டேர்மறுகுந்திருமறுகே
நவிலின்மன்னே. (346)

இது நியமவிலக்குச்சிலேடை.

(இ - ள்) கொள்கலத்துட் பொருந்தியது, வண்டின்கூட்டம் கொம்பர்தோறும்வைத்ததா யெடுத்துண்டார்யாவருந் தேக்கிடுவதாய் மிகவும்பரிமளிக்குஞ் சிவந்ததேனே; அதுவுமன்றி யுண்மையோடுங்கூடியநட்பையுடைய வாடவர்கடாவும் யானைத்திரள்களுமதத்தோடுங் கூடியதுண்டு. மடப்பத்தைப் பொருந்தினவர் தமதில்லறத்திற்குரிய விலக்கணத்தையுடைய கொழுநருள்ளக்குறிப்பிற்பிழையாத கற்புடைய மகளிரே ; மீட்டுமாராயி லாடுதலைப்பொருந்தினதுகிற்கொடியையுடைய திண்ணியதேர்கள் சூழ்வரும் பொலிவினையுடையவீதிகளும் அறச்சாலையை மருவும். அவையன்றி வறுமையுற்றுத் தனிசுகொண்டவருமில்லை ; அறியாமையுடையோருமில்லையென்றவாறு. கடம் - பாத்திரம், மதம், கடன்கோடல். மடம் - மடப்பம், அறச்சாலை, அறியாமை. இதனுள்ளு மிறுதிநின்ற விரண்டுங் குறிப்பினு லுயர்திணைமேற்கொண்டவாறு காண்க. இழைத்தல் - திரட்டிவைத்தல். இதுவும் நாடுவாழ்த்து. (சுகூ)

155. சாதிமுதலாச்சாற்றியநான்கொடுங்
தீதறுபெயரினும்வினையினுந்திரிந்து
மேதகவிரோதத்தறைவதுவிரோதம்.

(எ - ன்) விரோதச்சிலேடையாமா றுணர்—ற்று.

(இ - ள்) சாதிமுதலாகப் பொருளீருகக்கூறப்பட்ட நான்கினேடுங்கூடிக் குற்றமற்ற பெயரினும் வினையினுந் திரிந்துந் திரியாதும் பெருமைதகுவதாய் விரோதமாகச் சிலேடையாற்கூறுதல் விரோதச்சிலேடையாமென்றவாறு. திரிந்துமென்னு மும்மை யெச்சமாதலாற் றிரியாதுமென்றாயிற்று. சிலேடையென்ப ததிகாரத்தாற்பெற்றது. மேதகவென்றதனுற் சாதியோடு நான்கும், கிரியையோடு மூன்றும், குணத்தோ டிரண்டும், பொருளோ டொன்றுமாக விரோதச்சிலேடை பத்துளவென்றறிக. அவற்றிற்கெல்லாஞ் செய்யுள்வருமாறு:—

எத்திரமென்றேயறியேனென்னளவிற்காரிதரும்
புத்திரனர்பொன்னம்புயப்போது—முத்தநகை
மின்குமுதப்போதகலவேனிலானெய்வதற்கு
மன்குமுதப்போதாயவாறு. (347)

(இ-ள்) முத்துப்போன்ற நகையினையும், மின்போன்ற இடையி னையு முடையாய்! காரிமாறப்பிரான் பொலிவினையுடைய புயத்திற் புனைவதாம் வகுளமாலிகை, (வாங்கிச் சூடப்பெறாத) என்னளவில் யான் மகிழ்வெய்தும்போ தென்னைவிட்டு நீங்காநிற்பக் காமன் பஞ்சபாணங்களையுந் தொடுப்பதற்கு நிலைபெற்ற கலகப்போதான படி யென்னகாரணமென் றறியேனென்றவாறு. இதனுள், பொன் னம்புயப்போது - பொன்போலும் நிறத்தையுடைய தாமரைப்போது. மன்குமுதப்போதாயவாறு - ஆக்கஞ்செய்யு மாம்பற்போதானபடி யென்னகாரணமென்றறியேனென்றதனால், சாதிக்குச் சாதியினோடே விரோதச்சிலேடையாயிற்று. மின் - அண்மைவிளி; உவமப் பெயர். குமுதமிரண்டினுள் முன்னையது மகிழ்ச்சி. பின்னையது கலகம். போது - பூவும், காலமும். திணை - பெண்பாற்கூற்றுக் கைக்கிளை. துறை - தாமம்பெறாதுதளர்வுற்றுரைத்தல். இது சாதிக்குச்சாதி யோடே விரோதச்சிலேடை.

நாடறியமேனுணடந்ததலவின்றுளதாய்ப்
பீடழியவந்ததற்கென்பேசுகேன்—றாடகையென்
றாளையுயிருண்டானழுந்தூரன்வெற்பிளமான்
காளையுயிருண்டகதை. (348)

(இ - ள்) தாடகையென்பாளுயிரை வாளியினாலுண்ட திரு வழுந்தூர்மாயோன்வெற்பினி லிளையமான் முதியகாளையினறிவை யுண்டதென நீ கூறியகதை மேனா ணடறியநிகழ்ந்ததொன்றல்ல வாகியு மிஃ தின் றுன்னிடத்துளதாகி யுனதுபெருமையழியவந்த துன்பத்திற் கியான்பேசுவதென்னென்றவாறு. இதனுள் இளைய மான் முதியகாளையறிவை யுண்டதென்றதனால், சாதிக்குக் கிரியை யோடேவிரோதம். உயிரென்ற தீண் டறிவு. இளமான் - தலைவி. காளை-தலைவன். முதியவென்ற தெதிர்மறைச்சொல்லெச்சம். துறை- பாங்கன்கழறல்.

மாகருடனடுங்கமம்மர்தருவதன
யோகமயிலினூரத்தோங்கி—யாக

நடங்குமுடன்பிறப்பைநோக்காதொறுக்கத்
தொடங்குமெமையென்செயாதோ. (349)

இதுவுமது.

(இ - ள்) துறக்கத்துள்ளாரு முடனடுக்கமுறும்படிக்கு அவருள்ளத்திற்கு மருந்துபிறிதில்லாத தீராப்பிணியைக்கொடுப்பனவாகிய முலையினதுகூட்டம், மயிலினதுசாயல்போலுஞ் சாயலையுடையாண்மருமத்தின்கண்ணே புடைத்துயர்ந்து தம்மைத்தாங்கியுடல்வளையு முடன்பிறப்பாகிய விடையை யுடன்பிறப்பென் றுட்கொள்ளாது கொல்வதைத்தொடங்காநிற்குமாகையால் நெஞ்சமே நம்மை யென்செய்யாதென்றவாறு. எனவே, மாகருடனடுங்க - பெரிய கருடனும் உடல் நடுங்க. மம்மர்தருவது - வருத்தத்தைத் தருவது. அனயோகம்......ஓங்கி-அன்னத்தின்கூட்டம் மயிலினூரத்தோடும் பெருத்தென்பதனல் இதுவுஞ் சாதிக்குக் கிரியையோடே விரோதமாயிற்று. பகுதி-இயற்கை. துறை-தகையணங்குறுத்தல்.

கோபம்பயின்றவிடங்கூர்தாபாங்குறுகத்
தாபந்தவிர்ந்துயிருந்தண்ணென்ற—பூபதிகைத்
தூரிகையாலேயமைத்தசொற்றமிழ்மாறன்றுடரிக்
காரிகைசெவ்வாயெனவேகண்டு. (350)

(இ - ள்) இந்திரகோபங்கள்விட்டுநீங்காத இடமிகுந்தசோலையைக் குறுகினகாலத்து விரகாக்கினியினுலுண்டான வெனதுவாட்டநீங்கி யுயிர்தண்ணென்று குளிர்ந்தது. நெஞ்சமே யங்ஙனம் நீங்குதற்கேது யாதெனில்? தாமரையை யிடவகையாயுள்ள பிதாமகன் கையினூற் றூரியக்கோலையெடுத்தெழுதியுண்டாக்கின வழகினையுடையாள்செவ்வாய்க் கொப்பெனவேகண்டென்றவாறு. சொற்றமிழ் மாறன்றுடரிக்காவெனக் கூட்டுக. நெஞ்சமே யென்னுமெழுவாய் முன்னிலையெச்சம். கோபம்பயின்றவென்பது சினம்விட்டுநீங்காதவென்பதாய், இடங்கூர்தாபரம் விடங்கூர்தாபரமெனத்திரிந்து, தாபரமென்பது ஆகுபெயராய்ச் சினமிகுந்த நச்சுமாமரச்சோலையை முடுகவாட்டந்தீர்ந் துயிர்தண்ணென்றது. எனவே இது சாதிக்குக் குணத்தோடே விரோதச்சிலேடையாயிற்று. பகுதி - இடந்தலை. துறை-பொழில்கண்டுமகிழ்தல்.

கார்க்கடற்பார்வாழ்வுபெறக்காரிதருங்கண்ணனுளத்
தேர்க்கருணைக்கேசரியாயெய்துருவைப்—போர்க்கழியா
மெய்யனன்குபேரனென்பமெய்யுணர்ந்தவாரணங்க
ளையமின்றியேதெளிந்துளார். (351)

என்பது, கரியகடல்சூழ்ந்தபூமியின்கணுள்ளார் முத்தியாகியசெல்வத்தையெய்தக் காரியார்பயந்தளித்த கண்ணபிரான்றிருவுள்ளத்தழகிய கருணைக்கிணையாய்வந்தவுருவத்தைப் போர்க்கழியாகியசத்தியவாய்மையுடையோனுக்கு நன்குமதிக்கும் பேரனென்றுகூறுவர் சித் தசித் தீச்சுரங்களி னுண்மையுணர்ந்த சுருதியினுண்மையைச் சந்தயமறத் தெளிந்துளாரென்றவாறு. இதனுள், கண்ணபிரானழகிய திருவுள்ளக்கருணையைப்பெற்றுப் பரசமயகளியானைகட்கோர் சிங்கவேறாகியசொரூபத்தை, நல்ல குபேரனென்பவெனத் திரிந்தமையாவிது சாதிக்குப் பொருளோடே விரோதச்சிலேடையாயிற்று. திணை - பாடாண். துறை - முனிவர்வாழ்த்து.

பரவாதியையேபணித்தருள்பாமாற
னுரவாவருமருகர்க்குண்மை—கரவாது
கோட்டுமதமால்யானைகூறியமால்வீட்டின்பங்
காட்டுவன்மன்னேபுலவீர்காள். (352)

என்பது, நித்தர் முத்தர்முதலாயுள்ள பத்தரும் பெத்தருமேத்தப்பட்டபரமபதநாதனைப் புகழ்ந்திடுந் திருவாய்மொழியாகியபாவையுடையமாறன் ஞானதின்னியராய்த் தன்னிடத்துவந்தடைந்தவர்க்குப் பொய்யின்றித் திருமால்பதத்திலுள்ள பேரின்பத்தை யுண்டாக்கித்தருவன் புலவீர்காளென்றவாறு. எனவே நீரு மவனையே சரணகதியெனப்பற்றும்; உமக்கும் முத்தியெய்தலாமென்பது பயன். இதனுள், பரவாதியைப் பணித்தருள் பாமாறன் - அந்நிய சமயத்தைத் தாழ்த்துப்போடப்பட்ட திருவாய்மொழியென்னும்பாடலையுடையகாரிமாறப்பிரான். உரவாவருமருகர்க்கு - தன்னோடு வாதுக்குத்திண்ணியாகிவரும் அருகனைத்தெய்வமாகவுடையார்க்கு. யானைமூலமேயென்றழைப்ப வந்தருள்செய்த சிமந்நாராயணன் வீட்டின்பத்தைத் தருவனெனவே கிரியைக்குக் கிரியையோடே விரோதச்சிலேடையாயிற்று. திணை - வாகை. துறை - அறிவன்வாகை.

உ

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1913ஞு ஜூன்மீ 1உ முதல் 31உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ | அ. | ப. | செலவு | தொகை ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| புதுக்கோட்டை ஸமஸ்தானத்திலிருந்து 1913ஞு எப்பிரல், மே, ஜூன் மீங்களுக்குரிய மாதச் சந்தா வரவு ரூ | 150 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913ஞு எப்பிரல்மீத்துக்குச் சம்பளம் செலுத்தப்படாமல் நின்ற பாக்கி செல்லாக்கியது ரூ 30—0—0 | | | |
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 26 | 15 | 0 | ஷை சிப்பந்திகளுக்கு 1913 ஞு மே மீத்துக்குச் சம்பளம் செல்லாக்கியது ரூ. ...340-4—10 | | | |
| பிரிண்டிங் ஆபீசு அச்சுக்கூலி வரவு336—9—9 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு ஷை மாதத்திற்குச் செல் 40—0—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ...82—12—6 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செல்லாக்கியது | 410 | 4 | 10 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 419 | 6 | 3 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு எப்பிரல்மேமீங்களுக்கு ஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது ரூ | 35 | 4 | 3 |
| பைண்டிங் ஆபீசு வரவு ...72—15—6 | | | | பைண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ ... 65-5—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் கண்டின்ஜன்சிச்செலவுரூ 7—8—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 18—7—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 72 | 13 | 0 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவுரூ | 91 | 6 | 6 | பிரிண்டிங் ஆபீஸ் உபயோகத்திற்கு டைப்ஸ்கள் ரீ-காஸ்டு செய்தவகையிற் அட்வான்ஸ் கொடுத்தது ரூ 20—0—0 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| புத்தக விற்பனை வரவு ரூ ... | | 71 | 9 | 0 |
| பிரிண்டிங் பேபர், கலர் ராப்பர் காகிதம் விற்றவகையில் வரவு... | 48-15—1 | | | |
| சங்கம் காலிநிலம் மாக்கடை வாடகை பிரமாதிசு௵ வைகாசி ௴த்துக்கு வரவு ... | 55—0—0 | | | |
| விளம்பர வகையிற் சார்ஜ் வரவு... | 12-15—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | | 116 | 14 | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ | 74—14—10 | | | |
| ஷை. ஆபீஸ் உபயோகத்திற்குத் தருவித்த சாமான்களுக்கு ரயில் சார்ஜ்கொடுத்த வகையிற் செலவு | 4—9—0 | | | |
| ஷை. ஆபீஸ் சம்பந்தமாய் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு ரூ | 11—11—0 | | | |
| ஷை. ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 17—3—9 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 128 | 6 | 7 |
| போஸ்டேஜ் வகையிற் செலவுரூ ... | 24—9—0 | | | |
| தந்தி வகையிற் செலவு ரூ ... | 1—0—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 25 | 9 | 0 |
| ஆபீஸ் ஆயில் இஞ்சினுக்கு Slight repair செய்த வகையிற் செலவு ரூ | | 4 | 0 | 0 |
| சங்கம் ஆபீசு வைத்திருக்கிற கட்டடத்துக்கு 1913-௵ மேமீ த்துக்குரிய வாடகை செல்லாக்கியது ரூ | | 43 | 0 | 0 |
| லைப்ரேரி உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்கள் ரூ | | 3 | 0 | 0 |
| வண்டிவாடகை வகையிற் செலவுரூ | 0—2—0 | | | |
| ரசீது ஸ்டாம்புவகையிற் செலவு ரூ | 0—5—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு மைஜாடி வாங்கிய வகையிற் செலவு ரூ | 1—0—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு டிராயிங் கிளாத், ஸ்டேஷனரி, கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு ரூ | 1—9—9 | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | சங்கம் 12-வது வருஷோத்ஸவவிஷயமாய் வித்வான்களுக்கு சாப்பாடு முதலிய உபசரணைச்செலவு ரூ 19-12—0 | | | |
| | | | | சங்க சம்பந்தமான வேலைகளுக்கு பிரிண்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ 82—12—6 | | | |
| | | | | ஷை சம்பந்தமாக பைண்டிங் வேலைகளுக்கு செல் ரூ 18—7—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ ... | 124 | 0 | 3 |
| | | | | ஆகமொத்தம்செலவு | 846 | 5 | 11 |
| ஆக மொத்தம் வரவு ரூ | 876 | 2 | 10 | போகபாக்கியிருப்பு* | 566 | 8 | 3 |
| சென்ற மேமீ த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 536 | 11 | 4 | * By pass Book 320—0—0<br>By cash ... 196-8—3<br>By R. T. R. ... 50—0—0 | | | |
| ஆக மொத்தம் ... | 1412 | 14 | 2 | | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 1412 | 14 | 2 | ஆக மொத்தம் ... | 1412 | 14 | 2 |

T. A. Subbuvenkatarama Iyer.
*Manager.*
21—7—13.

*Audited and found Correct*
S. Gopalaswami Aiyengar,
7—8—13. *Auditor.*

## மதுரைத் தமிழ்ச்சங்கத்து

## 1913ஞு ஜூலைமீ 1உ முதல் 31உ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை. ரூ. | அ. | ப. | செலவு | தொகை. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| சங்கம் பன்னிரண்டாவது வருஷோத்ஸவத்தின் செலவுக்காக தமிழபிமானிகளால் இனமளிக்கப்பட்ட Mr. T. S. சுப்பிரமணிய ஐயரவர்கள் மூலம் வரவு 0—10-10 | | | | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913ஞு ஜூன்மீ த்துக்கு சம்பளம்செல்லாக்கியது ரூ 369—4—11 | | | |
| | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு மே, ஜூன்மீங்களுக்கு செல் ரூ 96—0—0 | | | |
| புதுக்கோட்டை சமஸ்தானம் தர்பார் ஆபீசிலிருந்து ஜூலை மாதத்திற்குரிய சந்தா வரவு ரூ 50—0—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 465 | 4 | 11 |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 50 | 10 | 10 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு ஏப்பிரல், மேமீங்களுக்கு சிலருக்கும் ஜூன்மீ த்திற்கும் ஆகாராதி போஷணைக்காகச்செல்லாக்கியது ரூ | 35 | 10 | 7 |
| செந்தமிழ்ச் சந்தாவகையில் வரவு ரூ | 48 | 6 | 0 | கலாசாலை உபயோகத்திற்கு புத்தகங்கள் வாங்கிய வகையிற் செல் ரூ | 5 | 9 | 9 |
| பிரிண்டிங் ஆபீஸ் அச்சுக்கூலி வரவு ரூ 330—5—3 | | | | பைண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரி செலவு ரூ 62—10—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் சம்பந்தமான ரெயில்வே சார்ஜ் செலவு ... ரூ 1-13—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு 23—9—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ரூ 57—11—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 88 | 0 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | | 388 | 0 | 3 |
| பைண்டிங் ஆபீசு வரவு ரூ | 171—11—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ரூ | 4—14—0 | | | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | | 176 | 9 | 0 |
| புத்தகவிற்பனை வரவு ரூ | | 153 | 0 | 6 |
| பிரிண்டிங்பேபர் கலர்ராப்பர்காகிதம் விற்றவகையில் வரவு ... | 38-10—0 | | | |
| சங்கம் காலி நிலம் மரக்கடை வாடகை பிரமாதீசஹு ஆனிமீ த்திக்கு வரவு ... | 55—0—0 | | | |
| விளம்பரவகையிற் சார்ஜ் வரவு ரூ | 8—0—0 | | | |
| கோ. ஆபரேடிவ் ஸ்டோரில் போட்டுவரும் தொகைக்கு வட்டி வகையில் வரவு ரூ | 7—9—1 | | | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | | 109 | 3 | 1 |

| | | | | |
|---|---|---|---|---|
| பிரிண்டிங் டைப்ஸ்களை ரீகாஸ்டு செய்தவகையிற் செலவு ரூ | 33—4—0 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ | 85—15—10 | | | |
| ஷை ஆபீஸ் சம்பந்தமாய் ரெயில் சார்ஜ் செலவு ரூ | 5—4—0 | | | |
| ஷை ஆபீஸ்சம்பந்தமாய் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு ரூ | 14—5—0 | | | |
| ஷை ஆபீசில் கண்டின்ஜன்ஸி செலவு | 7—3—1 | | | |
| ஆக மேற்காட்டிய விபரப்படி செலவு ரூ | | 145 | 15 | 11 |
| போஸ்டேஜ் வகையிற் செலவு ரூ | 20-14—0 | | | |
| தந்தி வகையிற் செலவு ரூ | 0—7—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 21 | 5 | 0 |
| பிரிண்டிங் ஆபீஸ் உபயோகத்திற்கு புதிதாக பிளாக் வாங்கிய வகையிற் செல் ரூ | | 4 | 0 | 0 |
| லைப்ரேரி உபயோகத்திற்கு புத்தகங்கள் வாங்கிய வகையிற் செல் ரூ | | 0 | 14 | 0 |
| வண்டி வாடகைவகையிற் செலவு | 1—1—6 | | | |
| ரசீது ஸ்டாம்பு வகையிற் செலவு ரூ | 0—4—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு ஸ்டேஷனரி கண்டின்ஜன்ஸி வகையிற் செலவு ரூ | 0—5—0 | | | |
| கலாசாலை உபயோகத்திற்காக வாங்கிய மண்ணெண்ணெய் டின் 1க்கு செல் ரூ | 2—0—6 | | | |
| வெளியூர்களுக்குப்போய் பிரிண்டிங் பைண்டிங் ஆர்டர்கள் வாங்கிவந்த வகையிற் செலவு ரூ | 3—0—0 | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ஆபீஸ் பீரோக்களுக்கு புதிதாகசாவி போடச்செல் ரூ 0—4—0<br>ஆபீஸுக்கு முன்புறமுள்ள இடங்களை நன்றாய்ப் பெருக்கி சுத்தம் செயத வகையிற் தோட்டிக்குச் செல் 0—3—0<br>சங்க சம்பந்தமான வேலைகளுக்கு பிரிண்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ 57—11—0<br>ஷை சம்பந்தமாக பைண்டிங் வேலைகளுச் செல் ரூ 4—14—0 | | | |
| ஆக மொத்தம் வரவு .. | 925 | 13 | 8 | | | | |
| சென்ற ஜூன்மீ"த்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 566 | 8 | 3 | ஆக மேற்காட்டியவிவரப்படி செலவு ரூ | 69 | 11 | 0 |
| | | | | ஆகமொத்தம் செலவு ரூ | 836 | 7 | 2 |
| ஆக மொத்தம் ... | 1492 | 5 | 11 | | | | |
| | | | | By pass Book Rs. 487-9-1 / By cash Rs. 168-5-8 } போக பாக்கி யிருப்பு *... | 655 | 14 | 9 |
| ஆ மொத்தம் ... | 1492 | 5 | 11 | ஆக மொத்தம் ... | 1492 | 5 | 11 |

**T. A. Subbuvenkatarama Iyer,**
*Manager.*
2—8—13.

*Audited and found Correct,*
**S. Gopalaswami Aiyengar,**
*Auditor.*
7—8—13.

உ

# மதுரைத் தமிழ்ச் சங்கத்தில்

## விற்கப்பெறும் புத்தகங்கள்.



| சங்கப்பதிப்பு. | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| 1. ஞானாமிர்த மூலமும் உரையும். ... ... | 1 | 0 | 0 |
| 2. சைவமஞ்சரி ... ... | 1 | 8 | 0 |
| 3. யாப்பு அணியிலக்கணங்கள் (விசாகப்பெருமாளையர் பஞ்சலக்ஷண வினாவிடையினின்று எடுத்தவை) | 0 | 8 | 0 |
| 4. வைத்திய சாரசங்கிரகம் ... ... | 3 | 0 | 0 |
| 5. பன்னூற்றிரட்டு ... ... | 2 | 0 | 0 |
| 6. மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 3 | 0 | 0 |
| 7. தோத்திரத்திரட்டு ... ... | 0 | 2 | 0 |
| 8. தமிழ்ச்சொல்லகராதி (உயிர்வருக்கம் முடிய முதற்பாகம்) ... ... | 6 | 0 | 0 |
| ஷை இரண்டாம் பாகம் ... ... | 4 | 8 | 0 |
| 9. அபிதானசிந்தாமணி ... ... | 7 | 0 | 0 |
| சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் ... | 0 | 4 | 0 |
| பன்னூற்றிரட்டு செலெக்ஷன் ... ... | 0 | 4 | 0 |

## செந்தமிழ்ப் பிரசுரம்.

| | | | |
|---|---|---|---|
| 1. ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. கணநூல் (5) இனியதுநாற்பது (உரையுடன்)... | 0 | 3 | 0 |
| *3. வளையாபதிச் செய்யுட்கள் | | | |
| *4. புலவராற்றுப்படை (திருக்குருகூர் இரத்தின கவிராயர் இயற்றியது.) ... ... | 0 | 3 | 0 |
| *6. நேமிநாதம் (உரையுடன்) ... ... | 0 | 12 | 0 |
| 7. திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | 0 | 4 | 0 |
| 8. திணைமாலை நூற்றைம்பது உரையுடன் ... | 0 | 4 | 0 |
| 9. அநுமான விளக்கம் ... ... | 0 | 4 | 0 |
| 10. அட்டாங்கயோகக்குறள் ... ... | 0 | 1 | 0 |
| *11. விவசாயரசாயன சாஸ்திரச்சுருக்கம் ... ... | 0 | 6 | 0 |
| 12. பன்னிருபாட்டியல் ... ... | 0 | 4 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 3 | 0 |
| 14. | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... | 0 | 3 | 0 |
| 16 | திருவாரூருலா ... ... | 0 | 4 | 0 |
| 17. | சுகசந்தர்சன திபிகை ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம் ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்.) ... ... | 0 | 6 | 0 |
| 22. | திருக்கலம்பகம் (ஷை) ... ... | 0 | 6 | 0 |
| †23. | விக்கிரமசோழனுலா ... ... | 0 | 2 | 0 |
| †24. | குருமொழிவினாவிடை ... ... | 0 | 1 | 0 |
| †25. | கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை ... | 0 | 1 | 0 |
| †26. | திருத்தணிகைத் திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத் திருப்பணிமாலை ... ... | 0 | 3 | 0 |
| 28. | சந்திராலோகம் ... ... | 0 | 2 | 0 |
| 29. | சோழவம்ச சரித்திரச்சுருக்கம் ... ... | 0 | 8 | 0 |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... | 0 | 2 | 0 |
| 31. | பாண்டியம் ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநிஷாபஞ்சகம் ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர் வரலாறு ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள் விளக்கம் ... ... | 1 | 0 | 0 |
| 35. | திருமந்திரநூறுபாட்டுக்குரை ... ... | 0 | 8 | 0 |
| | **வேறு பதிப்பு.** | | | |
| 1. | பாரதச்சுருக்கவசனம் ... ... | 1 | 8 | 0 |

* ஸ்டாக் இல்லை. † சீக்கிரம் வெளிவரும்.

குறிப்பு:— இதில் கண்ட புஸ்தகங்கள் விற்பனைக்கு ஏராளமாக விருப்பதை உத்தேசித்து ஒரே தடவையில், ரொக்கம் கொடுத்து 50-க்கு மேற்பட்ட பிரதிகள் வாங்குவோர்களுக்கு பைண்டான புத்தகங்களானால் 100-க்கு ரூபாய் 30-விதமும், பைண்டாகாத புத்தகங்களானால் ரூபாய் 40-விதமும் கமிஷன் கழித்து விற்கப்படும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

**T. A. Subbuvenkatarama Iyer,**
*Manager.*

கடவுள் துணை.

# செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ௵ புரட்டாசி ௴ [பகுதி-கக.
Vol. XI. September—October. 1913. No. 11.

## தமிழும் ஸம்ஸ்கிருதவுதவியும்.

## Tamil and the influence of Sanskrit.

[௩௩௩-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### தமிழ்ப் பாஷைக்குச் செய்யவேண்டிய நமது கடமை.

இப்பொழுது ராஜபாஷையாய் வழங்கிவரும் ஆங்கிலமே, வழக்குப்பாஷையாகவும் செய்துவிட்டால், தமிழ்ப்பாஷைதானெதற்கு. இரண்டுபாஷைகளை வாசித்து வீண்காலம் கழிப்பதேன்? என்று சில உத்ஸாகபுருஷர்கள் தர்க்கிக்கக்கூடும்.

இங்கு முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய தொன்றுண்டு. தமிழ்ப் பாஷையே மண்ணுலகினின்றும் மாண்டு, எல்லாம் ஆங்கிலமாய்ப் போய்விட்டால், அதனால் நேரிடக்கூடிய சாதக பாதகங்களைப்பற்றி யாவது, அல்லது நமது தமிழுலகே மூழ்கிவிடுமென்பதைப் பற்றி யாவது இப்பொழுது விசாரிக்கப்புகவில்லை.

ஆனால் அப்படி எல்லாம் ஆங்கிலமாய் நேரிடும் காலம் அசாத்யம் என்று தோன்றுகின்றது. தேசபாஷையாகவாவது, நியாயஸ் தலங்கள் முதலான ராஜஸ்தலங்களில் வ்யவஹாரபாஷையாகவாவது அல்லது ராஜாங்கக் கல்வியிலாகாவால் ஆதரிக்கப்படவாவது இல்லாது

*

நமது தமிழ்நாட்டில் இப்பொழுது வழங்கிவரும் தெலுங்கு, மஹாராஷ்ட்ரம், சௌராஷ்ட்ரம் என்னும் பாஷைகள் எவ்வளவோ வருஷங்களாகியும் வழக்கினின்றும் மறையவில்லையென்பது கவனிக்கத்தக்கது.

ஒரு தேசம் நல்லநிலைமைக்கு வரவேண்டுமானால், அதிலுள்ளோர் நல்லநிலைமையிலிருக்கவேண்டும். அதற்கு, கல்வியே ப்ரதானம் என்பது யாவரும் அங்கிகரித்த விஷயம். ஆகையால், தமிழ்நாடு விருத்தியடைய நமது நாட்டிலுள்ளோர் யாவரும் கற்றவர்களாயிருக்கவேண்டும். தமிழ்நாடுமுழுதும் ஆங்கிலபாஷையாய் முடிவது அசாத்யம் என்று முன்னமேயே கூறப்பட்டிருக்கின்றது.

ஆகையால், நமது தாய்ப்பாஷையாகிய தமிழ்ப் பாஷையை விட்டால் வேறு கதியில்லை. அன்ய பாஷைகள் படிப்பதில் யாருக்காவது ஆக்ஷேபணை யுண்டா? அல்ல! ஆனால் எல்லோரும் ஆங்கிலம் படிக்கப் புத்திமான்களாகவும், தனவான்களாகவும், இதர சௌகரியங்கள் வாய்ந்தவர்களாகவும் இருப்பார்களா? சாதாரணமாய் ஆங்கிலேய மாணுக்கர்களுக்கே, தங்கள் சொந்தப்பாஷையின் எழுத்துக்கூட்டலுக்கும் உச்சரிப்புக்குமுள்ள யாதொரு விதிக்கு முட்படாத அசம்பந்தங்களை அறிய ஆறுவருடங்களாவதாய்த் தெரியவருகிறது. தமிழ்ப்பாஷையைத் தாய்ப்பாஷையாய்க்கொண்ட நமக்குச் சுமார் 10-வருஷங்களாவது ஆகின்றன. அன்யபாஷையை 10 - வருஷம் கற்றபிறகுதான் அதிலுள்ள நூல்களை யாராய்ச்சிசெய்ய ஆரம்பிக்கவேண்டியிருக்கின்றது. ஆதலால், சுமார் 16 வயதுள்ள ஆங்கிலப் பையன் இவ்வுலக அமைப்பு, சரித்திரங்கள், சாஸ்த்ரங்கள் இவைகளில் எவ்வளவு அறிகின்றானோ அவ்வளவு அறிய நமக்கு 20-வயதிற்கூட முடியவில்லை. அதற்குக்காரணம் தற்கால நாகரிகங்களுக்கும் லௌகிகங்களுக்கும் தக்க அவ்வுத்தமநூல்கள் நமது தமிழ்ப் பாஷையில் இயற்றப்படாதிருத்தலே. இக்குறையை நிவர்த்திக்க வேண்டியது நாம் தமிழுக்குச் செய்யவேண்டிய முக்கியமான கடமை.

அன்யபாஷையினின்றும் மொழிபெயர்க்கவேண்டுமானால், அதன் கருத்துக்கிசைந்த பதங்கள் நமது தமிழிலும் இருக்க

வேண்டும். இல்லாவிடில் தாராளமாய்க் கடன்வாங்கவேண்டியது தான். கடன்வாங்குவதிலும், நமக்கு ஸம்ஸ்கிருதபாஷை வெகுகாலம் உதவிசெய்திருப்பதாலும், ஸம்ஸ்கிருத பதங்களைத் தமிழாக்குவ தற்கு இயல்பாகவே சுலபமான விதிகளிருப்பதாலும், வேறு பாஷை யினின்று கடன்வாங்குவதைப்பார்க்கிலும் நமது அடுத்தபாஷை யான ஸம்ஸ்கிருதத்திலிருந்து வாங்குவது கௌரவக்குறைவன்று. ஸம்ஸ்கிருத தாதுக்களைக்கொண்டு தக்க வார்த்தைகளும் பரிபாஷை களும் கற்பித்துக்கொள்ளவேண்டும்.

உதாரணம். 1-வது இங்கிலீஷ்,மீடர்=மானி, அதாவது அளக்கும் கருவி. இவ்விகுதியைக்கொண்டு வாயுமானி, ஜலமானி, தாபமானி, சுவாஸமானி, சதமானி, பலமானி என்றும், அதேமாதிரி மனிதநூல், ஜீவநூல், மனநூல், வில்வித்தை, ஸவப்னசாஸ்த்ரம், உடனூல் என்றும், ism என்றால் வாதம் என்று வைத்துக்கொண்டு, சுப வாதம், அணுவாதம், சூன்யவாதம் என்றும், Sphere என்றால்.மண் டலம் என்று வைத்துக்கொண்டு வாயுமண்டலம், வர்ணமண்டலம் உஷ்ணமண்டலம், ஜோதிமண்டலம், சூர்யமண்டலம் என்றும், வார்த்தைகள் கற்பித்துக்கொள்ளலாம்.

2-வது இந்துதேசத்தில் அன்யபாஷைகளில் உபயோகித்து. வரும் ஹிந்திமுதலான பதங்களை நாம் உபயோகிக்கலாம்.

3-வது ஸம்ஸ்க்ருதபதங்கள் கிடைப்பதரிதானால், லத்தீன், க்ரீக் தாதுக்களைக்கொண்டு, தமிழ்மொழி கற்பித்துக்கொள்ளலாம். இதில் இன்னொரு சௌகர்யம் உண்டு. லத்தீன் கரீக் என்பன ஸம்ஸ் க்ருதபாஷைக்குச் சம்பந்தமானவையாதலாலும், இப்பாஷைவார்த்தை களின் சிதைவுகளே ஐரோப்பிய சாஸ்த்ரபரிபாஷைகளாயிருக்கின் றனவாதலாலும், நாம் இவ்வாறுசெய்தால், நாம் கற்பிக்கும் பதங்கள் ஸம்ஸ்க்ருதம், லத்தீன், க்ரீக், ஆங்கில முதலிய மற்ற ஐரோப்பிய பாஷைச் சொற்களை யனுசரித்து அதிக வித்தியாசமில்லாமலே இருக்கும்.

உதாரணம். இங்கிலீஷில் centre (=மத்யம்) என்பது, க்ரீக்கில் கேந்த்ரான் என்றும், ஸம்ஸ்க்ருத ஜோதிஷத்தில் கேந்த்ரம்

என்றும், தமிழில் கேந்திரம் என்றும் வழங்குகின்றது. இப்படிப்பட்ட விசேஷபதங்களைச் சேகரிப்பதுடன் இம்மாதிரியே கூடியவரை புதுப்பதங்கள் கற்பித்துக்கொள்ளவும் வேண்டும்.

4-வது கடைசியாய் யாதொருகதியுமில்லாவிடில் ஆங்கிலேய வார்த்தைகளை அப்படியே உபயோகிக்க வேண்டியதுதான்.

உதாரணம். ஆக்ஸிஜன், ஹைட்ரஜன், லென்ஸ், கேஸ், கோர்ட், கோட், உயில் முதலானவார்த்தைகளே.

பந்தயவ்யாஸங்கள். (Competitive essays) இம்முயற்சி கைகூடுவதற்கு இன்னொரு உபாயம். தற்காலநாகரிகத்துக்கின்றியமையாதனவும் மேல்நாட்டார் உயர்நிலைமை யடைந்திருப்பதற்குக் காரணமுமாயுள்ள பௌதிகம் முதலான ப்ரக்ருதி சாஸ்த்ரங்(Natural sciences) களைப்பற்றியும் செல்வநூல், ஜனசமூஹநூல், ராஜதந்திரம், அரசாட்சி முதலானவைகளைப்பற்றியும் உபயபாஷா வித்வான்களாகிய தக்க சாஸ்த்ரஞ்ஞரைக்கொண்டு, பந்தயவ்யாஸங்கள் எழுதச்செய்து, அவர்களுக்குத்தக்க பரிசளித்து, அவ்வாறு ஓர் விதம் ஊக்கமுண்டாக்குதலாம். இது தவிர நமது கலாசாலைகளைச் சேர்ந்த சாஸ்தரவுபாத்யாயர்களைக்கொண்டு, அடிக்கடி பௌதிகம் முதலானவைகளின் சிலபாகங்களில் அதாவது ஜலப்பகுதி (Analysis of water) மின்ஸாரவுற்பத்தி முதலியவைகளைப்பற்றித் தமிழிலேயே உபந்யாஸங்கள் செய்யச்சொல்லவும்வேண்டும்.

ஆகையால் இவ்வித ஏற்பாடுகள் செய்து, அன்யபாஷைகளிலுள்ள அரியபெரிய நூல்கள் நமது தமிழ்ப் பாஷையிலும் இயற்றப்பட்டு, அவைகளின் சாதகங்களையும் நன்மைகளையும் நமது சிறுவர்களும் சுவற்பகாலத்தில், குறைந்த பொருட்செலவில் அடையும்படி செய்யவேண்டும்.

விலைகுறைவான புஸ்தகங்கள்:— மேற்கூறியவாறு இயற்றப்படும் புஸ்தகங்களும், இயல்பாகவே தற்காலத்தில் இருக்கும் புஸ்தகங்களும் ஏழைகள்முதல் சகல தரத்தாரும் வாங்கி வாசிக்குமாறு சொற்பவிலைக்கு ப்ரசுரமாகவேண்டும். ஓர் இங்கிலீஷ்ப் புத்தகசாலை சென்றால் 4, 5 வருஷங்களுக்குமுன், 4, 5 ரூபாவுக்குக் குறையாது

விற்றுக்கொண்டிருந்த அருமையான நூல்களெல்லாம், நல்ல கடிதத்தில் நல்ல கட்டிடத்துடன், ஆறு அணுமுதல் 12 அணுவுக்குள் வாங்கலாம். இதன் முக்யமான ரகஸ்யமென்னவென்றால், ஒரு இங்கிலீஷ்ப்புஸ்தகம் வெளியாயிற்றென்றால், லக்ஷம்பேர்கள் வாங்கத் தயாராயிருப்பதால் அதன் விலையும் மிகக்குறைவாய் முடிகின்றது. நமது தமிழ் நாட்டில், தமிழ்ப்புஸ்தகம் கையிலெடுப்பதே கௌரவக் குறைவென்றிருக்கும் குறையை நீக்கி, அபூர்வக்ரந்தங்களையெல்லாம் எல்லோரும் வாங்குவார்களானால் அதன் விலையும் குறைந்து ஏழைகளுக்கும் வாங்கிப்படிப்பதற்கு ஹேதுவாகும்.

ஸர்வகலாசாலையும் தமிழும்:—தமிழ்ப்பாஷையானது கட்டாயப் பாஷையாயிருந்ததை யெடுத்ததும், அதை மறுபடி கட்டாயமாய்ச் செய்ய நமது ஸர்வகலாசபையார் மறுத்ததும் தமிழபிமானிகள் யாவரும் வருந்தத்தக்கதே. பிழைப்புக்கே மன்றாட்டமாய் (Struggle for existence) க்கிடக்கும் இக்காலத்தில், கல்வியிலாகாவிற்கூடக் கட்டாயமாய் நமது தாய்ப்பாஷையை நாம் வாசிக்காவிட்டால் எப்பொழுது வாசிக்கப்போகின்றோம். இதனால் தமிழ்ப்பாஷை நசித்துப் போகாவிடினும் அதன் கௌரவமும், உருவும் குலைந்துபோம். எல்லாம் ஆங்கிலமாய் முடியுங்காலம் எக்காலமோ? அதுவரை, உலகத்தின்கண்ணுள்ள அற்புதங்களைத் தமிழர்யாவரும் அறிய யாதொருமார்க்கமுமில்லாமலிருக்கின்றது. ஆங்கிலம்படித்த நமது தேசத்தார்க்குத் தமிழில், தாங்கள் கற்றவைகளை யியற்றப்போதுமான தமிழறிவு இல்லையாயின், அவர்கள் கற்றகல்வி அவர்களுடனே நசித்துப்போகின்றது. ஆகையால், தமிழபிமானிகள் யாவரும் நமது பாஷையை மறுபடி கட்டாயப்பாஷையாய் வைக்கும்படி ஏகோபித்து ராஜாங்கத்தாருக்கு ப்ரேரேபணைகள் செய்யவேண்டும்.

முற்றும்.

ஆர். எஸ். நாராயணஸாமி ஐயர்,

B. A. B. L.

---

# பொருளதிகார ஆராய்ச்சி.

(௩சக-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

இவ்வாறு மணஞ்செய்துகொண்டு இல்லறத்தில் ஒழுகுங்காலே, தலைவன், தலைவியைப்பிரிந்துசெல்வது, இன்ன இன்ன காரணங்களால் நிகழும் என்பது இனிக்கூறப்படும்.

களவினுள், தலைவியைப் பிரிதலே கூடாது என்பது இலக்கண மெனினும், கடிமணம் எய்தி, இல்லறத்தே ஒழுகுங்கால், தலைவன் காரணத்தால் தலைவியைப் பிரிவது தவறாகாது.

"கற்பினுட் பிறவே கடிவரை யின்றே"

என்றார் இறையனாரும். அங்ஙனம் மனைவியைப்பிரிதல் கல்விகற்றல், நாடுகாத்தல், தூதுபோதல், அரசர்க் குதவிசெய்தல், பொருளீட்டல், பரத்தைவிருப்பு ஆகிய இவைபற்றி நிகழும். இதனை,

"ஓதல் பகையே தூதிவை பிரிவே"

"பொருள்வயிற் பிரிதலு மவர்வயி னுரித்தே"

எனத் தொல்காப்பியனாரும்,

"ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்
றாங்கவ் வாறே யவ்வயிற் பிரிவே"

என்று இறையனாரும் கூறியிருக்கின்றார்.

இதனுள் ஓதலிற்பிரிவை அதன்சிறப்புப்பற்றி முதலிலும், பரத்தையிற்பிரிவை அதன் தாழ்வுபற்றி ஈற்றிலும் வைத்துளார்.

இவற்றுள் பெரும்பாலும் ஓதலும் தூதும் அந்தணர்க்கும் அரசர்க்கும் உரியன என்பதும், நாடுகாத்தல் பகைமேற்சேறல் என்பவை

அரசர்க்கே சிறப்பாக உரிய என்பதும், வேந்தர்க்குக் குற்றேவல் செய்தல், பொருள்வயிற்பிரிதல் என்பன வணிகர், வேளாளர் இவர் கட்குரிய என்பதும், பரத்தையிற்பிரிவு எல்லார்க்கும் உரிய என்பதும்,

* " அவற்றுள்
ஓதலுந் தூது முயர்ந்தோர் மேன "

† " வேந்தர்க் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென்
றாங்கவ் விரண்டு மிழிந்தோர்க் குரிய "

‡ " பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவும்
உரைத்தநால் வர்க்கு முரிய வாகும் "

என வரும் இலக்கணங்களால் அறியப்படும்.

இப்பிரிவுகள் இன்னாரின்னார்க்கு உரியவை என்பதைச் சிற்சில வேறுபாடுகளுடன் நம்பியகப்பொருளிலே 62-முதல் 79வரையுள்ள சூத்திரங்களில் விரிவாகக் காணலாம்.

இவைபோன்ற பிரிவு மகளிர்மாட்டில்லையென்பது,

" முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை "

என்னும் சூத்திரத்துக்கு நச்சினார்க்கினியர் ஓதல், தூது, பகை என்னும் இம்மூன்றுதன்மைபற்றி மகளிர், ஆடவரைப்பிரிந்துபோதல் வழக்கமில்லை என்பதனாற் பெறப்படும்.

அச்சூத்திரத்திற்கே முந்நீரென்பதற்குக் கடல் எனப் பொருள் கூறிக் கடலிற் கப்பல் ஏறிச் செல்வது தலைவிக்கு வழக்கமில்லையென்று இரட்டுறமொழிதல் என்னும் உத்தியாற் பொருள்கூறலும் அமையும்.

இவ்விரண்டாமுரையாலே, பொருள்வயிற்பிரிதல் முதலியவற்றில் தலைவன், தலைவியை நாட்டின்கண்ணே உடன் அழைத்துப்

---

* தொல்காப்பியம்.

† இறையனாரகப்பொருள்.

‡ நம்பியகப்பொருள்.

போயினும், கடலின்கண்ணே கலத்திலேற்றிக்கொண்டுபோகான் என்பது போதரும்.

அந்தணரும் மனைவியிற்பிரிந்துசெல்லுங்காற் கடல்கடந்து செல்லார் என்பது நச்சினார்க்கினியர் கருத்து.

* " புலத்திற் சிறந்த புரிநூன் முதல்வர்க்குக்
கலத்திற் சேறல் கடனன் றென்ப "

என்பதிலக்கணம்.

ஆடவர் மகளிரொடு கடன்மேற்செல்லுதல் கடியப்பட்டவாறு போல, போர்க்களத்திற் பாசறைக்கண்ணும், அவர்கள் மகளிரொடு சேர்ந்திருத்தல் விலக்கப்பட்டது.

" எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார் "

எனத் தொல்காப்பியனாரும்,

" குலமட மாதரொடு கலமிசைச் சேறலும,
பாசறைச் சேறலும் பழுதென மொழிப"

என நாற்கவிராஜநம்பியும் கூறியிருக்கிறார்.

இனி, இத்தகைய பிரிவுக்கு எல்லை கூறுவோம்.

ஓதலிற்பிரிவாயின் அது மூன்றுவருஷங்களுக்குமேற்படாது; மற்றைப்பிரிவுகளெல்லாம் ஒருவருஷத்துக்குட்பட்டதாக வேண்டும். இவை,

" வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது "

" வேந்துறு தொழிலே யாண்டின தகமே"

" ஏனைப் பிரிவு மவ்வயி னிலையும் "

என்னுந் தொல்காப்பியச்சூத்திரங்களால் அறியப்படும்.

இங்ஙனம் பிரிந்துசெல்லுமிடத்து, தலைவி யிரங்குதலன்றித் தலைவனும் இரங்குவான்; அங்ஙனம் மனம் அழுங்கிப் பின், தலைவியைத் தேற்றுவித்துத் தான் பிரிந்துசெல்வன். பட்டினப்பாலையில், தலைவன்

---

* நம்பியகப்பொருள்.

" முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே "

என்பதும், அதற்கு நச்சினர்க்கினியர் " 'வாரேன்' என்ருன் அவளை ஆற்றுவித்துப் பிரிதல் கருதி. அது *'செலவிடை யழுங்கல் செல்லாமையன்றே, வன்புறை குறித்தல் தவிர்ச்சியாகும்' என்பதனல் உணர்க." என உரைவிசேடங்காட்டிப் போந்ததும் இங்கு நோக்கற்பாலது.

அங்ஙனம் தலைவன் பிரிந்துழி, தலைவி அவன் வருமளவும், ஆற்ருது மனமழிந்துநிற்பத் தோழி அவளுக்குத் தலைவன்வரும்பருவம் இது என்பதும், பிறவுங்கூறித் தேறுதல்சொல்லுவள். மீண்டுவரும் தலைவனும் இடையில் எங்குந்தங்காது, மிக்கவேகமாகச்செல்லும் பரிமாபூட்டியதேரூர்ந்து கடுகி வந்தெய்துவன். முல்லைப்பாட்டில் வாயில்கள் தலைவன் திரும்பிவரும்போது அவன் தேரிற்பூட்டிய குதிரைகள் ஆரவாரித்தன என வியந்தமை இங்கு உணரற்பாலது.

பிரிவும் பிரிந்தபின் சேர்தலும் இத்தன்மையனவாக, இனித் தமிழிலக்கிய இலக்கணங்களில், தமிழர் நாகரிகத்துக்கே ஓர் இழுக்குத் தோன்றுமாறு மிகுதியாகக் காணப்படும் பரத்தையரைப்பற்றித் தொல்காப்பியத்திற் காணப்படுவனவற்றைச் சுருக்கியுரைப்பாம்.

பரத்தையர், காமக்கிழத்தியர் என்றும், காதற்பரத்தையர் என்றும் இருதிறத்தவராவர். இவர்களுள்,"காமக்கிழத்தியராவார் கடனறியும் வாழ்க்கையுடையராகிக் காமக்கிழமைபூண்டு இல்லறநிகழ்த்தும் பரத்தையர்; அவர் பலராதலிற் பன்மையாற் கூறினர். அவர், தலைவன் இளமைப்பருவத்திற்கூடி முதிர்ந்தோரும், அவன் தலைநின்ருெழுகப்படும் இளமைப்பருவத்தோரும், இடைநிலைப்பருவத்தோரும், காமஞ்சாலா இளமைப்பருவத்தோரும் எனப் பலபகுதியாம். இவரைக் கண்ணிய காமக்கிழத்தியர் எனவே கண்ணுத காமக்கிழத்தியரும் உளராயிற்று. அவர், கூத்தும் பாட்டும் உடையராகிவரும் சேரிப் பரத்தையரும், குலத்தின்கண் இழிந்தோரும்...பிறருமாம்" என நச்சினர்க்கினியர் "புல்லுதல் மயக்கும் புலவிக்கண்ணும்" என்னும்

* தொல்காப்பியம். பொருளதிகாரம். சூத்திரம் 185.

சூத்திரத்தின் உரையில் எழுதியதனால், தலைமகன், தலைவி யொருத்தி மாட்டே காமவின்பம் நுகரும் இலக்கணமுடையவனல்லன் என்பது போதரும்.

இது, "காதற் பரத்தை யெல்லார்க்கும் உரித்தே" என்னும் இறையனார்சூத்திரத்தானும் பெறப்படும்.

தலைவன், பரத்தையிடஞ்சேர்தல்பற்றித் தலைவி வருந்துதலும், தலைவன் திரும்பிவந்தவிடத்து அவனோடு ஊடலும், அவ்வூடல் தவிர்ப்பதற்கு வாயில்களாக * "தோழி தாயே பார்ப்பான் பாங்கன், பாணன் பாடினி இளையர் விருந்தினர், கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்" இவர்களைப்போக்கித் தலைவியினது ஊடலைநீக்கத் தலைவன் முயலுவதும், பிறவும் இலக்கணத்தில் மிக்கவிரிவுடன் கூறப்பட்டுள்ளன. இவற்றால் அக்காலத்துப் பரத்தையர் மிகுந்திருந்தனர் என்பது எளிதில் உணர்ந்துகொள்ளற்பாலது.

மற்றும், ஜீவகசிந்தாமணியினும், பிற வருணனைநூல்களினும் பரத்தையர்சேரிவருணனையை, நகரப்படலத்தின்கண்ணேவைத்திருப்பதும், பரத்தையர் செல்வாக்கு எத்துணைதூரம் சென்றிருந்ததென்பதனை வெள்ளிடைமலையென விளக்கிக்காட்டும்.

இவற்றால் தலைவன் பலபெண்களைக் கூடுதல் கூறிய இலக்கணத்துக்கு அக்காலத்தில் மாறுகவில்லை என்பது போதரும்.

இங்ஙனம் வரையறையின்றித் தலைமகன் ஒழுகல் சாலுமோ எனின்,

"புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதிற்
......சேர்தற் கண்ணும்"

என்பதற்குச் "சேர்தல் கூறவே, கருப்பம் முதிர்ந்தகாலத்துத் தலைவன் பிறரோடு கூட்ட முண்மையும் கூறிற்றும்" என்று நச்சினார்க்கினியர் உரைகூறியதால், அங்ஙனம் தலைவன் பிறருடன்கூடியது, தலைவி தன்னோடு காமவின்பம் நுகர்தற்கு இயலாதிருந்தகாலத்தில் என்று ஒருவாற்றாற் சமாதானங்கூறலாமெனினும், நாகரிகமுறை பற்றி ஆராய்வுழி, அது குற்றமுடைத்தேயாம்.

---

* தொல்காப்பியம்.

மற்றும், "பின்முறை யாக்கிய பெரும்பொருள் வதுவைத், தொன்முறை மனைவி யெதிர்ப்பா டாயினும்" என்னும் சூத்திரத்தில், தலைவனுக்கு "தொன்முறைமனைவி யிருப்பவும், பின்முறையாக்கிய" வதுவையும் உண்டு என்பது போதரும். அதனை, இச்சூத்திரத்துரையிலே நச்சினார்க்கினியர் "அந்தணர்க்குப் பின்முறை மூன்றும், அரசர்க்கிரண்டும், வணிகர்க்கொன்றும் நிகழ்த்தல்வேண்டுமென வேதநூல் கூறிற்றென்பது" எனக்கூறியிருப்பதனாலும் உணரலாம்.

இனி இறையனாரகப்பொருளில், தலைமகள் ஊடியவழித் தோழி அவ்வூடல் தவிர்ப்பாள் "அல்லதூஉம் வண்டோரனையர் ஆடவர். பூவோரனையர் மகளிர் என்பது, என்னை ? வண்டுகள் தாதுதுமிடத்து நன்மலரே ஊதுவே மென்னா; எல்லாமலரும் ஊதும். இனிப் பூ அவாவினக்கால், எம்மையே ஊதா, எல்லாப் பூவையும் ஊதினவென்று புலவாதன்றே; அதுபோல வழிபடுதலல்லது மலைத்தற்கண்ணேம் அல்லேம்" என உரையிற் காணப்படுவதும், அக்காலத்துத் தமிழரில் ஆடவர் 'ஏகபத்னிவிரதம்' பூண்டவர்கள் அல்லர் என்பதற்குப் போதிய சான்றாகும்.

இது நிற்க:—இனித் தொல்காப்பியனார் தலைவன், தலைவி, செவிலி, தோழி, பரத்தை முதலியவர் இவ் விச்சமயத்திற் பேசுதல்வேண்டுமென்று கூறியிருப்பது உளநூற்கொள்கைக்கு ஒத்ததாகவேயிருக்கிறது, அவர் கூறியிருக்கும் இவ்விலக்கணங்கட்கு ஷேக்ஸ்பியர், காளிதாசர் முதலிய நாடகாசிரியர்கள் நூல்களிலிருந்து;அப்படி அப்படியே உதாரணங்காட்டல் அமையும்.

மெய்ப்பாட்டியலின்கண் ஆசிரியர் "நகையே, அழுகை, இளிவரன், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை" என்னும் இவ்வுணர்ச்சிகளினது இயல்பினையும், அவை எவ்வெக்காலத்து நிகழும் என்பதையும், அவை அகத்தேநிகழுங்காலத்துப் புறத்தே எவ்வெக்குறிகள் தோன்றுமென்பதனையும் மிக அழகாக விரித்துச் சொல்லியிருக்கிறார். இம்மெய்ப்பாட்டுவிரிவெல்லாம் நூல்வாயிலாக உணர்ந்துகோடற்கியலாதென்றும், கண்ணானும் செவியானும் நன்கு அறிந்துகொள்ளும் அறிவுடையார்க்கே விளங்கும் என்றும்,

"கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"

என்னும் புறனடைச் சூத்திரத்தால் விளக்கிப்போந்தனர்.

இங்ஙனம் விரிவாக இல்லறநிலைக்கு இலக்கணம்வகுத்தவர், அவ் வில்லறம் எதனொடு முடிவுபெறும் என்பதனைக் கூறாமற்போகவில்லை.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி
யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்னும் சூத்திரத்தால் தலைவனும், தலைவியும் காமவின்பம் வேண்டுமளவு நுகர்ந்து, அதன்கண் வெறுப்புற்றவராய், விடுபேற்றிற்குச் சிறந்தகருவியாகிய துறவினை மேற்கொள்வர் என்பது கூறினர். இதனுரையின்கண்ணே நச்சினார்க்கினியரும் "ஏமஞ்சான்றவாவன, வானப்பிரத்தமும் சன்னியாசமும் எனவே இல்லறத்தின்பின்னர் இவற்றின்கண்ணே நின்று பின்னர் மெய்புணர்ந்து வீடுபெறுப என்றார்" என்று விரித்துரைத்தனர்.

இதுகாறும், களவின்கண், தெய்வசங்கற்பத்தால் எதிர்ப்பட்ட தலைவன் தலைவியர் இயற்கைப்புணர்ச்சி நிகழ்த்தியது முதலாக, அவர் துறவு பூண்டு வீடுபேற்றிற்குரிய முயற்சிசெய்வதீறாக அகப்பொருள் விஷயமெல்லாம் தொல்காப்பிய இலக்கணங் கருவியாகக்கொண்டு தொகுத்துக் கூறினோம். இனிப் பொருளின் மற்றைப்பகுதியாகிய "புறப்பொருள்" இலக்கணத்தினை ஆராய்வோம்.

(தொடரும்.)

வே. முத்துஸாமி ஐயன்.

---

# ஆக்கச்சொல்விளக்கம்.

செந்தமிழ் 11-ஆந் தொகுதி 3-ஆம் பகுதியிலே வெளியிடப் பெற்ற 'ஐயவினாவுக்குவிடை' யென்பதிலே இயைபுத்தொடைவிகற் பங்களை இனிது விளங்கக்கூறினர் யாழ்ப்பாணத்துச் சுன்னாகப் பதியுடையாரும் இருபெரு மொழியினும் 'நன்மாணுழைபுலன்' மிக்காருமாகிய அ. குமாரசுவாமிப்புலவர் என்பார். அதன்மேல் அவர் விரும்பியவாறு 'தாமின்புறுவதுலகின்புறக்கண்டு காமுறூஉம்' இயல்பினையுடைய நம் பத்திராதிபரும் பொருட்செறிவுள்ளதோர் முடிவுரைகூறி அவ்வுரைமாண்பை நன்குவிளக்கினர். அவ்விரண் டுரையுங் கற்றோரான் மிகப் பாராட்டப்படுவனவேயாம். அது நிற்க, 'சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்' என்று ஆசிரி யர் முடிவின்கண் ஆணைதந்ததுகொண்டு, புலவர் பொச்சாப்பு என்னுஞ் சொல்லைப் பகுத்துக்காட்டிப் பதமுடிபிலக்கணமெனக் கூறியதிலேமாத்திரம் எமக்குச் சிறிது கருத்துமாறுபாடுளதாயிற்று. பத்திராதிபரும் அதுபற்றித் தம் முடிவுரை வார்தல்செய்யாது வாளா விருந்தமையின், அவர்க்குங் கருத்துவேறுமென்பதே குறிப்பா யிற்று. ஆகவே உண்மைப்பொருளை தேர்தற்கருத்தால் எங் கருத்தை யீண்டு வெளியிடுகின்றோம். நடுவுநிலைமையினையுடைய அறி ஞர் தங்கருத்துக்குப் பொருந்தாததனை யொழித்துப் பொருந்துவ தொன்றனை உவந்துகொள்வாராக.

இனி, அவர் பதமுடிபுகாட்டியவாறு:—"விம்மல்+ஆப்பு - விம் மாப்பு எனவும், ஏமம்+ஆப்பு - ஏமாப்பு எனவும் புணர்ந்துநின்றது போலப் பொச்சம்+ஆப்பு - பொச்சாப்பு எனப் புணர்தலாயிற்று என அநுமிதிபெறுகின்றோம். பொச்சம் - பொய்புடையது. பொய் - உள்ளீடில்லது. (பொந்துபோன்றிருப்பது.) பிங்கலநூலாரும் பொய் என்பதனை மரப்பொந்தின்பெயர்களுள் ஒன்றாக வைப்பர். ஆப்பு - ஆதல். 'சிதைவின்றி யெச்சத்திற் கேமாப்புடைத்து' என்புழி ஆப்பு ஆதல் என்னும் பொருட்டாதல் அறிக. பொச்சாப்பு உள்ளீடி லதாதல்".

"கவர்+பு - கப்பு எனவும், உவர்+பு - உப்பு எனவும் விகாரப்பட்டு முடிந்ததுபோலப் பொய்+சு என்பனவும் விகாரப்பட்டுப் பொச்சு என முடிந்து பின்னர் அம்முப் பெற்றுப் பொச்சம் என நிற்பதாயிற்று. கப்பு=கவருடையது. 'கப்புடைநாவினாகருலகமும்' (கம்பர்) உப்பு=உவருடையது" என்பது.

இவ்வாறு அவர் பதமுடிபுகாட்டியதற்கு ஏதுவாக இருந்ததெல்லாம், ஆண்டு அவர் சொற்சோதனைகாட்டிய 'செப்பமுடையவனாக்கஞ் சிதைவின்றி, யெச்சத்திற் கேமாப்புடைத்து' என்னுந் திருக்குறளுரையிலே, ஆசிரியர் பரிமேலழகர் 'ஏமாப்புடைத்து' என்பதற்கு 'வலியாதலையுடைத்து' என்று பொருள்கூறியதுபற்றி, 'வலியாதல்' என்னும் இருசொற்பொருளையுந் தந்தது 'ஏமாப்பு' எனவும், 'ஏமம்' என்னுஞ் சொல்லே வலியை யுணர்த்துமாகலின் 'ஆதல்' என்பதை 'ஆப்பு' என்பதோர் சொல் உணர்த்திற்றாகல் வேண்டும் எனவும், ஏமம் ஆப்பு என்று இரண்டுசொற்கள்கூடி ஏமாப்பு என்பதாயிற்று எனவும் தாங்கொண்ட கருத்தேயாம் என்று அறியப்படும். உரையாசிரியர் பரிமேலழகர் கருத்தினை ஆராய்வோமானால் அதனின் வேறாதல் காணப்படும். அம்மொழிமுடிபின் வரன்முறையும் ஆராயுங்கால் வேறேயாம்.

ஏமாப்பு என்பதனுள் ஆப்பு ஆதல் என்று உரைத்ததனால் அது காப்பு கலப்பு என்றாற்போலப் புவ்விகுதிபெற்ற தொழிற்பெயரென்றல் அவர்கருத்துப்போலும். ஆ என்பது பகுதியாகத் தொழிற்பெயர் ஆதல் ஆகல் ஆகை ஆக்கம் என வருதலன்றி ஆப்பு என வருதல் யாண்டுமின்மையின் அது பொருந்தாதென்க.

அன்றியும், ஆ வென்பது பகுதியாக ஆனான், ஆகி, ஆகிய, ஆதல், ஆனவன் என ஐவகைச்சொற்களும் வருமாதலால், ஏமம் என்பது விகாரப்பட்டு ஏம் என நின்றதனோடு அது தொடர்ந்து வருவழியும் அவ்வாய்பாடே பற்றி ஏமானான், ஏமாகி, ஏமாகிய, ஏமாதல், ஏமானவன் என வரல்வேண்டும். அங்ஙனம் வருதலின்றி ஏமாந்தான், ஏமாந்து, ஏமாந்த, ஏமாத்தல், ஏமாந்தவன் என வேறுபட்டே வருதலானும், ஆ என்பது பகுதியாக ஆந்தான், ஆந்து,

ஆந்த, ஆத்தல், ஆந்தவன் என வருதலின்மையானும் ஆ என்னும் வினைப்பகுதியே ஏமாப்பு என்னுஞ் சொல்லகத்தின்மை உணர்க.

இனி அப்பகுதி பொச்சு என்பதனோடு தொடர்ந்துவருவழியும் அவ்வாறே பொச்சானார், பொச்சாகி, பொச்சாகிய, பொச்சாதல், பொச்சானவன் என வரல்வேண்டும். அங்ஙனம் வருதலின்றிப் பொச்சாந்தவன் * என வேறுபட்டே வருதலான், பொச்சாப்பு என்னுஞ் சொல்லகத்தும் அவ்வினைப்பகுதியின்மை உணர்க.

இனி உரையாசிரியர் பரிமேலழகர்கருத்தினை ஆராய்வாம். ஏமாப்பென்னுஞ்சொல் மேற்குறித்த 'செப்பமுடையவனாக்கம்' என்னுங் குறள் ஒன்றிலேமட்டும் அருகிவந்த இயல்பினதன்று. தெய்வப் புலவர்நூலகத்து அது மிகப்பயின்றுவழங்கியதேயாம். ஏமம் என்னுஞ் சொல்லும் அத்தன்மையதே.

'ஒருமைபு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து'

'ஒருமையுட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து'

'குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து'

'மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து'

'மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து'

'இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பற்று விடும்'

என்னுங் குறள்களிலே ஏமாப்பு என்னுஞ்சொற் பயின்றுவந்தமை காண்க.

---

* எதிர்மறையிலே பொச்சாவார், பொச்சாவாது, பொச்சாவாத பொச்சாவாமை, என வருதலுங்காண்க.

'மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு'

'செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று'

'காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி'

'இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பாரி லானுங் கெடும்'

'சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும்'

'சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று'

என்னுங் குறள்களிலே ஏமம் என்னுஞ்சொற் பயின்றுவந்தமை காண்க.

இங்ஙனம் இவ்விருசொல்வழக்கும் நூலுட்பயின்றுவந்தமை கண்டு அவற்றின்பொருள் நன்குதேர்ந்து உரைவிரித்த பரிமேலழகர்க்குப், புலவர் கூறுமாறு ஏமாப்பு என்பது ஏமம் ஆப்பு என்று இரண்டு சொற்கூடியாயிற்று என்பது கருத்தாயின், அஃது அத்தன்மைத்தென்று அகலவுரையுள் இலக்கணக்குறிப்பிற் கூறாது செல்லார். ஆசிரியர்கருத்துக் கரதலாமலகமெனவிளங்கப் பொருள்விரித்தலானும், ஆண்டு அமைந்துகிடந்த அரிய பல விலக்கணங்களையெல்லாம் எடுத்துக்காட்டி விளக்குதலானும், அவர் பண்டையுரையாசிரியர் பலருள்ளுஞ் சிறந்தார் என்ப. அப்பெருமான் தமிழ்மறையுட் காணப்படுஞ் சொற்களுள்ளே இருசொல்லாயினும் ஒருசொல்லின் தன்மையை எய்திநின்றவிடத்து, இஃது ஒருசொன்னீர்மைத்து என்றும், இருசொற்போலத் தோன்றினும் ஒருசொல்லேயாயவிடத்து இஃது ஒருசொல் என்றும் விசேடவுரையிலே இலக்கணங் குறித்துச்செல்வது நியமம்.

'நயனீன்று நன்றி பயக்கும்' என்னுங் குறளில் 'தலைப்பிரிதல்' என்பதும், 'ஒறுத்தாற்றும் பண்பினர்' என்னுங் குறளில் 'ஒறுத் தாற்றும்' 'பொறுத்தாற்றும்' என்பனவும், 'ஓஒதல் வேண்டும்' என்னுங் குறளில் 'ஓஒதல்வேண்டும்' என்பதும், 'விழைதகையான்' என்னுங் குறளில் 'வேண்டியிருப்பர்' என்பதும், அதுபற்றிச் சொற் சோதனைகாட்டிய 'எழுந்திருப்பர்' என்பதும், 'நோனுவுடம்பு, என்னுங் குறளில் 'நீக்கிநிறுத்து' என்பதும் ஒருசொன்னீர்மைய வென்றுகூறினர்.

'அடக்கமமரருளுய்க்கும்' என்னுங் குறளில் 'உய்த்துவிடும்' என்பதும், அதுபற்றிச் சொற்சோதனைகாட்டிய 'பிறந்துவிடும்' என்பதும், 'சிறுபடையான்' என்னுங் குறளில் 'அழிந்துவிடும்' என் பதும், 'யாகாவாராயினும்' என்னுங் குறளிற் 'சோகாப்பர்' என்பதும், சொற்சோதனைகாட்டிய 'அல்லாப்பர்' 'செம்மாப்பர்' என்பனவும், 'மலர்காணின்மையாத்தி' என்னுங் குறளில், 'மையாத்தல்' என்பதும், சொற்சோதனைகாட்டிய 'இறுமாத்தல்' 'செம்மாத்தல்' என்பனவும், 'தக்காங்கு நாடி' என்னுங் குறளில் 'தக்காங்கு' 'ஒத்தாங்கு' என் பனவும், 'இலக்கமுடம் பிடும்பைக்கு' என்னுங் குறளிற் 'கையாறு' என்பதும், 'அழுக்காறுமை' என்புழி 'அழுக்காறு' என்பதும் ஒரு சொல்லென்றுகூறினர்.

இவ் வியல்புபற்றி நக்கீரரும் 'சேட்படநிறுத்தல் என்பது நீக்கி நிறுத்தார், உய்ந்துவிட்டார், போக்கிவிட்டார் என்பனபோல ஒரு சொல்விழுக்காடுபடநின்றது' என்று இறையனார்களவியலுரையுட் கூறியவாறும் அறிக.

இன்னும் இவ் வியல்பை ஆசிரியர் சிவஞானமுனிவர் தொல் காப்பிய முதற்சூத்திரவிருத்தியுள்ளே 'எனப்படுப' என்பதற்கு இலக்கணங்கூறுழி விளக்கிக்காட்டியவாற்றானும் உணர்ந்துகொள்க.

இனி யொருசாராசிரியர் பல சொற்றொடர்களையும் ஒருசொன் னீர்மைய என்று உரைப்பாரும் உளர். அவர்கருத்துவேறுகலின் ஈண்டு அதுபற்றி ஆராய்ச்சியின்று.

மேற்காட்டியவாறு இஃது ஒருசொன்னீர்மைத்து, இஃது ஒரு சொல்லென்று ஒருவாறு பகுமுடிபிலக்கணங்கூறிச் செல்லும் உரையாசிரியர் பரிமேலழகர் இவ் வேமாப்பு என்னுஞ் சொற்பற்றியாதல் பொச்சாப்பு என்னுஞ் சொற்பற்றியாதல் இஃது ஒருசொன்னீர்மைத்து என்று யாண்டுங்கூறுமையால் அவை ஒருசொல்லென்பதில் அவர்க்கு மயக்கஞ் சிறிதுமின்மை அறிக.

அற்றேல், அவை ஒருசொல் என்றுயினும் இலக்கணந்தோன்றக் கூறல்வேண்டும். அதுவுமின்மையால் அவை ஒருசொன்னீர்மைய வென்பது பழுதாகாது எனின், நன்றுகூறினீர்! ஒருநிகரனவாகிய சொற்களுள்ளே ஒன்றற்கு யாதானுமோரிடத்திலே இலக்கணங்கூறி அதனை ஏனையவற்றுக்கும் உய்த்துணரவைத்துச்செல்வது அவர்க்கு நியமம். 'ஆக்கமிழந்தேமென்றல்லாவார்' 'செம்மாக்குங்கீழ்' 'உவப்பத்தலைக்கூடி' 'தீயுழியுய்த்துவிடும்' என்புழி அவ்வகையிலக்கணமே கூறுதொழிந்து, மேற்காட்டியவாறு அந்நிகரனசொற்பற்றிக் கூறிய இலக்கணத்தை ஆண்டும் உய்த்துணர்ந்துகொள்ள வைத்தமை காண்க. இவ்வாறு உய்த்துணரவைத்தல் உரையாசிரியராயினர்க்கு இயல்பென்பதை 'உயர்திணையென்மனார் மக்கட்சுட்டே' என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையர் உரையானும் அறிக. ஆகவே, செம்மாப்பு, இறுமாப்பு முதலியன ஒருசொல்லெனக் கொண்ட அவர்க்கு, அவற்றோடொத்த இயல்பினவாகிய ஏமாப்பு பொச்சாப்பு என்பனவும் ஒருசொல்லென்பதன்றி ஒருசொன்னீர்மையவென்பது கருத்தாதல் யாண்டையதென்க.

அல்லதூஉம், 'சலத்தாற்பொருள்செய்தேமார்த்தல்' என்னுங் குறளுரையிலே, பிறரோதிய பாடமாகிய, 'ஏமாத்தல்' என்னுஞ் சொல்லையும் அதற்குப்பொருள் மகிழ்தல் என்பதையும் அங்கீகரித்துப் பின் அது தன்வினையென்றுகூறிப் பிறருரை பொருந்தாமை காட்டி மறுத்தார்; தாங்கொண்ட பாடமாகிய 'ஏமார்த்தல்' என்பதனை 'ஏமம் ஆர்த்தல்' என இருசொல்லாகப் பிரித்துக்காட்டி, அதற்கு ஏமத்தை அடையப்பண்ணுதல் என்று பொருளும் விரித்தார். அதனாலும் ஏமாத்தல் என்பதும், அதுபோலும் ஏமாப்பு என்பதும், ஒரு சொல்லென்பதும், ஏமம் ஆப்பு என இரண்டுசொல் ஒருசொன்னீர்மைப்

பட்டு ஏமாப்பு என வருமா றில்லையென்பதும் அவர்கருத்தாதல் தெளியப்படும் என்க.

அற்றேல், ஏமாப்பு என்னுஞ் சொற்குத்தான் பொருள் என்னை? ஏமாப்புடைத்து என்பதற்கு வலியாதலுடைத்தென ஆதல் என்னுஞ் சொல் விரித்துரைத்தவாறுதானும் என்னையோ வெனின், 'எச்சத்திற்கேமாப்புடைத்து' என்புழி 'ஏமாப்புடைத்து' என்பதற்கு 'வலியாதலுடைத்து' என்று உரைகூறியவர்தாமே 'மனநலத்தினூங்கு மறுமை' யென்புழி 'ஏமாப்புடைத்து' என்பதற்கு 'வலிபெறுதலை யுடைத்து' என்றும், 'ஒருமையுட்டான்கற்றகல்வி' என்புழி 'ஏமாப் புடைத்து' என்பதற்குச் 'சென்றுதவுதலையுடைத்து' என்றும் உரை விரித்தார். 'இரவென்னுமேமாப்பிறோணி' என்புழி 'ஏமாப்பில்' என் பதற்குச் 'சேமமற்ற' என்று பொருள்கூறினர். 'ஒருமையுளாமை போல்' என்புழி 'ஏமாப்புடைத்து' என்பதற்கு 'அரணுதலையுடைத்து' என்று பொருள்விரித்து, அதுபோலவே 'மறமானமாண்டவழிச் செலவு' என்புழி 'ஏமம்' என்பதற்கு 'அரணுவது' என்று பொருள் விரித்துரைத்தார். அதனுல் ஏமாப்பு என்பதற்கு வலி, உதவுதல், சேமம், அரண் என்பதே பொருள் என்பதும், பெறுதல் சென்று ஆவது என்னுஞ் சொற்கள்போல ஆதல் என்னுஞ்சொல் ஆண்டு வருவித்துரைக்கப்பட்டதென்பதும், ஏமாப்பு என்பதும் ஏமம் என் பதேபோல ஒரு தனிமொழியென்பதும், ஏமாப்பு ஏமம் என்பன அவ்வாற்றுன் ஒருபொருட்கிளவியென்பதும் துணிந்துகொள்ளப் படும் என்க.

பிங்கலநூலினும் 'ஏமாப்புச் செம்மாப்பு' எனவும், 'இன்பமு நீறும் பொன்னுங் காவனு - மிரவுஞ் சேமமு மேமாப்பு மயக்கமு - மென் பன ஏமப் பெயரன வாகும்' எனவும் ஓத்துண்மை கண்டுணர்க.

இனிப் 'போச்சாப்பு' என்பதும் அவ்வாற்றுன் 'ஏமாப்பு' என்பதே போல ஒரு தனிமொழியென்பதும் தடையின்றிமுடிந்தவாறு கண்டு கொள்க. (இன்னும் வரும்)

நா. சோமசுந்தரம்பிள்ளை,
மன்னுர்குடி.

---

# அந்தகக்கவிவீரராகவமுதலியார்காலம்.

(உஉச-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

"கைலாயமாலை" கூறுவதை இங்கே சற்றுவிரித்துரைத்தல் இன்றியமையாதது. (1) பண்டைக்காலத்தில் ஆரின்மாலையனும், காவிரித்தண்புனல் நாடனும், புலிக்கொடியோனும், சூரியகுலத் தோன்றலுமான ஒரு சோழவரசனது கன்னிமகளார் புண்ணிய தலங்களைத் தரிசித்தற்பொருட்டுத் தனதுபரிவாரங்களுடன் ஈழஞ் சென்று அத்தேயத்துள்ள *கடற்றீர்த்தத்தருகே தங்கலுற்றனளாக; அப்போழ்து சிங்கமுகத்தனான ஈழத்தரசன் இரவிலே அவ்வரசியைத் திருடித் தனது நல்நகரமாகிய "கதிரைமலை"க்குக்கொண்டுபோய் அங்கே அவளை மணஞ்செய்துவாழுங்காலத்தில் இவள் அவனுக்குப் பேரழகுவாய்ந்தவனும், வாலொன்றுள்ளவனுமான ஒரு குமாரனை யீன்றனள். இவனுக்கு "நரசிங்கராசன்" என்ற பெயரிட்டனர். பின்னர் அம்மாது ஒரு குமாரத்தியையும்பெற்றனள். பிள்ளைகள் வளர்ந்தபொழுது பெற்றோர் அவர்களிருவரையும் மணஞ்செய்து வைத்து அவர்களையே தங்களுக்குப்பின் சிங்காசனத்துக் குரித்தாளி களாக நியமித்துவைத்தனர். யாழ்ப்பாடிப்புலவரொருவர் இந்த நரசிங்கவரசர்முன் பாடி அவரைமகிழ்வித்தபோது அவருடைய தேசத்தின் ஒருபாகத்தைப் பரிசாகப் பெற்றனர். அக்காலந் துவக்கம் இப்பாகம் "யாழ்ப்பாண"மென்று வழங்கப்பட்டது. யாழ்ப்பாணனர் அதிக பிரபலத்தோடு இத்தேயத்தையாண்டு பிள்ளையின்றியிறந்து போக அரசனில்லாமையால், தேசத்திற் பெருங்குழப்பங்கள் நடந்து கொண்டிருக்க "மழவன்" என்னு மொரு வேளாளன் மதுரைக்குச் சென்று "செழியசேகரன்"மகன் "ஜெகராசசிங்க ஆரிய"னென்பானை அவன்மந்திரியாகிய "புவனேகவாகு" என்பவனுடனே யாழ்ப் பாணத்துக்கு அழைத்துச்சென்று பட்டங்கட்டிவைக்க அவன் நல் லூரைக்கட்டி அந்நகரிலிருந்து அரசுபுரிந்தனன் என்பர்.

(1) Vide Appendix to the "Yalpana Vaipava Malai" English Translation by C. Brito Esq. p. 45.

* இது தற்காலம் "கீரிமலை"யென்று வழங்கப்படுகின்றது.

(1) மேற்குறித்த இலங்கையரசனை வைபவாசிரியர் "உக்கிர சிங்க"னென்று வழங்குகின்றார். இவன் "திசையுக்கிர"னென்னும் சோழன்மகள் "மாருதப்புரவீகவல்லி"யினது பேரெழிலால் இழுப்புண்டு அவளை இராக்காலத்திற் களவாய் எடுத்துக்கொண்டுபோயின னென்றும், முதலில் (2) "கதிரமலை"யிலிருந்து பின்பு "செங்கடக நகரி"யைத் தனக்கு இருப்பிடமாக்கினனென்றும் "வைபவங்" கூறும்.

(3) யாழ்ப்பாணச்சரித்திரத்திலே மேற்குறித்த "உக்கிரசிங்க" னுக்கும் அவன்பத்தினி மாருதப்புரவீகவல்லி"க்கும் பிறந்த ராஜ குமாரனுக்கு ஒருவாலோடு சிங்கமுகமும் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

இனி, "கைலாயமாலை" சொல்வதிலிருந்து விளங்கக் கிடப்பன யாவெனில் யாழ்ப்பாடிக்குப் பரிசளித்த இலங்கையரசன் சிங்கள வரசனென்பதும், அவன் சோழவம்சத்தி லொருராஜஸ்திரீயை மணம் புரிந்தவனென்பதும், அவன் சிங்கவம்சபரம்பரையைச் சேர்ந்தவ னென்பதுமே. இவ்வரசன் சிங்களவரசனே யென்பது அவன் ராஜ தானி "செங்கடகநகரி"யென்று வைபவத்தார்கூறியிருத்தலானும் நன்குபுலப்படும். "செங்கடகநகரி"யென்றது "செங்கடகலபுரம்" என்று சிங்கள இதிகாசங்களில் வழங்கப்படும் "கண்டி" நகரத்தைக் குறிக்கும். இக்கருத்துக் கிசைய (4)"வீரோதயசிங்க ஆரிய"னென்னும் யாழ்ப்பாணத்தரசன் "சந்திரசேகர"பாண்டியனுக் குதவி செய்யும்படி ஒரு பெருஞ்சேனையோடு மதுரைக்குச்சென்று அங்கே சிலகாலம் தங்கியிருக்கையில் வன்னியரென்னுஞ் சிற்றரசர் யாழ்ப் பாணத்தின்மேற் படையெடுத்தற்குக் "கண்டி"யிலிருந்த சிங்கள வரசனைக் கேட்பாராயினர். இவனே தனது முற்பிதாக்களிலொருவன் அந்தகயாழ்ப்பாடிக்குக் கொடுத்தபரிசைத் திரும்பப்பறித்தல் சரி

---

(1) Vide idem p. 9.

(2) "அநுராசபுரத்"தைத் தமிழர் "கதிரமலை" அல்லது "கதிரகிரி"யென் றழைத்தன ரென்பது பிறிற்ரேப்பிள்ளையவர்களுடைய அபிப்பிராயம். Vide "Yalpana Vaipava Malai" "Glossary of foreign words" p. 3.

(3) Vide idem p. 31.

(4) Vide "Yalpana Vaipava Malai" English Translation by C. Brito Esq. pp. 20, 21.

யன்றெனவெண்ணி அக்கேள்விக் கிசையாதிருந்தனன் என்று "வைபவங்" கூறும்.

சிங்கள இதிகாசங்களில் இலங்கையரசர்வம்சோற்பத்தி பின் வருமாறு கூறப்பெற்றுள்ளது.

*அஃதாவது, வங்கதேசத்தரசனொருவனது ஏகபுத்திரி தன்னைப் பெற்றோரையும், தன்விட்டையும் விட்டு மகததேசத்துக்குப்போகும் சில வணிகரோடு ஓடிப்போகும்பொழுது, வழியில் "லால"தேசத்தி லுள்ள ஒரு காட்டிலே சிங்கமொன்று அவளது பேரழகில் மருண்டு அவளைக் கவ்விச்சென்று தன் குகைக்குள்வைத்து அவளோடு வாழ்ந்துவருங்காலத்தில் இப்பெண் அம் மிருகேந்திரனுக்கு ஒரு குமாரனையும், ஒரு குமாரத்தியையும் பெற்றனள். இச் சிசுக்க ளுடைய கைகளுங் கால்களுந் தந்தையாரதுகுலத்தைக் காட்டுவன வாய்க் கோளரியின்கைகால்களை ஒத்திருந்தன. இந் நரசிங்கபால கருக்கு "சிங்கவாகு" "சிங்கவல்லி" என்னும் நாமங்கள் கொடுக்கப் பட்டன. இவர்கள் பெரியவர்களானபோது "லால" என்னுந் தேசத்திற் "சிங்கபுர"மென்னும் நகரத்தைக் கட்டினரென்றும், "சிங்கவாகு"தன் சகோதரியாகிய "சிங்கவல்லி"யைத் தனக்கு மனைவி யாகக்கொண்டனனென்றும், சிங்களவரசர்வரிசையில் முதலானவ னாகிய "விஜயன்" என்பான் இந்த நரசிங்கருடைய முதற்பேரனாவ னென்றும் இலங்கையிதிகாசங்களிற் சொல்லப்பட்டுள்ளது. இவ் "விஜய"னே தன் பரிவாரங்களோடு இலங்கைக்குவந்து இயக்கரை அடக்கிப் பின் "தக்கணமதுரை"க் கோமான் தமிழ்ப் பாண்டியனது மகளை மணம்புரிந்து சந்தானமின்றியிறக்க "விஜய"னுக்கு மந்திரியா யிருந்த "உபத்திசை" என்போன் சில்லாண்டுகளாய் ராஜ்யபரிபால னஞ்செய்து பின் "விஜயன்" தம்பிமகனான "பாண்டுவசதேவ" னென்பானிடம் செங்கோலையீந்தனனென்ப.

† இற்றைக்கு முந்நூறுவருடங்களுக்குமுன்னே "கொன்ரோ" என்னும் போர்த்துக்கீசபண்டிதர் எழுதின இலங்கைச்சரித்திரக்

---

* Vide "Mahawamsa" English Translation by Vijayasingha Mudaliar Chapter on "Vijaya"

† Vide—"Journal of The Royal Asiatic Society" Ceylon Branch Volume XX pp. 62, 63.

குறிப்புகளிலே ஈழத்தரசன் ''விஜய''னென்போன் அயோத்தியை ஆண்ட வொரு பேரரசன்மகனென்றும், இவன் இலங்கைக்குவந்து முதலில் ''மாந்தை''ப்பகுதியில் ஒரு பட்டினத்தைக் கட்டின னென்றும், ஒரு சோழவரசனுடையபுத்திரியை மணஞ்செய்தா னென்றுங் கூறப்பட்டுள்ளது விசேஷ கவனிப்புக் குரியது. சிங்கள இதிகாசங்களின்படி "விஜயன்" பாண்டியன்மகளைத் தன்மனைவி யாகக் கொண்டவன். அவன்தகப்பன் சிங்கபுரத்தரசன். ஆகவே ''கொன்ரோ'' என்பவர் எழுதிவைத்தது ஏட்டிற் படித்தறிந்த சிங்களக் கலைவல்லோரிடங் கேட்டறிந்த தல்லவென்பது தெற்றனவிளங்கும்; ஊர்க்கதையேயாம் எனக் கொள்க. இலங்கைத்தீவின் முதலரசன் அயோத்திநகரத்து அரசவம்சத்தைச் சேர்ந்தவனென்றும், அவன் சோழவம்சத் தொரு ராஜஸ்திரியை மணம்புரிந்தவனென்றும் ஒரு கதை சாமானியஜனங்களுக்குட் பரவியிருந்திருத்தல்வேண்டும். அதையே கொன்ரோ கேட்டெழுதிவைத்தார்போலும்.

* ''வைபவமாலை''யிலே ''உக்கிரசிங்க மகாராசன்'' ஈழத்தரசன் ''விஜய'' னென்பவனுடைய தம்பியின்வம்சத்தவனென்றும், ''விஜயன்'' வம்சத்தார் நெடுங்காலமாக இழந்துவிட்ட இலங்கைத்தீவின் வடபாகத்தைப் பெருஞ்சண்டைசெய்து பிடித்தவனென்றும் சொல்லியிருப்பதோடு, சிங்கள இதிகாசங்களில் ''விஜயன்'' இறந்த பின்னர்ப் பலவருடங்களாக அவன்மந்திரி †''உபத்திசை'' என்பானுடைய ஆட்சிக்குள்ளான அநுராசபுரப்பிரதேசத்தை அவன்தம்பிமகன் ''பாண்டுவசதேவன்'' கைப்பற்றினனென்று சொல்லியிருப்பதை ஒத்துப்பார்க்குங்கால் இவ்விருகதைகளுக் கிடையிலுள்ள ஒற்றுமை பிரத்தியக்ஷமன்றோ! மேலும் யாழ்ப்பாணத்தையாண்ட முதலரசன் அயோத்திநகரத்திலிருந்து வந்தவனென்றும், ஒரு சோழன்மகளை மணம்புரிந்தவனென்றும், யாழ்ப்பாடிக்கு ஈழத்துவடபாகத்தைப் பரிசளித்தவனென்றும், ''வைபவ''த்திற் சொல்லியிருக்கும் ''வரராசசிங்க''னென்பான் ஒரு சோழன்மகளான ''சாமதூத்தி''யென்பாளை

---

* Vide—'Yalpana Vaipava Malai' English Translation by C. Brito Esq. p. 8.

† Vide—"Mahawamsa" Chapter on "Panduwamsa Deva"

மணம்புரிந்தவனென்றும் "யாழ்ப்பாணச்சரித்திர"த்திற்கண்ட குறிப்புகள் * "விஜயராசன்" அயோத்தியர் வம்சத்தவனென்றும், ஒரு சோழன்மகளைத் தன் மனைவியாகக்கொண்டவனென்றும் சாமானிய சனங்களுக்குள் வாய்ப்பேச்சாக "கொன்ரோ" காலத்திற் பரவியிருந்தகதையுடன் மிகப் பொருத்தமுடையவன்றோ. † இதற்கிணங்க "திருக்கோணாசலபுராண" வாசிரியர் "உக்கிரசேனசிங்க"னென்பான் "திசையுக்கிர" சோழன்மகள் "மாருதப்புரவீகவல்லி"யென்பாளை மணஞ்செய்தனனாக, இவள் அவனுக்கு "வரராசசிங்க"னென்னு மொருகுமாரனைச் சோழதேசத்திற் பெற்றாளென்றும், இந்த "வரராசசிங்கன்" இலங்கைக்கு வந்து அத்தேசத்துக்கரசனாகிப் பாண்டியன்மகள் "சாமதூத்தி"யை விவாகஞ்செய்து "செங்கடகநகரியி லிருந்து ராஜரீகஞ்செய்தனனென்றுங் கூறியிருக்கின்றார். இதுவும், "விஜயராசன்" "சிங்கவாகு"வின் மகனென்றும், வேற்றிடத்திருந்து வந்து இலங்கைக்கு அரசனானவனென்றும், பாண்டியன்மகளை மணம்புரிந்தவனென்றும், ஈழத்தில் அரசுசெய்த சிங்களவரசர்பரம்பரையைச் சேர்ந்தவனென்றும் "மகாவம்ச" முதலிய இதிகாசங்களிற் சொல்லியிருப்பவைகளோடு ஒத்திருத்தலை எளிதிற்காணலாம். "கோணாசலபுராண"த்திற் காட்டப்பட்ட இக்கதையானது அவ்வூராருக்குள், பரம்பரையாய்வந்த ஒருபழம்பேச்சென்பதற் கையமின்று. ஆகவே "கைலாயமாலை" முதலிய நூல்களிற் சொல்லப்பட்டுள்ள சிங்ககுலத்தவரான "உக்கிரசிங்கன்" "வரராசசிங்கன்" என்பவர்கள் "மகாவம்ச"த்திற் சொல்லிய "சிங்கவாகு"வும், அவன்மகன் "விஜயனு"மே என்பது ஒருவாறுவிளங்கும். "கைலாயமாலை"யாசிரியர் தமதுகாலத்திலிருந்த படிப்பறியாத நாட்டுமனிதர் நேரப்போக்காய் உளறிவந்த ஒருகதையினைச் செய்யுளில் அமைத்தனர். அக்கதை மெய்யோ பொய்யோவெனச் சிறிதும் ஆராய்ந்தறிந்தவரல்லர். சிறிதளவேனும் ஆராய்ந்தவராயின் அவர் எழுதியதற்கும் சிங்கள இதிகாசங்களிற் கண்டவற்றிற்கு முள்ள வேறுபாடுகள் நேர்ந்திருக்கமாட்டா. கலியுகாப்தம் 3000-ல் யாழ்ப்பாடிக்கு யாழ்ப்

---

* Vide—Appendix to the "Yalpana Vaipava Malai" English Translation by C. Brito Esq. pp. 30, 31.

† Vide idem. p. 30.

பாணமென்று பின்னர்வழங்கப்பட்டதேசங் கொடுக்கப்பட்டதென்று "கைலாயமாலை"யார் சொல்வதினுல் இப்பரிசளித்த அரசன் அதி சேய்மைக்கண்ணுனகாலத்தில் இருந்தவன் என்பது அவ்வாசிரியர் கருத்தென்று தடையறக் கூறலாம். "விஜயராசன்" கி. மு. 543-ம் ஆண்டில் இலங்கைக்குவந்தவன். அக்காலத்தில் இலங்கையின் வடபாகத்திலும் மேற்குப்பாகத்திலும் "நாகர்" என்றசாதியார் பரவியிருந்தமையும், நடுப்பகுதியிலும் கிழ்ப்பாகங்களிலும் "இயக்கர்" என்றசாதியார் பரவியிருந்தமையும் இலங்கையிதிகாசங்களால் *அறியக்கிடக்கின்றன. "விஜயராசன்" காலத்திற் சிங்களக்குடிகள் இலங்கையின் வடக்குக்கரைகளையடுத்துக் குடியேறினரல்லர். "வைபவத்"தின்படி "யாழ்ப்பாடி"யார்காலம் ஒன்பதானூற்றுண்டுக்கு முந்தினதல்ல. யாழ்ப்பாடியார் மணற்றிடலிலிருந்த சிங்களவருடன் தாங்கொண்டுவந்ததமிழரைக் குடியேற்றினு ரென்ற "வைபவமாலை" யார்கூற்று "கைலாயமாலை"யார்கூற்றோடு முற்றும் முரணுவதாம். மேலும், யாழ்ப்பாடியார் நல்லூரைக்கட்டின யாழ்ப்பாணத்தரசனுக்கு முன்னிருந்தவராயினும் அவர் நெடுங்காலத்துக்குமுன்னிருந்தவரல்லர் என்பது யாழ்ப்பாடியார் இறந்துபோக அரசனின்றி அத்தேசத்திலிருந்த தமிழருக்கும் சிங்களவருக்கு மிடையிற் கலகம் விளைந்ததைக்கண்ட "மழவன்" என்னுமொரு தமிழ்ப்பிரபு மதுரைக்குப்போய் ஓர் அரசனைக்கூட்டிக்கொண்டுவந்தனனென்று "கைலாயமாலை"யிலும் "வைபவமாலை"யிலும் சொல்லியிருப்பதால் விளங்கும். இனி, நல்குரவாற் பீடையுற்ற யாழ்ப்புலவன் ஆளில்லாக் கானகத்தைக் காடுவெட்டி நாடாக்கி வறுநிலப்பாப்பாகியமணற்றிடலுக்குப் போக மனமுள்ளோர் பல்லாயிரவரை அழைத்துச்சென்று அத்தேசத்தரசனென்ற உயர்ந்தபதவியைபடைந்தனனென்றசெய்தி யுண்மைப்பாற்பட்டதெனக்கொள்ளுதல் எளிதில் அமையாது.

(தொடரும்.)

வே. ஜோ. தம்பிப்பிள்ளை.

---

* Vide The Introductory Chapters to "Mahawamsa"

உ

# வண்ணமும் சந்தமும்.

வண்ணமாவது:— பெரும்பாலும் எழுத்துச்செறிந்துநிற்கும் வகையாற் பிறப்பதோர் இசைவேறுபாடு.

அதை இருபதாக வகுத்துரைத்தனர் ஆசிரியர் தொல்காப்பியனார். அவ்விருபதும் பாவண்ணமுதலாக முடுகுவண்ணம் இறுதியாகக் கூறியன. (தொல்...செய்யுளியல்.)

இலக்கணவிளக்கநூலாரும், தொல்காப்பியர்நெறிபற்றி வண்ணங்களை அவ்வண்ணமாகவே இருபதாகப் பகுத்தோதுகின்றனர். (இலக்கணவி - செய்யுளியல்.)

அதைத் தொகையால் ஐந்தும், வகையால் இருபதும், விரியால் நூறுமாய்க்கொள்வர் ஆசிரியர் அமுதசாகரர். அஃது அவர்கூறிய "தூங்கேந்தடக்கல்"என்ற யாப்பருங்கலக்காரிகைப்பாட்டிற் புலனும். இவ்வாசிரியர், 'அவிகபர்யாப்பை'ப் பின்பற்றி இங்ஙனங் கூறினர்.

நால்வகையானபாக்களையும், அவற்றின் இனங்களையும் புலவர், இவ்வகை இசைவேறுபாட்டிற்கியையப் பற்பலவாறிணைத்துப்பாடிய பாடல்கள் பல வுண்டு; அங்ஙனமமையப்பெற்ற பாக்களை வண்ணப்பா என்று, நால்வகைப்பாவின் இனம்பற்றி ஓதுவர் ஆய்ந்தோர். இவ் வண்ணம் ஒருபாவிற்கே உரியதென்றுகோடல் ஒல்லுமா? அதுபற்றி *"வண்ணப்பா ஆசிரியப்பாவின் இனமே"என்றார்கூற்றுப் பொருந்துமென்றல் ஒருதலையாக்கூற இயலவில்லை. இவ்வண்ணம் தமிழ் மொழிக்கேயுரியது.

சந்தம்:—எழுத்தளவை முதலிய காரணமாகநிகழ்வதோர் இசை வேறுபாடு; அதை இருபத்தாறாகப் பகுத்தோதுவர் என்பர்; அதற் கதிகமாகவும் உண்டென்கின்றனர் சில நுண்ணறிஞர்.

---

* அஷ்டாவதானம். பூவை. கலியாணசுந்தரமுதலியாரவர்கள் இயற்றிய செய்யுளிலக்கணம் 39ம் பக்கம்.

யாப்பருங்கலவிருத்தியுரைகாரர் நான்கு எழுத்துமுதலாக, இரு பத்தாறு எழுத்து ஈறுகவரும் எழுத்தின்கண், சந்தம் பிறக்கும் என்றும், இஃது எழுத்தளவை ஒத்து, குருவும் இலகுவும் ஒத்த அடிகளால்வரும் அளவியற்சந்தம் என்றும், எழுத்தளவை முதலியன ஒவ்வா அளவழிச்சந்தம் என்றும் இருவகைத்தென்றுங் கூறி மேற் செல்கின்றார். இது வடமொழிக்கே யுரியது.

ஆகையால் வண்ணமும் சந்தமும் வேறுவேறியல்பினவென்பதும்,ஒன்றின்பாங்கு மற்றொன்றினுக்கு ஒவ்வாதென்பதும் போதரும்.

இவையிங்ஙனமாக நெல்லைவாசியும், சென்றநூற்றாண்டினருமான முருகதாசர் என்னும் இயற்பெயர்பெற்ற ஒரு புலவர்பெருந்தகையார், தாமியற்றிய "வண்ணத்தியல்பு" என்னும் நூலினுள் "வண்ணம் எண்வகைத்து" என்றனர். அது "குலவுசீர் வண்ணங் குணிக்கிலெண் வகைத்தே" என்ற அந்நூலின் தொகையிலக்கணத்து முதற்சூத்திரத்தாற்புலனாகும். பின்னர், அவ்வெட்டின்வகையை, வகையிலக்கணங் கூறுகின்றுழி,

"தத்தவுந் தாத்தவுந் தந்தவுந் தாந்தவுந்
தனவுந் தானவுந் தன்னவுந் தய்யவுந்
தத்தா வென்பத னீடனு மடங்கு
மேண்வகைச் சந்த மென்பார் பெரியோர்"

என்றுகூறிமுடித்தனர்.

எழுத்துநிறை, பொலிவு, இனக்குழிப்பு, அளவியல், அளவழிவு முதலியனபற்றிவரும் இச்சந்தங்கள் வடமொழிக்கன்றோ உரித்தாய்ப் பகுத்தோதவல்லது. தமிழிற் குரித்தாமா? வண்ணத்தியல்பைக்கூறுகின்றவர், அவ்வியலைச் சுட்டிக்கூறாது சந்தத்திற்குரிய இயலைக்காட்டல் நெறியாமா? அல்லது வண்ணமே சந்தம் என்று கொண்டனரா? இரண்டும் ஒன்றா?

அற்றன்று, வடமொழிக்கே யுரித்தாகிய நெறிகளையும், இயல்களையும் காலதேசவர்த்தமானங்கட்கியைய இலக்கியங்களிற் றொகுத்துரைத்தல் பெருவழக்காதலின், இலக்கியங்கண்டதற்கு இலக்கணங்கூறல் முறையென்றதைப் பின்பற்றி, வடமொழிக்கே யுரித்தாகி

'எழுத்துநிறை, குழிப்பின்தொகுப்பு' முதலியவைகளினுற் றெரு த்துவரும் சந்தத்தைத் தமிழில்யாத்தனர் இவ்வாசிரியர்; அதுபற்றி இங்ஙனம் வழுக்கினுரென்றல் அடாதெனின், உண்மையே; அங்ஙன மாயின், இந்நூற்குச் "சந்தவியல்பு" என்று பெயரிட்டுக்கொள்ள வேண்டும். அஃதிடாது "நூற்பெயர் வண்ணத்தியல்பாம்" (பாயி ரம் 6 சூ) என்று அந்நூலிற் கூறியது வழுவாம் என்க.

ஆதலின், மேற்கூறிய சந்த வண்ணங்களின், இயல்நுட்பமும், வண்ணத்தை வடமொழிச்சந்தமுறைபற்றிப் பகுத்துக் "குழிப்பின் றெகைக்குக் கோடியுஞ் சிறிதே" என்றுரைத்த மொழியின் உண்மை யும், அவைபற்றிய அபிப்பிராயபேதங்களும் ஆராய்ச்சிமுறையில் வெளிவரல் பெரிதும்விரும்பத்தக்கதாம்.

தமிழ்மொழிநிலயம்
திருநெல்வேலி
25–10–13. } இயலாளி.

---

ஸ்ரீ:

# ஆழ்வார் திருநகரிச் சாசநங்கள்.

## XV.

### சுவாமி நம்மாழ்வார்ஸந்நிதி வடக்குப்ராகாரம் மத்தியபாகம்.

காலம்:—ஜடாவர்மன் குலசேகரதேவற்கு யாண்டு-கஉ.

விஷயம்:—பொலிந்துநின்றபிரானுக்குச் சிலர் கழுதூர் விற்றுக் கொடுத்தது.

(20) ஸ்ரீ கோச்சடைய பன்மரான திரிபுவனசக்கரவத்திகள் குல சேகரதேவற்கு யாண்டு கஉ வதின் எதிர் ஏழாமாண்டு வ்ருஷப ந........................................

(27) ாயற்று கச தியதியும் வ-ருவ-ிவஷத்து தூயொடிஸியும் சனிக்கிளமையும் பெற்ற சோதிநாள் திருவழுதிவளநாட்டுத் திருநகரிப் பொலிஞ்சுநின்றபிரான் திருநாமத்திலே அமிதகுண வளநாட்டு அக்கிரமகோபநல்லூர் சீராமனுடையானேன் விற் றுக்குடுத்த பூமியாவது ந(ா)ங்கள் குருபரம்பராமுடையோமா

(28) ய் ஆண்டு அநுபவித்துவருகிற கழுதூர் இப்பொலிஞ்சுநின்ற பிரானுக்கு திருவிடையாட்டமாக முன்பே வரியிலிட்டுவந்து கிழ(?)வகை நாடாய்த்திருவாழிக்கல்லுநாட்டிக்குடுத்தமையில் இத்திருவாழிக்கல்லு நாட்டிக்குடுத்த பெருநான்கெல்லைக்குள் பட்ட குளமும் நன்செய் புன்செய்யும் மேனோக்கி

(29) ன மரமுங் கீழ்நோக்கின கிணறும் மீன்படுபள்ளமும் தேன்படு பொதும்பும் உடும்பொடியும் ஆமைக(?)வளியும் புற்று தெற்றி யும் நத்தமும் நத்தப்பாழும் சுடுகாடு படுதுறையும் மற்றும் எப்பேற் பட்டினவிலும் என்னேகரிமால் (?) வந்த நாலத்தெ (ான்றும்)ம் விற்றுக்குடுத்தேன் பொலிஞ்சுநின்றபிரான் திரு நாமத்திலே சீராமனுடையா

(30) னேன் இப்படி விற்றுக்குடுத்த என்னேபாதி நாலத்தொன்றும் எம்மிலிசைந்த விலைப்பொருளெல்லாம் கையிலே அறக் கொண்டு முன்பு இங்கிலமொற்றி..............பிள்ளைபாண்டிய தரையற்கு நானொற்றிவைச்ச வொற்றிகலத்தில் பட்ட ஆகம குடுப்(?).........இவ்வச்சு மூன்றும் உள்பட எம்மிலிசைத்த விலை

(31) கையிலே அறக்கொண்டு விற்று விலைபூமாணம் பண்ணிக் குடுத்தேன்...யி பொலிஞ்சுநின்றபிரான் திருநாமத்திலே சீராம னுடையானேன்—கையில(ரி)லே நீர்வார்த்துக்குடுத்த இப்படி விற்றுக்குடுத்த என்............மக்கும் இதுவே விலை ஓலை னம பெகு ந(?)—சில வோலையுமாவிதாகவும். இதுவல்லது வேறு... ...............வில்தம்பேரா............

மேலைப்பத்தி.

............பொருட்செலவோலை காட்டவுங் காணவுங் கடமை யின்றி விலைக்குறவிற்று பொருளறக் (கொண்டு) விற்று விலை

ஷூரோணம் பண்ணிக்குடுத்தேன் பொலிஞ்சுநின்றபிரான் திரு நாமத்திலே சீராமனுடையானேன்.

---

# XVI.

## சுவாமி நம்மாழ்வார்ஸந்நிதி பின்ப்ராகாரம் மேல்பாகம்.

(அடியில்)

காலம்:—ஜடாவர்மன் குலசேகரதேவற்குயாண்டு ௰௩.

விஷயம்:—பொலிஞ்சுநின்றபிரானுக்குச் சிலர் கழுதூர் விற்றுக் கொடுத்தது.

(1) ஸ்வஸ்திஸ்ரீ திருவாய்க் கேழ்விக்குமேல்ஸ்ரீ கோச்சடை

(2) பன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகரதேவற்கு யாண்டு ௰௨ வதி னெதிராமாண்டு ரிஷஹநாயற்றுப் பதினாலாந் தியதியும் பூவஷவக்ஷத்து த்ரயோதசியும் சனிக்கிழமையும் பெற்ற சோதினாள் திருவழுதிவளநாட்டுத் திருநகரி பொலிஞ்சுநி

(3) ன்றபிரான் திருநாமத்திலே அமுதகுணவளநாட்டு அக்கிரம கோபநல்லூர் பொலிஞ்சான்சிராமதேவனான தென்னவன் ஆதிச்சசூளாமணி மூவேந்தவேளானேன் விற்றுக்குடுத்தபூமி யாவது நாங்கள் குருபரம்பரமுடையோமாய் ஆண்டு அனுப வித்துவருகிறகழுதூர் இப்பொலிஞ்சுநின்றபிரானுக்குத்திருவி

(4) டையாட்டமாக முன்பே வரியிலிட்டுவந்த கீழ் (?) வகைநா டாய்த் திருவாழிக்கல்லு நாட்டிக்குடுத்தமையில் இத்திருவா ழிக்கல்லுக்குட்பட்ட பெருநான்கெல்லைக்குட்பட்ட குளமும் நன்செய் புன்செயும் மேனோக்கினமரமும் கீழ்னோக்கினகிணறு மீன்படுபள்ளமும் தேன்படுபொதும்பும் உடும்பொடியும்

(5) ஆமைத உழியும்(?)புற்றுந் தெற்றியும் நத்தமும் நத்தப்பாழும் சுடுகாடும் படுதுறையும் இப்பெருநான்கெல்லைக்குட்பட்ட மற் றும் எப்பேற்பட்டன மானனோசாயில்(?)வந்த நாலத்தொன் றும் விற்றுக்குடுத்தேன் பொலிஞ்சுநின்றபிரான் திருநாமத்தி லே பொலிஞ்சான் சிராமதேவனான தென்னவன் ஆதிச்சசூளா மணி

(6) மூவேந்தவேளானேன் இப்படி.........டுத்த என்னேகரி (?) நாலத்தொன்றுக்கும் எம்மில் இசைஞ்ச விலைப்பொருள் ததப பிள்ளைப்பாண்டியதரையற்கு முன்புதான் ஒற்றிவைச்ச ஒற் றிக் கலத்தில்பட்ட அச்சு உளு இவ்வச்சு இரண்டேமுக்காலும் விலைப்பொருளாகச்சாத்தி மற்றும் எம்மிலிசைஞ்ச விலை பொரு ளெல்லாம்

(7) கையிலே யுறக்கொண்டு விற்று விலைப்ரமாணம் பண்ணிக்குடுத் தேன் பொலிஞ்சுநின்றபிரான் திருநாமத்திலே பொலிஞ்சான் சீராமதேவனுன ஆதிச்சசூளாமணி மூவேந்தவேளானேன் இப்படி—குடுத்த என்னேகரி (?) நாலத்தொன்றும் இதுவே விலையோலையும் பொருள் செலவோலை

(8) யுமாவிதாகவு இதுவல்லது வெவவி(?)மாவறுதி பொருளாசறு திப் பொருள்செலவோலை காட்டவுங் காணவுங் கடமையின்றி விலக்குறவிற்றுப் பொருளறக்கொண்டு விற்று விலைப் பிரமா ணம்பண்ணிக்குடுத்தேன் பொலிஞ்சுநின்றபிரான் திருநாமத் திலே பொலிஞ்சான்சீராமதேவனுன தென்னவன் ஆ

(9) திச்சசூளாமணி மூவேந்தவேளானேன் இப்படி சம்மதித்து இக்குளத்தில் திருவாழிக்கல்லுக்குள்ளு என்னேகரி (?) நா லொத்தொன்றும் விற்றுக்குடுத்தேன் சீராமதேவனுன தென் னவன் ஆதிச்சசூளாமணிமூவேந்தவேளானேன். இவை என் னெழுத்துபட்ட அறிவேன் கோள்புலிக்குட்டி.......இப்படி

(10) அறிவேன் சீராமனுடையானெழுத்து. இப்படிக்கு இவை உய்யவந்தான்பட்டன் எழுத்து. இப்படி அறிவேன் அரையன் குலசேகரனுன தென்னவன் கலிங்கதரையன் எழுத்து. இவை அறந்தாங்கி கணவதி எழுத்து. இப்படி அறிவேன் சீராமதேவ சக்கரபாணி எழுத்து. இவர்கள் சொ(ன்ன) இவ் விலைப் பிர மாணம் எழுதினேன் பெருமாள் திருவாசல் ஆரியபட்டகளில் மாதவன் வாஸுதேவன் எழுத்து.

**A. M.** சடகோபராமாநுஜாசார்யன்,
நேஷநல்-ஹை-ஸ்கூல், திருச்சிராப்பள்ளி.

---

## விதையெடுத்தலும் விதையடித்தலும்.

ஆண்மிருகங்கள் பொலியலாயக்கில்லாதுபோய் இனத்தைப் பெருக்காமலிருக்கும்பொருட்டு இச்சிகிச்சைகள் செய்யப்படுகின்றன. விதையெடுத்தல்என்றால் மிருகங்களின் பீஜங்களையே எடுத்துப்போடுவது. ஆதலால் அதிற்கைதேர்ந்தவர்களல்லாதவர்கள் அதைச்செய்ய எத்தனிக்கலாகாது.

காயடித்தல் அல்லது விரையடித்தல் என்பது விதையையாவது இந்திரியநாடியை (விதைக்கொடி) யாவது அல்லது இரண்டையுமாவதுஎடுத்துப்போடாமல் அழித்துப் பிராணிகளைப் பொலியச்சக்தியில்லாமற்செய்தலாம். விதையடித்தல் (காயடித்தல்) என்னும் கொடிய செய்கை எல்லாருக்குமே தெரிந்திருக்குமாதலால் அதைச் செய்யும் விதத்தைக்குறித்து விரித்துச்சொல்லவேண்டியதிராது. இத்தேசத்திற் கிராமாந்தரங்களிற் செய்துவருவது எப்படியென்றால் விதை கூழாய்ப்போகும்வரை அதை அடித்து நசுக்கி இளக்கிவிடுகிறார்கள் என்றே சொல்லலாம். இது செய்ய ஏறக்குறைய அரைமணி பிடிக்கும். அது ஆரம்பித்து முடிகிறவரையில் அந்தப்பிராணியானது பொறுக்கமுடியாத வேதனைப் பட்டுக்கொண்டேயிருக்கும். மிருகங்களைவசக்கி மனிதனுக்கு வேண்டிய வேலைகளைச் செய்விக்கவேண்டுமானால் இப்படி யேதாவதொன்றைச் செய்துதான் தீரவேண்டுமென்பதைக் கவனிக்கவேண்டும். சென்ற சிலவருடங்களுக்குமுன் சாஸ்திரப்படி விதையெடுக்கத்தெரிந்தவர்கள் ஏதோ சில பெரியநகரங்களில் தவிர மற்றெங்கும் கிடையாது. அந்தக்காலத்தில் விதையடிக்கக் கொஞ்சம் நியாயம் இருக்கத்தான் இருந்தது. ஜில்லா ஜில்லாவுக்கு மற்றவிஷயங்களிற் பயிற்சியிருப்பதுபோல "விதையெடுப்பதிலும்" தேர்ச்சி உள்ள கால்நடைவைத்தியர் ஒருவரையாவது சர்க்காரில் நியமித்திருக்கும் இக்காலத்தில் நாகரிகமடைந்த தேசத்திலிருப்பவர்கள் கால்நடைகளைக் காயடிக்க விட்டுக்கொண்டிருப்பது மிகவும் இழிவு. விதையடிப்பதைவிட்டு "விதை எடுத்தலினால் உண்டாகும் முக்கியமான நன்மைகள் கீழே சுருக்கமாய்க் குறிக்கப்பட்டுள்ளன:—

(1) விதையடிக்க அரைமணி செல்லும். விதை எடுக்கமட்டும் என்றால் கைப்பழக்கமுள்ள ஒருவருக்கு 5 நிமிஷத்துக்குமேல் பிடியாது.

(2) குதிரைகளுக்கு, குட்டியாயிருக்கும்போது விதை எடுப்பதனால் 14 நாளில் நன்றாய் வாசியாய்விடும். மற்ற மாடு ஆடானால் விதை எடுத்தவுடனே மந்தையிற்பற்றி விட்டுவிடலாம். பின்பு அதைப்பற்றிக் கவனிக்கவேண்டியதேயில்லை. விதை அடித்த வேதனை தீர்ந்து வாசியாக அநேகவாரம் செல்லும். அநேக சமயங்களில் காயடித்த இடத்தில் கட்டி உண்டாவதும் உண்டு.

(3) பீஜங்களை அடியோடு எடுத்துவிடுவதால் பின்அந்தப் பிராணிகள் பொலிய சற்றும் லாயக்கில்லாமல் போகுமென்பது தெளிவாய் விளங்குகிறது. இந்த நோக்கத்தோடு காயடித்தபோதிலும் பிராணிகள்படும் துயரத்தைப்பார்த்துச் சற்று முந்தியே விட்டுவிடுவதால் நமது உத்தேசம் சில சமயங்களில் நிறைவேறுகிறதில்லை. அப்போது அது சரியானபடி பொலியமுடியாதுபோனாலும் (கள்ளக்காய் கிடப்பதால்) காமம் இருந்துகொண்டு பருவத்திலிருக்கும் பெட்டைகளை வீணில் அலைக்கழித்துக்கொண்டு அதுள்ளளவும் எல்லாருக்கும் பெருந்தொல்லையாயிருந்துவரும்.

(4) இந்த சிகிச்சை சீக்கிரத்தில் முடிந்துபோகிறதினால் இத்தேசத்தில் விதை எடுக்கப்போகும் பிராணிகளுக்கு (மயக்கந்தர) க்ளோரபாரம் என்னும் மருந்து கொடுக்கிறதில்லை. இருந்தாலும் உடையவர்கள் விரும்புகிறபக்ஷத்தில் கால்நடை வைத்தியர் அந்தப்படிசெய்வார். அப்போது அந்தமிருகங்களுக்குச் சற்றும் வருத்தம் தோற்றாது போகும். இரண்டு வயசாகிறவரையில் மிருகங்களுக்குக் காயெடுக்கவாவது காயடிக்கவாவது கூடாதென்று ஒரு தப்பெண்ணம் இத்தேசத்திலிருந்து வருகிறது. அநேக சமயங்களில் 3 அல்லது 4 வயசு வரை காயடிக்கிறதில்லை. இளமையில் காயடித்தால் வளர்ச்சி குன்றிப்போகுமென்று குடியானவர்கள் சொல்லுகிறார்கள். உண்மையில் எப்படி ஆகிறதென்றால் காயடியாத காளை கழுத்துப்புறமும் திமில்புறமும் கனத்து லட்சணமில்லாமல் போகிறது. இளமையில் காயெடுத்துவிட்டால் தேகத்தின் முன்பக்கம் பருப்பதற்குப் போகும் சத்து நாலாபக்கமும் சமமாய்ப்பரவி அது உயர்ந்து வளர்ந்து வயது வரும்போது சாதுவாகவும் சுறுசுறுப்பாகவும் இருக்கும்.

குடித்தனத்துக்குரிய மிருகங்களுக்குக் காயெடுக்கவேண்டிய வயது கீழே குறிக்கப்பட்டிருக்கிறது:—

| | | |
|---|---|---|
| குதிரை கழுதைகளுக்கு | ... | 1 முதல் 2 வயது. |
| மாடு ... | ... | 3 மாதம் முதல் 1 வருஷம். |
| ஆடு, வெள்ளாடு | ... | 1 முதல் 3 மாதம். |

முன்சொல்லியபடி பிரதி ஜில்லாவுக்கும் ஒரு கால்நடை வைத்தியரையாவது நியமித்திருக்கிறார்கள். அவரைத் தாலூக்காவுக்கு ஒரு மாதமாகத் தனக்கேற்பட்டிருக்கும் தாலூக்காக்கள்தோறும் சுற்றிவரத்திட்டம் செய்திருக்கிறார்கள். அவர் 4 முதல் 6 மாதத்திற்கு ஒரு தடவை ஒவ்வொரு தாலூக்காவுக்கும் வருவார். எந்த கிராமத்தாருக்காவது விதை எடுக்கவேண்டிய கால்நடைகளிருந்தால் தாலூக்கா தாசில்தாருக்கு எழுதிக்கொள்ள வேண்டியது. அவர் கால்நடை வைத்தியரை அந்த கிராமத்திற்குப்போக எழுதிவிடுவார்.

எப். வேர்,

ஸிவில் வெடரினரி ஸுபரின்டாண்டு,

Department of Agriculture, Madras.

---

## பண்ணையாட்களை வேலையிற் பழக்குதல்.

விவசாய டிபார்ட்மெண்டார் அங்கங்கே ஏற்படுத்தியிருக்கும் சர்க்காரப் பண்ணைகளில் குறிப்பிட்ட என்ணம் வரையில் தாமேபயிரிடும் குடியானவர்களையும், மேஸ்திரிகளையும், பண்ணையாட்களையும் குறிப்பிட்ட சில விவசாயவேலைகளையும், விவசாயத்திற்கு உதவும் லேசான மெஷீன்களை உபயோகிக்கவும் பழக்கிவைப்பார்கள் என்பது வெகுவாய் அநேகருக்குத் தெரியாதென்று தோற்றுகிறது.

லாபமாவது என்று சொல்லத்தகுந்த முறைகளைக் குடியானவர்கள் மனதில் படும்படிசெய்வதற்குச் சிறந்தவழி அவன் நிலத்திலேயே அதைச்செய்து காட்டுவதுதான். இந்தப்பிரகாரமே விவசாய டிபார்ட்மெண்டார் விசேஷமாய்ச் செய்துவந்திருக்கிறார்கள். இனியும் அப்படியே செய்வார்கள். சிலருக்கு சர்க்காரப் பண்ணைகளிலும் வேலை பழக்கித் தருவார்கள்.

நிலச்சுவான்கள் பொறுக்கியெடுத்த சில பண்ணையாட்களை அனுப்பி அப்படி வேலை பழக்கிவைத்துக்கொள்ள இஷ்டப்படவும் கூடும். பூமிகளில் பாடுபட்டுப் பண்ணைவேலைகளில் பழக்கமுள்ளவர்களாயும் சர்க்காரப் பண்ணையிலிருக்கும் கூலிகளோடு கூலியாய் வேலைசெய்யக் கூடியவர்களாயும் இருப்பவர்களை மட்டுமே வேலை பழக்கச் சேர்த்துக் கொள்ளுவார்கள்.

சர்க்காரப் பண்ணைகளிலிருந்து வரும்போது அதை மேல்பார்த்து வரும் மானேஜர், அஸிஸ்டாண்டு மானேஜர் முதலியவர்களுக்கு அடங்கி நடப்பதோடு இட்ட வேலைகளைச் சுறுசுறுப்பாயும் ஒழுங்காயும் செய்துவரவேண்டும். அப்படிச்செய்யாதுபோனால் வேலை பழக

ஏற்பட்டகாலம் முடியுமுன்னமேயே பிரின்சிபால் துரை அவர்களாவது டிப்டி டைரக்டர் துரை அவர்களாவது போகச்சொல்லிவிடுவார்கள்.

அவர்கள் தங்கள் வழிச்செலவை அவர்களே போட்டுக்கொள்வதோடு குடியிருக்க இடமும் தேடிக்கொள்ளவேண்டும். ஆனால் அவர்கள் செய்யும் வேலைக்கு பாரத்தில் (பண்ணையில்) கூலிகொடுப்பதுபோலவே கூலிகொடுத்துவிடுவார்கள். பொதுவாய் ஆயில் இன்ஜின் மோடார் (oil-engine motors) இவைகளை ஒட்டுவிக்கக் கற்றுக்கொடுக்கிறதில்லை. வேலை பழக்குவதைக்குறித்த விவரம் கீழே கண்டிருக்கிறது.

| இடம். | பழக்குவிக்கும் வேலையின் விவரம். | கற்றுக்கொடுக்கப் பிடிக்கும் காலம். |
|---|---|---|
| | உழவு; மண்ணைப்பிறட்டும் சிறகுள்ள இரும்புக்கலப்பைகளைத் தகுந்தபடி உபயோகிக்க. | ஒருமாசம்—எருதுகளையும் பழக்க அனுப்பலாம். |
| | விதைக் கலப்பை (கொர்ருக் கலப்பை) யால் விதைக்க. | ஒருமாசம்—ஆகஸ்டு 15 முதல் செப்டம்பர் 15 வரை. |
| | வெல்லம் காய்ச்சுதல். | ஒருமாசம்—ஏப்ரல் அல்லது மே. |
| கோயமுத்தூர். | நெல் நாற்றுநட; நாற்றங்கால் தயார்செய்து நாற்றுப்பாவி ஒற்றை நாற்றாய் நடவும் பசுந்தாள் உரப்பயிர் சாகுபடி செய்யவும். | இரண்டுமாசம்—ஏப்ரல் முதல் ஜூலை வரை. |
| | ஆண்பிள்ளை ஆட்களோடு அவர்கள் வீட்டுப் பெண்பிள்ளை ஆட்கள் வந்தால் ஒற்றைநாற்றுநடவும் தூற்றுகிற மெஷீன் வேலையும் பழக்குவார்கள். | |
| ஹகரி (பல்லாரி ஜில்லா). | எரங்காடு என்று சொல்லும் கரிசல் நிலத்துக்கேற்ற இரும்புக் கலப்பைகளைக்கொண்டு உழப்பழகல் | இரண்டுமாசம்—ஜனவரி, பிப்ரவரி. |
| | சோளத்திற்குக் கரிப்பான் நோய் வாராதபடி சோளவிதையைப் பாடம் செய்ய. | எக்காலத்திலும் அது தெரிகிற மட்டும். |
| நந்தியால் (கர்நூல் ஜில்லா). | ஹகரிக்குச் சொன்னபடியே. | |

| | | |
|---|---|---|
| சாமல்கோட்டா (கோதாவரி ஜில்லா). | நெல்; நாற்றங்கால் தயார்செய்து நாற்றுப்பாவி பிடுங்கி ஒற்றை நாற்றாய் நடவும் பசுந்தாளுரப் பயிர்களைச் சாகுபடிசெய்யவும்.<br>கரும்பு; வெல்லம் செய்யவும் கரும்பை வரிசையாய் நட்டுப்பயிரிடும் முறையைப் பழகவும். | மூன்றுமாதம்—மே,ஜூன், ஜூலை.<br>இரண்டுமாதம்—பிப்ரவரி முதல் ஏப்ரல் வரை. |
| பாலூர் (தென் ஆற்காடு ஜில்லா). | (1) விதைபொறுக்கி எடுத்தல்.<br>(2) சிந்துக்கலப்பையால் உழுதல், சாம்ஸன் ஆரம் என்று சொல்லும் முன்னுப்பலுகால் பலுகடித்தல்.<br>(3) கரும்பு நடல். | ஒருவாரம்—ஆகஸ்டு, செப்டம்பர்.<br>ஜனவரி, பிப்ரவரி மாசங்களில் ஜூன், ஜூலை மாசங்களில் ஒருவாரம்.<br>மார்ச்சுமாசம் இரண்டுவாரம். |
| கோயில்பட்டி. (திருநெல்வேலி ஜில்லா). | (1) கரிசல் கலப்பை என்று சொல்லும் இரும்புக்கலப்பையைச்சரியானபடி பூட்டவும் உழவும் பழக.<br>(2) கொர்ருக் கலப்பை விதைப்புக்கேற்ற கருவிகளை உபயோகப்படுத்திப் பழக.<br>(3) மாட்டுக் களைவெட்டியால் களை வெட்ட (அதாவது தந்துலடிக்க.) | கோடையில் அதாவது மே, ஜூன், ஜூலைமாசங்களில் இரண்டுவாரம்.<br>செப்டம்பர், அக்டோபர் மாசங்களில் ஒருமாசம்.<br>டிசம்பர், ஜனவரி மாசங்களில் இரண்டுவாரம். |
| தளிப்பரம்பா (மலையாளம் ஜில்லா.) | கரும்பு ஆலை ஆடி வெல்லம் காய்ச்சும் முறைகளைப்பழக. இப்போதே ஆலை அடைப்புக் கட்டும் விதத்தையும் பழக்குவார்கள். | ஜனவரியில் ஒரு மாசம். |

கோயமுத்தூர் காலேஜில் சேருகிறவர்கள் அந்தக் காலேஜ் பிரின்சிபால் துரையவர்கட்கும், ஹகரி, நந்தியால், சாமல்கோட்டை முதலிய இடங்களில் சேருகிறவர்கள் பல்லாரியிலிருக்கும் வடபாகம் விவசாய டிப்டி டைரக்டர் துரையவர்கட்கும், பாலூர், கோயிற்பட்டி, தளிப்பரம்பா இவைகளில் சேருபவர்கள் திருச்சினுப்பள்ளியிலிருக்கும் விவசாய டிப்டி டைரக்டர் துரையவர்கட்கும் மனுச்செய்துகொள்ள வேண்டும். எப்போது ஆள்களைச் சேர்க்கமுடியும் என்பதையும் அவர்களுக்கு வேண்டுமானல் குடியிருக்க இடத்தையும் குறித்து அவர்களுக்கு எழுதினல் எழுதுவார்கள்.

மதராஸ்,
1913-ம் ஸு மேயீ 13உ

D. T. சாட்விக்,
டைரக்டர் ஆப் அக்ரிகல்ச்சர்.

இங்குமுளனேவெனச்சொன்னதானவனைப்
பொங்கியடலாளரியாய்ப்போர்வென்ருன்—சிங்கவரைக்
கன்புற்றிருப்பானெதிர்கொண்டசுரரிடத்
தின்புற்றிருந்தவளனென். (353)

என்பது, மதலையே நீ யெங்குமுளனென்றமாயோ னித்தூணிலுமுளனே வென்றுகூறியவிரணியாசுரன்முன் னடலாளரியாய்த்தோன்றியவனேடுபொரு தவனைவென்று கொன்ருேன் சிங்காத்திரியிடத் தன்புற்றிருப்போ னவனை நாவே தன்னையெதிர்கொண்ட தேவர்களிடத் தின்புற்றிருந்த வளத்தையுடையவனென்று கூறுவாயாக வென்றவாறு. இதனுள், எதிர்கொண்டசுரரிடத்தென்பதனைத் தன்னேடு மாற்றங்கொண்ட வசுரனைக்கொன்றவன் மாறுகொண்ட வசுரரிடத் தின்பமுற்றிருந்தவளன் யாதுதானெனக் கிரியைக்குக் குணத்தோடே விரோதமான சிலேடையாயிற்று. இப்பொருட்குச் செய்த வென்னும்பெயரெச்சத்தீற்றினகரஞ் செய்யுள்விகாரத்தாற் ருெக்கது; என்னை? " புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை " யென்பதுபோலக் கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

கருத்தகலாக்கண்ணனெனக்காவலருள்வானை
யுருத்திரனுமென்பதனேடொண்மைப்—பொருட்பரத
கண்டத்தாகிச்சிறந்தகங்கைக்கோடுற்றவிடக்
கண்டத்தானென்னுமுலகம். (354)

என்பது, திருவுள்ளத்தைவிட்டுநீங்காத கண்ணேட்டமுடையானென்றுசொல்லும்படிக் குலகுயிர்களைக் காவல்செய்வானைத் திவ்வியாத்துமசொரூப மழிவிலானென்பதோடு நல்லபயனைத்தரும் பரதகண்டத்தாகியழகெய்திய கங்கைக்கரையையுற்றவிடமாகிய கண்டத்தானுமாமென்று உலகங் கூறுநிற்குமென்றவாறு. கங்கைக்கோடுற்றவிடக்கண்டமென்பது கங்கைக்கரைக்கண்டமென்னுந் திருப்பதி. ஆதலால் அங்ஙனங் கண்ணேட்டமுடன் காவல்செய்வானை நெஞ்சமே யென்னுடன்கூடிப் பற்றுவாயாக; நமக்கு முத்தியெய்துமென்பது பயன். ஒண்மை - நன்மை. பொருள் - பயன். இனிக் கண்ணனென்னுந் திருநாமமுடையானென் றுலகங்கூறும்படிக்

குயிர்களைக் காவல்செய்வானைச் சங்காரமூர்த்தி யென்பதனோடும் பிரமசிரத்தை யிரத்தற்குக் கையிலோடாகவுடையனுமாகி நஞ்சை யணிந்த மிடற்றையுடையனுமாமென் றுலகங் கூறுநிற்கு மென்னும் பொருடோன்றுதலா விது கிரியைக்குப் பொருளோடே விரோதச் சிலேடையாயிற்று. உருத்திரன் - சொரூபமழிவிலாதான்; சங்கார மூர்த்தி. என்றும், கம் - சிரம். கைக்கோடுற்ற - கைக்கோடாகவெய் திய. இடக்கண்டத்தான்- இடமாகிய கண்டமென்னுந்திருப்பதியான்; விடக்கண்டத்தான் - நஞ்சையணிந்தமிடற்றான் எனவுங் கொள்க. திணை - பாடாண். துறை - ஓம்படை.

என்னென்றறியேனியற்றமிழ்தேர்காரிதரு
மன்னன்றனையுலகமாறனென—முன்னுரைத்தோர்
வன்புலனையொன்றுமதியாமுனிவரிடத்
தன்புடையானென்னுமது. (355)

இதனுள், காரியார்பெற்ற விளவரசை மாறனென்னும் பிள்ளைத் திருநாமத்தையுடையானென் றுலகின் முதலேகூறுவார், அதனோ டும் வலியபுலன்களை யொருபொருளாகமனக்கொளாத இருடிக ளிடத் தன்புடையானென்றும்புகலுவர் என்பது போந்தபொருள். இனி இதனுள் அது என நின்றதனோடும் அன்றியும் என்பதனைச் சொல்லெச்சமாகவிரித்து அஃதன்றியுமெனக்கூட்டிக் காரியார் பெற்ற இளவரசை யுலகம் யாவரோடும் மாற்றங்கொள்ளுங் குணத் தையுடையானென்று முதலேகூறுவதோடு மனத்தை யதுசென்ற விடத்துச்செலவிடா தப்புலத்தி னன்மை தீமைகளையாராய்ந்து தீமைகளைநீக்கி நல்லதன்கட்செலுத்தும் வலியவறிவினையுடையோ ரையு மொருபொருளாகமதித்திடாது, கோபிக்கப்பட்டவரிடத்து மன்புடையானாகியிருப்பனென்றுங் கூறுமஃ தியாதென்றறியே னெ னக்கூறிய்தாய்ப் பொருள்கொள்ளக்கிடந்தமையா னிது குணத் திற்குக் குணத்தோடே விரோதச்சிலேடையாயிற்று. திணை-வாகை. துறை - சால்புமுல்லை.

புனமவிதேமாவின்புணர்சினையின்றண்மை
தினமகலிற்சேர்ந்தாரைக்கொல்லி—யெனலாகு

நாடிப்பரனையுணர்நாவீறன்றண்சிலம்பிற்
கூடிப்பிரிந்தார்குணம். (356)

என்பது, நண்பனே ஞானத்தாலாராய்ந்து சீமந் நாராயணனே பரத்துவமெனவுட்கொண்ட நாவீறுடையபிரான் குளிர்ந்தமலைப் பக்கத்திற் புனத்தின்கண்ணே மிகுந்த பெண்பாற்கடவுளாகிய திருமகள துபய்வுறுப்பாகியமுலைகளிற் றண்ணென்றகுணந் தம்மைப் பரிசித்தகாலத்துத் தண்ணென்னும்; சேய்த்தாய்காலத்துப் போதுதோறும் நினைவையுஞ்சுடும் நெருப்பாய்நின்றன வாதலான் வாடினேனென்றவாறு. தேமா - கடவுளாகிய திருமகள். புணர்சினை - உபயமுலை. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - உற்றதுரைத்தல். இதனுள், புனமலிதேமாவின்புணர்சினையின்றண்மையென்பது புனத்தின்கணெருங்கவைத்த தேனையுடையமாமரங்களினெருங்கின கொம்பரிற் சிவந்ததளிர்களின்குளிர்ச்சி தம்மைப்பரிசித்தகாலத்துத் தண்ணென்னும்; சேய்த்தாய்நீங்கினகாலத்து நினைவோடும் பார்த்தகண்ணிற்கு நெருப்பாய்த்தோன்றிப் பயங்கரமாகி யுள்ளத்தையுஞ் சுடாநின்றதெனப் பிறிதுமோர்பொருடோன்றலாற் குணத்திற்குப் பொருளோடே விரோதச்சிலேடையாயிற்று. சேர்ந்தாரைக்கொல்லி - நெருப்பு. சினை, தினம் ஆகுபெயர். நண்பனேயென்னு மெழுவாய்முன்னிலையும், வைத்ததேனென்பதுமுதலாக வாடினேனென்பதீறுய சொற்களு மெஞ்சிவிரிந்தன. இதன்பொருணண் மாட்டுறுப்பா யெச்சமுங் கூடின.

நாடகத்தையீறுய்நயந்ததமிழ்நன்குணர்ந்தோ
னூடகத்தைப்பித்தளையென்றாக்கிய தூஉ—மேடவிழ்பூந்
தாமக்குழலிவளேதண்டமிழ்மாறன்சிலம்பி
லேமப்பொழிலுமிது. (357)

என்பது, இயன்முதலாக நாடகமீறாக வுலகம்விரும்பப்பட்டதமிழ் மூன்றினையு நன்றாயறிந்தோன் வெற்றியையுடையபுத்தியை மையலளவாயாகவென்றுகற்பித்ததும், இதழ்விரிந்தபூமாலையைச்சூடின குழலையுடையவிவளே; தலைவன்கூறிய தண்டமிழ்மாறன்வரையி லின்பத்திற்கிடங்கொடுத்தசோலையுமிஃதே பிறிதில்லையென்றவாறு. ஏகாரம் தேற்றம். தலைவன்கூறியவென்ப தெச்சம். இதனுள் ஆட

கத்தைப் பித்தனையாக்கிற்றென்பதனுற் பொருட்குப்பொருளோடே விரோதச்சிலேடையாயிற்று. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - குறி வழிச்சென்றபாங்கன் றலைவியைக்காண்டல். ஆகப்பத்தும் முன்னர்ச் சிலேடித்தவற்றைப் பின்னரும் விரோதமாகச்சிலேடித்த சிலேடை யடைவே வந்தமை காண்க.

திருமகிழ்மாலையனுமென்பர்மெய்யைச்சிறைப்படுத்திப்
பொருதனைகட்டுண்டறியானளியுறும்போதனென்பா
ருருவளர்பாரிபடைத்தறியானொண்புனிதனென்பா
ரருள்புரிவாய்வைத்தருந்தான்மின்சொர்க்கத்தமிர்தினையே ()

இதனுள், திருமகிழ்மாலையனுமென்பர் என்பது திருமகள் விரும்புமியல்பையுடையதிருமாலுக்கும், அழகியவகுளமாலிகையினை யுடையமாறனுக்கும்பெயராமென்றுகூறுவர் பெரியோர். திருமால் திருமேனியையொளித் துறியினையெதிர்ந்து தயிரைக் களவுகண் டறிவான்; மாறன் ஞானத்தைத் தனக்கரணுக்கிக்கொண்டு தன் னேடு பூசல்பெருக்கும் பாசத்தனையிற் கட்டுப்பட்டறியான். என்றும், அளியுறும்போதனென்பார் என்பது வண்டுகள்சென்றுமுடுகும் பூவினுள்ள பிரமனுக்கும், தண்ணளிமிக்கஞானத்தையுடையமாற னுக்கும் பேர். பிரமன் வடிவகன்றபூமியைப் படைத்தறிவன்; மாறன் காந்திதழைபாநின்ற இல்லறக்கிழத்தியைக் கொண்டறியான். என்றும், ஒண்புனிதனென்பார் என்பது நல்ல இந்திரனுக்கும், ஒள் ளியஞானத்தோடுங்கூடிய பவித்திரவானும் மாறனுக்கும் பேர். இந் திரன் திருமால்கருணைபுரிந்துகொடுப்ப வொளிருஞ் சுவர்க்கத் திருக்கு மமிர்தினை வாய்வைத்துண்டறிவான்; மாறன் மின்போலு மிடையையுடைய நங்கை யிரங்கிக்கொடுக்குந் திருமுலைப்பாலினைத் திருப்பவளவாய்வைத்துண்டறியா னென்றுங் கூறியவாருகவுணர்க. இங்ஙனஞ் சிலேடை நிகழ்த்தலா லிதுவும் பொருளோடே கிரியைக்கு விரோதமாகவந்த சிலேடைவேறுபாடெனக் காண்க. இன்னும் வேறு படவருவனவெல்லாம் பொருணேக்கமறிந்து கொள்க. அவையெல் லா மீண்டுரைப்பிற் பெருகும். திணை-வாகை. துறை - தாபதவாகை.()

156. அவிரோதத்தறைவதுமவிரோதம்.

(எ - ன்) அவிரோதச்சிலேடையாமாறுணர்—ற்று.

(இ - ள்) அவிரோதச்சிலேடையென்பது முன்னர்ச் சிலேடித்தபொருள் பின்னரும்விரோதியாமற் சிலேடிப்பனவாய்க் கூறுவதாமென்றவாறு.

குருகையிடங்கொண்டான்மெய்க்கோலமுறுதுப்பான்
பெருமனத்தானிலஞ்சிபெற்றோ—னொருபுனித
னாகதருநிழலானன்னருறுமாதவன்பொன்
னாகமலம்வருநண்பான். (359)

(இ - ள்) திருமால் பாஞ்சசன்னியத்தை யிடதுகையிற்றரித்தான்; அழிவில்லாத வராகரூபியாய்ப் பூமிதேவிதோன்றுதற்குப் பற்றுக்கோடாயினுன். மாறன் குருகாபுரியையிருப்பிடமாகப்பெற்றுளான்; திருமேனியினது அழகு மிக்க பவளம்போல்வான். பிரமன் பெருமையெய்து மன்னவாகனத்தை யுடையான்; மாயோன்றிருவுந்திபெறப்பட்டவன்; மாறன், ஞானமிகுந்த மனத்தையுடையான்; மகிழமாலிகையை யுடையவன். இந்திரன் புனிதனென்னும் ஒரு பெயரையுடையவன்; சுவர்க்கத்திற் றருவினதுநிழலையுடையவன். மாறன் ஒப்பற்ற பவித்திரவான்; சேடாவதாரமான திருப்புளிநீழலையுடையான். ஆதித்தன் நன்மைமிகும் வடமேருவை வலம்வருவான். மாறன் முத்தியைப்பெறும் பெரியதவத்தையுடையவன்; பெரியபிராட்டிதிருவுளத்தி னிறைவெய்தும் அன்பினையுடையான். ஆதலாலவன் திருவடிகளைப்பற்றுவாரு· முத்திபெறுந்தன்மையுடையவராவரென்பது பயன். இதனுள், கோலம்-பன்றியும், அழகும். துப்பு - பற்றுக்கோடும், பவளமும். இலஞ்சி - கொப்பூழும், வகுளமாலிகையும். நாகதரு - சுவர்க்கத்துக் கற்பகதருவும், திருப்புளியாழ்வாரும். நன்னர் - மங்கலமும், முத்தியும். இஃ தாகுபெயர். ஆகம் - திருவுளம். அலம்வரல் - சுற்றுதலும், நிறைவெய்துதலும். இது அவிரோதச்சிலேடை. இரண்டுங் கடவுள்வாழ்த்து.

அந்தணரறைந்தவுரையினைச்செவிக்கொண்
டகனமர்ந்தணிதிகழரையிற்
சுந்தரப்பீதாம்பரத்தினைநெகிழ்த்துச்
சுற்றுவிட்டதன்பினோர்வெண்பட்

டிந்துவினெறிப்பவரையுடஇக்கடன்க
ளியற்றிவான்பொருநையுட்படியா
வுந்தியினுதித்தோனெனும்பெயர்பிரமற்
குண்மையாமெனும்படிக்கெழுந்தான். (360)

என்பது, திணை - பாடாண். துறை - மண்ணுமங்கலம்.

வெம்புலால்கமழ்ந்தழுபடைவேடுவன்விறல்கண்
டும்பல்பாவையும்பறந்துவான்குரல்கிளைத்தொசிந்த
கொம்பின்மொய்த்தடர்போதகத்துறுமுழைகுறுகித்
தும்பியாமெனப்புலவராற்புணர்பெயர்துணிவார். (361)

திணை - வாகை. துறை - பேராண்முல்லை.

பாய்கதிர்க்கடவுளும்பனிவெண்டிங்களுஞ்
சேயிகந்திரிதருஞ்செம்பொன்மாளிகைத்
தூயதுண்டுகிற்கொடிதுவன்றித்தோன்றலாற்
காயமம்பரமெனும்வாய்மைகாட்டுமே. (362)

இது நகரவாழ்த்து. இங்ஙனம்வருஞ் சிலேடைவேறுபாடுக ளுங் காண்க. இவைமூன்றுங் குருகாமான்மியம். இனி ஒருதொ டர்ச்சொ லிரண்டுமுதலாக ஐந்துபொருள்காட்டுவனவாஞ் சிலே டைகளுமுள. அவை சொல்லணியினு ளிடைவிடாமடக்கினுண் முந்துறக் காட்டுதும். அவை யாண்டுக்காண்க. ஈண்டுரைப்பிற் பெருகும். (எக)

௧௭-வது சிலேடை முற்றும்.

---

## ௧௮-வது பின்வருநிலையலங்காரம்.

———:(o):———

157 நெறிப்படுசெய்யுண்முன்னிலைபெறுசொற்பொருண்
மறித்துறுபலபுடைவரிற்பின்வருநிலை.

(எ - ன்) வைத்தமுறையானே பின்வருநிலையென்னுமலங் காரமாமா றுணர்—ற்று.

(இ - ள்) முன்னர்க் கூறியநெறியே யுண்டான செய்யுட்களின் முதலேவருஞ் சொல்லாயினும் பொருளாயினும் அச் செய்புளின் கண் மீட்டும் பலவிடத்தும்வருமெனின் அது பின்வருநிலையென் னும் அலங்காரமா மென்றவாறு. (௭௨)

158. அதுவே,
சொற்பின்வருநிலைபொருட்பின்வருநிலை
சொற்பொருட்பின்வருநிலையெனமூன்றும்.

(எ - ன்) இதுவும் அவ் வலங்காரத்தினது விரியுணர்—ற்று.

இதன் பொருள், சூத்திரத்தானே விளங்கும்.

மானைப்பொருகயற்கண் மானைக்கமலமலர்
மானைப்புவனமடமானை—மானைப்
பரித்தபிறையுஞ்சுடுமோபாடகத்தான்ரேண்மேற்
றரித்ததுளபத்தார்தரில். (363)

இது சொற்பின்வருநிலை. பாடகம் - திருப்பதி. ஒழிந்த அகல முறையிற்கொள்க. திணை - பெண்பாற்பெருந்திணை. துறை - நிலவு கண்டழுங்கல்.

மாய்த்தேன்செனனம்வதைத்தேனென்வல்வினையைத்
தேய்த்தேனறிவின்சிறுமையினைச்—சாய்த்தே
னனிவினையாங்கூற்றைநறையூர்வருமால்
பனிமலர்த்தாள்போற்றிப்பணிந்து. (364)

இதன்பொருளு முறையிற்கொள்க. இது பொருட்பின்வரு நிலை. மாய்த்தேனென்பதனொடும் ஒழிந்தவினை பரியாயமாகப் பொருள்கோடலானென்றறிக. திணை - வாகை. துறை - அறிவன் வர்கை.

வலம்புரி துவைத்தனவரம்பிலாம்பனின்
றுலம்பினகாடிகையுலப்பில்பேரிகை
சிலப்பின்முழவுடன்றெழித்ததெங்கணு
நலம்புரிகின்னரர்நவின்றநாதமே. (365)

இதுவுமது. இதன்வேறுபாடுங் காண்க.

மாதர்மாதர்கூர்வாளமருண்கண்மாநிலத்து
மாதர்மாதர்கூர்வண்டிமிரளியதாமரைப்பூ
மாதர்மாதர்கூர்மாலும்வேலையுமெனவளர்வான்
மாதர்மாதர்கூர்கெழுதகைபடைத்தமாண்பினவே. (366)

இது சொற்பொருட்பின்வருநிலை.

(இ - ள்) இம்மாதராள்விருப்பத்தைமிகுத்த வாள்போன்றமர் விளக்குங்கண்களானவை, பூலோகத்துமகளிர்காணவிருப்ப மிகும் வண்டுகளாரவாரிக்குந் தாமரையிற் கருணையோடுங்கூடிய பெரிய பிராட்டிவிருப்பமிகு மாயோனும் பாற்கடலுமொப்பெனக் கரிய குணங்களா லொளிவளராநின்ற பொன்னுலகி னரமகளிர் விருப்ப மிகுநட்பினையளிக்கும் பெருமையுடையவாமென்றவாறு. பகுதி-சேட்படை. துறை - கண்ணயப்புரைத்தல். (எங)

159. உவமானப்பொருட்பின்வருநிலையுந்
தவலருஞ்சிறப்பிற்றுன்வரலுளதே.

(இ - ள்) அப்பின்வருநிலை உவமானப்பொருட்பின்வருநிலை யெனவும் வருமென்றவாறு.

பொன்னசலம்வண்கோபுரமாடகசைல
மன்னுசிகரம்வடபொருப்பா—நன்ன
ருரங்கொண்மதின்மேருவதாகுமாயோ
னரங்கமணிமாளிகை. (367)

இஃ துவமானப்பொருட்பின்வருநிலை. இதனுள் அசலம், சைலம், பொருப்பு, மேரு எனப் பரியாயச்சொல்லா லுவமானப்பொருட் பின்வருநிலை வந்தவாறு காண்க. துறை—நகர்வாழ்த்து. (எச)

கச-வது பின்வருநிலை முற்றும்.

---

## கக-வது தீபகவலங்காரம்.

———:(o):———

160. தொழில்குணஞ்சாதிபொருளெனுமிவற்றொரு
மொழிபுணர்செய்யுளின்முதலிடைகடைநின்
றுங்கதன்பலபுடையடைபொருள்விளக்கும்
பாங்குறுதீபகம்பன்னிருபாற்றே.

(எ - ன்) வைத்தமுறையானே தீபகம் என்னும் அலங்கார முணர்—ற்று.

(இ - ள்) தொழில், குணம், சாதி, பொருளென்னு மிவற்றி னொன்றைக்காட்டும் மொழி புலவனாற் புணர்க்கப்பட்ட செய்யுளின் முதல் இடை கடை யென்னு மோரிடத்துநின்று பலவிடத்துநின்ற சொற்களோடுமடைந்து பொருளைவிளக்குவதாய்ச்செய்புந்தன்மை யையுடைய தீபகம் பன்னிரண்டுபகுதியுடைத்தென்றவாறு.

ஒழுகுங்கயற்கண்ணீரொண்டளிர்க்கைச்சங்க
மழுகும்பிறைநுதல்வேர்மன்னே—முழுதுமுணர்ந்
தார்பந்தழுவாரணத்தமிழ்செய்நாவீறர்
மார்பந்தழுவாமயிற்கு. (368)

இது முதனிலைத்தொழிற்றீபகம். இதனுள் ஒழுகுமென முதலேநின்ற நிகழ்காலவினைச்சொல்லை கண்ணீர், சங்கம், வேரென்னு மூன்றிடத்தும் ஒட்டுக. திணை - பெண்பாற்பெருந்திணை. துறை - கண்டுகைசோர்தல்.

வளைத்ததுராமன்கைவல்விற்பகழி
துளைத்தவரக்கரைப்பேய்ச்சுற்றந்—திளைத்தசெருக்
கண்டகளம்புண்ணீர்கடவிலங்கைமாநகரைச்
சண்டதான்வீசியபாசம். (369)

இதுவுமது. இதனுள் இராமன்கை வில்லைவளைத்தது. அரக் கரைப் பேய்ச்சுற்றம் வளைத்தது. செருக்களத்தைப் புண்ணீர்வளைத் தது. சண்டகரன் வீசியபாசம் இலங்கைமாநகரைவளைத்தது. என முதலேநின்ற இறந்தகாலவினையை யெங்கு மொட்டுக. திணை-வாகை. துறை - பேராண்முல்லை.

பூரித்ததுகோசலைநாடன்விற்புணர்தோள்
பாரிற்பொடித்தாள்பருவமுலை—தேரிற்
றடுகளத்துவீழ்ந்தவரக்கரைத்தின்றுழு
மடுநிகர்த்தபல்பேய்வயிறு. (370)

இது முதனிலைக்குணத்தீபகம். இதனுள், பூரித்ததென முதனின்றபண்பை தோள், பருவமுலை, பேய்வயிறு என எங்குமொட்டுக. பூரித்ததெனக் காலந்தோன்றிற்றேனும் பொருளின்புடைபெயர்ச்சியல்லாமையாற் குணமாயிற்று. திணையுந்துறையுமிதுவுமது.

பாம்பாடல்வாகனமாம்பாயலாம்பாதுகையாந்
தீம்பாற்பரவைத்திரைகடைநாட்—டாம்பாகுந்
தாசரதிகொற்றக்குடையாந்தனிவிளக்கா
மாசனமாம்பின்னவனுமாம். (371)

இது முதனிலைச்சாதித்தீபகம். பாம்பென்பது சாதி. ஆடல்-வென்றி. பாதுகை - திருவடிநிலை. பின்னவன் - தம்பி. துறை - அரவவென்றி. திருவனந்தாழ்வானும் நித்தருண் முதலாதலால் அறுமுறைவாழ்த்துள்ளுமாம்.

மாறன்சடகோபன்வண்குருகூரான்பொருநை
யாறன்றுடரியருளாளன்—வீற
னொருநான்மறைத்தமிழாலொண்பொருளைக்காட்டுந்
திருஞானமுத்திரைக்கைத்தே. (372)

இது முதனிலைப்பொருட்டீபகம். துறை - கடவுள்வாழ்த்து.

தேர்வண்டமிழ்மாறன்றென்குருகூர்வீதிதொறுஞ்
சார்வண்டாளமுகுஞ்சங்கினங்க—ளூரும்
பெருமாளிகைமுகட்டிற்பெய்ம்முகில்கள்கங்குல்
வருமாலையில்வெண்மதி. (373)

இஃ திடைநிலைத்தொழிற்றீபகம். இதனுள் ஊரும் என்பதனை ஊரும் தேரும்; ஊரும் சங்கும்; ஊரும் முகில்களும்; ஊரும் மதியும் என முன்னும் பின்னு மொட்டுக. துறை - நகரவாழ்த்து.

பூண்டுறந்தவாசவன்றன்பொற்புயமுமுன்னோன்பின்
னூண்டுறந்துசென்றோனுடக்கம்பு—நாண்டுறந்த
கொற்றவிராவணிதன்கொள்கைக்குலக்கோதைக்
குற்றதிரள்கண்டமும். (374)

இது பெயரோடுங்கூடி யிடைநின்ற தொழிற்றீபகம். முன்னோன் - இராமன். அவன்பின்னூண்டுறந்துசென்றோன் - இளைய பெருமாள். உடக்கம்பு - நாணிற்செறிந்தபாணம். நாண்டுறந்த - எய்தகாலத்து நாணைவிட்டுநீங்கின. ஈண்டு நாண் - விரற்சாடும், வின்னாணுமாம். பூண்டுறந்தவாசவன்றன்பொற்புயமும் நாண்டுறந்த என்பது இராவணி சமர்முகத்துக்கட்டினவன்றே வாகுவலயமென்னும் ஆபரணத்தை மானபங்கத்தா லணியாதுவிட்ட இந்திரன்புயத்தில் அவன்கட்டினநாணும் அன்றுவிட்டுநீங்கின எனவும், கொற்றவிராவணிதன்கொள்கைக்குலக்கோதைக் குற்றதிரள்கண்டமும் என்பது இராவணிகுலத்திற்குரிய பாரி திரண்டகண்டமும் மங்கிலிய மன்று விட்டுநீங்கின எனவும் முன்னும்பின்னுங்கூட்டுக. திணை - வாகை சார்ந்த பொதுவியல். துறை - வில்வென்றி.

வட்டமுலைக்கண்குளிர்ப்பவண்பனிநீரிற்குழைத்துக்
கொட்டியகத்தூரிக்கொழுங்குழம்புஞ்—சுட்டதந்தோ
செய்வளைக்குந்தென்குருகூர்ச்செண்பகமாறன்றழுவாப்
பெய்வளைக்கும்விண்மேற்பிறை. (375)

இஃ திடைநிலைக்குணத்தீபகம். இதனுள், சுட்டது கத்தூரிக் குழம்பும், விண்மேற்பிறையும் என முன்னும் பின்னுங் கூட்டுக. திணை - பெண்பாற்கைக்கிளை. துறை - கண்டுகைசோர்தல். கொட்டியது - அப்பியது. கொழுங்குழம்பு - நெகிழ்ந்தொழுகுங்குழம்பு. அந்தோவென்ப திரக்கத்தின்கட் குறிப்பு.

வஞ்சநிருதர்மறப்படைக்கோர்கூற்றமா
நஞ்சனையமாயைக்கோர்நன்மருந்தா—மஞ்சனைதன்
கன்றுமனுராமன்கவசமாம்வாகனமா
மன்றுகுறித்தேவியதூதாம். (376)

இஃ திடைநிலைச்சாதித்தீபகம். அஞ்சனைகன்று - திருவடி. கன்றென்ற துவட்பின்கண் மயக்கம். "பாலறிமரபிற்பொருநர்கண்

னும், அணிநிலைவகையோடாங்கவையுளப்பட” என்பதனால் வாகைப் புறத்திணையுள், துறை - வானரவென்றி.

தன்னிகரொன்றில்லாத்தனிமுதலாய்நின்றானு
மன்னுயிர்க்குமன்னுயிராவாழ்வானுந்—தென்னரங்க
னாராவமுதன்றமரர்க்களித்தானு
மோராயிரம்பெயரானும். (377)

இஃது இடைநிலைப்பொருட்டீபகம். ஓராயிரம்பெயர் - ஒப்பற்றளவிறந்த திருநாமம். ஒழிந்த அகல முறையிற்கொள்க. துறை - கடவுள்வாழ்த்து.

பெருவிறல்கூர்நாகப்பிடர்மேன்மரமு
முருகெழுதோள்வாலியுரமு—மிருபதுகைக்
குன்றின்வரமுங்குணராமன்வாளியினா
லன்றுதுளைபட்டது. (378)

இது கடைநிலைத்தொழிற்றீபகம். இருபதுகைக்குன்றென்றது இராவணனை. திணை - வாகைசார்ந்தபுறத்திணை. துறை - வில்வென்றி.

மைம்மாண்புயல்கிழிக்கும்வண்சுடர்மீதாமிமையோர்
தம்மாநகரணவுஞ்சால்பிற்றே—பெம்மான்
முருகவிழ்பூந்தார்வகுளமுன்னோன்குருகூ
ருருவளர்பொன்மாடவுயர்பு. (379)

இது கடைநிலைக்குணத்தீபகம். துறை - நகரவாழ்த்து.

தன்னெவ்வநோக்காது தாயர்வெறுத்துளதா
மென்னெவ்வநோக்குமிகல்விளைப்பான்—மன்னருண்மால்
மோகூரனைத்தொழுதேன்மோகமிகக்காமாகூ
கூகூவெனுங்கோகிலம். (380)

இது கடைநிலைச்சாதித்தீபகம். திணை - பெண்பாற்கூற்றுப் பெருந்திணை. துறை - குயிலொடுவெறுத்துக்கூறுநிற்றல்.

தாடகைகைச்சூலமுரன்சாய்த்தானும்வில்லிறுத்துச்
சூடகக்கைச்சானகிதோடோய்ந்தானுங்—கேடகத்தான்

செம்பொன்மணிமாடத்தென்னிலங்கைசெற்றானு
மம்பொன்மணிக்கூடத்தான். (381)

இது கடைநிலைப்பொருட்டீபகம். கேடகத்தான் - கேட்டோடுங் கூடியவுள்ளத்தையுடையான் ; அவன் இராவணன். துறை - கடவுள்வாழ்த்து. (எரு)

161. அதுவே,
ஒருபொருளுவமையுட னுறல்சிலேடை
விருத்தமாலையென்றிவற்றொடும்விரவும்.

(எ - ன்) இதுவும் அவ்வலங்காரத்தி னொழிபுணர்—ற்று.

(இ - ள்) அத்தீபகம் ஒருபொருட்டீபகமுதலாக மாலாதீபகமீறாகக் கூறப்பட்ட வைந்தினோடும் விரவிவருமென்றவாறு.

வெங்கதிரோன்மெய்வருடும்வெண்மதியின்மெய்தடவு
மங்கணுயர்வானகடணவு—மெங்க
ளனகனபிராமனுழியான்மூழிக்
கனகமணிமாளிகை. (382)

இஃ தொருபொருட் கடைநிலையிடத்தீபகம். ஒருபொருளாவன:—வருடும், அணவும், தடவும் என்பன. துறை - நகரவாழ்த்து.

பொன்னங்கொடியனையள்பொற்பமைந்துமென்னடைகற்
றன்னந்தனையனையளாயிழாய்—நன்னுதலாள்
வாய்ந்தவியல்பெற்றுமயிலனையண்மின்னனைய
ளாய்ந்தநுடங்கிடைபெற்றாங்கு. (383)

இஃ துவமானப்பொருட்டீபகம். வாய்ந்தவியல்-தோற்றமுள்ள சாயல். பகுதி - சேட்படை. துறை - தலைவன் பாங்கிக் கவயவங் கூறல்.

ஏகாவடநிலைபெற்றின்புட்டகமணந்து
மாகாமருவாமொய்வாழ்வுறலாற்—றோகை
முலைக்குமகிழ்மாலைமுன்னோன்றுடரி
மலைக்குமகிழ்வெய்துமனம். (384)

இது சிலேடாதீபகம். ஏகாவடம்... இயங்காத ஆலமரம் நிலை பெற்று நல்லபுள்ளுக்கள் பெருமையோடுபொருந்துவனவாய்க் கரிய அழகிய யானைத்திரள்கள் செறியும்படிவாழ்வுற்றெனவும், முலைமேற் சொல்லுங்கால், ஏகாவடமென்னும் ஆபரணம்நீங்காது கண்ணுக்கினிமைதரும் படாந் தன்மேற் றகவோடு தழுவுவனவாய்ப் பெரிய விருப்பத்தையளிக்கு மிளமைத்தன்மையுடனிறுகி வாழ்வுபெறுதலால் எனவுங்கொள்க. பகுதி - இயற்கை. துறை - நலம்புனைந்துரைத்தல்.

தணந்தாருயிர்குறைக்குந்தந்துணைவர்பொற்றோண்
மணந்தாருயிர்நிறைக்குமானே—புணர்ந்தார்நல்
யாகத்துதிமாலிபகிரிமேன்மைதவழ்நீண்
மாகத்துதிமாமதி. (385)

இது விருத்ததீபகம். இபகிரி-அத்திகிரி. விருத்தம், குறைக்கும் நிறைக்குமென்பன. பகுதி - பொருள்வயிற்பிரிதல். துறை - நிலவு கண்டழுங்கல்.

வாவிக்கழகுமலர்கமலமென்கமலப்
பூவிற்கதனுட்பொலிதேவி—தேவிக்கு
நாளும்புதியதமிழ்நாவீறனையடிமை
யாளுந்திருநாரணன். (386)

இது மாலாதிபகம். இதனுள் அழகென்னுமதனை முதனிலைக் குணத்தீபகமாக்கிக் கமல முதலாக எவ்விடத்தும் மாலைப்படுத்திக் கூட்டுக. துறை - கடவுள்வாழ்த்து. (எசு)

ககூ-வது தீபக முற்றும்.

---

## உ0-வது நிரனிறையலங்காரம்.

—:(o):—

162. குறித்திடும்பெயர்வினைகூறியசெய்யுளி
னெறிப்படநிரலுறனிரனிறையாகும்.

(எ-ன்) வைத்தமுறையானே நிரனிறையலங்கார முணர்-ற்று.

(இ - ள்) இடுகுறியெனவுங் காரணமெனவுங் குறிப்பனவாம் பெயரேயாதல் வினைபேயாதல் புலவனாற் கூறப்பட்ட செய்யுளினிடத்து முறையே யிரட்டிப்பது நிரனிறையென்னு மலங்காரமாமென்றவாறு. நிரலுதல் - இரட்டித்தல். (எஎ)

163. அவற்றுள்,
பெயரொடுபெயர்நிரலுதல்பெயர்நிரனிறை.

(எ-ன்) அவ்விரண்டினுட் பெயர்நிரனிறையாமா றுணர்-ற்று.

இதன்பொருள் உரையிற்கொள்க.

தாதிவர்பூந்தாமந்திருநாமந்தந்தைதாய்
மேதினியேழும்புகழ்நாவீறற்கு—மாதராய்
வேரியார்வண்டிரைக்கும்வெய்யமகிழ்மாறன்
காரியார்நங்கையார்காண். (387)

இது பெயரொடுபெயர்நிரனிறை. இதனுள் தாமம், திருநாமம், தந்தை, தாய்:—மகிழ், மாறன், காரியார், நங்கையார் என அடைவே நிரைந்தமை காண்க. துறை - செந்துறைப்பாடாண்பாட்டு. (எஅ)

164. பெயரெதிர்நிரலுதல்பெயரெதிர்நிரனிறை.

(எ - ன்) பெயரெதிர்நிரனிறையாமா றுணர்—ற்று.

இதன்பொருளும் உரையிற்கொள்க.

ஏடவிழ்தாரேதியெழில்வாகனந்தளிம
மாடரவமஞ்சிறைப்புள்ளாழிதுழாய்—நீடுபர
மேட்டியூர்வெண்டிரைவாயென்றுந்துயின்றதிருக்
கோட்டியூர்வாழ்நெடுமாற்கு. (388)

இது பெயரொடுபெயரெதிர்நிரனிறை. அரவம் தளிமம். அஞ்சிறைப்புள் வாகனம். ஆழி ஏதி. துழாய் தார். எனப் பெயரொடு பெய ரெதிர்நிரனிறையாயவாறு காண்க. துறை - கடவுள் வாழ்த்து. (எகூ)

165. உயர்வுறுபெயரொடுவினையுறநிரல்வது
மயர்வறுபெயர்வினைநிரனிறையெனவரும்.

(எ - ன்) பெயரொடு வினை நிரனிறையாமாறுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

மற்றுளபம்போர்வேழம்வாராழிமுல்லைநிலங்
கொற்றமகிழ்மாறனையாட்கொண்டருளும்—விற்றுவமா
லாடினதுஞ்சூடினதுமட்டதுவுந்தட்டதுவும்
பாடினதுநேடினதும்பண்டு. (389)

இது பெயரொடுவினைநிரனிறை. மல்லென்பது கூத்து. முல்லை-பண். நிலம் - பூமிதேவி. அட்டது - கொன்றது. தட்டது - அடைத்தது. நேடினது - தேடினது. இதுவுங் கடவுள்வாழ்த்து.

பணிமொழியுண்கண்மலராள்பங்கயத்தாள்செய்ய
மணிமலர்க்கைபற்றியவாட்டாற்று—ணணிமலர்த்தாள்
பேரமுதுண்சேடமெழில்பேரின்பமுற்றுமுகஞ்
சீரடியர்க்கேவல்செயல். (390)

இது பெயரொடு வினைமுறைநிரனிறை.

(இ - ள்) நெஞ்சமே! தாமரையாள் சிவந்தமணியு மலரும் போன்ற திருக்கையைப்பற்றின திருவாட்டாற்று னழகிய திருவடிகளைப்பணி; நாமத்தை மொழி; அமுதுசெய்த சேடத்தை உண்; திருமேனியின் காந்தியைத் தியானஞ்செய்; அதன்பின்னருற்ற பேரின்பத்தான் முகமலர்; அவன் றிருத்தொண்டர்க்கேற்ற ஏவல் செய்வதனை ஆட்சிசெய்வாயாக வென்றவாறு. நெஞ்சமேயென்னு மெழுவாய்முன்னிலை யெஞ்சிநின்றதாக விரிக்க. இதனுள் பணி மொழியுண்கண்மலராளாகிய தாமரையாளெனத் தொடர்புடைத் தாய்நின்றனவுமாய்த் தொடர்பிற்பிரித்த தன்றொழிலேவலாயின வாறுங் காண்க. திணை - பாடாண். துறை - ஓம்படை. (அ0)

166. ஓதியபெயரினேடியர்வினையெதிரி
னீதிகொள்பெயர்வினையெதிர்நிரனிறையாம்.

(எ - ன்) பெயரொடுவினை யெதிர்நிரனிறையாமாறுணர்-ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்து

## 1913ஹு ஆகஸ்டுமீ 1உமுதல் 31உ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை. ரூ | அ. | ப. | செலவு | தொகை. ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1913-ம் ஹு ஆகஸ்டுமீத்திற்கு புதுக்கோட்டை சமஸ்தானம் தர்பார் ஆபீசிலிருந்து மாதச் சந்தா வரவு ரூ | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913ஹு ஜூலைமீத்துக்கு சம்பளம்செல்லாக்கியது ரூ 369—1—10 | | | |
| செந்தமிழ்ச் சந்தாவகையில் வரவு ரூ | 38 | 1 | 0 | ஷை சிப்பந்திகளுக்கு 1913ஹு ஆகஸ்டுமீத்து சம்பளத்தினின்றும் அவசர செலவுக்காக அட்வான்சு கொடுத்தது ரூ 41—0—0 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் அச்சுக்கூலி வரவு ரூ 3:9—7—6 | | | | ஷை சிப்பந்திகளில் ஒருவருக்கு மேமீ சம்பளத்தில் பாக்கி செலுத்தியது . ரூ 0—0—8 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ரூ 54—8—0 | | | | | | | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 393 | 15 | 6 | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு ஜூலை மாதத்திற்கு சம்பளம் செல்லாக்கியது ரூ 66—6—0 | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ரூ 91—12—6 | | | | | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ரூ 40—0—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 476 | 8 | 6 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | | 131 | 12 | 6 |
| புத்தகவிற்பனை வரவு ரூ | | 184 | 2 | 6 |
| பிரிண்டிங்பேபர் கலர்ராப்பர்காகிதம் விற்றவகையில் வரவு ரூ | 36—4—0 | | | |
| சங்கம் காலி நிலம் மராமத்துக்கடை வாடகை பிரமாதீச ஆடிமீ த்துக்கு வரவு ரூ | 55—0—0 | | | |
| விளம்பரவகையிற் சார்ஜ் வரவு ரூ | 21—4—0 | | | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | | 112 | 8 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு எப்பிரல்மீ த்துக்கு ஒருவனுக்கும் ஜூலைமீ த்திற்கும் ஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது ரூ | | 74 | 1 | 6 |
| டைபண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரி செலவு ரூ | 11—8—0 | | | |
| ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 9—9—1 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 21 | 1 | 1 |
| பழைய டைப்ஸ்களை ரீகாஸ்டு செய்த வகையிற் செலவு ரூ | 3—7—0 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ | 93—1—5 | | | |
| ஷை ஆபீஸ் சம்பந்தமாய் ரெயில்வே செலவு ரூ | 2—5—0 | | | |
| ஷை ஆபீஸ்சம்பந்தமாய் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு ரூ | 9—8—0 | | | |
| ஷை ஆபீசில் கண்டின்ஜன்ஸி செலவு | 5—12—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 114 | 1 | 11 |

| | | | | |
|---|---|---|---|---|
| போஸ்டேஜ் வகையிற் செலவு ரூ | | 21 | 11 | 0 |
| டிரெடில் Finger ரிப்பேர் செய்த வகையிற் செலவு ரூ | | 0 | 8 | 0 |
| சங்கம் ஆபீசு வைத்திருக்கிற கட்டடத்துக்கு 1913ளு ஜூன் ஜூலை மாதங்களுக்குரிய வாடகை செல்லாக்கியது ரூ | 86—0—0 | | | |
| சங்கம் சாலி நிலத்துக்கு முனிசிபல் வரி 6 மாசத்திற்கு செல்லாக்கியது ரூ | 41—4—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 127 | 4 | 0 |
| வண்டி வாடகைவகையிற் செலவு | 0—11—0 | | | |
| ரசீது ஸ்டாம்பு வகையிற் செலவு ரூ | 0—7—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு வாங்கிய சிட்டா புத்தகத்துக்கும், ஸ்டேஷனரி கண்டிஞ்ஜன்ஸி சாமான்கள் வாங்கியதற்கும் செல்லாக்கியது ரூ | 7—13—9 | | | |
| "Hindu" நியூஸ்பேபருக்கு 1913ளு ஜூலை முடிய செலுத்த வேண்டிய சந்தாவுக்கு Part payment ஆக செல்லாக்கியது ரூபாய் ரூ | 26—14—0 | | | |
| Overtime work செய்த பைண்டிங் சிப்பந்திகளுக்கும் Trial Binder ஒருவனுக்கும் செல்லாக்கியது ரூ | 27—15—1 | | | |
| பைண்டிங் ஆர்டர் வாங்கி வருவதற்காக திருமங்கலம் போய் வந்த வகையிற் செலவு ரூ | 0—11—0 | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | சங்க சம்பந்தமான வேலைகளுக்கு பிரிண்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ 51—8—0 | | | |
| | | | | ஷை சம்பந்தமாக பைண்டிங் வேலைகளுக்குச் செல் ரூ 40—0—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய:விவரப்படி செலவு ரூ | 158 | 15 | 10 |
| | | | | ஆகமொத்தம் செலவு ரூ | 994 | 3 | 10 |
| | | | | போக பாக்கியிருப்பு* ரூ | 572 | 2 | 5 |
| ஆக மொத்தம் வரவு .. | 910 | 7 | 6 | | | | |
| | | | | ஆக மொத்தம் ரூ | 1566 | 6 | 3 |
| சென்ற ஜூலைமீத்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 655 | 14 | 9 | *By pass Book Rs. 462—9—1 | | | |
| | | | | By R. T. R. 50—0—0 | | | |
| ஆக மொத்தம் ... | 1566 | 6 | 3 | By cash 59—9—4 | | | |
| | | | | Total Rs....572—2—5 | | | |
| ஆட மொத்தம் ... | 1566 | 6 | 3 | | | | |

T. A. Subbuvenkatarama Iyer,
*Manager.*
3—9—13.

*Audited and found Correct,*
S. Gopalaswami Aiyengar,
13—10—13. *Auditor.*

உ
கடவுள் துணை.
# செந்தமிழ்

தொகுதி-கக.] பிரமாதீச ஹூ ஐப்பசி மீ [பகுதி-கஉ.
Vol. XI. October—November. 1913. No. 12.

## பொருளதிகார ஆராய்ச்சி.

[௩௬௮-ஆம் பக்கத் தொடர்ச்சி.]

### புறப்பொருளிலக்கணம்.

### திணைப்பாகுபாடு.

புறப்பொருள் என்பது யாது என முன்னர்ப் பொருளினது சிறப்பும் பாகுபாடும் கூறிய இடத்திற் கூறப்பட்டது. அது, "ஒத்த அன்புடையார்தாமேயன்றி எல்லாராலும் அனுபவித்துணரப்பட்டு இஃ திவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக்கூறப்படுவதாய் அறமும்பொருளும் என்னும் இயல்பினையுடையதாய்ப் புறத்தேநிகழும் ஒழுக்கம்" என்று பிரஹ்மஸ்ரீ மஹாமஹோபாத்தியாயர் வே. சாமிநாதையரவர்களால் விளக்கப்பட்டிருக்கிறது.

நச்சினார்க்கினியர் "வெட்சிமுதலா வாகையீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல்கூறி, அவற்றது நிலையின்மை காஞ்சியுட்கூறவே அறனும், பொருளும், அவற்றது நிலையின்மையுங் கூறினார். இந் நிலையாமையானும் வீட்டுக்குக் காரணம் கூறினார்" என்று கூறுவதனாலே அகத்திற் கூறப்படும் இன்பம் நீங்கலாக, அறம், பொருள், வீடு இவை மூன்றும் புறத்தின்கண்ணே கூறப்படும் என்பது போதரும்; சிறப்புப்பற்றி அரசர்செயலே பெரிதும் புறத்தின்கண்ணே காணப்படுகின்றது.

அகப்பொருளுக்குத் திணை யேழுகூறியதுபோலவே, புறப்பொருட்குத் தொல்காப்பியர் ஏழ்திணை கூறுவர். அவை வெட்சி,

வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பன. புறப்பொருள்வெண்பாமாலையுடையார் கரந்தை, நொச்சி, பொது வியல், கைக்கிளை, பெருந்திணை என்னும் ஐந்தையும் இவற்றுடன் சேர்த்துப் புறத்திணை பன்னிரண்டு என்பர். "பன்னிருபடலம்" என்னும் நூலின்பெயரே, அப்பழையநூலிலும் பன்னிரண்டு திணைப்பாகு பாடுகளே இருந்தனவென்பதைக் காட்டும்.

அங்ஙனமாயின், தொல்காப்பியர் இவ்வைந்திணைகளையும் விடுத்தமை எதுபற்றி எனில் அவர் அவற்றை அறவே நீக்காது வெட்சியிற் கரந்தையையும், உழிஞையில் நொச்சியையும் அடக்கினர் என்றும், கைக்கிளை, பெருந்திணை இவ்விரண்டினையும் 'அகப்புறம்' எனக்கொண்டு அகத்திணைகளுட் சேர்த்தார் என்றும், பொதுவியலைத் திணையெனக்கொள்ளாது, பொதுவிலக்கணமாகக் கூறினர் என்றும் கொள்ளுதல் வேண்டும்.

இனி இவ்வேழ்திணைகளின் இலக்கணங் கூறுவாம். இவற்றுள்,

1. வெட்சித்திணையாவது பகைநாட்டாரதுபசுக்களைக் கவரும் ஒழுக்கம். இதற்கு,

> " வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
> ஆதந் தோம்பன் மேவற் றாகும் "

என்பது சூத்திரம். இதன்கண்ணேயே நிரைமீட்டலும் அமைத்துக்கொள்ளல்வேண்டும் என்பது தொல்காப்பியர், நச்சினார்க்கினியர் என்னும் இருவர்க்கும் உடன்பாடாயகருத்து.

நிரைமீட்டலைக் கரந்தையென்று வெண்பாமாலையிலும், பிற இடங்களிலும் கூறியிருக்கிறதே எனின் "அது திணையாயின், குறிஞ்சிக்குப்புறனாகாமையுணர்க" என்றுகூறி நச்சினார்க்கினியர் மறுக்கின்றனர்.

2. வஞ்சித்திணையாவது பகைவருடையநாட்டைக் கொள்ள நினைந்து போர்செய்தற்கு அவர்மேற்சேறல். இதற்குச் சூத்திரம்,

> " எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
> அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே " என்பது.

3. உழிஞைத்திணையாவது பகைவருடையமதிலைவளைத்துக் கொண்டு முற்றுகைபோடல். இது,

> " முழுமுத லரண முற்றலுங் கோடலும்
> அனைநெறி மரபிற் றாகு மென்ப."

என்னும் இலக்கணத்தால் அறியப்படும். இதன்கண்ணேயே முற்றப்பட்டவன், தன் மதில்காக்கும் ஒழுக்கமாகியது 'நொச்சித்திணை' என்பதையும் ஆசிரியர் அடக்கினர்.

4. தும்பைத்திணையாவது பகைவர் நேராக எதிர்க்க அவருடன் கலந்து பொருவது.

> " மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
> சென்றுதலை யழிக்கும் சிறப்பிற் றென்ப."

என்பது அதற்கு இலக்கணம்.

5. வாகைத்திணையாவது பகைவர்மேல் வெற்றிகொள்வது. இது அரசர்க்குமாத்திரமன்றி நான்குவருணத்தார்க்கும் பொதுவாயது,—

> " தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
> பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப "

என்பது சூத்திரமாதலின்.

6. காஞ்சித்திணையாவது வீடுபேறுநிமித்தமாகச் செல்வநிலையாமை, யாக்கைநிலையாமை முதலிய பல்வேறுநிலையாமையைக் கூறுவது. இதற்குச் சூத்திரம்,

> " பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்
> நில்லா வுலகம் புல்லிய நெறித்தே "

என்பது. இக்காஞ்சித்திணையானது, தன்மீது போர்செய்தற்கு எழுந்த வேற்றுநாட்டானைத் தான் எதிர்க்கும் அரசன்செயலைக்கூறுவது என்னும் கருத்துடன்,

> " வெஞ்சின மாற்றான் விடுதர வேந்தன்
> காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று "

எனப் புறப்பொருள்வெண்பாமாலையாரும்,

> " வஞ்சியுங் காஞ்சியுந் தம்முண் மாறே "

எனப் 'பன்னிருபடல'முடையாரும் இலக்கணம் கூறுவர்.

7. பாடாண்டிணையாவது பாடப்பெறுந் தலைவனது கொடை, கீர்த்தி, வலி, தயை, வீரம் முதலியவற்றைப் புகழ்ந்துசொல்லுவது. இன்ன இலக்கணங்கள்வாய்ந்த ஏழுபுறத்திணைகளையும், முன் அகத் திணைகளெனக் கூறப்பட்ட ஏழுக்கும், ஒவ்வொன்றுக்கு ஒவ்வொன் றாகப்'புறன்' என்பர் தொல்காப்பியர். வெட்சி குறிஞ்சிக்கும், வஞ்சி முல்லைக்கும், உழிஞை மருதத்துக்கும், தும்பை நெய்தலுக்கும், வாகை பாலைக்கும், காஞ்சி பெருந்திணைக்கும், பாடாண் கைக்கிளைக் கும் புறன் என முறையே கொள்ளல்வேண்டும்.

இங்ஙனம் அகத்திணையோடு புறத்திணைகளை முறைப்படுத்திய தில் இயைபு ஏதேனும் உண்டோ என்பதைச் சற்று ஆராய்வோம்.

குறிஞ்சிக்குக் களவொழுக்கத்தின்கண்ணே தலைவன் இரவில் தலைவியைச்சேர்தல் அமையுமாறுபோல வெட்சிக்குங் களவாலே இர விற் பசுக்கவர்தல் இலக்கணமாதலின் அவ்விரண்டற்கும் இயைபுண் டென்பதும்,முல்லைக்கு நிலம் காடும், பொழுது கார்காலமும், ஆதல் போல வஞ்சிக்கும் அவையேயாதலானும், தலைவி முல்லைக்குத் தலைவ னைப்பிரிந்து மனைவயின் இருத்தல்போல வஞ்சிக்கும், தலைவன்பாச றைக்கண்ணுளனாதல்பற்றி அவனைப்பிரிந்து மனைவயின் இருத்தலா னும் அவ்விரண்டற்கும்இயைபுண்டென்பதும்,மருதத்திற்குரியநிலமே பெரும்பாலும் மதில் அமைந்துள்ள இடமாதலானும், ஊடலின்கண் தலைவன்வேண்ட, தலைவி வாயின்மறுத்தல்போல உழிஞையின்கண் ணும் ஒருவன் வாயில்வேண்ட மற்றொருவன் மறுத்தலானும் இவை யிரண்டற்கும் ஒற்றுமையுள்ளதென்பதும், இங்ஙனமே உற்றுநோக் கின், பெரும்பாலும் நிலமும், பொழுதும், உரிப்பொருளும் ஒத்து இருத்தலின், மற்றைத்திணைகளுக்கும் இயைபுண்டென்பதும் பெறப் படும்.

இப் புறத்திணைப்பாகுபாடுகளிற் பெரும்பாலன பூக்களின்பெய ராதலால் தமிழர், போர்க்காலத்தில் அவ்வப்பொழுது இருக்கும் போரின் நிலைமைக்கு அறிகுறியாக வேறுவேறு மலர்களைச்சூடிக் கொள்வர் என்பது உணரப்படும்.

இனி, இத்திணைகளுக்குத் துறைவகுத்துள்ளதைச் சற்று நோக்குவாம். ஒவ்வொருதிணையிலும் நிகழும் பலவேறுசெயல்

களை முறைப்படுத்தி, இலக்கண ஆசிரியர்கள் துறைப்பாகுபாடு செய்துள்ளார்கள். எனினும் அப்பாகுபாடுகள் முடிந்த இலக்கணத் தன என்றுகொள்ளுதல் சரியன்று. ஏனெனில், புறநானூற்றிற் கூறப் பெற்றுள்ள செய்யுட்களிற்பல, நச்சினர்க்கினியரால் அவற்றின் உரை யிற் கூறப்பட்டுள்ள துறைகளின் வேருயதுறைகளுக்கு உதாரண மாகக் காட்டப்பெற்றுள்ளன அன்றியும் ஒவ்வொரு துறையும், தன்னுள்ளே உள் துறைகள் பலவற்றை யடக்கியதாகும்.

இக்காரணங்களாலே தொல்காப்பியத்திற்கும், வெண்பாமாலைக் கும் துறைப்பாகுபாட்டில் வேறுபாடுகள் காணப்படுகின்றன.

திணை, துறை இவற்றின்தன்மை யிவ்வாருக, இனி ஆசிரியர் இவற்றிற்கு விரித்துக்கூறும் இலக்கணத்தாலும், அதன் உரையா லும் பண்டைக்காலத்திற் போர்த்தொழில் நடந்தவாறும், பிறவும் ஆராயப்படும்.

---

## பண்டைக்காலத்துப் போர்த்தொழில் முதலியன.

---

ஓரரசன், மற்ருேரரசன்மேல் தனக்குள்ளபகைமையை அவன் நாடுசென்று அங்குள்ளபசுக்களைத் தானேயாவது தன்வீரரைக் கொண்டாவது கவர்ந்துகொண்டு தெரிவிப்பான். இது வெட்சித் திணைக்குக்கூறிய இலக்கணத்தால் தெரியவரும் பொருவது கருதி யக்கால் ஒருவர் ஒருவர்நாட்டுவாழும் அந்தணரும், ஆவும் முதலிய ........கொண்டுவந்து பாதுகாத்தலும்" என்று நச்சினர்க்கினியர் கூறுவதால், அந்தணரையும் பகைநாட்டினின்றும் அகற்றுவர் என் பது தெரியவரும்.

இங்ஙனம் பசுக்கவர்தல் பண்டைக்காலந்தொட்டு வழக்கமா யிருந்ததென்பது, சீவகசிந்தாமணியில் கோவிந்தையாரிலம்பகத்தில் அரசனுடைய பசுக்கள் கவரப்பட்டதும், அவற்றை, சீவகன் மீட்ட தும் கூறியிருத்தலாலும், பாரதத்தில் துரியோதனன், விராடனுடன் போர்தொடங்குங்கால் அவன்பசுக்களைக்கவர்ந்துசென்றது சொல் லப்பட்டிருப்பதாலும், அறியக்கிடக்கின்றது. இதுபோன்ற வழக் கம், இங்கிலாந்து முதலிய மேனுடுகளிலும் 'Cattle lifting' என்

னும் ஆங்கிலப்பேரால் நிகழ்ந்துவந்தது. இதனல் அக்காலத்துப் பசுக்கள் 'திரவ்யமாக'க் கருதப்பட்டுவந்தனவென ஊகித்தற் கிட முண்டாகிறது. திரவ்யசம்பந்தப்பட்ட என்னும் பொருளில்வரும் Pecuniary என்னும் ஆங்கிலச்சொல், ஆடுமாடுகள் என்னும் பொருளுடைய 'Pecus' என்னும் சொல்லினடியாகப்பிறந்துள்ளதும் இதனையே வற்புறுத்தும்.

இங்ஙனம் பகைமைக் கறிகுறியாகத் தாம் கவர்ந்தபசுக்களை மிக்க அன்புடன் தமிழரசர் பாதுகாத்துவந்தனர் என்பதுதோன்ற வெட்சித்திணைச்சூத்திரத்தில் "ஆதந்தோம்பல்" என்று கூறியுள்ளார் தொல்காப்பியர்.

போர்தொடங்குவதற்குமுன் நாளும், புள்ளும், பிறவுமாகிய நிமித்தம் (சகுனம்) பார்த்தே பின்னர் அத்தொழிலின்கண் பிரவேசிப்பர் என்பது,

> "நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமும்
> ................ ..கண்ணிய வருமே"

என இலக்கணஞ்செய்துள்ளமையாற் போதரும்.

இனி வஞ்சித்திணைக்குக்கூறிய, இலக்கணத்தினுற் பெறப்படுவனவற்றைக் கூறுவோம்.

போர்நிகழ்வதற்குக் காரணம் பிறநாடுகவர்தலும் ஆம் என்பது, "எஞ்சாமண்ணசை" என்று சூத்திரத்திற் கூறியதனல் அறியப்படும். அங்ஙனம் "மண்ணசை" யாற் பிறநாட்டினை எதிர்த்தாலும், போரின்கண்ணே தமிழர்கள், * "மடிந்த உள்ளத்தோனையும், மகப்பெறுதோனையும், மயிர்குலைந்தோனையும், அடிபிறக்கிட்டோனையும், பெண்பெயரோனையும் படையிழந்தோனையும், ஒத்தபடை எடாதோனையும், பிறவும் இத்தன்மையுடையோரையும் கொல்லாதுவிடுத்தலும், கூறிப்பொருதலும்" இவைபோல்வன செய்து, வீரத்தோடு கருணையும் பொருந்தியவர்களாயிருந்தனர். இதனைப் புறப்பொருள்வெண்பாமாலையில்,

---

* நச்சினர்க்கினியர் உரை. (புறத்திணையியல் உழிஞைச்சூத்திரத்துக்கு)

" அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக்
கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று "

என்பதாலும் அறியலாகும்.

இன்னும், "பிண்ட மேய பெருஞ்சோற்று நிலையும்" என்ப திலக்கணமாதலால், போர்வீரர்க்கு உணவு மிக அளித்தனர் தமிழ் வேந்தர் என்பது போதரும். இக்காலத்துப் போரின்கண்ணே வீரங்காட்டுபவர்க்குக் கௌரவபட்டம் இராஜாங்கத்தார் அளிப்பது போல அக்காலத்து அரசர்களும், செய்துவந்தனர் என்பது, "சிறப்பாவன: ஏனாதி, காவிதி முதலிய பட்டங்களும்...........முதலியனவும் பெறுதலுமாம்" என நச்சினார்க்கினியர் உரையிற்கூறியிருத்தலாற் கிடைக்கப்பெறும்.

இங்ஙனம் பெருந்தன்மைக்குணம் காட்டிவந்த தமிழ்வீரர்கள் தோற்றொழிந்த பகைவனதுநாட்டினைக் கொள்ளைகொள்ளுதல், தீவாய்ப்படுத்தல், கழுதையாலுழுது வரகுவிளைத்தல் முதலிய தகாத செயல்களும் செய்துவந்திருக்கிறார்கள். இவையெல்லாம், தமதுவீரத் தினைப் பிறர்க்குப்புலப்படுத்தும்வண்ணம் அவர் செய்தனர்போலும். இங்ஙனம் அவர் செய்துவந்தது, "எரிபரந்தெடுத்தல்" "அடுத் தூர்ந்தட்ட கொற்றத்தானும்" என்று தொல்காப்பியத்திற் சூத்திரஞ்செய்துள்ளமையாலும்,

* " பேழ்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய்து........" என்பதனாலும்,

" எண்ணார் பல்லெயில் கழுதையே ருழுவித்
துண்ணா வரகொடு கொள்வித் தின்று " என்றும்,

" எழுதெழின் மாடத் திடனெலா நூறிக்
கழுதையேர் கையொளிர்வேல் கோலா—உழுததற்பின்
வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதற்
கள்விரவு தாரான் கதம் " என்றும்,

புறப்பொருள்வெண்பாமாலையிற் கூறியுள்ளமையாலும்,

கரிகாற்சோழனது போர்த்திறத்தினைவியந்து பட்டினப்பாலையில்

---

* நச்சினார்க்கினியர் உரையிற் கண்டமேற்கோள்.

" அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப்
பெரும்பாழ் செய்தும் அமையான் "

என்று கூறியிருப்பதனாலும், தெற்றென உணரப்படும்.

வஞ்சித்திணைக்குக் கூறிய இலக்கணத்தால் இவை அறியப் பட்டனவாக, இனி உழிஞைக்குக் கூறிய இலக்கணத்தால் உணரற் பாலன யாவை என நோக்குவோம்.

பகைவன்பட்டணத்தின் புறமதிலைத்தாக்குவது உழிஞை எனவே நகர்க்கெல்லாம் மதிலரண் அமைந்திருந்ததென்பது வெளிப் படை. இம்மதில்தானும், மிக்க உரனுடையதாய், எளிதிற் பகைவரால் தாக்கப்படாததாய், அமைக்கப்பட்டிருக்கும் என்பது சூத்திரத்தில் "முழுமுதலரணம்" என்பதனாற் போதரும். இன்னும், இம்மதில் பகைவரையழிக்கவல்ல பல எந்திரங்கள்பொருந்தப்பெற்று, பெரிய தோர் அகழாற்சூழப்பெற்றிருக்கும் என்பது, "அது வஞ்சனைபல வும்வாய்த்துத் தோட்டிமுள் முதலியபதித்த காவற்காடும், அதனுள் ளே இடங்கர்முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்கும் புறஞ்சூழ்ந்து, யவனர் இயற்றிய பலபொறிகளும் ஏனைப்பொறிகளும் பதணமும், மெய்ப்புழைஞாயிலும் ஏனையபிறவும் அமைந்து, எழுவுஞ் சீப்பு முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற்கோபுரமும், பிற எந்திரங் களும்பொருந்த இயற்றப்பட்டதாம்" என நச்சினார்க்கினியர் விரித் துரைத்ததால் உணரப்படும். அன்றியும் ஜீவகசிந்தாமணியில்,

* "ஐம்முகில் தழீஇயசும் பருத நெற்றிய
சேயுயர் மதில்வகை செப்பு கின்றதே"

வேறு

"மாற்றவர்ம றப்படைம லைந்துமதில் பற்றி
னூற்றுவரைக் கொல்லியொடு தூக்கியெறி பொறியும்
தோற்றமுறு பேய்களிறு துற்றபெரும் பாம்புங்
கூற்றமன கழுகுதொடர் குந்தமொடு கோண்மா"

"விற்பொறிகள் வெய்யவிடு குதிரைதொட ரயில்வாள்
கற்பொறிகள் பாவையென மாடமடு செந்தீக்
கொற்புனைசெய் கொள்ளிபெருங் கொக்கெழில்செய் கூகை
நற்றலைக டிருக்கும்வலி நெருக்குமர மிலையே"

---

* ஜீவக சிந்தாமணி, நாமகளிலம்பகம்.

“செம்புருகு வெங்களிக ளுமிழ்வதிரிந் தெங்கும்
வெம்புருகு வட்டுமிழ்வ வெந்நெய்முகந் துமிழ்வ
வம்புமிழ்வ வேலுமிழ்வ கல்லுமிழ்வ வாகித்
தம்புலங்க ளால்யவனர் தாட்படுத்த பொறியே.”

“கரும்பொனியல் பன்றிகத நாகம்விடு சகடம்
குரங்குபொரு தகரினொடு கூர்ந்தரிவ நுண்ணூல்
பரந்தபசும் பொற்கொடிப தாகையொடு கொழிக்கும்
திருந்துமதில் தெவ்வர்தலை பனிப்பத்திருந் தின்றே”

என மிக்க விளக்கமுறக்கூறப்பட்டிருப்பதாலும், பாரதத்தில், இந்திரப்பிரத்தத்து மதில்வருணனையாக,

“சமர்முகப் பொறிகண் மிக்க தடமதிற் குடுமி தோறும்”

என்று கூறியதனுலும்,

இராமாயணத்தில், நகரப்படலத்தில்,

“சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு சக்கரந் தோமர முலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்க லென்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையு முவணத் திறையையு மியங்குங் காலையு மிதமல நினைவார்
மனத்தையு மெறியும் பொறியுள வென்றால் மற்றினி யுணர்த்துவ தெவனோ? ”

எனக் கம்பநாடர் பாடியிருத்தலாலும்,

‘மதிற்குமரி’ என வெண்பாமாலையிற் காணப்படுதலாலும் மதில் எத்துணை உரம் பெற்றிருந்ததென்பது, தெள்ளிதின் உணரற்பாலது.

இத்தகைய எயிலினை எய்துவற்குமுன், மிக்க ஆழமுள்ளதும், முதலைகள் வாழ்வதுமான அகழினை ‘மீதிடுபலகை’யாற் கடப்பர் என்பதையும் அவ்வகழியின்கண்ணும் போர்நிகழும் என்பதையும், அகழினைக் கடந்தபின்னர் ஏணிகொண்டு மதில்மீதேறுவர் என்பதையும் நோக்க, பண்டைத்தமிழர், போர்முறையில் மிக்க பயிற்சியும், திறமையும் வாய்ந்தவரென்பது தோன்றும்.

இவ்வுழிஞைப்போர்க்கு “யானையுங் குதிரையும்.........சிறந்தன அன்மையிற் கொள்ளாராயினர்”என உரையாசிரியர் உரைத்ததனால்,

தமிழர்கள் யானை, குதிரை முதலியவற்றை வேண்டிய இடங்களில் உபயோகித்துவந்தனர் என்பது தெரியவரும். அன்றியும்,

"தானை யானை குதிரை யென்ற
நோனர் உட்கு மூவகை நிலையும்"

எனத் தும்பைத்திணையின் துறைகளை விரித்தவிடத்துத் தொல்காப்பியனாருரைத்த இலக்கணத்தானும் அது போதரும்.

(தொடரும்.)

வே. முத்துஸாமி ஐயன்,
எம். ஏ; எல். டி.

---

ஸ்ரீ

# மாறனலங்காரவரலாறு.*

அலங்காரமென்பது செய்யுளுக்கு அழகுசெய்யும் லக்ஷணங்களைக்கூறும் சாஸ்திரம். இவ்வலங்காரசாஸ்திரத்தை வடமொழியாளர் மிகவும் விரும்பிக்கற்பர். இந்தச் சாஸ்திரத்தைப்பற்றி அக்நிபுராணத்திற் பேசியுள்ளது. வாமநஸூத்ரம், காவ்யாதர்சம், ஸரஸ்வதீகண்டாபரணம், காவ்யப்ரகாசம், அலங்காரஸர்வஸ்வம், ரஸமஞ்சரி, ஸாஹித்யதர்ப்பணம், ப்ரதாபருத்ரீயம், அலங்காரகௌஸ்துபம், சந்திராலோகம், குவலயாநந்தம், சடவைரிவைபவதிவாகரம் (இது நம்மாழ்வார்விஷயமான வடமொழிமாறனலங்காரம்) முதலிய நூற்றுக்கணக்கான வடமொழிநூல்கள் அலங்காரத்தைப்பற்றிச் சொல்பவைகள் தமிழில் முதல்முதல் அணியைப்பற்றித் தெரிவிக்கும் நூல் தொல்காப்பியம். தொல்காப்பியர்கூறுவது உவமை ஒன்றுதான். அவர் அகத்திணையியலில் ஏனையுவமம் உள்ளுறையுவமமிவைகளைவிளக்கி உவமவியலில் உவமத்தை தொழில், பயன், வடிவு, வண்

---

* இவ் வியாஸம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் பன்னிரண்டாவது வருஷோத்ஸவக் கொண்டாட்டத்துக்காகக் கூடிய ஸபையில் 1913ஸு மேமீ 25உ யன்று ம-௱-௱-ஸ்ரீ ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை B.A., B.L. அவர்கள் அக்கிராஸநத்தின்கீழ்த் திருச்சி நாஷனல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ம-௱-௱-ஸ்ரீ A. M. சடகோபராமாநுஜாசாரியரால் படிக்கப்பெற்றது.

ணம் எனப்பிரித்து விரித்தெழுதியிருக்கிறார். தொல்காப்பியர்காலத்து உவமையொன்றே அணியாகக்கருதப்பட்டது. பிற்காலத்தார் அதிலிருந்து பலவணிகள் கற்பித்துக்கொண்டனர். நச்சினார்க்கினியரும் உவமமொன்றனையே அணியாகக்கருதினர். தம்காலத்திற் பல அணிவிகற்பவேறுபாடுகளுடன் வெளிவந்த ஒரு அணி நூலைத் தமது தொல்காப்பியவுரையிற் குறைகூறுகின்றனர். இவர் உவமவிகற்பங்களுக்கு எடுத்துக்காட்டிய உதாரணச்செய்யுள்கள் சில தண்டியலங்காரவுரையில் வேற்றுமையணி, தற்குறிப்பேற்றவணி முதலியவைகளுக்கு உதாரணமாகக் காட்டப்பட்டன. நிரனிறை, சமம் முதலியவற்றை உவமத்தின் விகற்பமாயே கொண்டார், நச்சினார்க்கினியர். இப்படி உவமமே பலவணிகளினுற்பத்திக்கும் காரணமாயிருந்தது என்பதை வடமொழியாளரும் சம்மதிக்கின்றனர். அப்பையதீக்ஷதர் தாமெழுதிய சித்ரமீமாம்ஸை யென்னும் கிரந்தத்தில் இவ்விஷயத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார். அச்சுலோகம் வருமாறு:—

“உபமைகா ஶைலூஷீ ஸம்ப்ராப்தா சித்ரபூமிகாபேதாந் ।
ரஞ்ஜயதி காவ்யரங்கே ந்ருத்யந்தீ தத்விதாம் சேத꞉ ॥”

இதன் மொழிபெயர்ப்பு:—

“உவமை யென்னுந் தவலருங் கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய வரங்கிற் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவ ரிதய
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்குமே.”

இவ்வணியிலக்கணமானது தொல்காப்பியத்திற் பொருளதிகாரத்திலமைக்கப்பட்டிருக்கிறது. இக்காலத்தில் தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள் என மூன்றுபாகமாகத்தான் பிரிக்கப்பட்டிருந்தது. “எழுத்துஞ் சொல்லும் பொருளு நாடிச், செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு, முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி” என்னும் தொல்காப்பியப் பனம்பாரர் பாயிரத்தால் தொல்காப்பியத்திற்கு முதனூலும் இப்பாகுபாடே கொண்டிருந்ததெனத்தெரிகிறது. இறை

யனாகப்பொருளுரையை யுற்றுநோக்கும்போது 'யாப்பு' தனியுறுப்பாகக்கருதப்பட்டு, தமிழிலக்கணம் நாலுபிரிவாகக்கருதப்பட்டதென்று தோன்றுகிறது. அதன்பின்புதான் 'அணி' தனியுறுப்பாகக் கொள்ளப்பட்டு, தமிழிலக்கணம், எழுத்து சொல் பொருள் யாப்பு அணி யென ஐந்துபிரிவுடையதாக வகுக்கப்பட்டது. இவ்வைந்திலக்கணமும் ஒருங்கே கூறும்நூல்கள் வீரசோழியம், இலக்கணவிளக்கம், தொன்னூல்விளக்கம், முத்துவீரியம் என்பனவாம். இவை ஒவ்வொன்றிலும் அந்தந்தக் கிரமத்தில் அணியிலக்கணம் கூறப்பட்டுள்ளது. வீரசோழியவணிகளுக்கு முதனூல் ஆசார்யதண்டியியற்றிய வடமொழிக்காவ்யாதர்சம். இலக்கணவிளக்கமுதலிய மற்ற இலக்கணங்களின் அணியிலக்கணங்களுக்கு முதனூல், தமிழ்த் தண்டியலங்காரமும் அதன் உரைகளுமாம்.

தனியாய் அணியிலக்கணமாத்திரம் கூறும்நூல்கள் அணியியல் அல்லது அணிநூல், தண்டியலங்காரம், மாறனலங்காரம் என்பன. இவற்றுள் அணிநூலைப்பற்றி விசாரிப்போம். யாப்பருங்கலவிருத்தியில் "உருவகமாதி விரவியலீறுவரும்......அலங்காரமென்பது அணியியலாதலின்" என்று கூறியிருப்பது தண்டியலங்காரவணிமுறைவைப்புக்குப் பொருத்தமில்லாததால் வேறு அணிநூலைக் குறித்ததாக வேண்டும். நேமிநாதவிருத்தியில் "புனையுறு செய்யுட் பொருளையொருவழி, வினைநின்று விளக்கினது விளக்கெனப் படுமே.முதலிடைகடையென மூவகை யான. என்பன அணியியல் ஆகலின்" என்றுள்ளது. இதில் இரண்டுசூத்திரத்தாற்குறித்த விளக்கணியைத் தமிழ்த்தண்டியலங்காரத்தில் தீபகமென்றபெயரால் ஒரேசூத்திரத்திற் கூறியிருக்கிறது. ஆதலால் இவ்விருத்திகாரர்குறித்த அணியியல் என்னும் நூல் தண்டியலங்காரத்தினும் வேறாகவேண்டும். நச்சினார்க்கினியர் தொல்காப்பியவுரையில் "இனி இவ்வோத்தினிற்கூறுகின்ற உவமங்களுட் சிலவற்றையும் சொல்லதிகாரத்தினுள்ளும் செய்யுளியலுள்ளும் சொல்லுகின்ற சிலபொருள்களையும்வாங்கிக் கொண்டு மற்றவை செய்யுட்கண்ணே அணியாமென இக்காலத்தாசிரியர் நூல்செய்தாருமுளர்" எனக்கூறி அவ்வணிநூலுக்குத் தமது சம்மதமின்மையையும் தெரிவிக்கிறார். இம்மேல்வாக்கியத்திலுள்ள விஷயம் வடமொழியிலிருந்துபெயர்த்த தண்டியலங்காரத்தைக் குறிக்

காது வேறு அணிநூலையே குறித்ததாகவேண்டும். பரிமேலழகர் பக்ஷாந்தரமாய்க் கூறும் நுவலாநுவற்சி, ஒட்டு என்னும் பரியாயப் பெயர்கள் முறையே வீரசோழியத்திலும் தண்டியலங்காரத்திலும் காணப்பட்டபோதிலும் அவர் தன்மதமாகக்கூறிய பிறிதுமொழிதல் என்பது அணிநூலுட்கண்டதாகவிருந்தாலுமிருக்கலாம். இப்படியே வீரசோழியம், தண்டியலங்காரங்களுட் காணப்படாத சிலவணிகளின் பரியாயப்பெயர் இவருரையிற் காணப்படுகின்றன. இன்னோரன்னகாரணங்களால் தண்டியலங்காரத்தினும் வேறாய அணிநூல் அல்லது அணியியலென்ற நூலொன்று இருந்து விழுந்திருக்க வேண்டுமென்றேற்படுகிறது. அது ஜைனர்செய்ததாயிருக்குமென்று தோன்றுகிறது.

ஆனால் தண்டியலங்காரத்திற்கே அணியியலென்னும் பெயர் இருந்திருக்கிறது. அணியியலென்றபெயருடன் அடியார்க்குநல்லாரும், (மா-அ-சூத் 25 ன் கீழ்) மாறனலங்காரவுரையாசிரியரும் எடுத்துக்காட்டியிருக்கிற முறையே சூத்திரம் இரண்டு மொன்றும் தண்டியலங்காரத்துட் காணப்படுகின்றன. இத் தண்டியலங்காரச் சூத்திரங்கள் அணியியலென்னும் நூலிலிருந்து முன்னோர்மொழியாக வெடுத்துத் தண்டியலங்காரத்துட் சேர்க்கப்பட்டிருக்கலாமென்று கருதுவதற்கு இரண்டொரு பிரபலவாதாரங்கள் தடையாகின்றன. ஆதலால் அணியியல் என்னும்பெயர் தண்டியலங்காரத்துக்குமுண்டு.

தண்டியலங்காரம், பூர்வபதவிசேஷ்ய கர்மதாரயஸமாஸத்திற்கு வியாகரணநூல்களில் எடுத்துக்காட்டாகக்காட்டப்படும் 'ஆசார்ய தண்டி' என்னும் சொற்றொடர்க்குரியவராய் ஆசார்யபதத்தையே தமக்கு நிரூபகமாகவுடையவரான தண்டி என்பவராலியற்றப்பட்ட காவ்யாதர்சமென்னும் வடநூன்மொழிபெயர்ப்பு. இது முதனூற் பெயர்பெற்றது. பிரயோகவிவேகநூலாசிரியரும் மாறனலங்காரவுரையாசிரியரும் தமிழ்த்தண்டியலங்காரநூலாசிரியரைக் குறிக்கும்போதெல்லாம் தண்டி அல்லது தண்டியாசிரியரென்றே குறிக்கிறார்கள். ஆயினும் அவர்கள் இப்படிச்சொன்னது உபசாரமான புகழ்ப்பெயராயிருந்தாலுமிருக்கலாம் என்றுநினைக்கவு மிடமிருக்கிறது. "வம்பவிழ் தெரியலம்பிகாபதி, மேவருந்தவத்தினிற்பயந்த, தாவருஞ்சீர்த்தித்

தண்டியென்பவனே" என்பதைக் கடைசியாகவுடைய ஒரு தண்டியலங்காரச்சிறப்புப்பாயிரச்செய்யுள் காணப்படுகிறது. இது பழைய ஏடுகளிற் காணக்கிடையாதநூதனச்செய்யுள் என்பர். இதன்படி தமிழாசிரியர்பெயரும் தண்டி என்றேற்படுகிறது. அம்பிகாபதியின் மகன் தண்டியென்றதனால் தண்டி என்னும் பெயர் கம்பன் என்பதன் மொழிபெயர்ப்பாகக் கொள்ளவேண்டும். இவ் விஷயம் ஆராயத் தக்கது. அடியார்க்குநல்லார் பரிமேலழகர்காலத்தில் தண்டியலங்காரம் வழங்கியதாகத் தெரிகிறது. இது 12-ம் நூற்றுண்டதாயிருக்க வேண்டுமென்று நினைக்கப்படுகிறது.

இனி 'மாறனலங்காரம்' என்பதைப்பற்றி விசாரிப்போம். மாறன் என்பது பாண்டியரைக்குறிக்கிற பழம் பொதுப்பெயர்களுள் ஒன்று, இங்கு ஆழ்வார்களுட்சிறந்த நம்மாழ்வாரைக் குறிக்கிறது. இவர், பாண்டியசார்வபௌமத்துக்குட்பட்ட தாம்ரபர்ணிமுகத்துவார ப்ரதேசங்களாகிய திருவழுதிவளநாட்டுக்குரிய சிற்றரசர். வேளாளர். (தலபுராணத்தில் 'இவர் க்ஷத்ரியர்'என்றிருக்கிறது) மாறன், காரிமாறன், சடகோபன், திருவழுதிவளநாடன், பொருநற் (தாம்ரபர்ணி) சேர்ப்பன், பொருநற்சங்கணித்துறைவன், மகிழ்மாலைமார்பினன் முதலானபெயர்கள் இயல்பாயும் காரணம்பற்றியும் இவருக்கு வழங்கி வந்ததென்று திருவாய்மொழியால் தெரிகிறது. இவர்பிறந்தபொழுதே துடங்கித் திருமாலினிடத்து விசேஷபக்தியுடையராய் உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங் கண்ணனேயென்றுத்பவசித்துத்ததேகத்யானபராயிருந்து நான்குவேதங்களையும் திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு தமிழ்ப்பிரபந்தங்களாக லோகோஜ்ஜ்வநார்த்தமாக வெளியிட்டருளினவர். இவரை அக்காலத்திலிருந்த மதுரகவி முதலான ப்ராஹ்மணசிரேஷ்டர்களும் பிற்காலத்துவந்த நாதமுநி, யாமுநாசார்யர், ராமாநுஜர் முதலான ப்ராஹ்மணசிரேஷ்டர்களும் ஆசார்யராகமதித்து நேரிலும் விக்ரகரூபமாயெழுந்தருளப்பண்ணியும் ஆழ்வார்களுட் டலைமையானவராய்க்கொண்டு பூசித்துவந்தனர். வடநாட்டிலும் துளசிதாசர் முதலானோரால் பாராட்டிப் பூசிக்கப்பட்டார் இவ்வாழ்வாரெனின், இவரைப்பற்றி நாம் அதிகமாயெழுதவேண்டியதில்லை. இந் நூலாசிரியர் இவ் வாழ்வாரிடத்து ஏழாட்காலும் பழிப்

பிலாத்தொண்டுபூண்டு மறந்தும்புறந்தொழாதவமிசத்துட்பிறந்த வைணவமதாபிமானமுள்ளவரானபடியினாலே, தண்டியலங்கார முதலியநூல்கள் அரசர்முதலியவர்களைப்பற்றிக் கூறி லௌகிக திருஷ்டாந்தங்களுடையனவாயிருப்பதுகொண்டு, தாமிந்த அலங்காரநூலையியற்றி இதை ஆழ்வார்க்கு சமர்ப்பித்து உதாரணங்களை ஆழ்வார் விஷயமாகவும், திவ்யதேசத்து எம்பெருமான்கள்விஷயமாகவும் வைஷ்ணவபரமாய்ச்செய்து சேர்த்தருளி 'காரிதந்தருள் கலைக்கடலியற் பெயர்புனைந்து' (மா-அலங். பா) 'திருமகிழ்ப்பரமதேசிகன் பெயரால்' (மா-அகப்) இந்நூலை வெளியிட்டருளினர். ஆகவே மகிழ்மாறன் அல்லது நம்மாழ்வாரை நாயகனாய்க்கொண்ட அலங்காரசாஸ்திரமாகுமிது.

வடமொழியிலும் நம்மாழ்வார்விஷயமான ஓர் அலங்காரசாஸ்திரம் 'சடவைரிவைபவதிவாகரம்' என்றபெயருடன் குவலயாநந்தத்தை யநுசரித்ததாய் விளங்குகிறது. கூடியசீக்கிரம் அச்சில்வரும். இத் தமிழணிநூல் பொதுப்பாயிர இலக்கணத்தை முதலிற்பெற்று, அதுதவிர பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல் என நான்குபகுப்புடையதாயிருக்கிறது. மேற்கூறிய பகுப்புகள் ஒவ்வொன்றிலும் முறையே 71, 21, 165, 54, 28-சூத்திரங்களடங்கியிருக்கின்றன. மொத்தசூத்திரம் 339. சில பிரதிகளிற் காணப்படும் பின்வரும் தொகைச்செய்யுளை நோக்குக.

* "பதிகம் பொதுவெழுபத் தொன்றிரு பத்தொன்
றதிகபொரு ளூற்றறுபத் தைந்தா—முதுசொல்
லணியியலைம் பத்துநா லாதரவா மெச்சங்
கணியிருபத் தெட்டாகுங் காண்"

இந்நூற் பொதுப்பாயிரத்துள் 'வெள்ளையி னகவலின் விளம்பலு மரபே' என்றபடி இந் நூலாசிரியர் பொதுவியலைமாத்திரம் வெண்பாவாலமைத்திருக்கிறார். அகவலின் வெள்ளையி னுரைகவென்று முந்துநூல்விதித்தமைபுளவாகவும், விதியாதுநீக்கிய கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தமென்னும் பாவினத்தாற் பின் பிலக்கணநூல்செய்

* இவ் விடுகவியிற்காட்டிய சூத்திரத்தொகை பிரதிபேதங்களில் வேறுபட்டுள்ளன.

தோர் இலக்கணங்களைக் கூறியதுபோலவும், சிலப்பதிகாரத்திற் சில காதைகள் பாவினங்களாலும் வந்தமைபோலவும் இவரும் முதலியலை வெண்பாவாற் கூறினர். மற்றவை நூற்பா.

தண்டியலங்காரத்தில் மேற்கூறிய நான்கியலுக்கும் சேர்ந்த சூத்திரங்கள் 125 தான். தண்டியலங்கார உதாரணச்செய்யுள்களினும் மாறனலங்கார உதாரணச்செய்யுள்கள் மிகவு மதிகம். ஆகவே தண்டியலங்காரத்தினும் மாறனலங்காரம் மிக்க விரிவுடையது. தண்டியலங்காரம் காவ்யாதர்சத்தைப்பின்பற்றின மொழிபெயர்ப்பு. மாறனலங்காரம்,தொல்காப்பிய முதலியவற்றின் கருத்துக்களையும்,"முதுமொழித்தண்டி முதனூலணியையும், புதுமொழிப்புலவர் புணர்த்திய லணியையும், தனதுநன் னுணர்வாற் றருபலவணியையு மனதுறத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும்" சதுர்பெறவிரண்டிடங் தழுவிய சார்பெனலாய் விளங்குகிறது. ஆயினும் இது தண்டியலங்காரத்தின் வழிநூலாகும். இதனுரையில் வடமொழித் தண்டியாசிரியரை யபூர்வமா யோரோரிடத்தும் தமிழ்த்தண்டியாசிரியரை அடிக்கடி பலவிடங்களினும் சுட்டியிருக்கிறது. இந்நூலார் சிலவிடங்களிற் சில நியாயம்பற்றிச் சிறிதுவேறுபடுவதுமுண்டு. எடுத்துரைப்பிற் பெருகுமாதலால் 84-ம் சூத்திரவுரைமுதலியவிடங்களிற் கண்டுகொள்க.

தண்டியலங்காரத்துட்கூறிய பொருளணிகளின்றொகை 35. இந் நூலுட்கூறிய அணிகளின்றொகை 64. இந்நூலார், தண்டியாசிரியர் கூறிய நுட்பமென்னு மலங்காரம் பரிகரத்துளடங்குதலா லதைக் குறைத்தார். சொல்லிலக்கணத்திலும் பொருளியலிலும் புறத்திணையியலினும் கூறியுள்ளவும் மற்ற அணிநூல்களுட் கூறப்படாதனவுமாகிய பூட்டுவில், இறைச்சிப்பொருள்கோள், பொருண்மொழியென்னும் மூன்றையும் செய்யுட்கணிசெய்தலால் அணியுட்சேர்த்து மிகுத்தார். வகைமுதலடுக்கு, இணையெதுகை, உபாயம், உறுசுவை, புகழ்வதினிகழ்தலென்னும் ஐந்தும் அழகெய்துவதாயிருத்தலின், இலக்கியங்கண்டதற் கிலக்கணமியம்புதலா யிவற்றையு மிகுத்தார். தண்டியாசிரியர் உவமவிரியுட்சேர்த்தும் ஏனையாசிரியர் வேறுவேறாகப் புணர்த்துமிருக்கிற ஐயம், தெரிதருதேற்றம், பொதுநீங்குவமை என்பவற்றுள் ஐயத்தையும் தெரிதருதேற்றத்தையும் ஏனையாசிரியர்

மதமுடன்பட்டுப் பிறிதோரணியாக்கியும், பொதுநீங்குவமையைத் தண்டியாசிரியர்மதம்பற்றி யுவமையுட்புணர்த்தும், தன்கோட்கூற லென்னு முத்தியானும், தன்குறிபிடுதலென்னு முத்தியானும், பின்னேன்வேண்டும் விகற்பங்கூறிமுடிக்கும் வழிநூலிலக்கணம்பற்றியும் இவ்வாறெல்லாம் முடித்தார். இவ்வாறு சூக்குமமாய்க்காணப்படும் வேறுபாடுகளுக்கெல்லாம் மேற்கண்டபடியே கொள்ளவேண்டும்.

தண்டியாசிரியர் ஒரேசூத்திரத்திற் பன்னிரண்டுசித்திரகவி களுக்குப் பெயர்மாத்திரம் கூறிச்செல்ல, இந்நூலார் முப்பத்திரண்டு சித்திரகவிகள் கூறி அவற்றுக்குத் தனித்தனி இலக்கணமுங் கூறிச் செல்கிறார். 'மாதவனே' 'சேடு' என்றுதொடங்குகிற சக்கரபந்தச் செய்யுள்களின்மத்தியில் 'தேன்குருகூர்,' 'திருமலை,' 'வடமலையப்பன்,' 'சீராமராமசயம்,' 'தருமமேகைதரும்' என்பவைகளும், இரதபந்தநடுவில் 'நாராயணாயநம' வென்பதும், காதைகரப்பில் 'கோல்லான் புலாலை மறுத்தானை' என்னுங்குறளும் அழகாயமைக்கப்பட்டுள்ளன.

தண்டியலங்காரவாசிரியர் தாமே மூலமும் உதாரணமுங் காட்டினாற் போல, இந்நூலாசிரியர் தாமே உதாரணச்செய்யுள்களும் செய்தமைத் தாரென்று தோன்றுகிறது. "இந்நூலாசிரியர் இவ்வுதாரணம் யாண் டுப்பெற்றாரோவெனின்" என்று உரையில்வருவதுகொண்டும் பிற ஆதாரம்கொண்டு மிவ்வாறு ஊகிக்கவேண்டியிருக்கிறது. இந்நூ லிற் பரிபாடல், கலித்தொகை, பத்துப்பாட்டு, புறநானூறு, குறுந் தொகை, அகநானூறு, குறள், நாலடி, சிந்தாமணி, சிலப்பதிகாரம், வெண்பாமாலை, யாப்பருங்கலம், திருவாய்மொழி முதலிய பழைய நூல்களெல்லாம் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்நூலாசிரியர் செய்தருளிய திருக்குருகாமான்மியம், நம்பெருமாள்மும்மணிக்கோவை, மாறன்கிளவிமணிமாலை, இந்நூலுரையாசிரியர் செய்தருளியதாக நினைக்கப்படுகிற மாறன் பாப்பாவினம்' முதலிய வைணவ நூல்களும் அடிக்கடி மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கின்றன. திருப்பதிக்கலம்பகம் என்னும் நூலிலிருந்தும் மேற்கோள்காட்டப் பட்டிருக்கிறது. அந்நூலைப்பற்றி ஒன்றும் தெரியவில்லை. மற்றைய உதாரணச்செய்யுள்களெல்லாம் நம்மாழ்வார்விஷயமாகவும் திவ்ய தேசத்து எம்பெருமான்கள்விஷயமாகவும் வெண்பாமுதலிய பாப்பா

வினங்களில் பரமதநிரஸநக்கொள்கையுடன் வைஷ்ணவபரமாய் அநேகமா யகப்பொருட்டுறைகளமையப்பெற்றதாய் நூலாசிரியராற் செய்யப்பெற்றுச் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வுதாரணங்களெல்லாம் கற்பனைக்களஞ்சியமாய்ச் சொற்சுவை பொருட்சுவை நிரம்பி அழகாயிருக்கின்றன. ஒவ்வோருதாரணச்செய்யுள்களுக்கும் திணையும் துறையும் கூறப்பட்டிருக்கின்றன. சில உதாரணங்களுக்குப் பொழிப்புரையும், சில உதாரணங்களுக்குக் குறிப்புரையும் கூறப்பட்டுள்ளன. நன்னூலின் ஆரம்பத்துட் கூறியிருப்பதுபோல இந்நூலினும் ஆரம்பத்திற் பொதுப்பாயிரத்திலக்கணம் மிகவிரிவாயும் அழகாயும் கூறப்பட்டிருக்கிறது.

இத் தமிழணிநூலின் பொருளடக்கத்தையும் பெருமையையும் பின்வரும் நூற்பாவானும் வெண்பாவானும் ஒருவாறறிந்துகொள்க.

"ஆறெனத் தொகைவகை யினிவ்விரித் தவற்றைத்
தேறமெய் பெறுநான் கெனத்தெரி செய்யுளும்
பாகமோர் மூன்றும் பயில்குணம் பத்து
மாகவெண் ணான்கிரட் டியபொரு ளணியு
மடிமொழி யெழுத்தி னடுக்கின வாக
முடிவுற வகுத்த மூவகை மடக்கு
மூவினப் பாடன் முதலா முறைமையின்
மேவின விருபா னறன்மே லாறென
விழுமிய மிறைக்கவி விரித்தபின் னெஞ்சிய
வழுவழு வமைதியு மிவையென வகுத்து
மொழிந்தவைம் மூன்றுடன் முற்று
தொழிந்தவுங் கோட லொள்ளியோர் கடனே"

(இச்சூத்திரம் உரைப்பிரதிகளுட் காணப்படவில்லை)

"வாய்ந்த திருப்பதிநூற் றெட்டினையும் வாழ்த்தியே
யாய்ந்ததமிழ் மாற னணியெனப்பேர்—தோய்ந்துளதாற்
காண்டகுசிர் மற்றோ ரணியுங் கவின்புணர்க்க
வேண்டுமோ வீங்கிதற்கு மேல்"

சுமார் நூறுவருஷங்களுக்குமுன் 'கல்நல் மெக்கன்ஸி' துரையவர்களால் மிக்க திரவியச்செலவுசெய்து சேர்க்கப்பெற்று இப்போது

கவர்ண்மெண்டாரிடமிருக்கும் 'மதராஸ் ஓரியண்டல் லைப்ரெரி'யில், இந்நூலின் காகிதக்கையெழுத்துப்பிரதி யொன்றிருக்கிறது சில பெரியோர்களுக்குத் தெரிந்தவிஷயம். கிரந்தமந்தணகூடம் (Tamil Museum) என்ற பெயர்வைத்துக்கொண்டு அநேக சாஸ்திரங்களை வெளியிடப்போவதாய் முன்னுக்குவந்த S. சாமுவேல்பிள்ளை என்பவர், சுமார் 55 வருஷத்துக்குமுன், தாமச்சிட்ட 'தொல்காப்பிய நன்னூல்ஜககண்ட்ய' புஸ்தகத்தில் இந்நூலைப்பற்றிப்பிரஸ்தாபித்துள்ளார். மகா-ா-ா-ஸ்ரீ சூரியநாராயண சாஸ்திரியாரவர்களும், மகா-ா-ா-ஸ்ரீ செல்வக்கேசவராயமுதலியாரவர்களும் தாங்களியற்றிய தமிழ்ப் பாஷைவிஷயமான நூல்களில் இந்நூலைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். மகா-ா-ா-ஸ்ரீ குமாரசுவாமிப்பிள்ளையவர்கள் பரிமேலழகர் எடுத்தாண்ட சிலவணிகளின்பெயர்கள் இந்நூலுட் காணப்படும்போலுமென்று கருதினார்கள். சென்னையில்வசித்த வைணவவித்வான்களாகிய ம-ா-ா-ஸ்ரீ இராஜகோபாலபிள்ளையவர்கள் முதலியோர் இந்நூலை அச்சிடமநோரதித்துப் பொருண்முட்டுப்பாட்டால் நின்றுவிட்டனர். முதன்முதல் வெளியான செந்தமிழ்ச்சஞ்சிகையினின்று, காலஞ்சென்ற ஸ்ரீமாந்-பாண்டித்துரைத்தேவரவர்களும், இப்போது வேறு உத்தியோகத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உ வே. ரா. இராகவையங்காரவர்களும் இந்நூலை அச்சிடுவதைச் சங்கத்தின் முதனோக்கங்களுளொன்றாகக் கொண்டிருந்தனரென்பது தெரிகிறது. எக்காரணங்களாலோ அவர்கள் எண்ணம் நிறைவேறவில்லை. இவ்வரிய நூலைத் தமிழகத்திற் குபகரிக்கமுன்னெழுந்த தற்போதைய பிரசிடெண்டவர்களுக்கும் பத்திராதிபரவர்களுக்கும் தமிழபிமானிகள் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

## நூலாசிரியர்.

பெயர். இவ் வரியபெரியநூலை இயற்றியவர் 'திருக்குருகைப் பெருமாள்கவிராயர்.' திருக்குருகைப்பெருமாள் என்றால் திருக்குருகை யென்னும் ஆழ்வார்திருநகரிக்குத் தலைவரான நம்மாழ்வார் என்று பொருள். "திருக்குருகைப்பெருமாள்தன் திருவடிகள் வாழியே" என்பது அஷ்டகஜம் அப்பிள்ளை அருளிச்செய்த நம்மாழ்வார்விஷயமான வாழித்திருநாமம். இவருக்குச் 'சடையன்' என்னும் இயற்பெயருமுண்டு. 'சடகோபன்' என்பது சடையன் எனத் திரிந்தது.

தகப்பனர். இவருடைய தகப்பனர்பெயரும் 'திருக்குருகைப் பெருமாள்கவிராயர்' என்பதுதான்.

ஜாதி வேளாளர். 'சிரகத்தார் வணிகன்' என்று பாயிரத்தி லிருப்பதுகொண்டு எண்ணெய்விற்கும் வாணியர்வகுப்பைச் சேர்ந்த வரோவென்று சிலர் மயங்குகின்றனர். ஆழ்வார்திருநகரிக்கோயில் சத்தாவரண உத்ஸவங்களிற் படிக்கவேண்டிய 'திருப்பணிமாலே'படிப் பவருக்கு ஏற்பட்ட சுதந்தரங்களைத்தெரிவிக்கும் கோயிற்கணக்கில் திருக்குருகைப்பெருமாள்கவிராயர் என்றிருக்கிறது. அந்தச்சுதந் தரங்களை இப்போது வத்தாயிருப்பு ஆழ்வாரப்பபிள்ளை என்பவர் பெற்றுவருகிறதுகொண்டு இந் நூலாசிரியர் இவரின் முன்னோரா யிருக்கலாமென்று சிலர் நினைக்கின்றனர். ஆழ்வாரப்பபிள்ளையின் பந்துவாகிய அமிருதகவிராயரின் வம்சத்தில் 'திருக்குருகைப்பெரு மாள்கவிராயர்கள்' சிலரிருந்திருக்கின்றனர். மதராஸ் லைப்ரரியி லுள்ள திருவரங்கத்தாதியின் பழையவுரையெழுதிவைத்தவர் திருக் குருகைப்பெருமாள்கவிராயர்.இவர் இந்நூலாசிரியரல்லர்.இவர்'மாறன் கோவை' அருளிச்செய்த வேங்கடத்துறைவான்கவிராயர்வம்சத்தவ ராயிருக்கவேண்டும். இப்பெயரினர் 'O.K.S.' என்ற நவீனக்குறியால் வழங்கப்படுகிற திருநெல்வேலிஜில்லா வைணவவேளாளவகுப்பைச் சேர்ந்தவரென்று தெரிகிறது.

ஊர். திருக்குருகூர் என்னும் ஆழ்வார்திருநகரி. இவற்றிற் குப் பிரமாணம் :-

"பெருநிலம் புகழ்திருக் குருகைப் பெருமா
ளருள்குரு கூர்வரு மனகன் செழுந்தேன்
மருக்கமழ் சிரகத் தார்வணி கன்புகழ்த்
திருக்குருகைப்பெருமாள்கவிராயன்
அருட்குணத் துடன்வளர் சடையன்
பொருட்டொடர் நவம்புணர் புலமை யோனே"

(மாறனலங்காரப் பாயிரம்)

"குருகைபம் பதித்திருக் குருகைப் பெருமாள்
பொருவில்பே ரன்புடன் புரந்தருள் புதல்வன்
மருக்கமழ் சிரகத் தார்வணி கேசன்

திருக்குருகைப்பெருமாள்கவிராசன்
அருட்குணத் தவர்புகழ் சடையன்
பொருட்டொடர் நவம்புணர் புலமை யோனே”
(மாறனகப்பொருட்பாயிரம்)

“இருக்குமுதற் பனுவலினு லியற்றமிழ்தேர் நாவீற
னென்னு மேன்மை
யருட்புயலைப் புகழ்புலமைத் திருக்குருகைப் பெருமாள்பே
ரன்பு கூருந்
தருக்குலவும் பொழிற்குருகா புரிவணிகன் சடையனிதைத்
தமிழாற் சாற்றித்
திருக்குருகைப் பெருமாள்வண் கவிராசனெனப் புனைபேர்
சிறந்த தொன்றே”. (திருக்குருகாமான்மியப்பதிகம்)

முதலியன.

மதம். ‘விஶேஷாச்சூத்ராஜா யத்ர விஷ்ணுபக்தி பராயணா’ (எந்த இடத்தில் விசேஷமாக சூத்திரர்கள் விஷ்ணுபக்திபராயணர்களாயிருக்கிறார்களோ) என்று திவ்யசூரிசரிதத்திற் றிருக்குருகூர் விஷயமாய்க்கூறியபடி, இவர் மறந்தும் புறந்தொழாத வைஷ்ணவர். மாறனையன்றி வழுத்தாதவர். இவர், ‘மணவாளமாமுநி’ முதலிய தென்கலை ஆசார்யசிரேஷ்டர்களை அலங்காரநூலின் மத்தியில் வணங்கியிருப்பதாலும், ஸ்ரீனிவாசஜீயர் என்னும் தென்கலை ஆசார்யபுருஷரது சிஷ்யராதலாலும், தென்கலைவகுப்பைச்சேர்ந்தவர்.

ஞாநாசிரியர். இந் நூலாசிரியருக்கு பஞ்சஸம்ஸ்காரமென்னும் தீக்ஷைமுதலிய செய்துவைத்த ஞாநாசிரியர் ‘ஸ்ரீநிவாஸஜீயர்’ என்பது, ‘சிற்குணச்சீநிவாதனின்னருளா, னற்பொருண்மூன்றையும்நலனுறவுணர்வோன்’ என்னும் மாறனலங்காரப்பாயிரத்தாலும் ‘சிற்குணத்திருமலைச்சீநிவாதன், பொற்புடைத்திருவடிபோற்றிய புனிதன்’ என்னும் மாறனகப்பொருட்பாயிரத்தாலும் தெரிகிறது. அன்றியும் மாறனலங்காரத்துள்ளே இவ் வாசிரியரைச் சிலவிடங்களில் வாழ்த்தியிருக்கிறார். அச்செய்யுள்கள் வருமாறு:—

“முத்திக் கவனே முதற்கா ரணனென்றும்
பத்தி விடாதே பயிலென்றுஞ்—சத்தியமாய்ச்

செல்வத் திருப்பதிவாழ் சீநிவா தன்பகர்ந்த
சொல்வித் தகமே துணிந்து."

(காபாலிகாந்தியகுளகம். குரவன்வாழ்த்து)

"முப்புரிநூன் மார்பினன் முக்கோல்கைக் கொண்டுளான்
பொய்ப்புலனை வென்ற பொறையுடையான்—மெய்ப்பொருளைச்
சேவிக்கு நன்னுணர்வான் சீநிவா தன்றமியே
னுவிக் கருள்புரிந்தாள் வான்."

(திணை : வாகை. துறை : தாபதவாகை)

இவ்வாசிரியர், ஸ்ரீ மணவாளமாமுநியின் ஆசிரியர் திருவாய் மொழிப்பிள்ளையால் ஸ்தாபிக்கப்பெற்ற திருநகரி உடையவர் (ராமா நுஜர்) ஸந்நிதி எம்பெருமானர் ஜீயர்மடாதீந பரம்பரையில் 8 (?) வது ஸ்வாமியாக வீற்றிருந்தவர். திருப்பதிமடத்திலிருந் தெழுந்தருளி யவர். (மேற்குறித்த பிரமாணங்களைநோக்குக) இவர் திருப்பதியி லிருந்தெழுந்தருளும்போது கொண்டுவந்த ஸ்ரீநிவாஸன்படத்திற்கு நாளிதுவரை நித்தியபூஜைபும் உத்ஸவமும் நடந்துவருகிறது. இச் சியர், தாம்வீற்றிருந்த மடத்தைச்சார்ந்த உடையவர் ஸந்நிதியை ஜீர்ணோத்தாரணம் செய்தாரென்பது பின்வரும் ஆழ்வார்திருநகரித் திருப்பணிமாலைச்செய்யுள் தெரிவிக்கிறது.

"இவர்ந்த பூது ரேதிராசன் கோயிலை
யுவந்தனைத் தழகுங்கண் டுலகி னோங்கினன்
சிவந்தபங் கயமுகன் சீனி வாசமா
தவன்றிரி கோற்கோன்மா தவர்கி ரீடமே."

மதராஸ் லைப்ரரிக்காட்லாக்கில் இவரை ஸ்ரீநிவாஸாசார்யர் என்றெழுதியிருக்கிறது. இச் சியர்சுவாமி, உபயவேதாந்தப்ரவர்த் தகராய் திக்குவிஜயம்செய்து வாக்மியாயிருந்தாரென்று சொல்லப் படுகிறது.

இந் நூலாசிரியர்செய்த வேறுநூல்கள்:—1. மாறனகப்பொருளும அதன் உதாரணம் நூற்றெட்டுத்திருப்பதிக்கோவையும். 2. திருக் குருகாமான்மியம். 3. நம்பெருமாள்மும்மணிக்கோவை. 4. மாறன் கிளவிமணிமாலை முதலியன. இவற்றில் முன்னையதைத்தவிர மற்

றையநூல்களெல்லாம் மாறனலங்காரத்தில் உதாரணமாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

காலம்:—இந்நூலால் இவர்காலம் இன்னதென்று தெரியாமற் போனபோதிலும், இவர்செய்த மற்றொருநூலாகிய திருக்குருகா மான்மியம் அரங்கேற்றியகாலம் அதிற் குறிக்கப்பட்டிருப்பதால் அதிலிருந்து இவர்கால மின்னதென்றேற்படுகிறது. அச்செய்யுள் வருமாறு:—

"அறந்திகழாண் டவையெழுநூற் றிருபான் மூன்றி
லணிகிளர்கார்த் திகைமாத மெட்டில் வாழ்வு
சிறந்திடுதிங் களினுளுத் தாத்தி லேகா
தெசியின்மக ரமுகூர்த்தந் திருந்த முற்றத்
துறந்தவரெண் மகிழ்மாறர் திருமுன் னுதிச்
சுருதியுடன் மிருதியுஞ்சொற் றமிழின் வாய்மை
பிறந்தபெருங் காப்பியமுந் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுட னரங்கேற்றப் பெற்ற தன்றே"

இதிற் குறிப்பிட்டுள்ள வருஷம் கொல்லம் ஆண்டு. கொல்லமாண்டு 723 வது எனவெ, இப்போது 1088 நடப்பதால், 365 வருஷங்களுக்கு முன் இவர் இருந்தாரென்றேற்படுகிறது. குருகாமான்மியத்திலிருந்து இந்நூலுக்கு உதாரணமெடுத்திருப்பதால் இந்நூல் பின்னுற்செய்யப் பெற்றதென்றுவைத்துக்கொள்வோம். ஆகவே ஏறக்குறைய 360 வருஷங்களுக்குமுன் இந்நூலியற்றப்பெற்றதென்பது ஏற்புடைத்தா கும். ஜீயர்காலம் நிர்ணயிக்கப்புகுமிடத்தும் இக்காலவரையறை சரியாயேற்படுகிறது. உரையாசிரியர்காலமும் இதுவேயாகும். இது பற்றியேதான் 'செந்தமிழில்' இரண்டுமூன்றிடங்களில், உரையாசிரிய ராகிய இரத்திநகவிராயர் பிரஸ்தாபம்வருமிடத்து, ஸ்ரீ-உவே. இராக வையங்காரவர்கள் '350 வருஷங்களுக்குமுன்னிருந்த' என்று குறிப் பிட்டிருக்கிறார்கள்.

இவர்பெருமை:—இவர் பாலியத்திலேயே நிகண்டு, இலக்கணம், இராமாயணம், சங்கநூல்கள், பழையவுரைகள் இவற்றை ஐயந்திரி பறக்கற்றுச் சிறந்தவித்வானாகிய தமது தகப்பனாரிடம், கற்றுவல்லுந ராய், மாணக்கர்க்குப் பாடமோதியும், பழையநூல்களைத் தேடித்

தொகுத்தும் வைத்துக் 'கல்விக்களஞ்சிய' மொன்றேற்படுத்தியும், 'பொருட்டொடர் நவம்புணர் புலமையோன்' (மா-அக. & அல) என்ற படி புதுவகையான, பெருங்காப்பியஞ் சிறுகாப்பியமுதலான நூல்க ளியற்றியும், தங்காலத்துவித்வான்களுடன் வாதஞ்செய்தும், அரச ராற் சன்மானிக்கப்பெற்றும் தமிழைவிருத்திசெய்து சிறந்த வீர வைணவப்புலவராய் விற்றிருந்தார். இவர்விஷயமாய் அபியுக்தர் அரு ளிச்செய்தபின்வரும் செய்யுளையும் நோக்குக.

"நேற்றுப் பிறந்து வரும்பாவி யான நிலாநெருப்புக்
காற்றும் படிதொங்க றந்தில னேயருட் கூடற்சங்கர் [ன்று
தோற்றும் படிசொன்ன சொன்னூற்பத் தொன்பதை யைம்பதெ
சாற்றுந் திருக்குருகைப்பெருமாணஞ்சடைக்குட்டியே."

## இந் நூ லுரையாசிரியர்.

இந்நூ லுக்குச்சிறந்த விருத்தியுரை யருளிச்செய்தவர் தென் திருப்பேரைப் பதியிற்பிறந்த திருமேனிகவிராஜகேஸரி 'காரி—ரத்ந' கவிராயர். தென்திருப்பேரையென்னும் பாடல்பெற்ற திவ்யதேசம் ஆழ்வார்திருநகரிக்குக் கிழக்கே மூன்றுமைல்தூரத்துள்ளது. இவர், திருக்குருகைப்பெருமாள்கவிராயர் அநேகமாணுக்கர்க்குப்பாடமோ திக்கொண்டு சிறந்தவித்வானுயிருப்பதைக் கேள்வியுற்று இவரிடம் படிக்க ஆழ்வார்திருநகரிக்குவந்தார். அவரிடம் கல்விகற்றுச் சிறந்த வித்வானுனர். செந்தமிழ்ப்பத்திரிகையில் இவரைக்குறிக்கநேரும் போதெல்லாம் இவர்பெயரை இரத்திநகவிராயரென்றே குறித்திருக் கிறது. ஆனுல் உற்றுநோக்கும்போது இவரது இயற்பெயர் 'காரி இரத்தின' கவிராயரென்பதென்று தெரிகிறது. 'காரிரத்நம்' என்று ஆழ்வார்க்கோர் திருநாமம். காரிராசன்பெற்ற இரத்திநம்போன்ற புதல்வன் என்பது இதன்பொருள். 'காரிதந்தருள் கலைக்கடலியற் பெயர்புனைந்து' (மா. அல) 'காரிமாறன்சடகோபன்' (திருவாய்) 'காரி.........................ரத்நம்' (மாறன்கோவை) முதலியவற்றையும் நோக்குக. இவருரை மிகவும் சிறந்ததோருரை. இவ்வுரையின்றேல் இந்நூலின்பெருமை வெளிப்படாது. நாம் முன்சொல்லியதுபோலச் சங்கநூல்கள் பிறசான்றோர்நூல்கள் முதலியவற்றிலிருந்து மேற் கோள் காட்டியிருக்கிறூர். சில உதாரணச் செய்யுள்களிலுள்ள

உள்ளுறையுவமம், ஏனையுவமம், இறைச்சிப்பொருள் முதலியவற்றை அழகாய்விளக்குகிறார். சில உதாரணச்செய்யுளுக்குக் குறிப்புரையும் சிலவற்றிற்குப் பொழிப்புரையும் கூறுகிறார். இவர் வேண்டுமிடங் களில் தண்டிமதம் தொல்காப்பியர்போன்ற பிறநூலாரின்கருத்து முதலியவற்றை யெடுத்துக்கூறித் தக்கசமாதானம் கூறுகிறார். உதாரணச்செய்யுள்களைச் சூத்திரப்பொருளோடு அழகாய்ப்பொருத் திக் காட்டியிருக்கிறார். இவர்காலம் முன்னேகூறப்பட்டது. இவர் செய்த வேறுநூல்கள்:—தொல்காப்பிய நுண்பொருண்மாலை, பரிமே லழகருரை நுண்பொருண்மாலை, (இது செந்தமிழில் வெளிவந் துளது) ஆசிரியர்செய்த நம்பெருமாள்மும்மணிக்கோவைக்கு விருத்தி யுரை, மாறன்பாப்பாவினம் முதலியன.

இவருக்குக் கோயிலில் 'வாகனமாலை'படிப்பதற்காக அக்காலத் தரசன் சிறந்தமானியங்கள் விட்டிருந்தான். இன்னமும் சந்ததியார் அநுபவித்துவருகிறார்கள். இவரைப்போலவே இவர்வமிசத்தோரும் சிறந்தவித்வான்களாயும் வைணவர்களாயுமிருந்து தமிழை யபிவிரு த்திசெய்தார்கள். ம-ா-ா-ஸ்ரீ தாமோதரம்பிள்ளையவர்கள், ஸ்ரீ மஹாமஹோபாத்யாய சாமிநாதையரவர்கள், ஸ்ரீ-உ வே. ரா. இராக வையங்காரவர்கள் முதலியோருக்கு அரும்பெறற்றமிழ்நூல்களருளிய குடும்பம் இதுவே. இக்குடும்பத்திலுள்ள ஏடுகளே திருக்கோவையா ருரையாசிரியர் பேராசிரியரென்றும், அச்சிட்ட தொல்காப்பியச்செய் யுளியல் மரபியல் முதலியவை பேராசிரியரது ; நச்சினார்க்கினியரதன் றென்றும், பரிபாடலுரையாசிரியர் பரிமேலழகர் என்றும் இன்னும் இவைபோன்ற அருமையானவிஷயங்களும் தெரிவித்தன. இக் குடும்பத்தார் காப்பாற்றிவைத்த ஏடுகளின் பெருமை ஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள் ஸ்ரீ-உ வே. இராகவையங்காரவர்கள் முதலி யோருக்கே தெரியும். இவ்வமிசத்தவர் வைணவபரமாய் எத்துணை யோ தமிழ்நூல்கள் செய்திருக்கிறார்கள். தமிழுரை செய்திருக்கிறார் கள். வடமலையப்ப அரசரின் ஸம்ஸ்தானவித்வான் சிறியகாரிரத்ந கவிராயர் இவ்வம்சத்தவர். சாபாநுக்ரகசக்தியுடன் கவிபாடத் தகுந்தபுலவர் இவ்வம்சத்திலநேகரிருந்திருக்கின்றனர். குமரகுரு பரசுவாமிகள் வம்சபரம்பரையோரில் ஆழ்வார்திருநகரிக்கிளையினர்

அநேகர் இவ்வம்சத்தாரிடம் பாடங்கேட்டிருக்கிறார்களென்று தெரிகிறது. கடைசியாய் இம்மாறனலங்கார உரைகாரர் விஷயமான சிறப்புப்பாயிரச்செய்யுளை யெடுத்துக்காட்டி இத்துடன் நிறுத்துகிறோம்.

தருகாள மேகங் கவிராய ராயன் சடைய னன்பாற்
குருகாபு ரேசர்ப் புனையலங் காரங் குவலயத்தே
கருகாத செஞ்சொ லுரைவிரித் தான்கற்ப காடவிபோல்
வருகாரிரத்ந கவிராயன் பேரை வரோதயனே.

A. M. சடகோபராமாநுஜாசார்யன்,
தமிழ்ப்பண்டிதர்,
நேஷநல் ஹைஸ்கூல்,
திருச்சிராப்பள்ளி.

---

உ

## "துனியும் புலவியும்"

### என்னுங்குறள் ஆராய்ச்சி.

———:o:———

செந்தமிழ்ப்பத்திராசிரியரவர்கள் "துனியும்புலவியும்" என்னும் குறளுரையைப்பற்றிச் செய்த நுண்ணியவாராய்ச்சிக்கு யான்கூறும் அபிப்பிராயமும் துணையாகுமென்றெண்ணி இதனை வரைகின்றேன்.

"துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று"

என்பது குறள். இக்குறள், தலைமகளைப் புலவிநீக்கிக்கூடியதலைமகன் தன்னுள்ளேசொல்லியபாக்களுள் ஒன்று.

இதற்குமுந்தியகுறளில் தானுகர்ந்தவின்பத்துக் கேதுவாகிய புலவியைவியந்துகூறினான்என்பதும், இக்குறளில் துனியும் புலவியும் வேண்டுமென்றுகூறினான் என்பதும் பரிமேலழகர்உரை.

இனி அக்குறளின்பொருளை ஆராய்வாம். அக்குறளை அந்தவயஞ்செய்யுமிடத்து, அது,

"காமம், துனியும் புலவியும் இல்லாயின், கனியும் கருக்காயும் அற்று" என நிற்கும். துனியும் புலவியும் இல்லாதவிடத்துக் காமமானது கனியும் கருக்காயும்போலும் எனவே துனியும் புலவியும் உள்ளவிடத்துக் காமம் கனியும் கருக்காயும்போலாது எனத் துணியப்படும்.

பின்னை எவைபோலுமெனின் அவையே ஈண்டு விசாரமாம்.

கனி என்பது செவ்விமுதிர்ந்தபழமெனவுரைக்கப்பட்டது. கருக்காயென்பது இளங்காயெனப்பட்டது.

செவ்வியாவது பக்குவகாலம். முதிர்தல் - மூத்தல்; எனவே பதனழிந்தபழமென்பது அதன்பொருள். இளங்காயும் பதனழிந்த பழமும் நுகர்ச்சிக்கு உதவாதனவாதலின், அவை துனியும் புலவியுமில்லாதகாமத்துக்கு உவமிக்கப்பட்டன.

துனியும் புலவியுமுள்ளகாமம், பதனழிந்தபழத்துக்கும் கருக்காய்க்கும் எதிர்ப்பக்குவமுடையபழங்கள்போலும் என்பது பெறப்படுகின்றது. அது "மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்தலிற் றுனியில்லையாயிற் கனியற்றென்றும், கட்டிளமைத்தாயகாய் நுகருஞ்செவ்வித்தன்றாகலிற் புலவியில்லையாயிற் கருக்காயற்றென்றுங் கூறினன்" எனப் பரிமேலழகர் உரைத்த விசேடவுரையால் விளக்கமாகும்.

மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயகனி நன்றாகப்பழுத்துக் கொம்பை விட்டு விழும்பக்குவமுடையகனி. மிகமுதிர்ந் திருமெல்லை என்றதனால் சிறிதுமுதிர்ந் திருவெல்லையும் பெறப்படும். ஆகவே மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயகனியும் சிறிதுமுதிர்ந் திருவெல்லைத்தாயகனியுமாகிய இரண்டுமே குறிப்பட்டனவாம்.

துனியோடுகூடியகாமம் மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயகனி போலவும், புலவியோடுகூடியகாமம் சிறிதுமுதிர்ந்தகனிபோலவும் இனிமைசெய்யுமென்பது கருத்தாம். இந்த இரண்டுகனியுமே நுகரத்தக்கபக்குவமுடையனவாம்.

இக்குறளிலே துனியும் புலவியுமில்லாயின் என்றதனால் அவையிரண்டும் வேண்டுமென்பதும், இல்லாயிற் காமம் கனியும் கருக்காயுமற்று என்றதனால் உண்டாயிற் காமம் மிகமுதிர்ந்தபழமும் சிறிதுமுதிர்ந்தபழமும்போலு மென்பதும் கொள்ளவைத்தார்.

இக்குறளாற் பழத்துக்கு நான்குபக்குவம் பெறப்படும். அவை கருக்காய், சிறிதுமுதிர்ந்தபழம், மிகமுதிர்ந் திருமெல்லைத்தாயபழம், செவ்விமுதிர்ந்தகனி என்பனவாம்.

அவற்றுள் முதலிலும் கடையிலும் கூறப்பட்ட பக்குவங்கள் நுகர்ச்சிக்கு உதவாதன. இடைநின்ற இரண்டுமே நுகரத்தக்கன. அவைதம்முள்வேற்றுமை ஒன்றற்கொன்று ஏற்றமாகிய சுவையுடைமை. புலவியின்முதிர்ச்சி துனியாவதுபோலச் சிறிதுமுதிர்ந்த பழத்தின்முதிர்ச்சி மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாகியகனியாம்.

இவ்வாறே எதிர்மறைமுகத்தால் வலியுறுத்திய உவமான வுவமேயங்கள் பொருட்பொருத்தமுடையனவென்பது நன்குதுணியப்படும்.

யாழ்ப்பாணம்,
நாவலர்கோட்டம்.
23—11—1913.

ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.



## பத்திராதிபர் குறிப்பு.

இத் "துனியும்புலவியும்" என்னுங் குறளாராய்ச்சியால், அக்குறளுரையிலெழுதப்பட்டிருக்கிற "மிகமுதிர்ந் திறுமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்தலின்" என்பதே அமையுமென்பது பிள்ளையவர்கள் கருத்தென விளங்குகின்றது.

இல்லாதபாடமாகிய "செய்யாதாதலின்" என்பதைவிட்டு, "இனிமைசெய்தலின்" என்ற உள்ளபாடத்தைப் பொருத்தியுரைப்பது மிகச்சிறந்ததேயாம்.

ஆயினும் மூலத்திற்சொல்லிய "கனி", உண்ணுதற்குதவாத செவ்விமுதிர்ந்தகனி என்பதனை யுடம்பட்டு, விசேடவுரையில் "மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாயகனி" என்றதனைமட்டும் உண்ணுதற்குரிய தீங்கனியெனக்கொண்டிருக்கிறார்கள்.

அவ்வாறுகொள்ளுமிடத்து "கட்டிளமைத்தாயகாய் நுகருஞ் செவ்வித்தன்றாகலின், புலவியில்லாதகாமம் கருக்காயற்றென்று கூறினான்" என நுகருஞ்செவ்வித்து அன்மையாகிய ஏதுவால், புலவியில்லாதகாமத்தைக் கருக்காயினொப்புமையுடையதெனத் தலைவன்கருதினனெனத் துணிவதுபோல, "மிகமுதிர்ந்திறுமெல்லைத்தாயகனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்தலின்" என்னுமேதுவால், துனியில்லாதகாமம் மூலத்திற்சொல்லிய செவ்விமுதிர்ந்தகனியின் ஒப்புமையுடையதெனத் தலைவன்கருதினன் எனத் துணிதல்கூடுமாயின் மிகமுதிர்ந்........கனி நுகர்வார்க்கு மிகவுமினிமைசெய்தலின் என்னும்பாடமே பொருத்தமுடையதாம்.

பத்திராதிபர்.

# பாண்டியநாட்டுச் சாசனங்கள்.



## திருநெல்வேலிச் சாசனம்.

[வேதமூர்த்திசுவாமிகோயில் பழைய ஓலைச்சுவடிகளிலும் இதர கோயில் பட்டயங்களிலும் கண்டபடி எழுதப்பட்டன.]

1. சாலிவாகனசகாப்தம் ௯௱௪௰௫ (945) கொல்லம் ௱௯௰௯ (199) மதுரை பாண்டியஇராசா சேகரம் உக்கிரமபாண்டியஇராசா மானூருக்குவந்து அதற்குச் சமீபமாய் உக்கிரங்கோட்டையும்போட்டு அரசாண்டார். அக்காலத்தில் சங்கரநயினார்கோவில் ஆலயத்திருப்பணி உண்டானது.

2. சகாப்தம் ௯௱௮௰௧ (981) க்கு கொல்லஆண்டு ௨௱௩௰௫ (235) ஷையார் குமாரர் விக்கிரமபாண்டிய இராசா அரசாட்சிசெய்தார்.

3. சகாப்தம் ௲௰௭ (1017) கொல்லம் ௨௱௭௰௧ (271)ல் ஷையார் குமாரர் அள்ளியுண்டாஇராசா திருக்குறுங்குடிசுவாமி அழகியநம்பி தெரிசனத்துக்குவந்தபொழுது வேட்டைக்குப்போக மலைசார்பாய் வரும்வழியில் மலைக்குள் சுவாமி சுப்பிரமணியர் இருக்கிறதைக் கண்டு முன்மண்டபம் கட்டி வள்ளியூரைத் தாபித்துப் பிரபலஞ்செய்தார்.

4. சகாப்தம் ௲௫௰௬ (1056) கொல்லம் ௩௱௰ (310) ஷையார் குமாரர் பிராந்தஇராசா அரசாண்டார்.

5. சகாப்தம் ௲௯௰௫ (1095) கொல்லம் ௩௱௪௰௯ (349) ஷையார் குமாரர் சீவலிமாரபாண்டியஇராசா வள்ளியூருக்குவந்துசுவாமி தெரிசனம் செய்து திருப்பணியுங்கட்டி பிற்பாடு சங்கரநயினார் கோவிலுக்குப்போய் பெரியபிரகாரம் முதலிய திருப்பணி செய்தார். பிற்பாடு மானூரைப் பிரபலம்செய்து ஒரு பெரிய குளமும் வெட்டினார். இவர்நாளையில்தான் கரூர்ச்சித்தர் திருநெல்வேலி முதலிய இடங்களைச் சபித்தது.

6. சகாப்தம் ௲௱௩௰௨ (1132) கொல்லம் ௩௱௮௰௬ (386) ஷையார் குமாரர் வீரகேரளஇராசா அரசாண்டார்.

7. கொல்லம் ௪௱௨௰௪ (424) தென்காசி ஆலயம் கட்டப்பட்டது.

8. கொல்லம் ௪௱௪௰௫ (445) குலசேகரஇராசா வள்ளியூர்க் கோட்டை கட்டினது.

9. சகாப்தம் ௲௱௯௰௨ (1192) கொல்லம் ௪௱௪௰௬ (446) வீரகேரளஇராசாவம்சத்திலுதித்த குலசேகரப்பெருமாள்இராசாவும் அவர் தம்பி நால்வரும் வேட்டையாடத் திருக்குறுங்

குடிக்குப் போய் ஓர் பத்திரகாளியின் உத்திரவுப்படி கோட்டையும்போட்டு சுவாமி பொருளாளப் பெருமாள் பிரதிட்டையும் செய்தனர்.

10. கொல்லம் ௬௱௮௰௫ (685) முதல் ௭௱௰௪ (714) வரை திருநெல்வேலி அரியநாயகமுதலியார் அதிகாரம்.

11. கொல்லம் ௭௱௰௪ (714) முதல் ௮௱௰௩ (813) வரை நாயக்கமார் அதிகாரம்.

12. கொல்லம் ௮௱௰௩ (813) முதல் ௮௱௫௰ (850) வரை வடமலையப்பபிள்ளையன் அதிகாரம்.

13. கொல்லம் ௮௱௰௭ (817) ல் புதுச்சேரியார்வந்து வடமலையப்ப பிள்ளையனுடன் யுத்தம்பண்ணி அபஜெயமடைந்து அன்றிரவிலேயே திருச்செந்தூர்க்கோவிலைக்கொள்ளையிட்டுக் கப்பல்மார்க்கமாய்ச் சுவாமியையும் தூக்கிக்கொண்டுபோகையில் சுவாமி திருவுருக் கனத்தால் கப்பல் தாங்கமாட்டாமையால் சுவாமியைச் சமுத்திரத்தில்போட்டுவிட்டுப் போய்விட்டார்.

14. கொல்லம் ௮௱௨௰௯ (829) ல் சுவாமியைக் கடலிலிருந்து எடுத்து வடமலையப்பபிள்ளையன் பிரதிஷ்டையும் செய்தனர்.

15. கொல்லம் ௮௱௩௰௧ (831) ல் திருமலைநாயக்கர் பரமபதம்.

16. கொல்லம் ௮௱௩௰௨ (832) ல் முத்துவீரப்பநாயக்கருக்குத் துரைத்தனம்.

17. கொல்லம் ௮௱௩௰௩ (833) முதல் ௮௱௫௰௫ (855) வரை சொக்கப்பநாயக்கர் துரைத்தனம்.

18. கொல்லம் ௮௱௩௰௬ (836) சொக்கநாதன்பெருங்கால் வடமலையப்பபிள்ளையனால் சிவலப்பேரிக்கு வெட்டப்பட்டது.

19. கொல்லம் ௬௱௮௰ (680) தாதுஸூ தைமீ௴ ௰ (10)உ திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலயத்திற்குப் பெரியமுதலியாரால் திருவுரு துலாம் ௱௬௰௫ (165)க்குக் கிரயம் பொன் ௰௩௲௬௱௰௨ (13612)

20. கொல்லம் ௬௱௯௰௭ (697) தாருணஸூ சித்திரைமீ௴ ஷெயாரால் சுவாமி ௬௰௩ (63) திருவுருக்குப் பொன் ௨௱௮௰ (280)

21. கொல்லம் ௭௱௩௰ (730) காலயுக்திஸூ தைமீ௴ திருநெல்வேலி பெரியகொடிமரப்பிரதிட்டை.

22. கொல்லம் ௭௱௮௰ (780) சௌமியஸூ வைகாசிமீ௴ திருப்பணி பண்டாரம் தருமம் (........) வெள்ளோட்டம் (பெரிய தேர்?)

23. கொல்லம் ௮௱௧ (801) தைமீ அம்மன்கோவில் கோபுரம் கட்டினது. கொல்லம் ௮௱௰௧ (811) தைமீ சேரகுளம் பிரவிப்பெருமாள்பிள்ளை தருமம் (.........) மண்டபம் (ஊஞ்சல்?)

24. கொல்லம் ௮௱௨௰௧ (821) சார்வரிஸு சித்திரைமீ வடமலையப்பபிள்ளையன் அதிகாரத்தில் ஷையாரால் சங்கிலிமண்டபம்.

25. கொல்லம் ௮௱௨௰௩ (823) சுபகிருதுஸு ஆவணிமீ ஏழரை முழத்தில் பொற்றேர் ஓட்டம்.

26. கொல்லம் ௮௱௨௰௮ (828) கீலகஸு சிவந்தியப்பநாயக்கர் தருமம், சந்நிதி ரிஷபக்கொடி.

27. கொல்லம் ௮௱௰௧ (811) ல் ஆற்றங்கரைத் தீர்த்தவாரிமண்டபம் பிரவிப்பெருமாள்பிள்ளை தருமம்.

28. கொல்லம் ௮௱௰௩ (813)ல் தென்காசி நயினர்செட்டியார் தருமம் அழகியமுதலியார் அதிகாரத்தில் திருநெல்வேலியில் நயினர் குளம் வெட்டினது.

[......... இந்த அடைபாளங்கள் சுவடியின் ஒசிந்த பாகத்தைக் காட்டும்.]

[இதில் கொல்லமாண்டு ஆரம்பம், 427-ம் ஆண்டுமுடிய ஆடி மாசமுதலென்று அறிந்துகொள்க; இப்பொழுது ஆவணிமாசமுதல் எண்ணப்பட்டுவருகிறது.]

(தொடரும்)

நச்சினர்க்கினியன்,

தச்சநல்லூர்.

---

௨

# மதிப்புரை.

---

I. சேக்கிழார்பிள்ளைத்தமிழ்:—இது திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீன மஹாவித்வான் ஸ்ரீ-மீனட்சிசுந்தரம்பிள்ளையவர்களா லியற்றப்பட்ட புலமைத்திறமைவாய்ந்த பல பிரபந்தங்களில் ஒன்று. இதிலுள்ளகவிகள் தமிழ்கற்பவர்களுக்கு இலக்கிய இலக்கணப்பயிற்சியையும், கற்பனசக்தியையும், பலசரித்திரவுணர்ச்சியையும், உண்டாக்குந் திறமையுடையனவாய்ப் பாடப்பட்டுள்ளன. இப் பிரபந்தம் மதுரை வித்யாபாநுப்பத்திராதிபர் ஸ்ரீமத்-மு. ரா. கந்தசாமிக்கவிராயரவர்களால் அச்சிடப்பட்டது. இதன் விலை அணா—2.

2. இன்னிசையிருநூறு:—இது சோழவந்தானூர் வித்வான் ஸ்ரீமத்-அ. சண்முகம்பிள்ளையவர்களாற் பலநீதிகளமைய இருநூறு இன்னிசைவெண்பாவிற் பாடப்பட்டதொரு நீதிநூல். இதிலுள்ள பாடல்கள் பெரும்பாலும் வடமொழிவிரவாத தமிழ்மொழியிலுள்ள பழையபாடல்கள்போற் பாடப்பட்டுள்ளன; நீதிநூல்கற்கும் மாணவர்களுக்கு மிகவும் பயன்படத்தக்கன. இதுவும் மதுரை வித்தியாபானுப்பத்திராதிபராற் பதிக்கப்பட்டது. இதன் விலை அணா—3.

3 சைவசித்தாந்தவிளக்கம்:— இது மதுரைத் திருஞானசம்பந்தசுவாமிகள் ஆதினவித்வான் ஸ்ரீமத்-சுப்பிரமணியபிள்ளையவர்களால் எழுதப்பெற்றது. இது சைவசித்தாந்தகுரவருள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியர் அருளிய "திருவருட்பயன்" என்னும் நூலிலுள்ள "ஏகனநேகன்" என்னுங் குறள்வெண்பாவின் பொருளாகப் பதி பசு பாசவியல்புகளைச் சைவசித்தாந்த சம்பிரதாயமுறைப்படி விளக்கமாகப் பல மேற்கோள்களுடன் விரித்தெழுதப்பட்டிருக்கிறது; சைவசாத்திரம் கற்கப்புகுவார்க்கெல்லாம் மிகப் பயன்படத் தக்கது. இதுவும், மதுரை வித்தியாபானுப்பத்திராதிபராற் பதிப்பிக்கப்பட்டது. இதன்விலை அணா—12. மேற்கண்ட புத்தகங்கள்வேண்டுவோர் மதுரை வித்தியாபானுப்பத்திராதிபர்க் கெழுதிப்பெறலாம்.

4. ஐந்தாவதுஜார்ஜ்சக்கரவர்த்தி சரித்திரம்:— இது சுதேசசம்ரக்ஷணிப்பத்திராசிரியரான பட்டுக்கோட்டை ஸ்ரீமத்-சிவ. மா. நாராயணஸாமிசெட்டியார் அவர்களால் எழுதப்பெற்றது. இது நம் சக்கரவர்த்தியவர்களின் குணாதிசயங்களும் செயல்களும் ஆங்கிலங்கல்லாத தமிழருமுணரும்படி எளிய தமிழ்நடையில் எழுதப்பெற்றிருக்கிறது. இதன் விலை அணா—6. வேண்டுவோர் ஷை சுதேசசம்ரக்ஷணிப் பத்திராதிபர்க்கெழுதிப் பெறலாம்.

5 விவேகசிந்தாமணி:—(இரண்டாம் பதிப்பு.) இது பெரும்பாலும் தமிழ்ப் பாலபோதபாடசாலைகளிற் கற்பிக்கப்பட்டுவந்த நீதிநூலினின்றும் சிறுவர்க்கெனத் தெரிந்தெடுக்கப்பட்ட செய்யுள்களுக்கு அரும்பதவுரையெழுதி வேலூர்க்காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத்-பு. க. ஸ்ரீநிவாஸாசாரியர் அவர்களால் அச்சிடப்பட்டது. முதற்பதிப்பினுஞ் சிறிது செப்பஞ்செய்து 10 பாடல்கள் அதிகமாகச் சேர்த்து இரண்டாம்பதிப்பாக வெளியிடப்பட்டிருக்கிறது. இதன் விலை அணா—1½. வேண்டுவோர் ஷை ஸ்ரீநிவாஸாசாரியரவர்களுக் கெழுதிப் பெறலாம்.

---

☞ மேற்கண்டபுத்தகங்கள் ஐந்தும் வழக்கப்படி பாண்டியன்புத்தகசாலையிற் சேர்க்கப்பெற்றன.

பத்திராதிபர்.

வேதியனையீன்றளித்தமேன்மைத்திருவுருவே
வாதியர்தம்வாய்மதமேவண்டமிழே—யோதிமமே
யேறியதுங்கூறியதுஞ்சீறியதுமீசனெனத்
தேறியதுங்காரிதருஞ்சேய். (391)

இது பெயரொடு வினையெதிர்நிரனிறை. இதனுள் வேதியனையீன்றளித்த மேன்மைத்திருவுருவென்றது சீமந்நாராயணனை. வாதியர்வாய்மதமென்றது அகம்பிரமிமுதலாயவர் புன்சாத்திரமதம். வண்டமிழ் - திருவாய்மொழி. ஏறியது ஓதிமம். கூறியது வண்டமிழ். சீறியது பரவாதியர்மதத்தை. பரத்துவமெனத்தேறியது சீமந்நாராயணனை. அவன்யாரெனிற் புலவீர்காள் காரிமாறப்பிரானுமென்றவாறு. திணை - பாடாண். துறை - பழிச்சினர்ப்பரவல். மொழிமாற்றுநிரனிறையுமிது. (அக)

167. வினையொடுவினைநிரல்வதுவினைநிரனிறை.

(எ - ன்) வினையொடுவினை நிரனிறையாமாறுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

வானுலகெண்வில்வளைத்துமாநீர்செறுத்தவுணர்
கோனுதகம்பெய்ததுகைக்கொண்டுதான்—சானகிதோண்
மேயினுன்றென்னிலங்கைவென்றுனெழுபுவியுந்
தாயினுனீர்மலையத்தான். (392)

இது வினையொடுவினைநிரனிறை. அவுணர்கோனென்றது மாவலியை. தாயினுன் - அளந்தான். துறை - கடவுள்வாழ்த்து. (அஉ)

168. வினையெதிர்நிரல்வதுவினையெதிர்நிரனிறை.

(எ - ன்) இது வினையொடுவினையெதிர்நிரனிறையாமாறுணர்-ற்று.

இதனுள் வினையொடு என்பதனை முதலே விரித்துரைக்க.

வன்சயிலமேந்திவளைமுழக்கிவெண்டயிர்கட்
டன்புறக்கட்டுண்டமர்வென்றுவளித்தா—னன்புட்
கடவெந்தைவானேர்கடிகாவிடந்த
விடவெந்தையில்வாழிறை. (393)

இது வினையொடுவினை யெதிர்நிரனிறை. ஆவளித்தான்-ஆவினைக் காத்தான். நன்புட்கடவெந்தை - நல்லகருடனையேறப்பட்ட வெமது சுவாமி; என் னப்பனென்றுமாம். துறை - இதுவுமது. (அரு)

169. வினைபெயர்நிரல்வதுவினைபெயர்நிரனிறை.

(எ - ன்) வினையொடுபெயர்நிரனிறையாமா றுணர்—ற்று.

இதற்கும் சூத்திரத்தானே பொருள்விளங்கும்.

ஏந்தினான்வேய்ந்தானிருத்தானினிதாக
மாந்தினானூழிதுழாய்வன்சிலைபார்—காந்தன்
றொலைவில்லிமங்கலத்தான்றோலாதார்வென்றி
தொலைவில்லிவானோர்துணை. (394)

இது வினையொடுபெயர்நிரனிறை. காந்தன் - அழகன். தொலைவில்லிமங்கலத்தான் - தொலைவில்லிமங்கலமென்னும் திருப்பதியையுடையவன். தோலாதார்வென்றிதொலைவில்லி - போர்க்குப்புறமிடாதசத்துருக்களதுவென்றியைத்தொலைக்கப்பட்டவில்லையுடையான். வானோர்துணை - வானோருயிர்க்குநற்றுணையென்றவாறு. வானோர் - நித்தியசூரியர். (அச)

170. வினையொடுபெயரெதிர்கொளவருநிரனிறை
வினையொடுபெயரெதிர்விதிநிரனிறையே.

(எ - ன்) வினையொடுபெயரெதிர்நிரனிறையுணர்—ற்று.

விதிநிரனிறை - இலக்கணத்தால்விதிக்கப்பட்ட நிரனிறை, ஒழிந்த அகலம் உரையிற்கொள்க.

நடித்தானொடித்தானடந்தானிடந்தான்
பொடித்தானெருதுதுணிற்புள்வாய்—வடித்ததமிழ்ப்
பாவலன்பின்கோதண்டம்பையரவிற்பல்லுயிர்க்குங்
காவலவன்றென்னரங்கன்காண். (395)

இது வினையொடுபெயரெதிர்நிரனிறை. தூணிற் பொடித்தான்; புள்வாய் இடந்தான்; பாவலன்பின் நடந்தான்; கோதண்டம் ஒடித்தான்; பையரவில் நடித்தான் என வினையொடுபெயரெதிர்நிரனிறை

காண்க. பொடித்தல் - தோன்றுதல். இடந்தது - பிளந்தது. ஒடித்தல் - முரித்தல். (அரு)

171. இருபெயர்க்கமைநாலெழுத்தைமுறைமாறிப்
பொழிப்புறப்பிரித்துப்புணர்த்துநிரைவகை
யெழுத்துநிரனிறையென்மனார்புலவர்.

(எ - ன்) இதுவும் அந் நிரனிறையலங்காரத்திற்கு எழுத்தாலாயதோர் சிறப்பிலக்கண முணர்—ற்று.

(இ - ள்) செய்யுளகத் திரண்டுபெயர்க்கு நிரம்பின நாலெழுத்தைமாறுடி யொரோவொன்றிடையிட்டுப் பிரித்துக்கூட்டிநிரையுங் கூறுபாடு புலவ ரெழுத்துநிரனிறையென்றுகூறுவரென்றவாறு.

மேவாருளிமுலைகண்ணண்பாமிளிர்விபதுண்
பூவார்வதனமொழிபொன்மகள்சேர்—தேவாதி
தேவேபிரமமெனத்தேர்மகிழ்மாறன்சிலம்பிற்
காவேயவட்கிடமாங்காண். (396)

இஃ தெழுத்துநிரனிறை. இதனுள் மேவாருளி என்றமொழிக்கண் நின்ற நாலெழுத்தினை ஒரோவொன்றிடையிட்டு மேரு வாளி எனப் பிரித்து, மேரு முலை ; வாளி கண் எனக்கூட்டியும், விபதுண் என்ற மொழிக்கண் நின்ற நாலெழுத்தை ஒரோவொன்றிடையிட்டு விது பண் : வதனம் மொழி எனக்கூட்டியு நிரனிறையானவாறு காண்க. இவற்றுள் உவமைமுதலிய அலங்காரங்கள்விரவினு மீண்டு நிரனிறையேநோக்கமெனக்கொள்க. பகுதி - பாங்கற்கூட்டம். துறை - இயல்பிடங்கூறல். (அசு)

172. முறைமுறைநிரைவதுமுறைநிரனிறையே.

(எ - ன்) இதுவும் நிரனிறைக்கோர் சிறப்பிலக்கணங்கூறுதனுதலிற்று.

(இ - ள்) பெயர் வினை யென்னு மிரண்டினையு மொருசெய்யுளகத் தொருமுறை முதலேகூறியவற்றுன்முற்றுது அவற்றைப் பயனிலைமுற்றுவிப்பான் மறித்தும் பெயரும் வினையுமாகநிரைத்து முறைபெறமுடிப்பது முறைநிரனிறையா மென்றவாறு.

பொன்னனைவாளரக்கனைநூற்றுவரைக்காவைப்
பொருசிலையைக்கருங்கடலைப்பொன்னனின்ற
நன்மகற்காய்ச்சுரர்க்காயைவருக்காய்க்காத
னப்பினைக்காய்ச்சானகிக்காய்நடவைக்காக
மன்னுகிரால்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
வளங்கெழுதோள்வலியால்வானரங்களாலு
முன்னுடல்கிறிச்சிரங்கொய்தமரில்வீழ்த்து
முதலொடுங்கின்டிறுத்தடைத்தான்மோகூரானே. (397)

இது முறைநிரனிறை. இதனுள் அங்ஙனம் பெயரும், வினையு மொவ்வொரு பொருட்டொடர்ச்சிக்கண்ணே யொருமுறை வந்தவற் றோடு மறித்து முறைமுறையாக வந்தமைகாண்க. இதன்பொருள் உரையிற்கொள்க. துறை - கடவுள்வாழ்த்து. (௮௭)

173. இணைபெறவிடைநின்றிருவயிற்பெயரொடும்
புணர்தகைநிரனிறைபுகலிலொன்றுளதே.

(எ - ன்) இன்னு மவ் வலங்காரத்திற்கோ ரொழிபுகூறுத னுதலிற்று.

(இ - ள்) செய்யுளினிடைக்கண் இருமொழிபெறநின்று முன் னும் பின்னுமாகிய விரிடத்தும் பொருள்களுட னெடுத்துநிரைக்கும் இடையிணைநிரனிறையுங் கூறுமிடத் தொன்றுளதாமென்றவாறு.

அருண்மனையாளாயுவந்தாழியான்கோடு
பொருதிரைப்பாற்றெள்ளமிர்திற்போந்த—திருவரங்கம்
பூம்பதுமக்கண்முகிழ்த்துப்புத்தேளிர்கைதொழமால்
பாம்பணைமேல்வைகும்பதி. (398)

இஃ திடையிணைநிரனிறை.

(இ - ள்) இடைநின்ற திருவரங்கமென்னுந் தொடர்மொழி யைத் திரு அரங்கம் எனப்பகுத் திருமொழியாக்கி திரு ஆழியானரு ளோடுங்கூடியபாரியாயுவந்தது ; அரங்கம் மால் பாம்பணைமேலாய்ப் பள்ளிகொள்ளும்பதி யென முன்னும் பின்னும் நிரனிறையாக்கி முடிக்க. அல்லது ஆழியானுக்கயமால் பாரியாகவுவந்தது திரு; புத்

தெளிர்கைகளாற்றொழப் பாம்பணைமேல்வைகும் பதி அரங்கம் எனச் சேர்த்துக் கொண்டுகூட்டெனினுமாம். கோடு - கரை. போந்தது- தோன்றியது. ஆதலாற் பரமபதத்தினுந் திருப்பாற்கடலினுஞ்சேய்த் தாயவன் உலகத்துயிர்களீடேற அர்ச்சாவதாரமாகிச் சேவித்தற் கெளிதாய் அணித்தாய்க் கண்வளர்கின்றான் ; அவனைச்சேவிப்பார்க் கிம்மைப்பயனாகிய அனைத்துச்செல்வமும், மறுமைப்பயனாகிய பேரின்பமும் பெறலாஞ் சேவிப்பீராக வென்பதுபயன். திணை - ... ...துறை - ..................."நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்னுங் குறட்பாவு மிது. (அஅ)

174. உரைபயின்முதலீற்றுறும்பெயரொடுபெயர்
நிரைநிறையெதிர்பெறநிகழ்ந்தீறொடுமுதல்
புரைதீர்தரவிற்பூட்டுறுவதுமுள.

(எ - ன்) நிரனிறையென்னும்பொருள்கோளலங்காரம் பூட்டு விற்பொருள்கோளோடு விரவுமாறுணர்—ற்று.

(இ - ள்) செய்யுளகத்து விட்டுநீங்காத பெயரொடுபெய ரெதிர் நிரனிறையலங்காரமாகநடைபெற்றுச் செய்யுளீற்றுப்பெயரொடு செய் யுண்முதனின்ற பெயரெழுவாயுடனெதிர்வனவாய் விற்பூட்டுப்பொ ருள்கோளாவனவுமுளவென்றவாறு.

காவிக்கமலங்கமழ்தளவஞ்செங்காந்த
ளாவியனையாயரங்கத்தான்—பூவிற்
பிரமனைமுன்பெற்றபெருமான்வரைமான்
கரமுறுவலானனமுண்கண். (399)

இது பெயரொடுபெயரெதிர்நிரனிறை; எழுவாயு மீறு மெதிர் வனவாய்ப் பூட்டுவிற்பொருள்கோளாயிற்று. பகுதி - பாங்கற்கூட் டம். துறை - இயல்பிடங்கூறல். (அகூ)

உ௦-வது நிரனிறை முற்றும்.

---

## உக-வது பூட்டுவில்லலங்காரம்.



175. செய்யுளினிறுவாயெழுவாய்புணர்ந்து
மெய்யுறப்பொருணிலைவிளக்கல்விற்பூட்டே.

(எ - ன்) வைத்தமுறையானே விற்பூட்டலங்காரமுணர்-ற்று. இதன்பொருள் உரையிற்கொள்க.

வருமதற்குமுன்னேமதிட்குருகூருள்புக்
கிருமகிழ்மாறற்கடிமையென்னுங்—கருமமிது
மற்றொப்பிலாதமதிப்புலவீர்பாசமுடன்
கொற்றப்பகடேறிக்கூற்று. (400)

இது விற்பூட்டு. இதனுள், கூற்றுவரு மதற்குமுன்னேயெனச் செய்யுளிறுவா யெழுவாயுடன்புணர்ந்து பொருளுணர்க்குடைமை காண்க. திணை - பாடாண். துறை - வாயுறைவாழ்த்து.

மறவாதுகூறுமதிப்புலவீரென்றும்
பிறவாதபேறுபெறலாந்—துறவாளர்
தோய்ந்தமறையாதியந்தந்துதிப்பதற்கு
வாய்ந்தமுதற்றிருநாமம். (401)

இதுவுமது. துறவாளர் - மனத்தாற்றுறப்பனவற்றைத் துறப்ப தாட்சியுள்ளார். மறை யாதியந்தந்துதிப்பதற்குவாய்ந்த முதற்றிரு நாமம் - அரியென்னுந்திருநாமம். நாமம் மறவாதுகூறுமெனப் புணர்க்க. திணை - இதுவுமது. துறை - செவியறிவுறூஉ. (௯0)

உக-வது பூட்டுவின் முற்றும்.

---

## உஉ-வது இறைச்சிப்பொருளலங்காரம்.

---

176. கருப்பொருள்களனுங்கட்டுரைபயின்ற
பொருட்புறத்தனவாமிறைச்சிப்பொருளணி.

(எ - ன்) வைத்தமுறையானே இறைச்சிப்பொருளலங்கார முணர்—ற்று.

(இ - ள்) ஐந்துநிலத்திலும் அவ்வவநிலங்களிற் கருப்பொருளே தனக்குநிலைக்களனா மழகியவுரையோடும்பொருந்திப் பொருட்குப்புறத்தவாய்ப் பயன்றரும் இறைச்சிப்பொருளலங்கார மென்றவாறு.

ஏனலுமிறடியுமிடர்சிறிதின்று
வான்வளஞ்சுரத்தலும்வயின்வயின்வனப்புற
விளைத்தவர்பலரொடுமிசைதிறத்தேவலின்
வளைத்தரிகுநரரிதற்கருமையவா
யொழிந்தபல்வளங்களுமோங்கினசெழுந்தேன்
வழிந்தொழுகியமகிழ்மார்பினன்வரைவாழ்
சேயரிக்கருங்கட்டிருநுதல்
வாய்மையின்வழாஅமன்மரீஇயபைம்புனமே. (402)

இதனுள் வாய்மையின்வழாஅ மன் என்பதே கூறவேண்டும் பொருள். அதன்புறத்தே இங்ஙனம் வழாஅ மன் மரீஇயபைம்புனத்தும் ஏனல் முதலிய பலவளங்களும் அழகுமிக வானுந் தன்வளனுகியபுனலைச் சுரந்துபொழிவதென்னென விறைச்சிப்பொருளணி தோன்றியவாறு காண்க. திருநுதல் - அண்மைவிளி. வாய்மையின் வழாதோன் என்றது இகழ்ச்சிக்குறிப்பு. ஏனல் - செந்தினை. இறடி- கருந்தினை. வான்வளம் - மழை. சுரத்தல் - பெருகுதல். வயின் வயின் - இடந்தோறுமிடந்தோறும். விளைத்தவர் - விளைவித்தார். மிசைதிறத்து - துய்த்தற்பொருட்டு. அரிகுநரரிதற்கருமையவாய் - அறுப்பவர் அறுத்துத்தொலைத்தற்கரியதன்மையவாகி. ஏனையவளங்களும் - அவையிரண்டுமொழிந்த பலவளங்களும். ஓங்கின - அவற்றோடும் பெருத்தன. வழாஅமன் - வினையெதிர்மறுத்த வினைத்திரிசொல். பகுதி - வரைபொருட்பிரிதல். துறை - தலைவனைத்தோழியியற்பழித்தல். அகத்திற்குரியவா மிறைச்சிப்பொருள் கோளெல்லா மிகுதியாய்வருவன தலைவன்கொடுமைகூறுமிடத்தெனவுணர்க. ஏனையுவட்பினுஞ் சிறுபான்மைவரும். இப்பொருள்கோள் கருப்பொருளே தனக்கு நிலைக்களனுகவரு மென்பது இதற்கு முதனூல்செய்த ஒல்காப்புலமைத் தொல்காப்பியனாரும் பொருளியலுள் "இறைச்சி தானேபொருட்புறத்ததுவே" என்பதனாலுங் கண்டுகொள்க.

கறையடிச்சிறுகட்களிறல்யானே
யறைபொருக்கெழவெயிலழலுமிழதரிடை
யுருப்பமதாற்றுதுயங்கியபிடியி
னடிக்கிழடிக்கடியளிதகவிலாழியைப்
பிணர்படுபுழைக்கையிற்பெய்துபெய்தாற்றி
யுடனமர்ந்தொரீஇபவொண்சுரமூடறுத்
திகந்தவர்நின்கவினிறந்துபாடெய்த
நெடுநாள்வைகுநரல்லரின்னே
செய்பொருண்முற்றுபுவருவர்
மையமருண்கணுய்வருந்தனீயே (403)

இது "அன்புறுதகுநவிறைச்சியுட்சுட்டலும், வன்புறையாகும் வருந்தியபொழுதே" என்பதனை விறைச்சிப்பொருண் முற்கூறியவற் றின் வேறுபடவருமென்கின்றது. என்னை? முன்னே நெஞ்சத்தன் புடையர் அதன்மேலுங் களிறு தன்பிடியின் கறையடிவெப்பத்தினை விலாழியைக் கையால்வாங்கி யடிக்கடி யிறைத்தாற்றி யுடன்கொண்டு சுரத்தினைக்கடக்கு மன்பினையுடைத்தென்றனர்; அவர் அதனை யிப் பொழுதுங்காண்பர்காணென்று அன்புறுதகுநகூறிப் பிறிவாற்றாத வட்குத் தோழி வற்புறுத்தினவாற்றானறிக. கறையடி - உரல்போன்ற அடி. அறைபொருக்கெழ - பாறை தகடுதகடாகவெடித்துச்சிந்த. வெயிலழலுமிழதரிடை - ஆதித்தன் அழலைச்சொரியுங் கடத்தற் கரிதாய சுரத்துவழியில். உருப்பமதாற்றுதுயங்கியபிடியின் - வெப்ப மானதற் காற்றுதுவருந்திய பிடியின். அடிக்கிழடிக்கடி யளிதக விலாழியை - அப்பிடியினடிக்கீழ்ப் பலகாலு மன்புமிக விலாழியை. பிணர்படுபுழைக்கையிற் பெய்துபெய்தாற்றி - சருச்சரையுடைய துளைக்கையாலிறைத்து வெப்பத்தைநீக்கி. உடனமர்ந் தொரீஇய- உள்ளுமுடனு மொன்றெனக்கலந்து கடந்த. ஒண்சுர மூடறுத் திகந்தவர்-ஒள்ளியசுரத்தினதுவழியைத்தொலைத்துக்கடந்தவர். நின் கவி னிறந்துபாடெய்த - நினதுமேனியினழகு மேனியைவிட்டுப் புறம்போக. நெடுநாள்வைகுநரல்லர் - நெடுநா ளங்குத் தங்குவாரல் லர். இன்னே செய்பொருண்முற்றுபுவருவர் - இக்காலத்துத்தாம் ஈட்டுதற்கமைந்த நிதியீட்டுங்கருமமுற்றி வருவர். மையமருண்கணாய்

வருந்தனீயே - ஆகையான் மைபெழுதவிரும்பிய மையுண்கண்ணுய் வருந்தாதிருப்பாயாக வென்றவாறு. பகுதி - இதுவுமது. துறை - வருத்தங்கண்டு தோழிவற்புறுத்தல்.

நீடியவியன்சினைநிலாய்நறைவிளைவுறு
பாடிமிழருவிப்பனிவரைநன்னுட
விட்டகல்வின்ருய்விழுமியோர்நுவலுங்
கட்டுரைமதியாக்காவலன்போலவும்
பாகரையடங்காப்பகட்டுளம்போலவு
மோகமுற்றனையாய்மூதுரைப்படுத்திய
வொருவழித்தணத்தலுடன்கொண்டேகலென்
றிருவழித்தாயதிவிசைந்ததொன்றுள்ளாய்
வயல்வளஞ்சிறந்தமருங்குடைப்பொன்னியுட்
புயல்படிந்ததுபோற்பொறியரவணைத்துயி
லரங்கனைவழிபட்டவனருட்கிலக்காய்
வரம்பெறுநரின்யாமனமகிழ்வெய்த
விரைவொடுமுயல்வையேல்விரைமென்
மரைமலர்மடந்தைநின்வயத்தினளாமே. (404)

இது "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே, திறத்தியன் மருங்கிற் றெரியு மோர்க்கே" என்பதனுல் எய்தியதிகந்துபடாமற் காத்தது; என்னை? கருப்பொருள் பிறிதோர்பொருட் குபகாரப் படும்பொருட்டாதலேயன்றி யக்கருப்பொருடன்னுள்ளேதோன்றும் பொருளு முள. அஃது உள்ளுறையுவமமன் றிறைச்சியென் ருராய்ந்து கொள்ளும் நல்லறிவுடையோர்க்கென்ருர், இதனுள்ளு மவ்வாறே அரசியற்கமைந்தநீதியை விட்டுநீங்குதலின்றி யமைச்சியன்முற்றவு முணர்ந்தோர் காலமு மிடனுந் துணிந்துரைத்த வுறுதிக்கட்டுரையை யுறுதியென் றுட்கொள்ளா மன்னரைப்போலவும், பாகர்க்கடங்கா மதயானையினுள்ளம்போலவு மயக்கமெய்தினையாய், முதியவுரையாக வுனதுணர்வுட்கொளுத்திய வொருவழித்தணத்த லுடன்கொண்டேக லென விருமுறையாய்வருவனவற்று ளுனதுபுத்திக் கொன் றிசைவதாக வுட்கொண்டொழுகுங் குறிப்புமில்லையாயினை; இனியாயினும்

பொன்னியுள் அரங்கனைவழிபட் டவனருட்கிலக்காகித் தாஞ்சிந்தித்த வரம்பெற்றாரைப்போல யாங்களு மனமகிழ்வெய்த விரைவினோடும் வரைந்துகொள்வதுமுயல்வையேற் றாமரைமலர்மகளையனையா ணினக் குரிமையாவளென்றமைபா னிறைச்சியாயிற்று. என்னை? வண்டுக ளென்றவுவமை யெச்சமாகநின் றவை தமக்குப் பின்னைக்குப் புசிப்ப தாகவைத்த தேனின்விளைவையோர்ந் தந்நிலத்துவாழ்வார் மால்பியற் றிக்கொண்டுபோமாறுபோல நீயும் மேல்வரைந்துகொள்ளலாமென் றிருக்கு மிவளையும் முதிர்ச்சிகண் டயலவர் பொன்னணிந்துகொடு போவரென வுள்ளுறையுவமமெய்திற்றேனும், பின்னர்நின்றபொரு ளோ டியைபாமையி னிவ்வுவம முள்ளுறையுற்றுப் பொருள்பயவா துவமையாகக்குறிக்கப்பட்ட அவ் வண்டுகளெஞ்சிநிற்பதுநோக்க மாக நீ யினி வரைந்துகோடல்வேண்டுமென்றுகூறுதலே கருத்தா தலை யறிவித்ததால் இறைச்சியாய் நாடவென்பதனுள் வேறோர்பொரு டோன்றுவித்துநின்றதாதலின், "நீடிய வியன்சினை நிலாய்நறை விளை வுறு, பாடிமி ழருவிப் பனிவரை நன்னாட" வென்றது பிற ரிவளைப் பொன்னணிந்துகொடுபோவரென்னுந் துணையன்றி யுள்ளுறையுவமப் பொருளை முற்றவுணர்த்தாமை யுணர்க. "கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற், றினைபிடி யுண்ணும் பெருங்கன் னாட" வென்ற குறுந் தொகைப்பாட்டும், "வேங்கைதொலைத்த" வென்னுங் குறிஞ்சிக்கலியு மது. பகுதி - வரைவுமுடுக்கம். துறை - வரைவுகடாதல். (கூக)

உஉ-வது இறைச்சிப்பொருண் முற்றும்.

---

## உ௩-வது பொருண்மொழியலங்காரம்.

---

177. ஊதியமெய்ப்பொருளுணர்த்தல்பொருண்மொழியாம்.

(எ - ன்) வைத்தமுறையானே பொருண்மொழியென்னும் அலங்கார முணர்—ற்று.

(இ - ள்) ஆன்மலாபமான வுண்மைப்பொருள் புலவனாற் செய் யுளிடத் துணர்த்தப்படுவதும் பொருண்மொழியென்னும் அலங்கார மென்று சொல்லப்படுவதாமென்றவாறு. இது தாஅனுட்டித்தனுத

நிறுத்தலென்பதாம். உம்மை செய்யுள்விகாரத்தாற் றொக்கது. அலங்கா்ரமென்பது அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது.

இந்தவுடல்பெற்றிருக்கப்பெறுபொழுதே
நந்திபுரவிண்ணகர்மாலேச்—சிந்திப்பா
ரன்றறிவாமென்னுதரஞ்செய்வார்பேரின்பஞ்
சென்றறிவார்நெஞ்சேதிடன். (405)

(இ - ள்) நெஞ்சமே நால்வகைத்தோற்றத்துட் பெறுதற்கரிய ஆராவமிர்தமாம் இந்த மானிடவுடலம்பெற்றதோடு மின்னினுநிலேயில்லாத விந்தயாக்கையிருக்கப்பெற்றபொழுதே நா மிதுபொழுதிளேயமாகலின் இறக்குஞான்றுசிந்திப்போமெனக்கருதாதே நந்திபுரத்திருமாலேக் காலம் பெறச்சிந்திப்பாரும், அறத்தினே நாடோறுஞ் செய்வாரும் இவ்வுலகத்தின்பமெய்துவதோடும் அவ்வுலகத்துப் பேரின்பமுமெய்துவ துண்மையாமென்றவாறு. ஆதலால் நாமு மவை செய்வதே நமக்குறுதியென்பது பயன். சிந்திப்பார், அறஞ்செய்வார், பேரின்பம் என்னும் மூன்றிடத்தும் உம்மை தொக்கனவாகவிரிக்க. அறிவாரென்பது காண்பரென்பதாயிற்று. பொருள் என்பது மெய்; "பொருளல்லவற்றைப்பொருளென் றுணரு,மருளானுமாணுப்பிறப்பு" என்பதனுலறிக. திணே - வாகை. துறை - பொருளொடுபுகறல். (௬உ)

உ௩-வது பொருண்மொழி முற்றும்.

---

## உச-வது அதிகவலங்காரம்.



178. ஆதாரத்தினுமாதேயம்பெருத்
தகலம்பெறுதடங்கியதெனலதிகம்.

(எ - ன்) வைத்தமுறையானே அதிகமென்னும் அலங்கார முணர் — ற்று.

இதன்பொருள் சூத்திரத்தானே விளங்கும்.

வசையிலாவிரசதத்தினல்வயின்வயினமைத்த
வசைவிலாப்பனிவரைக்குலமளவிடற்கரிதாங்

திசைகளெங்கனுஞ்சென்றிடம்பெறுதவாமதன
திசைகணின்றவண்செறிந்தடங்கியதெனலாமே. (406)

இது அதிகம். வசையிலாவிரசதம் - மாற்றிற்குறையாவெள்ளி. அசைவிலா - நடுக்கற்ற. இசைகள் - கீர்த்திகள். செறிந்தடங்கியது - மிகவுஞ்செறிந்தது. ஆதாரம் பூமியும் அகாயமும். ஆதேயம் - கீர்த்தி. (குருகாமான்மியம்.) துறை - நகரவாழ்த்து. (கூ௩)

உச-வது அதிக முற்றும்

---

## உரு-வது வகைமுதலடுக்கலங்காரம்.

—:(o):—

179. பொதுப்படவொருவகைமுதலடைபுணரா
தடுக்கலும்வகைமுதலடுக்கணியெனத்தகும்.

(எ - ன்) வைத்தமுறையானே வகைமுதலடுக்கணி யுணர்-ற்று.

(இ - ள்) நால்வகைத்தோற்றத்துட் பொதுப்பெயர்க்கூட்டமான முதற்பொருள்களை அடை சினைபுணராது முதல்களை முதலாம்படி புலவன் செய்யுண்முழுது மடுக்குவதும் வகைமுதலடுக்கணியா மென்றவாறு. வகைமுதலடுக்கென்பது பண்புத்தொகை. வகையாவன:— மரம், விலங்கு, புள், மீன், ஊர்வன, மணி, பண், நாள், மக்கள், தேவர் எனக்கூறப்பட்ட ஒருபலவகைமுதலாம்.

மாவமுங்கடம்பும்பனசமுமருதம்வடமுமாதவியுமாதுளமுங்
குரவமுமிலவுந்திலகமும்விளாவுங்கொன்றையுஞ்செருந்திலுங்குமிழு
மரசுநாவலுந்தான்றியுமரிதகியுமாமலகமுநாரத்தமுமாம் [சார்.(407)
பிரமுமேலமுஞ்சண்பகமும்வேழமுஞ்சம்பிரமுந்தழைந்துளவொரு

இது மரமெனப் பொதுப்படக்கிடந்தவகைமுதல்களை யடைசினைபுணராதென்னும்மைப்படவடுக்கினதாம். துறை - நகரவாழ்த்து.

இந்தளமுகாரிகுச்சரிபௌளிமல்லைசிராகம்வயிரவிதனுசா
யிரிவசந்தன்பழம்பஞ்சுரங்கொல்லிமருளிந்தளஞ்சாதாரிசா
மந்தமல்லாரிபந்துமுகாரியாரியவராடிகொல்லவராடிநை
வளமிராமக்கிரிகுறிஞ்சிகாம்போதிபூவாளிசௌராட்டநாட்டை

செந்துருதியருமவதித்க்கேசிகௌடிகௌசிகமேகராக்குறிஞ்சி
செவ்வழிப்பாலைவிளரிப்பாலைசெம்பாலைசீகாமரஞ்சிகண்டி
யந்தாளிமலகரிநளுத்தைகாந்தாரமுரலளிசெறியும்வகுளமார்ப
னமலன்வருகனகதண்டிகைவாழ்வினைக்காணவாயிரங்கண்வேண்
[டுமே. (408)

இது, பண் இராகமெனப் பொதுப்பட்ட வகைமுதற்பொருள் களை யடைசினைகூடாதடுக்கின வகைமுதலடுக்கு. பகுதி - பாடாண் சார்ந்தபொதுவியல். துறை - பவனிவாழ்த்து. (கூச)

உடு-வது வகைமுதலடுக்கு முற்றும்.

---

## உகூ-வது இணையெதுகையலங்காரம்.

———:(o):———

180. வாய்ந்தயாப்பினுள்வருமிணையெதுகை
யாய்ந்தவெதுகையணியெனத்தகுமே.

(எ - ன்) வைத்தமுறையானே யிணையெதுகையலங்காரமுணர்-த்து.

(இ - ள்) வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா, பரிபாடல், எனைப்பாவினமெனத் தோன்றப்பட்ட செய்யுளகத்துப் பெருக வரும் இணையெதுகைநடையினையும் எதுகையலங்காரமென்று கூற வுந்தகுமென்றவாறு. மேலைச்சூத்திரத்துள் அடுக்கலுமென்னும் உம்மையைச் சிங்கநோக்காக்கி யதற்குமேலே புதியனவாகக் கூறிய வற்றிற்கும், இதுமுதலாக முன்னர்ப் புதியனவாகப்புணர்த்தவற் றிற்கும், தகுமென்பதனை யாண்டுமேற்றிக்கொள்க.(?) ஆய்ந்தவென வே யிதுவுந் தன்குறியிடுதலென்னுந் தந்திரவுத்தியு ளடங்கும்.

கணையும்பிணையுங்கடுவும்வடுவு
மிணையொன்றியவிழியாரெய்தார்—துணைதனக்குத்
தானேயெனுமாயன்றண்காவுள்வேள்கணைக்கும்
யானேயிலக்காகுவேன். (409)

இஃது திணையெதுகையலங்காரம். இதனுள் வேள்கணைக்கும் என்றதனால் ஒழிந்தபடைக்குமிலக்காயது பெற்றதாம். திணை - ஆண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை-புணர்ச்சிபெறாதழுங்கல். ஆய்ந்த வெதுகை யென்றதனுன் மூவசைச்சீர்முழுதொன்றிணையெதுகை யலங்காரமுமுள.

துடியிடையார்பிடிநடையார்துணைமலையாமிணைமுலையா
ரடிபிடியாமடிபடியாவணைந்தழிசாந்தகலத்தாய்
வடிபுரைமான்கருநெடுங்கண்மடநல்லார்நாடுகிலிப்
படியிரத்தல்பழுதொன்றுற்பற்றேலெங்கைத்தலமே.' (410)

இது மூவசைச்சீர்முழுதொன்றிணையெதுகையலங்காரம். துணைமலையாமிணைமுலையாரடிபிடியாவென்பது உபயமலைபோலு முபயமுலையையுடையாராம் பரத்தையர்பாதத்தை நீ பிடித்தென்க. மடிபடியாவென்பது இடக்கர். அணைந்தழிசாந்தகலத்தாய் என்பது அதன் பின்னர் அவர்களைத் தழுவுதலாலழிந்த சந்தனத்தையுடையமார் பென்க. இப்படியிரத்தலென்பது இவ்வணநின்று நீ யெம்முடன் குறையிரத்தலென்பதாம். பற்றேல் என்பது அல்லீற்றுவியங் கோள்வினைச்சொல்; அல் ஏலென வீறுதிரிந்ததாம். பகுதி - பரத்தை யிற்பிரிதல். துறை - பள்ளியிடத்தூடல்.

குயில்போன்மொழியும்அயில்போல்விழியுங்
கொடிபோலிடையும்பிடிபோனடையும்
பயில்வோரரவிற்றுயில்வோர்மயிலைப்
பதியார்முகமாமதியார்முலைதான்
மயில்போலியலாள்*பயலாநதியும்
மதியும்பதியுஞ்சடையார்விடையா
ரெயில்போர்பொருநாள்வளைவார்சிலையே
யெழில்வாணுதலும்புதலுஞ்சிலையே. (411)

இதனுள் நாலசைச்சீர்முழுதொன்றியதூஉங் காண்க. துறை- இயல்பிடங்கூறல். (திருப்பதிக்கலம்பகம்) (கூ௫)

உகூ-வது இணையெதுகை முற்றும்.

---

* பயல் - பாதி.

## உஎ-வது விரோதவலங்காரம்.

:(o):

181. சொற்பொருண்முரணத்தொடுப்பதுவிரோதம்.

(எ - ன்) வைத்தமுறையானே விரோதமென்னும் அலங்கார முணர்—ற்று.

(இ - ள்) சொல்லினுலும் பொருளினுலும் மாறுபாடுதோன்றப் புணர்ப்பது விரோதமென்னும் அலங்காரமாமென்றவாறு. (கூகூ)

182. அதுவே,

சொல்லும்பொருளுமொருமையிற்பன்மையிற்
றம்மின்முரணுஞ்சால்பொருநான்காய்ச்
சொல்லும்பொருளுஞ்சொல்லொடும்பொருளொடு
மொல்லுபுமுரணலினேரைந்தாகும்.

(எ - ன்) இதுவும் அவ்விரோதத்தினை விரித்துணர் - ற்று.

(இ - ள்) அச்சொல்லப்பட்ட விரோதமென்னுமது சொல்லொடும் பொருளொடு மொருமையிலும் பன்மையிலுந் தம்மிற் ரூ மாறு கொள்ளுமொழுக்க மொருநான்காயும் அவ்விரண்டுஞ் சொல்லொடு பொருளும் பொருளொடுசொல்லும் விரவிப் பொருந்துபு மாறுகொள் வதோடு மைந்தாகுமென்றவாறு.

மெய்யுரைப்பாரென்பதுபொய்மெல்லியலாளின்றெமையும்
பொய்யுரைப்பாரென்றுபுகலுமே—பையரவி
லாடுந்திருமாலரங்கத்தேதேர்வலவா
வோடும்புயன்மூர்துறின். (412)

இது சொல்லுஞ்சொல்லும் முரணியஃது. மெய் பொய்யென்பது பொருளின்றிச் சொல்லுமுரணினமையானென்றறிக. "செவ்வி வாய்த்த செம்பட் டீர்த்து, வெள்ளை வெண்மதி"யென்பதுமிது. அடி முரண். பகுதி - பொருட்பிரிதல். துறை - பாகனேடுகூறல்.

செம்மையோர்வெண்மையோராகித்திடனழிந்தோர்
தம்மையோர்நட்பாகச்சார்வரோ—வெம்மையோ
ராளாயுவந்தானரங்கத்துளாயிழையாய்
வாளாதென்கண்புதைத்தவாறு. (413)

இது பொருளும் பொருளும் முரணியது. என்னை ? செம்மை யோரெனவும், வெண்மையோரெனவு மிரண்டுயர்திணைப்பொருளுள வாய்த் தம்மின் முரணியதாலெனக்கொள்க. செம்மையோர் - அறி வுடையோர். வெண்மையோர் - அறிவிலாதோர். ஆளாயுவந்தான் - அடிமையாக ஆளுதற்கு விரும்பினேன். வாளாது - பேசாது. என் கண்புதைத்தவாறு - புறம்புல்கி எனதுகண்களைப் புதைத்தபடி யாது தானென்றவாறு. பகுதி - பாத்தையிற்பிரிதல். துறை - நினைவறி கண்புதை. இஃ தோரளவடிக்கண் ணிணைமுரணாயிற்று. இவை யிரண்டு மொருமை.

வெந்தழலைத்தண் ணீர்மைமேதகுவெண்சாந்தென்றே
சந்ததமும்பூசுவதென்னையன்மீர்—பைந்துளபக்
கொத்தணிந்ததாரழகர்கூடாநாட்கண்பனிநீர்
முத்தணிந்தபொற்பூண்முலைக்கு. (414)

இது சொல்லும் பொருளுஞ் சொற்களோடு முரணின. என்னை? வெம்மை-வெப்பம். தனியேபொருளின் றிச் சொல். தழல் பொருள், ஆதலால் அவை சொல்லும் பொருளுமாம். தண்ணீர்மை: தண்மை- குளிர்மை. நீர்மை - நன்மை. இரண்டுந் தனியே பொருளின்மையாற் சொல்லாயிற்று. மேதகுவெண்சாந்து - பெருமைபொருந்தியவெண் சாந்து. கண்பனிநீர்முத்து - கண்கள்சொரியாநின்ற தண்ணீராகிய முத்து. திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - மெலி வொடுகூறல்.

கண்காலருவிகொடுங்கைம்மேல்விழுந்தொழுகும்
பெண்காதனீக்கலார்பேதைமீர்—மண்காவல்
பூண்டவராமுன்னம்பொருகணையாற்றேவியைமீட்
டாண்டவராம்பேரருளாளர். (415)

இது பொருளுஞ் சொல்லும் பொருளொடு முரணின; என்னை? கண் பொருள் ; காலென்ப துறுப்பன்றி, யுகுமருவியெனத் தனிநிற் கும்பொருளின்றிப் புனலினது கிரியையாதலாற் சொல். கொடுங்கை பொருளாதலானென்றறிக. திணை - பெண்பாற்கூற்றுக்கைக்கிளை. துறை - கண்டுகைசோர்தல்.

உ

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

## 1913௵ செப்டம்பர்௴ 1உ முதல் 30உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| 1913௵ செப்டம்பர்௴த்திற்கு புதுக்கோட்டை ஸமஸ்தானம் தர்பார் ஆபீசிலிருந்து மாதச் சந்தா வரவு ரூ ... | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு ஆகஸ்டு௴த்திய சம்பளம் செல்லாக்கியது 335—6—2 | | | |
| செந்தமிழ்ச்சந்தா வகையில் வரவு ... | 67 | 11 | 0 | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு ௸ ௴த்திய சம்பளம் செல்லாக்கியது ரூ. ... 65—15—9 | | | |
| பிரிண்டிங்ஆபீசு அச்சுக்கூலிவரவு 286—4—10 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செல் ... | 401 | 5 | 11 |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக் கூலி வரவு ... 53—8—0 | | | | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 339 | 12 | 10 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு ௸ ஆகஸ்டு௴த்திற்கு போஷணைக்காக செல்லாக்கியது ... | 73 | 10 | 1 |
| பைண்டிங் ஆபீசு வரவு ... 112-6-9 | | | | கலாசாலை உபயோகத்துக்கு வாங்கிய புத்தகங்களுக்குச் செல்லாக்கியது ... | 8 | 14 | 0 |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ... 3-12-0 | | | | | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவுரூ | 116 | 2 | 9 | பைண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ ... 60—4—0 | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| புத்தக விற்பனை வரவு ரூ ... | | 131 | 9 | 0 |
| பிரிண்டிங் பேபர், கலர் ராப்பர் பேபர் கார்டு விற்றவகையில் வரவு ... | 21—5—6 | | | |
| சங்கம் காலிநிலம் மரக்கடை வாடகை பிரமாதீச வருஷ ஆவணி மீ"த்துக்கு வரவு ... | 55—0—0 | | | |
| விளம்பர வகையிற் சார்ஜ் வரவு... | 10—0—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி வரவு ரூ ... | | 86 | 5 | 6 |

| | | | | |
|---|---|---|---|---|
| ஷடி ஆபீஸ் கண்டின்ஜன்சிச் செலவு | 10-14—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ... | | 71 | 2 | 6 |
| பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச செலவு ரூ | 104-10-11 | | | |
| ஷடி ஆபீஸ் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு ரூ | 10—12—6 | | | |
| ஷடி ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு | 2—8—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 117 | 15 | 11 |
| போஸ்டேஜ் வகையிற் செலவுரூ... | 18—1—6 | | | |
| தந்தி வகையிற் செலவு ரூ ... | 0—7—6 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | | 18 | 9 | 0 |
| ஆபீஸ் டிரடில் மெஷீன் வகையரா Slight repair செய்த வகையிற் செலவு ரூ | | 2 | 2 | 0 |
| லைப்ரேரி உபயோகத்துக்குவாங்கிய புத்தகங்களுக்குச் செல் ரூ | | 1 | 11 | 0 |
| வண்டிவாடகை வகையிற் செலவுரூ | 0—12—1 | | | |

| | |
|---|---|
| ரசீது ஸ்டாம்புவகையிற் செலவு ரூ | 0—4—0 |
| 11—6—13, 14—7—13 இத்தேதிகளில் திருமந்திரம், புட்பபந்தம் புத்தகங்களுக்காகவும், 5-9-13-ல்குசவனேசுரர் பதிகம் புத்தகத்துக்காகவும் copy right feeக்காக சென்னை ரெஜிஸ்ட்ராருக்கு மணி ஆர்டர் செய்தனுப்பிய வகையிற் செலவு ரூ. | 6—3—0 |
| ஆபீஸ் உபயோகத்திற்கு ஸ்டேஷனரி, கண்டின்ஜன்ஸி சாமான்கள் வாங்கிய வகையிற் செலவு ரூ | 1—1—3 |
| Overtime Work செய்த பைண்டிங் சிப்பந்திகளுக்கு சம்பளம் செல் ரூ | 1—2—5 |
| பைண்டர் பாலசுந்தரத்துக்கு அவசரச் செலவினிமித்தம் கமிட்டியார் சாங்கிஷன் பேரில் கடனுக் கொடுத்தது . ரூ | 30—0—0 |
| ஆபீஸைச் சுற்றிலுமுள்ள வெளிப்புறங்களைப் பெருக்கிச் சுத்தம் செய்த தோட்டிக்குச் செல் ரூ | 0—2—6 |
| Hindu பத்திரிகைக்கு 1913 ஜூலை முடிய செல்லவேண்டிய சந்தாவுக்கு part payment ஆகச் செல் ரூ | 12—0—0 |
| Card-board பேபர்களை ஏலம் போடும் விஷயமாய் நோட்டீஸ் South Indian Mail பேரில் | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | போர்லேதர்கு விளம்பர சார்ஜ் செலுத்திய வகையிற் ரூ 7-11—0 | | | |
| | | | | சங்க சம்பந்தமான வேலைகளுக்கு பிரிண்டிங் செலவுக்காக அச்சாபீசுக்குச் செல் ரூ 53—8—0 | | | |
| | | | | ஷை சம்பந்தமாக பைண்டிங் வேலைகளுக்கு செல் ரூ 3—12—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ ... | 116 | 8 | 3 |
| | | | | ஆகமொத்தம்செலவு | 811 | 14 | 8 |
| ஆக மொத்தம் வரவு ரூ | 791 | 9 | 1 | போகபாக்கியிருப்பு* | 551 | 12 | 10 |
| சென்ற ஆகஸ்டுமீத்தின் கடைசித்தேதியில் நின்ற பாக்கித்தொகை ரூ ... | 572 | 2 | 5 | * By pass Book 337—9—1<br>By R. T. R. ... 50—0—0<br>By cash ... 164-3—9 | | | |
| ஆக மொத்தம் ... | 1363 | 11 | 6 | | | | |
| ஆக மொத்தம் ரூ ... | 1363 | 11 | 6 | ஆக மொத்தம் ... | 1363 | 11 | 6 |

T. A. Subbuvenkatarama Iyer.
*Manager.*
4—10—13.

*Audited and found Correct*
S. Gopalaswami Aiyengar,
26—10—13. *Auditor.*

உ

மதுரைத் தமிழ்ச்சங்கத்து

## 1913௵ அக்டோபர்௴ 1௳ முதல் 31௳ முடிவு வரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை. ரூ | அ. | ப. | செலவு | தொகை. ரூ | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| புதுக்கோட்டை சமஸ்தானம் தர்பார் ஆபீசிலிருந்து அக்டோபர் மாதத்திற்குரிய சந்தா வரவு ... ரூ | 50 | 0 | 0 | சங்கம் சிப்பந்திகளுக்கு 1913௵ செப்டம்பர் ௴த்துக்கு சம்பளம் செல்லாக்கியது ரூ 389—7—1 | | | |
| செந்தமிழ்ச் சந்தாவகையில் வரவு ரூ | 25 | 12 | 8 | ஷெயார்களுக்கு தீபாவளிச் செலவுக்காக அக்டோபர்௴த்து சம்பளத்திலிருந்து அட்வான்சு கொடுத்தது ரூ 105—13—4 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் அச்சுக்கூலி வரவு ரூ 466-13—9 | | | | சங்கம் கலாசாலை உபாத்தியாயர்களுக்கு செப்டம்பர்௴த்திற்கு சம்பளம் செல்லாக்கியது ரூ 66—0—0 | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான அச்சுக்கூலி வரவு ரூ 52-13—0 | | | | ஷெயார்களுக்கு தீபாவளிச் செலவுக்காக அக்டோபர் மாதத்து சம்பளத்திலிருந்து அட்வான்சு கொடுத்தது ரூ 3—0—0 | | | |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 519 | 10 | 9 | | | | |
| பைண்டிங் ஆபீசு வரவு ரூ 115—9—6 | | | | | | | |
| சங்கம் ஆபீசு சம்பந்தமான பைண்டிங் வரவு ரூ 53—7—0 | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 564 | 4 | 5 |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 169 | 0 | 6 | சங்கம் கலாசாலை மாணவர்களுக்கு செப்டம்பர்மீ த்துக்குஆகாராதி போஷணைக்காக செல்லாக்கியது ரூ | 69 | 11 | 2 |
| புத்தகவிற்பனை வரவு ரூ | 189 | 9 | 0 | | | | |
| பிரிண்டிங்பேபர் கலர் ராப்பர் பேப்பர், கார்டு வித்தவகையில் வரவு ... ரூ 25—10—9 | | | | கலாசாலை உபயோகத்திற்கு புத்தகங்கள் வாங்கிய வகையிற் செல் ரூ | 0 | 10 | 3 |
| | | | | பைண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரி செலவு ரூ 68—12—9 | | | |
| சங்கம் காவி சிலம் மரக்கடை வாடகை பிரமாதிச௵புரட்டாசிமீ த்துக்கு வரவு ரூ 55—0—0 | | | | ஷை ஆபீஸ் கண்டின்ஜன்ஸிச்செலவு 11—4—5 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு ரூ | 80 | 1 | 2 |
| ஆகமேற்காட்டிய விவரப்படி வரவு ரூ | 80 | 10 | 9 | பிரிண்டிங் டைப்ஸ்களை ரீ-காஸ்டு செய்த வகையிற் செலவு ரூ 11—15—0 | | | |
| | | | | பிரிண்டிங் ஆபீஸ் ஸ்டேஷனரிச் செலவு ரூ 60—13—9 | | | |
| | | | | ஷை ஆபீஸ் சம்பந்தமாய் ரெயில்வே செலவு ரூ 1—5—0 | | | |
| | | | | ஷை ஆபீஸ்சம்பந்தமாய் ஆயில் எஞ்சின் எண்ணெய்ச் செலவு ரூ 11—0—6 | | | |
| | | | | ஷை ஆபீசில் கண்டின்ஜன்ஸி செலவ 7—3—9 | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஆக மேற்காட்டிய விவரப்படி செலவு | ரூ | | 92 | 6 | 0 |
| போஸ்டேஜ் வகையிற் செலவு | ரூ | | 34 | 14 | 0 |
| ஷி ஆபீஸ் ஆயில் என்ஜின், பைண்டிங் கட்டிங் மெஷீன் Slight Repair செய்தவகையிற் செலவு | ரூ | | 1 | 7 | 0 |
| ஆபீஸ் உபயோகத்திற்கு கள்ளிப் பெட்டிகள் வாங்கியதற்குச் செல் | | | 2 | 8 | 0 |
| லைபிரெரி உபயோகத்திற்குப் புததகங்கள் வாங்கியதற்குச் செல் | | | 0 | 14 | 0 |
| வண்டி வாடகைவகையிற் செலவு | | 0—11—6 | | | |
| ரசீது ஸ்டாம்பு வகையிற் செலவு | ரூ | 0—6—0 | | | |
| ஆபீஸ் உபயோகத்திற்கு, ஸ்டேஷனரி கண்டின்ஜன்ஸி சாமான் வாங்கிய வகையிற் செலவு | ரூ | 5—7—3 | | | |
| ஸரஸ்வதி பூஜை சம்பந்தமாய் செலவு | ரூ | 6—13—5 | | | |
| கலாசாலை உபயோகத்திற்கு வாங்கிய மண்ணெண்ணெய் டின் 1-க்கு செல் | ரூ | 2—0—6 | | | |
| சங்கம் சிப்பந்திகளுக்கு Over-time work செய்ததற்காகச் செல் | ரூ | 57—1—5 | | | |
| சங்கத்தில் வேலை கொடுத்த ஆர்டர்தாரர்களுக்கு பிரஸிடெண்டு அவர்கள் உத்திரவுப்படி கமிஷன் கொடுத்தது | ரூ | 14—10—6 | | | |
| வெளியூர்களுக்குப் போய் பிரிண்டிங், பைண்டிங் ஆர்டர்கள் வாங்கி வந்த வகையிற் செலவு | ரூ | 0—8—0 | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | சங்க சம்பந்தமான வேலைகளுக்கு பிரிண்டிங் செலவுக்காச அச்சாபீசுக்குச் செல் ரூ. 52-13—0 | | | |
| | | | | ஷை. சம்பந்தமாக பைண்டிங் வேலைகளுக்குச் செல் ரூ. 53—7—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டியவிவரப்படி செலவு ரூ. | 193 | 14 | 7 |
| | | | | ஆகமொத்தம் செலவு ரூ. | 1040 | 10 | 7 |
| | | | | போக பாக்கியிருப்பு* ரூ. | 545 | 13 | 11 |
| ஆக மொத்தம் வரவு .. | 1034 | 11 | 8 | | | | |
| | | | | ஆக மொத்தம் ரூ. | 1586 | 8 | 6 |
| சென்ற செப்டம்பர்மீத்தின் கடைசித் தேதியில் நின்ற பாக்கித்தொகை ... | 551 | 12 | 10 | *By pass Book Rs. 477—9—1 | | | |
| ஆக மொத்தம் ... | 1586 | 8 | 6 | By cash 68—4—10 | | | |

T. A. Subbavenkatarama Iyer,
*Manager.*
12—11—13.

*Audited and found Correct,*
S. Gopalaswami Aiyengar,
12—12—13. *Auditor.*

மதுரைத் தமிழ்ச் சங்கத்து

# 1913௵ நவம்பர்௴ 1உ முதல் 30உ முடிவுவரையுள்ள வரவு செலவு கணக்கு.

| வரவு | தொகை ரூ. | அ. | ப. | செலவு | தொகை ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|
| புதுக்கோட்டை சமஸ்தானம் தர்பார் ஆபீசிலிருந்து 1913௵ நவம்பர்௴த்திற்குரிய சந்தா வரவு ரூ. | 50 | 0 | 0 | 1913௵ அக்டோபர் ௴த்துக்கு சங்கம் மானேஜ்மெண்டாபீசு சிப்பந்திகளுக்கு சம்பளம்செல் ரூ. 79—1—8 | | | |
| சங்கம் மெம்பர்களிடமிருந்து பிரவேசக் கட்டணம் உள்பட வருஷச் சந்தா வரவு ரூ. 46—0—0 | | | | ஷ எடிட்டோரியல் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷ செல் ரூ. 30—0—6 | | | |
| சங்கம் "செந்தமிழ்" சந்தாதாரரிடமிருந்து பத்திரிகைக்கு சந்தா வரவு ரூ. 16—3—0 | | | | ஷ பிரிண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷ செல் ரூ. 128-13—7 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி சந்தா வரவு ரூ. | 62 | 3 | 0 | ஷ பைண்டிங் ஆபீஸ் சிப்பந்திகளுக்கு ஷ செல் ரூ. 25-13—7 | | | |
| பத்திரிகையில் வெளியிடப்படும் விளம்பரங்களுக்கு சார்ஜ் வரவு ரூ. | 8 | 2 | 0 | ஷ பாண்டியன் லைபிரேரி சிப்பந்திக்கு ஷ செல் ரூ. 10-13—5 | | | |
| 1914௵ நடக்கும் சங்கம் தனித் தமிழ்ப் பரீக்ஷைக்குக் கட்டணம் வரவு ரூ. | 2 | 0 | 0 | 1913௵ செப்டம்பர் ௴த்துக்கு பாக்கி நின்றதற்கும், அக்டோபர் ௴த்திற்கும் சங்கம் கலாசாலை | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| சங்கப்பதிப்புப் புஸ்தகங்கள் விற்ற வகையில் வரவு ரூ | | 168 | 10 | 7 |
| ஸ்டாக்கிலிருக்கும் பிரிண்டிங், கலர் ராப்பர் பேப்பர் வகையரு விற்ற வகையில் வரவு ரூ | | 20 | 1 | 6 |
| இச்சங்கமாபீசில் நடந்த வேலைகளுக்கு Printing income வரவு ரூ | | 307 | 15 | 6 |
| ஷை-க்கு Binding income வரவு ரூ | | 72 | 5 | 0 |
| சங்கம் காலி ஸ்தலத்தில் வைக்கப்பட்டிருக்கும் மரக்கடைக்கு பிரமாதிசஹூ அற்பசி மாதத்திற்கு வாடகை வரவு ரூ | | 55 | 0 | 0 |
| கத்தி சாணை பிடித்த வகையில் சார்ஜ் வரவு ரூ | 0—8—0 | | | |
| புஸ்தகங்களை போஸ்டி லனுப்பியதற்கு போஸ்டேஜ் வி. பி-யில் வரவு | 0—15—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி Miscellaneous வரவு ரூ | ... | 1 | 7 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| உபாத்தியாயர்களுக்கு சம்பளத்திற்காகவும், மாணவர்களுக்கு போஷணைக்காகவும் செல் ரூ | 127-15—9 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி சங்கம் எஸ்டாபிளிஷ்மெண்டுக்கு சம்பளம் செல் ரூ | | 402 | 10 | 6 |
| பிரிண்டிங் ஆபீஸ் சம்பந்தமாக இஞ்ஜின், மெஷீன் வகையருவுக்கு எண்ணெய் வாங்க செல் | 13— 3—1 | | | |
| ஷை ஆபீஸ் சம்பந்தமான Ink வகையரு கண்டின்ஜன்ஸி சாமான் வாங்க செல் ரூ | 10— 3—9 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி செல் ரூ | | 23 | 6 | 10 |
| பைண்டிங் ஆபீஸ் சம்பந்தமான வஜ்ஜிரம் வகையரு கண்டின்ஜன்ஸி சாமான் வாங்க செல் ரூ | | 8 | 0 | 1 |
| சங்கமாபீசு உபயோகத்திற்கு Paper வகையரு Stationery சாமான் வாங்க செல் ரூ | 2— 2—3 | | | |
| பிரிண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு ஷை சாமான் வாங்க செல் ரூ | 64—14—8 | | | |
| பைண்டிங் ஆபீஸ் ஆர்டர்கள் உபயோகத்திற்கு தோல் வகையரு Stationery சாமான வாங்க செல் ரூ | 22—13—0 | | | |
| ஆக மேற்காட்டிய விவரப்படி Stationery சாமான்கள் வாங்க செல் ரூ | | 89 | 13 | 11 |

| | | | | |
|---|---|---|---|---|
| Pandiyan Library உபயோகத்திற்கு வாங்கிய புத்தகத்திற்காகவும், "Hindu" பேப்பருக்கு சந்தாவுக்காகவும் செல் ரூ 15—11—0<br>சங்கம் கலாசாலை உபயோகத்திற்கு வாங்கிய புத்தகங்களுக்கு செல் 0—13—6<br>ஆக மேற்காட்டிய விவரப்படி செல் | ரூ | 16 | 8 | 6 |
| ஆபீஸ் உபயோகத்திற்கு Ink Pad வகையரு வாங்கச செல் | ரூ | 1 | 6 | 0 |
| பிரிண்டிங், பைண்டிங் மெஷீன்கள், Slight Repair செய்த வகையிற் செல் | ரூ | 5 | 8 | 0 |
| சங்கமாபீசு Correspondence, V. P. சம்பந்தமாக போஸ்டேஜ் வகையிற் ரூ 16— 8—6, தந்தி வகையிற் ரூ 2—12—6 ஆக மொத்தம் செல் | ரூ | 19 | 5 | 0 |
| ரெயில்வே பார்சல் மூலம் வந்த சாமான்களுக்கு ரெயில் சார்ஜுக்கு செல் | ரூ | 0 | 4 | 0 |
| சங்கம் ஆபீஸ் வைத்திருக்கும் கட்டடத்துக்கு 1913ஹ ஆகஸ்டு, செப்டம்பர் மீ"ங்களுக்கு வாடகைக்காக ரூ 86—0—0: முனிசிபாலிட்டி கஃசு வரிக்காக ரூ 3—15—0. ஆக மொத்தம் செல் | ரூ | 89 | 15 | 0 |
| இச்சங்கத்திக்கு கடனாக வரவு வந்திருந்த ரூ. 100-லிருந்து Honorary Secretary Mr. T. N. சுந்தரராஜ அய்யங்காருக்கு Part- | | | | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | Payment ஆக செல் ரூ | 50 | 0 | 0 |
| | | | | இவ்வாபீஸில் ஜாஸ்தியாக பிரிண்டிங், பைண்டிங் ஆர்டர்கள் கொடுத்த ஆர்டர்தாரர்களுக்கு பிரஸிடெண்டு அவர்கள் ஆர்டர்படி கமிஷன் கொடுத்த வகையிற் ரூ 6—11—3 | | | |
| | | | | Ramnad வகையறு இடங்களுக்கு arrears கலெக்ஷன் சம்பந்தமாக போய்வந்தவகையிற் செல் ரூ 6— 9—0 | | | |
| | | | | Over-time work செய்த சங்கம் சிப்பந்திகளுக்கு சம்பளம் செல் 5— 3—3 | | | |
| | | | | ஆபீஸ் Business சம்பந்தமாக வண்டி வாடகைக்குச் செல் ரூ 0—10—0 | | | |
| | | | | ஆக மேற்காட்டிய விவரப்படி Miscellaneous செலவு ரூ | 19 | 1 | 6 |
| | | | | ஆகமொத்தம்செலவு | 725 | 15 | 4 |
| ஆக மொத்தம் வரவு ரூ | 747 | 12 | 7 | போகபாக்கியிருப்பு* | 567 | 11 | 2 |
| சென்றஅக்டோபர்மீ த்தின்கடைசித்தேதியில் நின்றபாக்கித்தொகை ரூ ... | 545 | 13 | 11 | *By Pass Book 487—9—1, By cash ... 80—2—1 | | | |
| ஆக மொத்தம் ... | 1293 | 10 | 6 | ஆக மொத்தம் ... | 1293 | 10 | 6 |

**T. A. Subbavenkatarama Iyer.**
*Manager.*
6—12—13.

*Audited and found Correct.*
**S. Gopalaswami Aiyengar,**
12—12—13. *Auditor.*